ஸ்ரீ

# ப்ரகடநம்.

ஸ்ரீபரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யோபயவேதாந்த ப்ரவர்த்தகராகியபின்பழகிய பெருமாள்ஜீயர், தம் பரமக்ருபையினால்சகலருமெளிதிலநுசந்தித் துஜ்ஜீவிக்கலாம்படி ஈரத்தமிழா லருளிச்செய்த ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவத்தை த்ராவிடலிபியில் ப்ரமாணத்திரட்டு படங்களுடன் அச்சிட்டுத்தரும்படி அநேகர்களால் கேட்டுக் கொண்ட ப்ரகாரம் இக்ரந்தத்தின்முகப்பில் கண்டிருக்கும் பண்டிதர்களால் ஷை ப்ரபாவம்பரிசோதிக்கப்பட்டு, ஸ்ரீ-உ-வே-எடுரிம்படி திருமலை லக்ஷ்மீகுமாரர் கோடிகன்னிகாதாநம், அஷ்டாவதாநம்-மேல்பாக்கம்-தாதா தேசிகதாதாசார்யரவர்களால், அடங்கிய ப்ரமாணங்களுக்கு ஆகாரத்துடன் சப்தார்த்தமெழுதப்பட்டு, (கூகஎ) வது பக்கந் தொடங்கி சேர்த்திருக்கின்றமையால், இக்குருபரம்பராப்ரபாவத்தி லடங்கிய ப்ரமாணங்களின் தலைப்பில் குறித்திருக்கும் கணிதப்படி ப்ரமாணத்திரட்டில் கண்டுகொள்க.

அச்சிட்டிருக்குங் க்ரந்தங்கள்,



கஅஅ௦ஷு

நவம்பர்மீ கூகஉ



ஸ்ரீ

# படங்களின் அட்டவணை.



    

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

ஸ்ரீபின்பழகியபெருமாள் ஜீயர் திருவடிகளேசரணம்.

# குருபரம்பராப்ரபாவம்.

## ஆறாயிரப்படி

### தனியன்கள்.

ஸ்ரீநம்பெருமாளருளிச்செய்தது.

𑌶𑍍𑌰𑍀𑌶𑍈𑌲𑍇𑌶𑌦𑌯𑌾𑌪𑌾𑌤𑍍𑌰𑌂 𑌧𑍀𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌗𑍁𑌣𑌾𑌰𑍍𑌣𑌵𑌮𑍍-
𑌯𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌪𑍍𑌰𑌵𑌣𑌂𑌵𑌨𑍍𑌦𑍇 𑌰𑌮𑍍𑌯𑌜𑌾𑌮𑌾𑌤𑌰𑌂𑌮𑍁𑌨𑌿𑌮𑍍.

శ్రీశైలేశదయాపాత్రం ధీభక్త్యాదిగుణార్ణవమ్-
యతీన్ద్రప్రవణంవన్దే రమ్యజామాతరంమునిమ్.

ஸ்ரீகூரத்தாழ்வானருளிச்செய்தது.

𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌨𑌾𑌥𑌸𑌮𑌾𑌰𑌮𑍍𑌭𑌾𑌂 𑌨𑌾𑌥𑌯𑌾𑌮𑍁𑌨𑌮𑌧𑍍𑌯𑌮𑌾𑌮𑍍-
𑌅𑌸𑍍𑌮𑌦𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌪𑌰𑍍𑌯𑌨𑍍𑌤𑌾𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇𑌗𑍁𑌰𑍁𑌪𑌰𑌮𑍍𑌪𑌰𑌾𑌮𑍍.

లక్ష్మీనాథసమారంభాం నాథయామునమధ్యమామ్-
అస్మదాచార్యపర్యన్తాం వన్దేగురుపరమ్పరామ్.

# குருபரம்பராப்ரபாவம்—தனியன்கள்.

ஸ்ரீகூரத்தாழ்வானருளிச்செய்தது.

𑌯𑍋𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌚𑍍𑌯𑍁𑌤 𑌪𑌦𑌾𑌂𑌬𑍁𑌜𑌯𑍁𑌗𑍍𑌮𑌰𑍁𑌕𑍍𑌮
𑌵𑍍𑌯𑌾𑌮𑍋𑌹𑌤𑌸𑍍𑌤𑌦𑌿𑌤𑌰𑌾𑌣𑌿 𑌤𑍃𑌣𑌾𑌯 𑌮𑍇𑌨𑍇
𑌅𑌸𑍍𑌮𑌦𑍍𑌗𑍁𑌰𑍋𑌰𑍍𑌭𑌗𑌵𑌤𑍋𑌽𑌸𑍍𑌯 𑌦𑌯𑍈𑌕𑌸𑌿𑌨𑍍𑌧𑍋𑌃
𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌸𑍍𑌯 𑌚𑌰𑌣𑍌 𑌶𑌰𑌣𑌂 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑍇.

యోనిత్యమచ్యుత పదాంబుజయుగ్మరుక్మ
వ్యామోహత స్తదితరాణి తృణాయ మేనే
అస్మద్గురోర్భగవతో ఽస్య దయైకసిన్ధోః
రామానుజస్య చరణౌ శరణం ప్రపద్యే.

ஸ்ரீயாளவந்தாரருளிச்செய்தது.

𑌮𑌾𑌤𑌾 𑌪𑌿𑌤𑌾 𑌯𑍁𑌵𑌤𑌯𑌸𑍍𑌤𑌨𑌯𑌾 𑌵𑌿𑌭𑍂𑌤𑌿
𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌂 𑌯𑌦𑍇𑌵 𑌨𑌿𑌯𑌮𑍇𑌨 𑌮𑌦𑌨𑍍𑌵𑌯𑌾𑌨𑌾𑌂
𑌆𑌦𑍍𑌯𑌸𑍍𑌯 𑌨𑌃 𑌕𑍁𑌲𑌪𑌤𑍇𑌰𑍍𑌵𑌕𑍁𑌳𑌾𑌭𑌿𑌰𑌾𑌮𑌂
𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍍𑌤𑌦𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌯𑍁𑌗𑌳𑌂 𑌪𑍍𑌰𑌣𑌮𑌾𑌮𑌿 𑌮𑍂𑌰𑍍𑌧𑍍𑌨𑌾.

మాతాపితా యువతయ స్తనయా విభూతి
స్సర్వం యదేవ నియమేన మదన్వయానామ్-
ఆద్యస్య నః కులపతే ర్వకుళాభిరామం
శ్రీమ త్తదఙ్ఘ్రియుగళం ప్రణమామి మూర్ధ్నా.

ஸ்ரீதிருக்குருகைப்பிரான் பிள்ளானருளிச்செய்தது.

𑌭𑍂𑌤𑌂 𑌸𑌰𑌶𑍍𑌚 𑌮𑌹𑌦𑌾𑌹𑍍𑌵𑌯 𑌭𑌟𑍍𑌟𑌨𑌾𑌥
𑌶𑍍𑌰𑍀𑌭𑌕𑍍𑌤𑌿𑌸𑌾𑌰 𑌕𑍁𑌲𑌶𑍇𑌖𑌰 𑌯𑍋𑌗𑌿𑌵𑌾𑌹𑌾𑌨𑍍-
𑌭𑌕𑍍𑌤𑌾𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌰𑍇𑌣𑍁 𑌪𑌰𑌕𑌾𑌲 𑌯𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌿𑌶𑍍𑌰𑌾𑌨𑍍
𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍍𑌪𑌰𑌾𑌙𑍍𑌕𑍁𑌶𑌮𑍁𑌨𑌿𑌂 𑌪𑍍𑌰𑌣𑌤𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂.

భూతంసరశ్చ మహదాహ్వయ భట్టనాథ
శ్రీభక్తిసార కులశేఖర యోగివాహాన్-
భక్తాఙ్ఘ్రిరేణు పరకాల యతీన్ద్రమిశ్రాన్
శ్రీమత్పరాఙ్కుశమునిం ప్రణతోస్మి నిత్యమ్.

ஜீயர் திருவடிகளே சரணம்.

## குருபரம்பராப்ரபாவம்—தனியன்கள்.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

கிரந்தம் சேவிக்கும்போ தனுசந்திக்கும்படியான

---

## தனியன்கள்.

---

𑌨𑌾𑌥𑌂𑌪𑌙𑍍𑌕𑌜𑌨𑍇𑌤𑍍𑌰𑌰𑌾𑌮𑌯𑌮𑍁𑌨𑌾 𑌵𑌾𑌰𑌸𑍍𑌤𑌵𑍍𑌯𑌮𑌾𑌲𑌾𑌧𑌰𑌾𑌨𑍍
𑌯𑍋𑌗𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌂 𑌕𑍁𑌰𑍁𑌕𑍇𑌶𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌜𑌲𑌧𑌿𑌂 𑌗𑍋𑌵𑌿𑌨𑍍𑌦𑌨𑌾𑌮𑌾𑌧𑌿𑌪𑌾𑌨𑍍-
𑌭𑌟𑍍𑌟𑌾𑌰𑍍𑌯𑌂 𑌨𑌿𑌗𑌮𑌾𑌨𑍍𑌤𑌯𑍋𑌗𑌿𑌜𑌗𑌦𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑍌 𑌸𑌕𑍃𑌷𑍍𑌣𑌦𑍍𑌵𑌯𑍌
𑌵𑌨𑍍𑌦𑍇 𑌮𑌾𑌧𑌵𑌪𑌦𑍍𑌮𑌨𑌾𑌭𑌸𑍁𑌮𑌨𑌃 𑌕𑍋𑌲𑍇𑌶𑌸𑍇𑌵𑌾𑌧𑌿𑌪𑌾𑌨𑍍.

నాథంపఙ్కజనేత్రరామయమునా వారస్తవ్యమాలాధరాన్
యోగీన్ద్రం కురుకేశచన్ద్రజలధిం గోవిన్దనామాధిపాన్-
భట్టార్యం నిగమాన్తయోగిజగదాచార్యౌ సకృష్ణద్వయౌ
వన్దే మాధవపద్మనాభసుమనః కోలేశసేవాధిపాన్.

𑌨𑌮𑍋 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌵𑍇𑌦𑍍𑌯𑌾𑌯 𑌜𑌗𑌨𑍍𑌮𑌙𑍍𑌗𑌲𑌹𑍇𑌤𑌵𑍇-
𑌯𑌸𑍍𑌯 𑌵𑌾𑌗𑌮𑍃𑌤𑌾𑌸𑌾𑌰 𑌪𑍂𑌰𑌿𑌤𑌂 𑌭𑍁𑌵𑌨𑌤𑍍𑌰𑌯𑌂.

నమో వేదాన్తవేద్యాయ జగన్మఙ్గళహేతవే-
యస్య వాగమృతాసార పూరితం భువనత్రయం.

𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌵𑍇𑌦𑍍𑌯𑌾𑌮𑍃𑌤𑌵𑌾𑌰𑌿𑌰𑌾𑌶𑍇
𑌰𑍍𑌵𑍇𑌦𑌾𑌰𑍍𑌥𑌸𑌾𑌰𑌾𑌮𑍃𑌤𑌪𑍂𑌰𑌮𑌗𑍍𑌰𑍍𑌯𑌂-
𑌆𑌦𑌾𑌯𑌵𑌰𑍍𑌷𑌨𑍍𑌤𑌮𑌹𑌂 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑍇
𑌕𑌾𑌰𑍁𑌣𑍍𑌯𑌪𑍂𑌰𑍍𑌣𑌂 𑌕𑌲𑌿𑌵𑍈𑌰𑌿𑌦𑌾𑌸𑌂.

వేదాన్తవేద్యామృతవారిరాశే
ర్వేదార్థసారామృతపూరమగ్ర్యం-
ఆదాయవర్షన్తమహంప్రపద్యే
కారుణ్యపూర్ణంకలివైరిదాసం.



# குருபரம்பராப்ரபாவம் — தனியன்கள்.

ஶ்ரீமத் க்ருஷ்ண ஸமாஹ்வாய நமோ யாமுந ஸூநவே-
யத்கடாக்ஷைக லக்ஷ்யாணாம் ஸுலப: ஶ்ரீதரஸ்ஸதா.

శ్రీమత్ కృష్ణసమాహ్వాయ నమో యామునసూనవే-
యత్కటాక్షైకలక్ష్యాణాం సులభశ్శ్రీధరస్సదా.

ஶ்ரீக்ருஷ்ணபாதபாதாப்ஜே நமாமி ஶிரஸா ஸதா-
யத்ப்ரஸாதப்ரபாவேந ஸர்வஸித்திரபூந்மம.

శ్రీకృష్ణపాదపాదాబ్జే నమామిశిరసాసదా-
యత్ప్రసాదప్రభావేన సర్వసిద్ధిరభూన్మమ.

லோகாசார்யாய குரவே க்ருஷ்ணபாதஸ்ய ஸூநவே-
ஸம்ஸாரபோகிஸந்தஷ்ட ஜீவஜீவாதவே நம:.

లోకాచార్యాయగురవే కృష్ణపాదస్యసూనవే-
సంసారభోగిసన్దష్ట జీవజీవాతవేనమః.

நமஶ்ஶ்ரீஶைலநாதாய குந்தீநகரஜந்மநே-
ப்ரஸாதலப்தபரம ப்ராப்யகைங்கர்யஶாலிநே.

నమశ్శ్రీశైలనాథాయ కున్తీనగరజన్మనే-
ప్రసాదలబ్ధపరమ ప్రాప్యకైఙ్కర్యశాలినే

ஶ்ரீஶைலேஶதயாபாத்ரம் தீபக்த்யாதிகுணார்ணவம்-
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம்.

శ్రీశైలేశదయాపాత్రం ధీభక్త్యాదిగుణార్ణవమ్-
యతీన్ద్రప్రవణంవన్దే రమ్యజామాతరంమునిమ్.

ரம்யஜாமாத்ருயோகீந்த்ர பாதரேகாமயம் ஸதா-
ததாயத்தாத்மஸத்தாதிம் ராமாநுஜமுநிம் பஜே.

రమ్యజామాతృయోగీన్ద్ర పాదరేఖామయంసదా-
తథాయత్తాత్మసత్తాదిం రామానుజమునింభజే.

# குருபரம்பராப்ரபாவம்—தனியன்கள்.

𑌵𑌨𑍍𑌦𑍇 𑌵𑌾𑌨𑌮𑌹𑌾𑌶𑍈𑌲 𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌮𑍁𑌨𑌿𑌪𑍍𑌰𑌿𑌯𑌂-
𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌾𑌰𑍍𑌯𑌂𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌂 𑌵𑌾𑌤𑍍𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌵𑌯𑌵𑌿𑌭𑍂𑌷𑌣𑌂.

వన్దేవానమహాశైల రామానుజమునిప్రియం-
రామానుజార్యంసర్వజ్ఞం వాత్స్యాన్వయవిభూషణం.

ஜீயர்திருவடிகளேசரணம்.

---

இக்கிரந்தகர்த்தாவாகிய பின்பழகியபெருமாள்ஜீயர்

## தனியன்கள்.

---

𑌵𑌾𑌤𑍍𑌸𑌲𑍍𑌯𑌸𑍌𑌶𑍀𑌲𑍍𑌯 𑌗𑍁𑌣𑌾𑌂𑌬𑍁𑌰𑌾𑌶𑌿𑌂
𑌵𑌕𑍍𑌤𑌾𑌰𑌮𑌰𑍍𑌥𑌂 𑌦𑍍𑌰𑌵𑌿𑌡𑌶𑍍𑌰𑍁𑌤𑍀𑌨𑌾𑌂-
𑌶𑍍𑌰𑍀𑌦𑍇𑌵𑌰𑌾𑌟𑍍𑌪𑍁𑌤𑍍𑌰 𑌪𑌦𑍈𑌕𑌨𑌿𑌷𑍍𑌠𑌂
𑌯𑌜𑍍𑌞𑍇𑌶𑌸𑍌𑌰𑌿𑌂 𑌮𑍁𑌨𑌿𑌮𑌾𑌶𑍍𑌰𑌯𑌾𑌮𑌃.

వాత్సల్యసౌశీల్య గుణాంబురాశిం
వక్తారమర్థం ద్రవిడశ్రుతీనాం-
శ్రీదేవరాట్పుత్ర పదైకనిష్ఠం
యజ్ఞేశశారిం మునిమాశ్రయామః.

𑌕𑌲𑌿𑌧𑍍𑌵𑌂𑌸𑌿𑌦𑌯𑌾𑌪𑌾𑌤𑍍𑌰𑌂 𑌪𑌶𑍍𑌚𑌾𑌤𑍍𑌸𑍁𑌨𑍍𑌦𑌰𑌸𑌂𑌜𑍍𑌞𑌕𑌂-
𑌅𑌜𑍍𑌞𑌾𑌤𑌜𑍍𑌞𑌾𑌪𑌕𑌂𑌪𑍁𑌂𑌸𑌾𑌂 𑌅𑌸𑍍𑌮𑌦𑍍𑌦𑍇𑌶𑌿𑌕𑌮𑌾𑌶𑍍𑌰𑌯𑍇.

కలిధ్వంసిదయాపాత్రం పశ్చాత్సుందరసంజ్ఞకం-
అజ్ఞాతజ్ఞాపకంపుంసాం అస్మద్దేశికమాశ్రయే.

## குருபரம்பராப்ரபாவம்—தனியன்கள்.

ஶௌரிமுகநிஸ்ஸ்ருத த்ரவிடவேதநிர்வாஹகம்
ஸ்வபக்தஜநரக்ஷண க்ஷமக்ருபாத்தஸத்வீக்ஷணம்.
ஸ்வஸூக்திரசநோஜ்ஜ்வல த்குருபரம்பராவைபவம்
யதீந்த்ரபதஶேகரம் தமஹரங்கரம்யம்பஜே.

శౌరిముఖనిస్సృత ద్రవిడవేదనిర్వాహకం
స్వభక్తజనరక్షణ క్షమకృపాత్తసద్వీక్షణం.
స్వసూక్తిరచనోజ్జ్వల ద్గురుపరంపరావైభవం
యతీంద్రపదశేఖరం తమహరంగరమ్యంభజే.

---

### நேரிசைவெண்பா.

அருணிரம்பும் புட்குழிவாழ்பின் பழகனென்பார்
குருபரம்பராவிபவக்கூறத் - திருவார்
திருச்சங்குடையவன் றாள்சேவிப்போனெஞ்சே
திருமால்பதஞ்சேர்திறத்து.

வாழிபதின்மருடனாண்டாள்மதுரகவி
வாழியநாதன்முதலாமாமறையோர் - வாழி
யொருக்கோலனைநெருக்கி யோட்டுமெதிராசன்
றிருத்தாள்வணங்கினார் சீர்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

---

தனியன்கள்

முற்றிற்று.





ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## ப்ரவேசம்.

ஸ்ரீய:பதியாய், அவாப்தஸமஸ்தகாமனாய், ஸ்ரீவைகுண்ட நிகேதனனாய், ஸ்ரீமதநந்தமுக நித்யஸூரி பரிஷந்நிஷேவ்யமாணனாய், அகில மங்களகுணஸ்வரூபனான ஸர்வேஶ்வரன் (க) "𑌕𑍍𑌷𑌯𑌨𑍍𑌤𑌮𑌸𑍍𑌯 𑌰𑌜𑌸𑌃 𑌪𑌰𑌾𑌕𑍇" (క్షయంతమస్యరజసః పరాకే) என்றும் (உ) "𑌤𑍍𑌰𑌿𑌪𑌾𑌦𑌸𑍍𑌯𑌾𑌮𑍃𑌤𑌂 𑌦𑌿𑌵𑌿" (త్రిపాదస్యామృతందివి) என்றும் (ங) "𑌤𑌦𑌕𑍍𑌷𑌰𑍇 𑌪𑌰𑌮𑍇 𑌵𑍍𑌯𑍋𑌮𑌨𑍍" (తదక్షరే పరమేవ్యోమన్) என்றும் (ச) "𑌯𑍋𑌽𑌸𑍍𑌯𑌾𑌧𑍍𑌯𑌕𑍍𑌷𑌃 𑌪𑌰𑌮𑍇 𑌵𑍍𑌯𑍋𑌮𑌨𑍍" (యోఽస్యాధ్యక్షఃపరమేవ్యోమన్) என்றும் (ரு) "𑌤𑌦𑍍𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌃 𑌪𑌰𑌮𑌂 𑌪𑌦𑌂 𑌸𑌦𑌾 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌸𑍂𑌰𑌯𑌃" (తద్విష్ణోఃపరమంపదం సదాపశ్యన్తి సూరయః) என்றும் (சா) "𑌉𑌭𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌭𑍂𑌮𑌿𑌨𑍀𑌳𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌸𑍇𑌵𑌿𑌤𑌃 𑌪𑌰𑌮𑍇𑌶𑍍𑌵𑌰𑌃", (ఉభాభ్యాం భూమినీళాభ్యాం సేవితఃపరమేశ్వరః) என்றும் (எ) "𑌅𑌤𑍍𑌯𑌰𑍍𑌕𑌾𑌨𑌲𑌦𑍀𑌪𑍍𑌤𑌂 𑌤𑌤𑍍 𑌸𑍍𑌥𑌾𑌨𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌰𑍍𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 - 𑌸𑍍𑌵𑌯𑍈𑌵 𑌪𑍍𑌰𑌭𑌯𑌾 𑌰𑌾𑌜𑌨𑍍 𑌦𑍁𑌷𑍍𑌪𑍍𑌰𑍇𑌕𑍍𑌷𑍍𑌯𑌂 𑌦𑍇𑌵𑌦𑌾𑌨𑌵𑍈𑌃" (అత్యర్కానలదీప్తంతత్ స్థానంవిష్ణోర్మహాత్మనః - స్వయైవప్రభయారాజన్ దుష్ప్రేక్ష్యం దేవదానవైః) என்றும் (அ) "[illegible]

ஶ்சாமலோதகா: - ஏதே வை நிரயாஸ்தாத ஸ்தாநஸ்ய பரமாத்மந:" (ఆక్రీడా వివిధా రాజన్ పద్మిన్యశ్చామలోదకాః - ఏతే వై నిరయాస్తాత స్థానస్య పరమాత్మనః) என்றும் (௯) "காலம் ஸ பசதே யத்ர ந காலஸ்தத்ர வை ப்ரபு:" (కాలం స పచతే యత్ర న కాలస్తత్ర వై ప్రభుః) என்றும் (௧௦) "கலாமுஹூர்த்தாதிமயஶ்ச காலோ ந யத்விபூதே: பரிணாமஹேது:" (కలాముహూర్తాదిమయశ్చ కాలో న యద్విభూతేః పరిణామహేతుః) என்றும் (௧௧) "அண்டகோஶாத்ஸாவரணாத் அமுஷ்மாத் பரத: ப்ரபோ - ஸ்திதோऽஹம் பரமே வ்யோமந் ஸ்வப்ராக்ருதஶரீரவாந்" (అణ్డకోశాత్సావరణాత్ అముష్మాత్ పరతః ప్రభో - స్థితోఽహం పరమే వ్యోమన్ స్వప్రాకృతశరీరవాన్) என்றும் (௧௨) "யத்தத்புராணமாகாஶம் ஸர்வஸ்மாத்பரமம் த்ருவம் - யத்பதம் ப்ராப்ய தத்த்வஜ்ஞா: முச்யந்தே ஸர்வகில்பிஷை:" (యత్తత్పురాణమాకాశం సర్వస్మాత్పరమం ధ్రువం - యత్పదం ప్రాప్య తత్త్వజ్ఞాః ముచ్యన్తే సర్వకిల్బిషైః) என்றும் (௧௩) "அண்டேப்ய: பரதோ நித்யம் த்ரிபாதேந விராஜதே - இதரேண து பாதேந ப்ராக்ருதேऽஸ்மிந் விராஜதே" (అండేభ్యః పరతో నిత్యం త్రిపాదేన విరాజతే - ఇతరేణ తు పాదేన ప్రాకృతేఽస్మిన్విరాజతే) என்று மித்யாதியாலே யோகயாஜ்ஞவல்க்யபஞ்சமவேதபுராணாதிந ஸமுதஞ்சித ப்ராமாண்ய பாஞ்சராத்ராதிவசநங்களிலும் "நலமந்தமில்லதோர் நாடு" என்றும், "சுடரொளியாய்நின்ற தன்னுடைச்சோதி" என்றும், "தெளிவிசும்புதிருநாடு" என்றும், "மாகவைகுந்தம்" என்றும், "தெளிதாகியசேண்விசும்பு" என்றும், இத்யாதிவாக்யசதங்களாலே, "மயர்வற மதிநலமருளப்பெற்ற" ஆழ்வார்களாலே அறுதி யிடப்பட்டுள்ள அந்த வேற்றத்தை யுடைத்தாய் (௧௪) "குணா: ப்ரதாநம் புருஷ: பரம் பதம் பராத்பரம் ப்ரஹ்ம ச தே விபூதய:" (గుణాః ప్రధానం పురుషః పరం పదం పరాత్పరం బ్రహ్మ చ తే విభూతయః) என்றும் (௧௫) "பரமயோகிவாங்மநஸாபரிச்சேத்யஸ்வரூபஸ்வபாவ" (పరమయోగివాఙ్మనసాపరిచ్ఛేద్యస్వరూపస్వభావ) என்று தொடங்கி "நிரதிஶயவைகுண்டநாத" (నిరతిశయవైకుంఠనాథ) என்றும் (௧௬) "காலாதிகா தவ பரா மஹாவிபூதி:" (కాలాతిగా తవ పరా మహావిభూతిః) என்றும் (௧௭) "யத்தூரே மநஸோ யதேவ தமஸ: பாரே யதத்யத்புதம்" (యద్దూరే మనసో యదేవ తమసః పారే యదత్యద్భుతం) என்றுமிப்படி ஸர்வபூர்வதேஶிக ஸ்தோமப்ரஶஸ்தமாய் இப்படி வேதாந்தங்களாலும், ருஷிகளாலும், ஆழ்வார்க

ளாலும், ஏக கண்டமாக ப்ரதிபாதிக்கப்பட்ட ப்ரபாவாதி சயத்தையுடைய பரமபதத்திலே (௧௮) "𑌪𑍍𑌰𑌾𑌕𑌾𑌰𑍈𑌶𑍍𑌚 𑌵𑌿𑌮𑌾𑌨𑍈𑌶𑍍𑌚 𑌸𑍌𑌧𑍈𑌰𑍍𑌰𑌤𑍍𑌨𑌮𑌯𑍈𑌰𑍍𑌵𑍃𑌤𑌾" (ప్రాకారైశ్చ విమానైశ్చ సౌధై రత్నమయైర్వృతా) என்றும் (௧௯) "𑌮𑌣𑌿𑌤𑍋𑌰𑌣𑌚𑌿𑌤𑍍𑌰𑌾𑌢𑍍𑌯𑌾 𑌵𑌿𑌚𑌿𑌤𑍍𑌰𑌧𑍍𑌵𑌜𑌶𑌾𑌲𑌿𑌨𑍀" (మణితోరణచిత్రాఢ్యా విచిత్రధ్వజశాలినీ) என்றும் (௨௦) "𑌕𑍋𑌟𑌿𑌵𑍈𑌶𑍍𑌵𑌾𑌨𑌰𑌪𑍍𑌰𑌖𑍍𑌯𑍈𑌃 𑌗𑍃𑌹𑌪𑌙𑍍𑌕𑍍𑌤𑌿𑌭𑌿𑌰𑌾𑌵𑍃𑌤𑌾" (కోటివైశ్వానరప్రఖ్యైః గృహపంక్తిభిరావృతా) என்றுஞ்சொல்லுகிறபடியே "கொடியணிநெடுமதிட் கோபுரங்களையு முடைத்தான திருப்படைவீட்டிலே மணிமாட மாளிகைகளாலே சூழப்பட்ட "செம்பொன் செய்கோயிலிலே (௨௧) "𑌸𑌹𑌸𑍍𑌰𑌸𑍍𑌥𑍂𑌣𑍇 𑌵𑌿𑌮𑌿𑌤𑍇 𑌦𑍃𑌢 𑌉𑌗𑍍𑌰𑍇 𑌯𑌤𑍍𑌰 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌮𑌧𑌿𑌦𑍇𑌵 𑌆𑌸𑍍𑌤𑍇" (సహస్రస్థూణే విమితే దృఢ ఉగ్రే యత్ర దేవానామధిదేవ ఆస్తే) என்றும் (௨௨) "𑌮𑌧𑍍𑌯𑍇 𑌤𑍁 𑌮𑌣𑍍𑌡𑌪𑍇 𑌦𑌿𑌵𑍍𑌯𑍇 𑌰𑌾𑌜𑌸𑍍𑌥𑌾𑌨𑌂 𑌮𑌹𑍋𑌚𑍍𑌛𑍍𑌰𑌯𑌮𑍍 - 𑌮𑌾𑌣𑌿𑌕𑍍𑌯𑌸𑍍𑌤𑌮𑍍𑌭𑌸𑌾𑌹𑌸𑍍𑌰𑌜𑍁𑌷𑍍𑌟𑌂 𑌰𑌤𑍍𑌨𑌮𑌯𑌂 𑌶𑍁𑌭𑌮𑍍. 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑍁𑌕𑍍𑌤𑍈𑌃 𑌸𑌮𑌾𑌕𑍀𑌰𑍍𑌣𑌂 𑌸𑌾𑌮𑌗𑌾𑌨𑍋𑌪𑌶𑍋𑌭𑌿𑌤𑌮𑍍 - 𑌅𑌤𑍀𑌵 𑌤𑌤𑍍𑌸𑌦𑌾𑌪𑍂𑌰𑍍𑌣𑌮𑍍" (మధ్యే తు మండపే దివ్యే రాజస్థానం మహోచ్ఛ్రయం - మాణిక్యస్తంభసాహస్ర జుష్టం రత్నమయం శుభం. నిత్యముక్తైస్సమాకీర్ణం సామగానోపశోభితం - అతీవ తత్సదాపూర్ణం) என்றுஞ் சொல்லுகிறபடியே "மாமணிமண்டபத்தந்தமில்பேரின்பத்து" என்றுஞ்சொல்லப்பட்ட ஆமோதைகார்ணவமான திருமாமணிமண்டபத்திலே பர்யங்கவித்யாப்ரத்யோதிதாநவத்ய மாஹாத்ம்யமான திவ்யாஸ்த்தாநமண்டபத்திலே, உபயவிபூதியுந் தொழிலாகவகுப்புண்ட கோப்புடைய சீரியசிங்காசநத்திலே (௨௩) "𑌹𑌿𑌰𑌣𑍍𑌮𑌯𑍇 𑌪𑌰𑍇 𑌕𑍋𑌶𑍇 𑌵𑌿𑌰𑌜𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌨𑌿𑌷𑍍𑌕𑌲𑌮𑍍 - 𑌤𑌚𑍍𑌛𑍁𑌭𑍍𑌰𑌂 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌷𑌾𑌂 𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌸𑍍𑌤𑌦𑍍𑌯𑌦𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌦𑍋 𑌵𑌿𑌦𑍁𑌃" (హిరణ్మయే పరే కోశే విరజం బ్రహ్మ నిష్కలం - తచ్ఛుభ్రం జ్యోతిషాం జ్యోతిస్తద్యదాత్మవిదో విదుః) என்றும் (௨௪) "𑌨 𑌤𑌤𑍍𑌰 𑌸𑍂𑌰𑍍𑌯𑍋 𑌭𑌾𑌤𑌿 𑌨 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌤𑌾𑌰𑌕𑌂 - 𑌨𑍇𑌮𑌾 𑌵𑌿𑌦𑍍𑌯𑍁𑌤𑍋 𑌭𑌾𑌨𑍍𑌤𑌿 𑌕𑍁𑌤𑍋'𑌯𑌮𑌗𑍍𑌨𑌿𑌃 𑌤𑌮𑍇𑌵 𑌭𑌾𑌨𑍍𑌤𑌮𑌨𑍁𑌭𑌾𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌤𑌸𑍍𑌯 𑌭𑌾𑌸𑌾 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌵𑌿𑌭𑌾𑌤𑌿" (న తత్ర సూర్యో భాతి న చన్ద్రతారకం నేమా విద్యుతో భాన్తి కుతోఽయమగ్నిః - తమేవ భాన్తమనుభాతి సర్వం తస్య భాసా సర్వమిదం విభాతి) என்றும் (௨௫) "𑌦𑌿𑌵𑌿 𑌸𑍂𑌰𑍍𑌯𑌸𑌹𑌸𑍍𑌰𑌸𑍍𑌯 𑌭𑌵𑍇𑌦𑍍𑌯𑍁𑌗𑌪𑌦𑍁𑌤𑍍𑌥𑌿𑌤𑌾 - 𑌯𑌦𑌿 𑌭𑌾𑌃 𑌸𑌦𑍃𑌶𑍀 𑌸𑌾 𑌸𑍍𑌯𑌾𑌦𑍍𑌭𑌾𑌸𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌨𑌃" (దివి సూర్యసహస్రస్య భవేద్యుగపదుత్థితా - యది భాః సదృశీ సా స్యాద్భాసస్తస్య మహాత్మనః) என்றும் (௨௬) "[illegible]"

(స్రగ్వస్త్రాభరణైర్యుక్తం స్వానురూపైరనూపమైః - చిన్మయైస్స్వప్రకాశైశ్చ అన్యోన్యరుచిరఞ్జితైః) என்றும் "சுழிபட்டோடுஞ் சுடர்ச்சோதி வெள்ளம்" என்றும் "சோதிவெள்ளத்தினுள்ளே எழுவதோருரு" என்றும், சொல்லுகிறபடியே, நிரவதிகதேஜோரூபமாய், ஸதைகரூபமாய், நித்யஸித்தபரமேஷ்ட்யாதி பஞ்சோபநிஷண்மயமாய், ஸ்வாநுரூபமாய், சின்மயமாய்விளங்குகிற, கிரீடாதிநூபுராந்தமான திவ்யஸ்ரக்வஸ்த்ராபரண பூஷிதமாய், ஆபரணகோடியிலும், ஆயுதகோடியிலும், மெய்க்காட்டுகிற திவ்யாயுதங்களாலே தீப்யமானமாய், நிரதிசய, ஸௌந்தர்ய, ஸௌகுமார்ய, லாவண்ய, யௌவநாத்ய பரிமித உதாரகுணகணநிதியான திவ்யமங்களவிக்ரஹவிசிஷ்டனாய், இவ்வடிவழகடங்க, காட்டிலெரித்த நிலாவாகாமே (உஎ) "வ்ருஹச்சரீரோ விமாநதேஹோ யுவாகுமாரத்வமுபேயிவாந்ஹரி: - ரேமேச்ரியாஸாஜகதாஞ்ஜநந்யா ஸுஜ்யோத்ஸ்நயா சந்த்ர இவாம்ருதாம்சு:" (బృహచ్ఛరీరో విమానదేహో యువాకుమారత్వముపేయివాన్ హరిః - రేమే శ్రియా సా జగతాం జనన్యా సుజ్యోత్స్నయా చన్ద్ర ఇవామృతాంశుః) என்றும், "உடனமர்காதல் மகளிர் திருமகள் மண்மகளாயர்மடமகள்" என்றும், சொல்லுகிறபடியே, இரண்டிடத்திலுமிருந்தநுபவிக்கிற "கூந்தல் மலர்மங்கைக்கும் மண்மடந்தைக்குங் குலவாயர் கொழுந்துக்குங் கேள்வனைக்" கொண்டு ஸ்ரீபூமிநீளைகளோடே வீற்றிருந்து இப்படி "கண்ணன் விண்ணூர்" ஆன வைகுந்தமாநகரிலே திவ்யபோகம் நடவாநிற்க, அச்சேர்த்தியழகைத்தலைநீர்ப்பாட்டிலே கண்டநுபவித்து நிர்ப்பரஸ்துதிபண்ணி (உஅ) "நம:" (నమః) என்பது (உகூ) "ஜிதம்" (జితం) என்பது "பல்லாண்டென்பதாய்" அக்ரமமாக "பிணங்கிய மார்பிதற்று" மதுகண்டு "ஆங்காரவாரமதுகேட்டழலுமிழும் பூங்காரரவணை" என்கிறபடியே, அஸ்த்தாநரக்ஷாவ்யஸநிகளாய், தாஸ்யத்ருஷ்ணைகலிதபரிகரராய் (௩௦) "ஸூரயோ நித்யஸம்ஸித்தாஸ்ஸர்வதா ஸர்வதர்சிந:" (సూరయో నిత్యసంసిద్ధాస్సర్వదా సర్వదర్శినః) என்கிறபடியே "முடியுடைவானவரான" "அயர்வறுமமரர்க" ளாலும் (௩க) "ஸூர்யகோடிப்ரதீகாசா: பூர்ணேந்துயுதஸந்நிபா: - யஸ்மிந்ஸதேவி ராஜந்தே முக்தாஸ்ஸம்ஸாரபந்தநை:" (సూర్యకోటిప్రతీకాశాః పూర్ణేన్దుయుతసన్నిభాః - యస్మిన్స దేవి రాజన్తే ముక్తాస్సంసారబన్ధనైః) என்கிறபடி களைகண்டோரான அநந்தவைநதேயாதிவதந்தரங்கரான அநந்தமுக்த ப்ருந்தங்களாலும், அநவரதபரிசர்யமாண சரணநளிநனாய்க்கொண்டு (௩உ) "ராஜாதிராஜஸ்ஸர்வேஷாம் விஷ்ணுர்ப்ரஹ்மமயோமஹாந் - ஈச்வரந்தம்விஜாநீமஸ்ஸபிதாஸப்ரஜாபதி:" (రాజా

ధిరాజస్సర్వేషాం విష్ణుర్బ్రహ్మమయోమహాన్ - ఈశ్వరస్తంవిజానీమస్సశంభుస్సప్రజాపతిః) என்கிற வேண்டற்பாடுதோன்ற "ஏழுலகுந்தனிக்கோல்செல்லவீற்றிருந்து" என்றும், பொங்கோதஞ் சூழ்ந்த புவனியும் விண்ணுலகும், அங்காதுஞ் சோராமேயாள்கின்ற செங்கோலுடைய திருவரங்கச்செல்வனார்" என்றுஞ் சொல்லுகிறபடியே உபயவிபூதிநிர்வாஹகனாய் "கண்டவாற் றற்றனதே புலனெனநின்றான்" என்கிறபடியே காட்சியிலே தான் உபயவிபூதிநிர்வாஹகனானமை தோற்ற வெழுந்தருளியிருந்து (௧௩) "[illegible]" (స్వేతరసమస్తవస్తువిలక్షణానన్తజ్ఞానానన్దైకస్వరూప) என்கிறபடியே தானும் நிரதிசயாநந்தயுக்தனாய் "அயர்வறுமமரர்கள்" என்கிறபடியே நித்யாஸங்குசிதஜ்ஞாநராயிருந்துள்ள அநந்த கருடவிஷ்வக்ஸேந ப்ரமுகரான நித்யஸூரிகளையும், "இயக்கலாமறுத்" தென்கிறபடியே நிவ்ருத்தஸம்ஸாருமாய் நித்யரோபாதிலப்த கைங்கர்யருமான முக்தரையும் "அந்தமில் பேரின்பத்தடியர்" என்னும்படி யாநந்திப்பித்துக்கொண்டு போராநிற்க, இவர்களோபாதிஸம்ஸாரிகளும் நம்மையநுபவித்து அநுபவஜநித ப்ரீதிகாரிதாவஸ்தோசிதாசேஷ சேஷைகரதிரூபநித்ய நிரவத்ய நிரதிசயாநந்த ரூபமத்கைங்கர்யமாகிற மஹாஸம்பத்தைப்பெற்று வாழ்கைக்குப்ராப்தியுண்டாயிருக்க, இவர்களித்தை யிழந்திருப்பதேயென்று மிகவும் வ்யாகுலாந்தஃகரணனாய், அங்குத்தை யநுபவங்களொன்று முண்டதுருக்காட்டாதே (௧௪) "[illegible]" (సపక్షాకీనరకహేత ) என்கிறபடியே அவன் தனியனைப்போலே போரநொந்து இவர்கள் கரணகளேபர சூன்யராய் (௧௫) "[illegible]" (లూనపక్షఇవాణ్డజః ) என்கிறபடியே இறகொடிந்த பட்சிபோலே யிருக்கிறபடியைக்கண்டு "(௧௬) [illegible]" (కరణకళేబరైర్ఘటయితుందయమానమనాః) என்றும் "பல்லுயிர்க்கு மாக்கைகொடுத்தளித்தகோனே" என்றுஞ் சொல்லுகிறபடியேபரமதயாளுவாய்க்கொண்டு அகிலாத்மாக்களுக்கும் கரணகளேபரப்ரதாநம் பண்ணியருள, இவர்களும் (௧௭) "[illegible]" (విచిత్రాదేహసంపత్తిరీశ్వరాయనివేదితుం - పూర్వమేవకృతాబ్రహ్మన్ హస్తపాదాదిసంయుతా ) என்றும் "நாடாதமலர்நாடி நாடோறும் நாரணன்றன் வாடாதமலரடிக்கீழ் வைக்கவேவகுக்கின்று" என்றும் "மாயவன்றன்னை வணங்கவைத்த கரணமிவை" என்றும் சொல்லுகிறபடியே "தேனேமலருந்திருப்பாதம்" என்றும் "துயரறுசுடரடி" என்றுஞ்சொல்லுகிறபடியே, ஸ்வசரணஸமாஸ்ரயணத்துக்குறு

^நிரதிசய போக்யமாய்ப்
..ப்ரியமான

ப்பாகக்கொடுத்த கரசரணாத்யவயவஸங்காதாத்மகமானசரீரத்தைக்கொண்டு அவன் நினைவின்படி செய்யாமே, ஸமிதை தறிக்கக்கொடுத்த கத்தியைக் கொண்டு பசுவின்வாலைத் தறிப்பாரைப்போலேயும், களையெடுக்கக் கொடுத்த கோலைக்கொண்டு கண்ணைக்கிளரிக் கொள்வாரைப் போலேயும், ஆறு நீந்தக்கொடுத்ததெப்பத்தைக்கொண்டு கரையேறலாயிருக்க, அதுசெய்யாதே, நீர்வாய்க்காலேயொழுகிக்கடலிலேபுகுவாரைப்போலேயும், "ஆக்கையின்வழியுழன்று" சப்தாதிவிஷயப்ராவண்யத்துக்குறுப்பாக்கி, கர்மப்ரவாஹத்தாலேபிறவியென்னும் பெருங்கடலிலே புக்கு அநர்த்தப்படுகிறபடியைக் கண்டு, நல்வழிகண்டு நடக்கைக்குடலாக (௩அ) "ஶாஸநாச்சாஸ்த்ரம்" (శాసనాచ్ఛాస్త్రం) என்றும் (௩௯) "ஹர்த்தும் தமஸ்ஸதஸதீ ச விவேக்துமீஶோ மாநம் ப்ரதீபமிவ காருணிகோ ததாதி" (హర్తుంతమస్సదసతీచవివేక్తుమీశో మానంప్రదీపమివకారుణికోదదాతి) என்றும் "கலைகளும்வேதமும் நீதிநூலும்கற்பமுஞ்சொற்பொருள்தானும்மற்றைநிலைகளும் வானவர்க்கும் பிறர்க்கும் நீர்மையினா லருள்செய்த" என்றும் "தொண்டேசெய்தென்றுந் தொழுது வழியொழுகப்பண்டே பரமன்பணித்தபணிவகை" என்றுஞ் சொல்லுகிறபடியே தன் க்ருபையாலே சாஸ்த்ரப்ரதாநம் பண்ணினவிடத்திலும், அதின்படிசெய்யாதே (௪௦) "ஈஶ்வரோஹமஹம் போகீ ஸித்தோஹம் பலவாந் ஸுகீ - ஆட்யோபிஜநவாநஸ்மி கோந்யோஸ்தி ஸத்ருஶோ மயா" (ఈశ్వరోహమహం భోగీ సిద్ధోహం బలవాన్ సుఖీ - ఆఢ్యోభిజనవానస్మి కోన్యోస్తి సదృశో మయా) என்றும், (௪௧) "யோந்யதா ஸந்தமாத்மாநமந்யதா ப்ரதிபத்யதே - கிம் தேந ந க்ருதம் பாபம் சோரேணாத்மாபஹாரிணா" (యోన్యథా సన్తమాత్మాన మన్యథా ప్రతిపద్యతే- కిం తేన న కృతం పాపం చోరేణాత్మాపహారిణా), என்றும் "சொல்வனவல்வினைமுதலா" என்றுஞ்சொல்லுகிறபடியே அகிலபாபஹேதுவாய் ஸ்வாதந்த்ர்யரூபமான ஆத்மாபஹாரத்தைப்பண்ணி அநாதிகர்மவாஸநாதோஷதூஷிதாந்தஃகரணராய், அபதேப்ரவ்ருத்தராயிருக்கும்படியைக்கண்டு, ஓலைப்புறத்துச் செல்லாத நாட்டையெடுத்துவிட்டுக் குறும்பறுக்கும் ராஜாக்களைப்போலே, ஸர்வேஶ்வரனும் தாமேபோய்இவர்களைவாரிப் பிடியாகப்பிடித்துக்கொண்டு வரவேணுமென்று, ராமக்ருஷ்ணாத்யவதாரமாக அவதரித்துப் படாதனபட்டுத் திருத்தப்பார்த்தவிடத்திலும் (௪௨) "ஆஸுரீம் யோநிமாபந்நா: மூடா ஜந்மநி ஜந்மநி - மாமப்ராப்யைவ கௌந்தேய ததோ யாந்த்யதமாம் கதிம்" (ఆసురీంయోనిమాపన్నాః మూఢాజన్మనిజన్మని - మామప్రాప్యైవకౌన్తేయ తతోయాన్త్యధమాం X౨౦) என்றும் (௪௩) "அவஜாநந்தி மாம் மூடா மாநுஷீம் தநுமாஶ்ரிதம்-

𑌪𑌰𑌂 𑌭𑌾𑌵𑌮𑌜𑌾𑌨𑌨𑍍𑌤𑍋 𑌮𑌮 𑌭𑍂𑌤𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌮𑍍 ” (అవజానన్తి మాం మూఢా మానుషీం తనుమాశ్రితం - పరం భావమజానన్తో మమ భూతమహేశ్వర:) என்னுஞ்சொல்லுகிறபடியே ஸஜாதீயப்ரதிபத்தியாலே அவஜ்ஞைபண்ணி எதிரம்புகோப்பார் “பல பலநாளுஞ்சொல்லி„ “கேட்பார் செவிசுடுகீழ்மை வசவுகளேவையும்„ “வல்லவாபழித்து„ வாக்துருக்தங்கள்பண்ணுவாராய் ஆஸுரப்ரக்ருதிகளாய் தன்னைவந்துகிட்டாமையாலே (௨௪) “𑌕𑍍𑌷𑌿𑌪𑌾𑌮𑌿” (క్షిపామి) என்றுஎதிரிட்டு அதமமானகதிகளிலே விழுகிறபடியைக்கண்டு “மனிசரும் மற்றும் முற்றுமாய் மாயப்பிறவிபிறந்த„ தனியனாகையாலே ஸஜாதீயரான நமக்கிதுஸாத்யமன்றென்றுபார்த்து, ம்ருகம்பிடிப்பார் தீபகத்தையிட்டுப்பிடிப்பாரைப்போலே மநுஷ்யஸஜாதீயரான ஆழ்வார்களையிடுவித்து, திருத்தியருளவேணுமென்று பார்த்தருளி, ஸ்ரீவத்ஸ, கௌஸ்துப, வைஜயந்தி, வநமாலைகளையும், ஸ்ரீ பூமிநீளைகளையும், ஸ்ரீபஞ்சாயுதாழ்வார்களையும், அநந்த, கருட, விஷ்வக்ஸேநப்ரப்ருதிகளையும், பார்த்து, நீங்கள்போய் லீலாவிபூதியிலே நாலுவர்ணங்களிலும் அவதரித்து, அகிலாத்மோத்தாரணங்களைப்பண்ணுங்கோளென்று நியமித்தருள, அவர்களும் (௨௫) “𑌕𑌲𑍌 𑌖𑌲𑍁 𑌭𑌵𑌿𑌷𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌪𑌰𑌾𑌯𑌣𑌾𑌃 𑌕𑍍𑌵𑌚𑌿𑌤𑍍 𑌕𑍍𑌵𑌚𑌿𑌨𑍍𑌮𑌹𑌾𑌭𑌾𑌗𑌾 𑌦𑍍𑌰𑌮𑌿𑌡𑍇𑌷𑍁 𑌚 𑌭𑍂𑌰𑌿𑌶𑌃” (కలౌ ఖలు భవిష్యన్తి నారాయణపరాయణాః క్వచిత్ క్వచిన్మహాభాగా ద్రమిడేషు చ భూరిశః) என்றும் (௨௬) “𑌤𑌾𑌮𑍍𑌰𑌪𑌰𑍍𑌣𑍀 𑌨𑌦𑍀 𑌯𑌤𑍍𑌰 𑌕𑍃𑌤𑌮𑌾𑌲𑌾 𑌪𑌯𑌸𑍍𑌵𑌿𑌨𑍀 - 𑌕𑌾𑌵𑍇𑌰𑍀 𑌚 𑌮𑌹𑌾𑌭𑌾𑌗𑌾 𑌪𑍍𑌰𑌤𑍀𑌚𑍀 𑌚 𑌸𑌰𑌸𑍍𑌵𑌤𑍀” (తామ్రపర్ణీ నదీ యత్ర కృతమాలా పయస్వినీ - కావేరీ చ మహాభాగా ప్రతీచీ చ సరస్వతీ) என்றுஞ் சொல்லுகிறபடியே இந்நதிகளின் ஸமீபங்களான த்ரமிடபூபாகத்திலே, நிமக்நராயுயர்த்தநாலுவர்ணங்களிலே வந்தவதரிக்க, ஸர்வேச்வரனும் ஆழ்வார்களுக்கு “மயர்வறமதிநல„ மருளி அவர்கள் முகேந, ஸர்வாதிகாரமான த்ரவிட வேதரூப திவ்யப்ரபந்தங்களைப்ரகாசிப்பித்தருளினான்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

---

ப்ரவேசம் முற்றிற்று.

---



( ௧ )

## ஸ்ரீபொய்கையாழ்வார் ப்ரபாவம்.

எங்ஙனேயென்னில் (௪௭) "காஞ்ச்யாம்ஸரஸி ஹேமாப்ஜே ஜாதம்காஸாரயோகிநம் - கலயே யஶ்ஶ்ரிய:பத்யே ரவிம்தீபமகல்பயத்" (కాఞ్చ్యాంసరసి హేమాబ్జే జాతంకాసారయోగినం- కలయేయశ్శ్రియఃపత్యే రవిన్దీపమకల్పయత్) என்றும், (௪௮) "முகுந்தஸ்ய முகோல்லாஸ மூலவாக்ஜாலமுச்ச்ரிதம் - முநிமுக்யம்ஸரோஜாதம் முக்திமூலமுபாஸ்மஹே" (ముకున్దస్యముఖోల్లాస మూలవాగ్జాలముచ్ఛ్రితం- మునిముఖ్యంసరోజాతం ముక్తిమూలముపాస్మహే) என்றும், (௪௯) "ஹேமாப்ஜிநீஹேமஸரோஜகர்பாத் ஸ்ரீபாஞ்சஜந்யோ ஜநிதிவ்யயோகீ - தாரேஹரேராஶ்வயுஜாக்யமாஸே ஸமஸ்தஜீவாவநகர்மஹேதோ:" (హేమాబ్జినీహేమసరోజగర్భాత్ శ్రీపాఞ్చజన్యో జనిదివ్యయోగీ - తారేహరేరాశ్వయుజాఖ్యమాసే సమస్తజీవావనకర్మహేతోః) என்றும், (௫௦) "அஜ்ஞாதிஸ்ரீசந்த்ரநேத்வாபராக்யே ஸித்தார்த்யாக்யே வத்ஸரேமாஸிசேஷே - ஶுக்லாஷ்டம்யாம்பௌமவாரேஶுபர்க்ஷே விஷ்ணோர்ஜந்மப்ராபகாஸாரயோகீ" (అజ్ఞాదిశ్రీచన్ద్రనేద్వాపరాఖ్యే సిద్ధార్థ్యాఖ్యే వత్సరేమాసిచేషే-శుక్లాష్టమ్యాంభౌమవారేశుభర్క్షే విష్ణోర్జన్మప్రాపకాసారయోగీ) என்றுஞ்சொல்லுகிறபடியே முதலாழ்வார்மூவரிலும் வைத்துக்கொண்டு ப்ரதமம் பொய்கையாழ்வார் (௫௧) "க இதி ப்ரஹ்மணோ நாம தேந தத்ராஞ்சிதோ ஹரி: - தத:காஞ்சீதிவிக்யாதா புரீபுண்யவிவர்த்திநீ" (కఇతిబ్రహ్మణోనామ తేనతత్రాఞ్చితోహరిః - తతఃకాఞ్చీతివిఖ్యాతా పురీపుణ్యవివర్ధినీ) என்கிறபடியே ககார வாச்யனான ப்ரஹ்மாவினாலே, ஸர்வேஶ்வரன் அஶ்வமேதத்தாலே ஆராதிதமான ஸ்த்தலமாகையாலே, காஞ்சீபுரமென்று ப்ரக்யாதமாய், புண்யவிவர்த்தகமுமான "கல்லுயர்ந்தநெடுமதிள்சூழ்கச்சி" யிலே "கானிலந்தோய்ந்து விண்ணோர்தொழுங் கண்ணன்வெஃகாவில்,, பொற்றாமரைப்பொய்கையிலே, த்வாபரயுகத்திலே, ஐப்பசிமாஸத்திலேவிஷ்ணுநக்ஷத்ரமான ஶ்ரவணநக்ஷத்ரத்திலே, ஸ்ரீபாஞ்சஜந்யாம்ஶராய் அவதரித்தருளினார்.

ஸ்ரீபொய்கையாழ்வார் திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

( ௨ )

## ஸ்ரீபூதத்தாழ்வார் ப்ரபாவம்.

(ரு௨) " 𑌮𑌲𑍍𑌲𑌾𑌪𑍁𑌰𑌵𑌰𑌾𑌧𑍀𑌶𑌂 𑌮𑌾𑌧𑌵𑍀𑌕𑍁𑌸𑍁𑌮𑍋𑌦𑍍𑌭𑌵𑌮𑍍 - 𑌭𑍂𑌤𑌂𑌨𑌮𑌾𑌮𑌿𑌯𑍋𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌃 𑌜𑍍𑌞𑌾𑌨𑌦𑍀𑌪𑌮𑌕𑌲𑍍𑌪𑌯𑌤𑍍 " (మల్లాపురవరాధీశంమాధవీకుసుమోద్భవం - భూతన్నమామియోవిష్ణోః జ్ఞానదీపమకల్పయత్) (ருக) "𑌵𑌨𑍍𑌦𑍇𑌭𑍂𑌤𑌾𑌖𑍍𑌯𑌯𑍋𑌗𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌂 𑌵𑌰𑍇𑌣𑍍𑌯𑌗𑍁𑌣𑌸𑌂𑌪𑌦𑌂 - 𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌸𑌹𑌾𑌯𑌕𑌰𑍁𑌣𑌾 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌪𑍍𑌰𑌮𑌿𑌤𑌿𑌵𑍈𑌭𑌵𑌂" (వన్దేభూతాఖ్యయోగీన్ద్రంవరేణ్యగుణసంపదం - లక్ష్మీసహాయకరుణా ప్రాప్తప్రమితివైభవం) (ருச)"𑌮𑌾𑌸𑍇𑌽𑌥𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌵𑌸𑍁𑌭𑍇𑌵𑌤𑍍𑌸𑌰𑍇𑌣𑌾𑌪𑌿𑌹𑌾𑌰𑍇𑌸𑌮𑍁𑌦𑍍𑌰𑌂𑌪𑍁𑌰𑌿𑌮𑌲𑍍𑌲𑌨𑌾𑌮𑍍𑌨𑍍𑌯𑌾𑌂- 𑌲𑌤𑌾𑌗𑍃𑌹𑌾𑌨𑍍𑌤𑌾𑌦𑍍𑌭𑍁𑌵𑌿𑌭𑍂𑌤𑌨𑌾𑌮𑌾 𑌕𑍌𑌮𑍋𑌦𑌕𑍀𑌶𑌕𑍍𑌤𑌿𑌮𑌯𑍋𑌮𑍁𑌨𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌃" (మాసేఽథ తస్మిన్వసుభేవత్సరేణాపిహారేసముద్రంపురిమల్లనామ్న్యాం- లతాగృహాన్తాద్భువిభూతనామా కౌమోదకీశక్తిమయోమునీన్ద్రః) என்று திவ்யஸூரிசரிதையிலே சொல்லப்பட்டதிறே. அநந்தரம் " மாதவன்பூதம் ,, என்றுசொல்லலாம்படியான பூதத்தாழ்வார் கச்சிக்கிடந்தவனூர்கடல்மல்லைத்தலசயநம்,,என்று அநுஸந்தேயமான திருக்கடல் மல்லையிலே பரிமளப்ரசுரமாய் நன்றாயிருப்பதொரு மாதவிப்பூவிலே அந்த ஐப்பசிமாஸத்திலே அவிட்டநக்ஷத்ரத்திலே ஸ்ரீகௌமோதக்யம்ஸராய் அவதரித்தருளினார்.

ஸ்ரீபூதத்தாழ்வார் திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

( ௩ )

## ஸ்ரீபேயாழ்வார் ப்ரபாவம்.

(ருரு) " 𑌤𑌨𑍍𑌮𑌾𑌸𑌿𑌜𑌾𑌤𑌂𑌶𑌤𑌤𑌾𑌰𑌕𑌾𑌯𑌾𑌂 𑌮𑌯𑍂𑌰𑌪𑍁𑌰𑍍𑌯𑌾𑌂𑌮𑌣𑌿𑌕𑍈𑌰𑌵𑌾𑌨𑍍𑌤𑌾𑌤𑍍 - 𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾𑌮𑌹𑌾𑌨𑍍𑌤𑌂𑌮𑌹𑌦𑌾𑌹𑍍𑌵𑌯𑌂𑌤𑌂 𑌶𑍍𑌰𑍀𑌨𑌨𑍍𑌦𑌕𑌾𑌂𑌶𑌂𑌶𑍍𑌰𑌿𑌤𑌭𑌕𑍍𑌤𑌿𑌰𑍂𑌪𑌂" (తన్మాసిజాతంశతతారకాయాం మయూరపుర్యామ్మణికైరవాన్తాత్ - భక్త్యామహాన్తంమహదాహ్వయం తం శ్రీనన్దకాంశంశ్రితభక్తిరూపం) (ருசா) "𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌂𑌤𑌦𑌾𑌹𑍃𑌷𑍍𑌟𑌂 𑌰𑌮𑌯𑌾𑌮𑌯𑌿𑌲𑌾𑌧𑌿𑌪𑌂- 𑌕𑌾𑌵𑍇𑌰𑍀𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑌾𑌤𑌂 𑌮𑌹𑌦𑌾𑌹𑍍𑌵𑌯𑌮𑌾𑌶𑍍𑌰𑌯𑍇" దృష్ట్వావిష్ణుం తదాహృష్టం రమయామయిలాధీపం - హావేరక్షేత్రేజాతం

మహదాహ్వయముఖ్యశ్రయేః) (௫௭) "பத்மாரமணபாதாப்ஜ ப்ரேமப்ராந்த்யா மநோஜ்ஞயா - ப்ராந்தயோகீதிவிக்யாதம் முநிம்வந்தே குணாம்புதிம்" (పద్మారమణ పాదాబ్జ ప్రేమభ్రాన్త్యామనోజ్ఞయా - భ్రాన్తయోగీతివిఖ్యాతం మునింవన్దే గుణామ్బుధిం) என்கிறபடியே அதின்பின்பு பேயாழ்வாரும் "தேனமர்சோலைமாடமாமயிலையிலே,, ஆதிகேசவப்பெருமாள்கோயிலில் திருக்கிணற்றிலேயுண்டானதொரு செவ்வல்லிப்பூவிலே, அந்த ஐப்பசிமாஸத்தில், சதயநக்ஷத்ரத்திலே- ஸ்ரீநந்தகாம்ஸராய் அவதரித்தருளி (௫௮) "நியதபுலகிதாங்கோ நிர்ப்பராநந்தபாஷ்பஸ்கலிதநிகிலஸஞ்ஜ்ஞோ கத்கதஸ்தோத்ரகீதி: - அம்ருதலஹரிவஶ்யஸ் ஸம்ப்ரவ்ருத்தோபபந்நா விகதநரகபீதிர்விஷ்ணுபக்திர்விபாதி" (నియతపులకితాఙ్గో నిర్భరానన్దబాష్ప స్ఖలితనిఖిలసఞ్జ్ఞో గద్గదస్తోత్రగీతిః - అమృతలహరివశ్యః సమ్ప్రవృత్తోపపన్నా విగతనరక భీతి ర్విష్ణుభక్తిర్విభాతి) என்று சொல்லுகிறபடியே விஷ்ணுபக்தியை யுடையராய், "பேயனாயொழிந்தே னெம்பிரானுக்கே,, என்கிறபடியே பகவதநுபவாதிசயத்தாலே "அழுவன் தொழுவன் ஆடிக்காண்பன் பாடியலற்றுவன்,, என்றும், "காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்,, என்றும் இப்படி பகவதநுபவவிஷய பாரவஶ்யம் அல்லாத ஆழ்வார்களைக் காட்டில் இவர்க்கு மிகுத்திருக்கையாலே பேயாழ்வாரென்கிற திருநாமமே நிரூபகமாகவுடையராயிருப்பர். இப்படி யிம்மூவரும் யோநிகதரன்றிக்கே புஷ்பஜாதராய்க் கொண்டுவந்தவதரித்து, எம்பெருமானுடைய நிர்ஹேதுக கடாக்ஷத்தாலே "முக்குணத்திரண்டவையகற்றி", என்கிறபடியே ராஜஸ, தாமஸ, ரஹிதராய் (௫௯) "ப்ரவ்ருத்திஞ்ச நிவ்ருத்திஞ்ச கார்யாகார்யே பயாபயே - பந்தம் மோக்ஷஞ்ச யா வேத்தி புத்திஸ்ஸா பார்த்த ஸாத்த்விகீ" (ప్రవృత్తిఞ్చ నివృత్తిఞ్చ కార్యాకార్యే భయాభయే బన్ధమ్మోక్షఞ్చ యావేత్తి బుద్ధిస్సాపార్థసాత్త్వికీ) என்று சொல்லுகிறபடியே சுத்தஸத்வகுணமாகிற "ஒன்றினில் ஒன்றிநின்று,, (௬0) "தாஸாவயமிதி ப்ரஹ்மமுநிநோ லோகவஞ்சிதா:" (దాసావయమితి బ్రహ్మమునినో లోకవఞ్చితాః) என்றும் " (௬௧) தாஸபூதாஸ் ஸ்வதஸ் ஸர்வே ஹ்யாத்மாந: பரமாத்மந: - நாந்யதா லக்ஷணம் தேஷாம் பந்தே மோக்ஷே ததைவ ச" (దాసభూతాస్స్వతస్సర్వే హ్యాత్మానః పరమాత్మనః - నాన్యథాలక్షణన్తేషాం బన్ధేమోక్షే తథైవచ) என்றும் (௬௨) "ஸ்வத்வமாத்மநி ஸஞ்ஜாதம் ஸ்வாமித்வம் ப்ரஹ்மணி ஸ்திதம் - ஆத்மதாஸ்யம் ஹரேஸ் ஸ்வாம்யம் ஸ்வபாவஞ்ச ஸதா ஸ்மர" (స్వత్వమాత్మనిసఞ్జాతం స్వామిత్వంబ్రహ్మణిస్థితం - ఆత్మదాస్యంహరేస్స్వామ్యం స్వభావఞ్చసదాస్మర) என்றும் (௬௩) "ஜ்ஞாநாநந்தமயஸ்த்வாத்மா ஶேஷோ ஹி பரமாத்மந:" (జ్ఞానానన్దమయస్త్వాత్మా శేషోహిపరమాత్మనః) என்றுமித்யா

திகளாலே ஸ்வதஸ்ஸித்த பகவத்தாஸ்யத்தை யுடையராய், அத்தாலேயுண்டாக்கப்பட்ட ஸம்யக்ஜ்ஞாந பக்திவைராக்யங்களை யுடையராய், “ புலன்களைந்துபொறிகளா லேதமொன்றுமில்லாத ,, என்கிறபடியே அங்யாநாதி வர்ஜிதராய், “ உனதுபாலேபோல் சீரில் பழுத்தொழிந்தேன் ,, என்று பால்யாத்ப்ரப்ருதி பகவத்குணைகதாரகராயிருக்கிற இவர்கள்; ஸம்ஸாரிகள் தங்களைப்போலன்றிக்கே “ உண்டியேயுடையேயுகந்து ,, சப்தாதிவிஷயங்களிலே அதிப்ரவணராய் “ இதில் நன்னெறி நிற்கவல்லாத செய்து ,, பகவத்விமுகரா யிருக்கையாலே “ நாட்டுமானிடத்தோ டெனக்கரிது ,, என்றுசொல்லுகிறபடியே, அவர்களோட்டை ஸஹவாஸம் தங்களுக்கு துஸ்ஸஹமா யிருக்கையாலே, ஒருநாளிருந்தவிடத்திலே யொருநாளிராதே, க்ராமைகராத்ரமாய் இவர்களொருவரை யொருவர் அறியாதே, தனித்தனியே வர்த்திக்கிறகாலத்திலே, ஸர்வேஶ்வரனும் (௬௪) “ மஹாத்மா ஜ்ஞாநிநாம்வர: ” ( మహాత్మా జ్ఞానినాంవరః ) என்றும் (௬௫) “ ஜ்ஞாநீத்வாத்மைவ மே மதம் ” ( జ్ఞానీత్వాత్మైవ మే మతం ) என்றுஞ்சொல்லுகிற திருமுகப்படியே தனக்காத்மபூதரான இவ்வாழ்வார்களைக் கொண்டு ஜகத்தைத் திருத்தவேணுமென்று நினைத்து (௬௬) “ அநாதிமாயயா ஸுப்த: ” ( అనాదిమాయయాసుప్తః ) என்கிறபடியே அநாத்ய வித்யாபிபூதராய்ப் போருகிற ஸம்ஸாரிசேதநருக்கு அஜ்ஞாநாந்தகாரத்தைப்போக்கி, ஸ்வவிஷயே ஜ்ஞாந பக்தி வைராக்யங்களை யுண்டாக்குகைக்காக, ஒருநாள்ராத்ரியிலே இம்மூவரும் “ சீரோறுமறையாளர் நிறைந்தசெல்வத்திருக்கோவலூரிலே ஒரு இடைகழியிலே யாத்ருச்சிகமாய் வந்து ஸங்கதராக (௬௭) “ வைஷ்ணவோ வைஷ்ணவம் த்ருஷ்ட்வா தண்டவத் ப்ரணமேத் புவி ” ( వైష్ణవో వైష్ణవం దృష్ట్వా దణ్డవత్ ప్రణమేత్ భువి ) என்று சொல்லுகிறபடியே அந்யோந்ய வந்தநபரராய்க்கொண்டு, நீரார், நீராரொன்று ஒருவரை யொருவர் கேட்க (௬௮) “ பகவச்சேஷபூதோஹம் அநந்யார்ஹோசித: பர: ” ( భగవచ్ఛేషభూతోహం అనన్యార్హోచితః పరః ) என்றும் (௬௯) “ தாஸோஹம் வாஸுதேவஸ்ய ” ( దాసోహం వాసుదేవస్య ) என்றும் (௭0) “ ஜ்ஞாநாநந்தமயஸ்த்வாத்மா ஶேஷோஹி பரமாத்மந: ” ( జ్ఞానానన్దమయస్త్వాత్మా శేషోహి పరమాత్మనః ) என்று மித்யாதிகளாலே தந்தாமுடைய ஸ்வரூபநிர்த்தேஶ ப்ரஸங்க வ்யாஜேந (௭௧) “ போதயந்த: பரஸ்பரம் ” ( బోధయన్తః పరస్పరం ) பண்ணிக்கொண்டு இராநிற்கச்செய்தே, ஸர்வேஶ்வரனும் (௭௨) “ அநந்யார்ஹா மயா ஸீதா பாஸ்கரேண ப்ரபா யதா ” ( అనన్యార్హా మయా సీతా భాస్కరేణ ప్రభా యథా ) என்றிருக்கு மவனாகையாலே, “ இறையுமகலகில் ,, லாத பிராட்டி ஸஹிதனாய்க்கொண்டு “ கூராராழிவெண்சங்கேந்தி ,, (௭௩) “ க்லேஶவி

கா நநயத்ர யத்ரபத்மவநாநிச - வஸந்திவைஷ்ணவாயத்ர தத்ர ஸந்நிஹிதோஹரி: " ( తులసీకాననంయత్ర యత్రపద్మవనానిచ - వసన్తివైష్ణవాయత్ర తత్రసన్నిహితోహరిః ) என்கிறபடியே செந்தமிழ்பாடுவாராகிற இவர்களருகே " தழுவிமுழுவி „ ப்புகுந்து நெருக்கிநிற்க, இவர்களும் நம்மையொழியவும் "காமர்பூங்கோயி லிடைகழியே „ பற்றிநிற்பார்களுண்டோவென்று பார்க்கைக்காக. " ஞானச்சுடர்விளக்கேற்றியும் „ " உணர்வென்னு மொளிகொள்விளக்கேற்றியும் „ " வெய்யகதிரோன் விளக்கேற்றியும் „ பார்த்தருளி, " திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன் „ என்றும், " நீயுந்திருமகளு நின்றுயால் „ என்றும், ஸ்ரீமந்நாராயணனுடைய மைப்படி மேனியையும், செந்தாமரைக்கண்ணையும், பரமவைதிகரான இவர்கள் நெஞ்சென்னும் உட்கண்ணாலே கண்டநுபவித்து, அநுபவஜநித ப்ரீத்யதிசயத்தாலே " பாலேய்தமிழர் „ என்றுசொல்லுகிற நற்றமிழ ராகையாலே " வையந்தகளி „ " அன்பேதகளி „ " திருக்கண்டேன் „ என்கிற திவ்யப்ரபந்தங்களை ஸம்ஸாரிகளுமதிகரித்து அஜ்ஞாநாந்தகாரம் நீங்கி யுஜ்ஜீவிக்கைக்காக ஜ்ஞாநத்தமிழாக வருளிச்செய்து ப்ரபந்தீகரித்து உபகரித்தருளி ஜகத்தை வாழ்வித் தருளினார்கள்.

ஸ்ரீபேயாழ்வார் திருவடிகளேசரணம்.

ஜீயர் திருவடிகளேசரணம்.

( ௪ )

## திருமழிசையாழ்வார் ப்ரபாவம்.

(௪௪) "ஶக்திபஞ்சமயவிக்ரஹாத்மநே ஶுக்திகாரஜிதசித்தஹாரிணே - முக்திதாயகமுராரிபாதயோர் பக்திஸாரமுநயே நமோநம: " ( శక్తిపంచమయవిగ్రహాత్మనే శుక్తికారజితచిత్తహారిణే - ముక్తిదాయకమురారిపాదయో ర్భక్తిసారమునయే నమోనమః ) ஆழ்வார் திருமழிசைப்பிரானுகிறார் " ஒருத்திமகனாய்ப்பிறந் தோரிரவில் ஒருத்திமகனாய் ஒளித்து வளர்ந்தருளின க்ருஷ்ணனைப் போலேயாய்த்து அவதரித்தருளினபடியும், வளர்ந்தருளினபடியும். எங்ஙனேயென்னில் (௪௫) " தஸ்ஸாவிஷ்ஜக் த்வ்ருத்ரோயபாவ்ய்ந்த ஸ்ரா நா - தேவகீவஸுதேவாப்யாம் ஶாவிஷ்ஜக்தம் ஶாதநா " ( తతోఖిల

జగత్పత్యు బోధాయాచ్యుతభానునా - దేవకీపూర్వసంధ్యాయాం మావిర్భూతంమహాత్మనా ) என்று சொல்லுகிறபடியே யதுகுலத்திலே பிறந்து, (௭௬) " அநார்த்ரமார்த்ரம்விரஸம்ரஸாட்யமபல்லவம்பல்லவிதம்ததாஸீத் - காவோஜநாநாம் வ்ரஜபூபபூம்யோ நாராயணே நந்தகுலம்ப்ரவிஷ்டே" ( అనార్ద్ర మార్ద్రంవిరసంరసాఢ్య మపల్లవంపల్లవితంతదాసీత్ - గావోజనామో వ్రజభూపభూమౌ నారాయణేనందకులంప్రవిష్టే ) என்கிறபடியே " நந்தன்குலமதலையாய் " கோகுலத்திலே வளர்ந்தருளினாற்போலே இவ்வாழ்வாருடைய திருவவதாரமும் அப்படியே ஒருபிறவியிலே யிருபிறவியாயிறே யிருப்பது. அதெங்ஙனேயென்னில், அத்ரி, ப்ருகு, வஸிஷ்ட, பார்க்கவ, ஆங்கிரஸாதிகளான மஹர்ஷிகளெல்லாரும் ப்ரஹ்மாவின்பக்கலிலே சென்று, பூலோகத்தில் உத்க்ருஷ்டதமமான க்ஷேத்ரத்திலே எங்களுக்கு நித்யவாஸம்பண்ணவேணும், அதை நிச்சயித்துச் சொல்லவேணுமென்றுகேட்க, ப்ரஹ்மாவும் " உலகுமழிசையுமுள்ளுணர்ந்து " விஶ்வகர்மாவைக்கொண்டு பஞ்சாசத்கோடி விஸ்தீர்ணையாய், ஸஶைலாம்புதி காநநையான பூமியெல்லாம் ஒருதட்டும் மஹீஸாரவநக்ஷேத்ரமான திருமழிசையொன்று மொருதட்டுமாய், துலையிலே வைத்துநிறுக்க, (௭௭) " யாத்ராதுலாயாம்த்ருதா பூர்மஹீ " ( ధాత్రాతులాయాంధృతా భూర్మహీ ) என்கிறபடியே பூமியைவைத்தபக்கம் நொய்தாய், மாநீர்மழிசையை வைத்தெடுத்தபக்கம் கனத்திருக்கக் கண்டு, இதற்கு மஹீஸாரக்ஷேத்ரமென்று பேரிட்டு நிரூபிக்கையாலே, அந்தருஷிகளும், அவ்விடத்தைவிடாதே நித்யவாஸம்பண்ணிக்கொண் டிராநிற்க, அவர்களிலே பார்க்கவமஹர்ஷி என்கிறவர் (௭௮) " பஶ்யமேயோஜநார்த்தேந விதேஹாதிஷ்டிதம்வநம் - பார்க்கவோதீர்க்கஸத்ரேண வாஸுதேவம்ஸநாதநம் - அபிபூஜ்யயதாந்யாய மதிநித்யமகல்பயத் " ( పశ్యమేయోజనార్థేన విదేహాధిష్ఠితంవనం - భార్గవో దీర్ఘసత్రేణ వాసుదేవంసనాతనం - అభిపూజ్యయథాన్యాయ మతినిత్యమకల్పయత్ ) என்று ப்ரஹ்மாண்டபுராணத்திலே சொல்லுகிறபடியே, தீர்க்கஸத்ரயாகத்திலே, ஸர்வாந்தர்யாமியான ஸ்ரீமந்நாராயணனை ஸக்ரமமாக யஜித்துக்கொண்டிருக்கிற காலத்திலே, பார்க்கவருடைய பத்நி கர்ப்பிணியாய், பன்னிரு திங்கள் வயிற்றிற்கொண்டு என்கிறபடியே பன்னிரண்டுமாஸத்துக்குப் பின்பு தைமாஸத்தில், மகாநக்ஷத்ரத்தில், ஸுதர்ஶநாம்ஶமாய் பிண்டாக்ருதியாகப்ரஸவிக்க, (௭௯) " ஸாமஹாஸ்ரோயத்தோபெநஸ்துபதீஸுஜஶஸ்நாம்ஶ நதஜாநவிஷம் - பௌர்ணமஹாஸ்ரமவிதெதஷ்யோபெ யோஹிபா

நேமஹநீய்யதாரே. ” ( సాగర్భమాధత్తమునేశ్చపత్నీ సుదర్శనాంశేనతదానువిష్టం - షహాతగర్భోభువిత్రైష్యమాసే మఘాభిధానేమహనీయ్యతారే ) (அ/0) “ஸித்தார்த்திஸ்யுஷ்ஷரஶ்மாமகரமதிகதே த்வாபரேஜ்ஞாநதாராக்ஷோதே ஸம்வத்ஸராக்யுகதவதிசதநே ஸப்தவிம்ஶேமகார்க்ஷே - நக்ஷத்ரேபாநுவாரேமுநிவரதநயோ பக்திஸாரோமுநீந்த்ர ஶ்ரீமாந்ப்ராப்தோவதாரம்ஜகதுபக்ருதயே பர்வணோந்யேத்யுரத்ர,” ( సిద్ధార్థిస్యుష్షరశ్మామకరమధిగతే ద్వాపరేజ్ఞానధారారాక్షోదే సంవత్సరాఘగతవతిచదనే సప్తవింశేమఘార్క్షే - నక్షత్రేభానువారేమునివరతనయో భక్తిసారోమునీంద్ర శ్రీమాన్ప్రాప్తోవతారంజగదుపకృతయే పర్వణోన్యేద్యురత్ర ) என்கிறபடியே ஸுதர்சநாம்சேந திருமழிசைப்பிரான் அவதரித்தாரென்று திவ்யஸூரி சரிதையிலே சொல்லிற்றிறே. உல்பஸம்வேஷ்டிதமாய் ஒன்றும் ரூபிகரியாமல் அவதரிக்கையாலே, பார்க்கவரும் பத்நியு மநாதரித்து ஒருபிரப்பின் தூற்றின்கீழே போகட, அந்த உல்பாவ்ருத பிண்டாக்ருதியானது, அகிலஜகந்மாதாவான பெரியபிராட்டியார் அநுக்ரஹத்தாலே, பூமியிலே ஸம்ரக்ஷிதமாகக்கொண் டிருக்கச்செய்தே, ※“ சிக்கென்றுசின்னக்கால் சீருடைப்பின் கண்ணுயிராயொக்க வுருப்பாய்ந்தறிவாருண்ணிறைந்தான்,, என்கிறபடியே ஸர்வாவயவங்களும் பரிபூர்ணமாய் அதிலே ஜீவன்ஸ்புரித்துத் தோற்றி, “ பேதைக்குழவி ,, என்றுசொல்லுகிறபடியே அத்யந்தம் சிசுவாய் பசுங்குழந்தையான ஆழ்வார், பசிதாஹங்களாலே ஈடுபட்டு, ஸ்தந்யார்த்தியாய், விஜநமானவனத்திலே ஒருபிரப்பின் தூற்றிலேரோதனம்பண்ண, அவ்வளவிலே மஹீஸார க்ஷேத்ராதிபதியான பெருமாள், அங்கே எழுந்தருளி, கருணாம்ருதௌக நிஷ்யந்தியான கடாக்ஷபாதங்களாலே, இவர் பசிதாஹந்திரும்படி குளிரக்கடாக்ஷித்து, ஆராவமுதான ஸ்வவிக்ரஹ ஸேவையைக்காட்டி, ஆஶ்வாஸிப்பித்துமறைய, இவரும், தத்விரஹா ஸஹிஷ்ணுவாய், மீளவு மழத்தொடங்கினர். அங்கே திருவாளனென்று ஒருத்தன் பிரம்பறுக்கப்போய், அவ்விடத்திலே, இவருடைய ஆர்த்தநாதங்கேட்டுக் கூடவந்தவர்களுடன் சோதித்து, இவரைக்கண்டு ஹர்ஷப்ரகர்ஷத்துட னெடுத்துக்கொண்டுவந்து, தம்முடைய ஸ்த்ரீயான பங்கயச்செல்வியார் கையிலேகொடுக்க, அவரும், வந்த்யையாகையாலே, மிகவும் ப்ரீதையாய் “ உத்தாநஞ்செய்து ,, என்கிறபடியே, எடுத்துக்கொண்டு, புத்ரஸ்வீகாரம் பண்ணினவளவிலே “ வனமுலைகள்சோர்ந்துபாய ,, என்கிறபடியே, முலைப்பால் சோர்ந்துகொடுக்க. “ தத்துக்கொண்டாள்கொலோ தானேபெற்றாள்கொலோ ,, என்று விகல்பிக்கலாம்படி, ஆசாரத்துடனே, ஸ்நேஹபூர்வகமாக வளர்க்க வளர்ந்தருளுகிற

இவர், "நந்தகோபனணிசிறுவாநான் சுரந்த முலையுண்ணாப்" என்னும்படியே, ஸ்தந்யாதிபோஜ்யங்களிலே நிராஶராய், பகவத்குணைகதாரகராய், வாக்வ்யவஹார ரோதநாதிகளொன்றுமின்றியே மலமூத்ராதிரஹிதராய், பரிபூர்ணமாய் ஸர்வாவயவங்களும் வர்த்திக்க எழுந்தருளியிருக்க, இந்த ஆஶ்சர்யத்தை அபுத்ரவானுமாய், திருமழிசையிலே வாஸம்பண்ணும் சதுர்த்தவர்ணத்திலே ஜாதனுமாய், மஹாப்ராஜ்ஞனுமானவொரு வ்ருத்தன் கேட்டு, பாங்காகப் பாலமுதுகாய்ச்சிக்கொண்டு, ஸ்வபார்யா ஸஹிதனாய், இவரிருக்கிறவிடத்திலே விடிவுகாலத்தே வந்து, பஞ்சஶக்திமயமான சிசுவினுடைய அப்ராக்ருத திவ்ய தேஜஸ்ஸைக்கண்டு, அத்யாஶ்சர்யப்பட்டு, தான் கொண்டுவந்த பாலமுதை ஸமர்ப்பித்து, இத்தை ப்ரார்த்தித்து அமுதுசெய்யப்பண்ணவேணுமென்று கொண்டுவந்தேன் அமுதுசெய்தருளவேணுமென்று பஹுசா வேண்டிக்கொள்ள, ஆழ்வாரும் அவனிடத்தில் க்ருபாதிசயத்தாலே அவன்கொண்டுவந்த பாலமுதை யமுதுசெய்துபோகவிட, அவர்களுமப்படியே பலநாளும்போர ப்ரீதியுடனே பாலமுது செய்வியாநிற்க, ஒருநாள், ஆழ்வார்; வ்ருத்த தம்பதிகளுடைய மனோபாவமறிந்து, அற்றைக்கு அவர்கள் கொண்டுவந்த பாலமுதை யமுதுசெய்து, சேஷித்தபாலை நீங்கள் ஸ்வீகரியுங்கோள் உங்களுக்கு நல்ல புத்ரனுண்டாவனென்று ப்ரஸாதித்தருள; அவர்களும் அப்படியே ஸ்வீகரித்து, யௌவனாவஸ்த்தையுமடைந்து, தத்பத்நியும் கர்ப்பவதியாய் நவமாஸம்சென்று பத்துமாஸம் நிறைந்தவாறே. கேசவன்றமராய்க்கொண்டு மானுடம்பாடாத மஹா ப்ராஜ்ஞரான ஒருகுமாரனை ப்ரஸவிக்க, ஸ்ரீவிதுரனைப்போலே விளங்குகிற புத்ரனைக்கண்டு, "பத்துநாளுங்கடந்த விரண்டாநாள்" இவருக்குக் கணிகண்ணனென்று திருநாமம்சாத்தி, அகிலவித்யைகளையும் அதிகரிப்பித்தார்கள். பின்பு ஆழ்வாரும் பகவத்யாஸுதாஸ்வாதந த்ருப்தசேதநராய், விடப்பட்ட அந்நபாந பயோபிலாஷையை யுடையராய், பைத்ருகவேஶ்மத்திலே வளர்ந்தருளுகிற இவர் ருஷிபுத்ரராகையாலே ஏழுதிருநக்ஷத்ரத்துக்குப் பின்பு "இளைப்பினையியக்கம் நீக்கி யிருந்து முன்னிமையைக்கூட்டி யளப்பிலைம்புலனடக்கி" என்கிறபடியே, யமநியமாதியான அஷ்டாங்க யோகாப்யாஸத்திலே திருவுள்ளமாய், அதுக்கு ஜகத்காரணவஸ்துவை த்யாநத்துக்கு விஷயமாகச் சொல்லுகையாலே, அந்தவஸ்துவை அறியவென்றால் "பிணங்குஞ்சமயம் பலபல" ஆகையாலே அவையவைதோறும் புக்காராய்வோமென்றுகொண்டு, சாக்யோலூக்யாக்ஷபாதக்ஷபணகபில பதஞ்சலிகளாகிற பாஹ்யசமயங்களையும், சைவ மாயாவாதந்யாய வைஶேஷிக பாட்ட ப்ரபாகராதிகளாகிற

குத்ருஷ்டி ஸமயங்களையும் புக்குணர்ந் துரைத்து ஆராய்ந்து பார்த்தவிடத்தில், "இறைநிலை யுணர்வரிது ,, என்கிறபடியே, அவற்றிலே யொரு பசையில்லாமையாலே, அங்காசையறவற "அறியார்சமணர் அயர்த்தார்பவுத்தர் சிறியார் சிவப்பட்டார் ,, என்றுகொண்டு, ஈனமான இடங்கொள்சமயத்தையெல்லாமெடுத்துக் களைந்து "கலையறக்கற்றமாந்தர்காண்பரோ கேட்பரோதான் ,, என்று இதரவஸித்தாந்தங்களை நஶ்வரமென்று கைவிட்டு, இப்படி நானூறுதிருநக்ஷத்ரம் சென்றவாறே, ஸ்ரீவைஷ்ணவராய், பரமவைதிகஸித்தாந்த நிஷ்டராய், "இனியறிந்தேனீசற்கு நான்முகற்கும் தெய்வம் ,, என்று அறுதியிட்டு, "வேதாந்தவிழுப்பொருளின் மேலிருந்த விளக்கை ,, அறிந்து, தத்ப்ரவணராக, ஸர்வேஶ்வரனு மதுவே பற்றுசாக இவர்க்கு மயர்வற மதிநலமருளி, தன்னுடைய திவ்யாத்ம ஸ்வரூபத்தையும், ததாஶ்ரயமான ஜ்ஞாநஶக்த்யாதி கல்யாணகுணங்களையும் ப்ரகாசிப்பிக்கிற திவ்யமங்கள விக்ரஹத்தையும், ததாதாரகமான கிரீடாதிநூபுராந்தமான திவ்யபூஷணவர்க்கத்தையும், அவற்றோடே விகல்பிக்கலாம்படியான சங்கசக்ராதி திவ்யாயுதங்களையும், இதடங்கக் காட்டிலெரித்த நிலாவாகாமே அநுபவிக்கிற லக்ஷ்மீ ப்ரப்ருதி மஹிஷீவர்க்கத்தையும், "அடிமைசெய்வார் திருமாலுக்கு ,, என்றும் (அக) "ஸவாஂஸு-ஸஹமெவெஷஹ்யா" (ஸ்வாம்ஸுஸஹதேஷ்ஹ) என்றும், "சூழ்ந்திருந்தேத்துவர்,, என்றும், "ஏவமற்றமரராட்செய்வார் ,, என்றுஞ்சொல்லுகிறபடியே, அச்சேர்த்தியிலே அடிமைசெய்கையே தங்களுக்குத் தாரகாதிகளாக வுடையரான திவ்ய பரிஜனவர்க்கத்தையும், அந்தப் போகத்துக்கு வர்த்தகமாய், "நலமந்தமில்லதோர்நாடு ,, ஆன பரமபதத்தையும் பரகாசிப்பித்து, ப்ரக்ருதி புருஷகாலாத்மகமான லீலாவிபூதியினுடையஸ்ருஷ்டிஸ்த்திதி ஸம்ஹாரங்களை ஸத்வாரகமாகவும் அத்வாரகமாகவும் நின்று, "இன்புறு மிவ்விளையாட்டுடையானை ,, என்கிறபடியே, தனக்குநிலையாக வுடையனுயிருக்கிறபடியையும் காட்டிக்கொடுத்து, இப்படி யுபயவிபூதிநாதனுன தான் (அஉ) "யநூாஹிவெதூாஷஸவ.நூஹாதூாவ-ஜாவதிவிஸூஸு-ஜ" (யன்னாபிபத்மாதபவந்மஹாத்மா ப்ரஜாபதிர்விஶ்வஸ்ருக்) என்கிறபடியே, நான்முகனை, "மூழ்த்த நீருலகெல்லாம்படை யென்றுமுதல் படைத்தாய்,, என்னும்படி முதல் தனக்கு ஜ்யேஷ்டபுத்ரனாக ப்ரஹ்மாவைத் தன்திருநாபிகமலத்திலே(அங)" யொவ-ஹாணம்விஷயாதிவ-வெ-ம்" (யோப்ரஹ்மாணம்விததாதி பூர்வம்) என்னும்படி முந்தற உத்பந்நனாக்கினபடியையும், (அச) "வ-ஹூணெவ-தாயஜெஜ்யஷ்டாயஜெ-ஷ்டாய" (ப்ரஹ்மணேபுத்ராய ஜ்யேஷ்டாய ஶ்ரேஷ்டாய)

என்கிறபடியே அந்த ப்ரஹ்மாவுக்கு ஜ்யேஷ்டபுத்ரனாக ருத்ரன் உத்பந்நனானபடியையும் ப்ரகாசிப்பித்தருள, இவரும் "நான்முகனை நாராயணன்படைத்தான் நான்முகனுந் தான்முகமாய்ச் சங்கரனைத் தான்படைத்தான்" என்று தம் வாக்காலே சொல்லும்படி, இவற்றையெல்லாம் இவர் ஸம்ஶயவிபர்யயமற அறிந்து 'சாக்கியங்கற்றோம் சமணங்கற்றோ மச்சங்கரனார், ஆக்கிய வாகமநூலாராய்ந்தோம் - பாக்கியத்தால் - செங்கட்கரியானைச்சேர்ந்தியாந் தீதிலோ-மெங்கட்கரியதொன்றில்" என்றநுஸந்தித்தருளி, இதரஸித்தாந்த நிவ்ருத்திபூர்வகமாக, "திருநின்றபக்கம் திறவிதென்றோர்ந்து," (அரு) "ஆலோட்ய ஸர்வஶாஸ்த்ராணி விசார்ய ச புந: புந: - இதமேகம் ஸுநிஷ்பந்நம் த்⁴யேயோ நாராயண: ஸதா³" (ఆలోడ్య సర్వశాస్త్రాణి విచార్య చ పునః పునః - ఇదమేకం సునిష్పన్నం ధ్యేయో నారాయణస్సదా) என்றும், (அசு) "யோகே³ஶ்வரம் ஜக³ந்நாத²ம் விஷ்ணும் ஜிஷ்ணும் ஶ்ரிய:பதிம் - பத்³மநாப⁴ம் விஶாலாக்ஷம் த்⁴யாயாமி ஜக³த்பதிம்" (యోగేశ్వరం జగన్నాథం విష్ణుం జిష్ణుం శ్రియఃపతిం - పద్మనాభం విశాలాక్షం ధ్యాయామి జగత్పతిం) என்றுஞ்சொல்லுகிறபடியே ஜகத்காரணபூதனாய், ஸர்வாந்தர்யாமியாய், புண்டரீகாக்ஷனாய், ஜகந்நாதனான ஶ்ரிய:பதியைத்யாநம்பண்ணிக்கொண்டு க்ருதார்த்தராய் திருமழிசையிலே கஜேந்த்ர ஸரஸ்ஸின்கரையிலே எழுநூறு ஸம்வத்ஸரம் பகவதநுபவம்பண்ணிக்கொண்டு யோகத்திலே எழுந்தருளியிருக்கிறநாளையிலே, ஒருநாள் இவர் நிரந்தரபகவதநுபவத்துடனே கந்தாசேவநஞ்செய்யாநிற்க, அவ்வளவிலே ருத்ரனும் அத்ரிகந்யா ஸஹிதனாய், வ்ருஷபாரூடனாய், த்ரிசூலபாணியாய்க்கொண்டு, வ்யோம மார்க்கத்திலே செல்லாநிற்க, ஆழ்வாரும் அத்தைக்கண்டு அவன் நிழல் தன்மேற்படாமல் ஒதுங்க, இத்தைத் தம்பதிகளிருவருங்கண்டுநிற்க, ருத்ரனைக் குறித்துப் பார்வதி இவனாரோவென்று அறிந்துபோவோமென்ன, ருத்ரனும் தன் பத்நியுடனே இவன் மஹாநுபாவன், நம்மைக் கணிசியானென்ன, ஆகிலும் அவனைக்கண்டுபோவோமென்ன, அவனும் ஸம்மதித்து இவரண்டையிலே வந்துநிற்க, இவரும் அவனைக் கண்ணெடுத்துப்பாராமல் உதாஸீநித்திருக்க, அவனும் நாம்வந்துநிற்க நீர் அலக்ஷ்யமாகக் காணலாமோவென்ன, இவருமுன்னைக்கண்டு என்னப்ரயோஜநமுண்டெனக்கென்ன, அவனும் நாமுமக்கு ஒன்று தரக்கடவதாக வந்தோமென்ன, இவரும் நமக்கொன்றும் வேண்டாவென்ன, அவனும் நம்வரவு வ்யர்த்தமாகாமல் உமக்கபீஷ்டத்தைக்கேட்டுக்கொள்ளீரென்ன, ஆழ்வாரும் புன்முறுவல் செய்து, ஆகில், மோக்ஷந்தரவல்லையாகில் தாவென்ன, அதென்னால் தரக்கடவதன்று ஶ்ரீமந்நாராயணனு

லேயென்ன, ஆனுலின்றுசாவாரை நாளைச்சாகும்படி பண்ணவல்லேயோ வென்ன, அதுவும் சர்மாநுகுணமன்றோவென்ன, ஆனுலென்னாசியின்பின்னே நூல்வரும்படி வரப்ரதானம்பண்ணீரென்று அபஹஸித்துச்சொல்ல, அவனுமிவ்வார்த்தைகேட்டுக் குபிதனுய், இவனையும் அநங்கனைப்போலே யாக்கக்கடவேனென்று, தன்பொறியும் புகையும் கிளம்புகிற நெற்றிக்கண்ணைத்திறந்துவிட, அக்கண்ணில் நின்றும் ஜ்வாலாஜாஜ்வல்யமானமாய் ஸம்வர்த்தாக்நிபோலே சுட்டுக்கொண்டெரிகிற ஜ்வலநப்ரரோஹத்தைக்கண்டு, ஆழ்வாரும் தம்முடைய வலத்திருவடியின் பெருவிரலில் ஒருகண்ணைத்திறந்துவிட, அக்கண்ணில் அக்நி, ப்ரளயஹுதவஹ கோடி ஜ்வாலா கல்பமாய் ஜ்வலித்துக்கொண்டு கிளம்ப, சோடிவைஸ்வாநரப்ரக்யமாய், அத்யர்க்ககோடி நிபதீர்க்க ஜ்வாலாஜாஜ்வல்யமாநாக்நியில் சம்புவின் லோசநாக்நி கத்யோதப்ராயமாய் அடங்க, சம்புவும் அந்த அங்குஷ்ட்ட லோசநாக்நி ஜ்வாலையைப் பொறுக்கமாட்டாமல், புஷ்கலாவர்த்தகமாகிற ப்ரளயகாலமேகங்களை அக்நி சமிக்கும்படி ஆஜ்ஞாபிக்க, அம்மேகங்களும் மின்னி முழங்கி வில்லிட்டு அகிலதாபங்களுமடங்கும்படி ஆகாசாவகாசமடைய நிறைந்து அபிவர்ஷிக்க, அவ்வர்ஷத்தாலே, எரிகிற அக்நியும் அணைந்து பெருவெள்ளங்கோக்க, ஆழ்வாரும்(அள)“ஶிரஸொ வஷ-ஃயாராஹி ஹஃ-ஃந்ாநா-நவிவ்ய-ஃ” (ஆசாஸ்தூ ரா ஹநந்நவ ஷஹ நவிவ்ய ஃ ) என்கிறபடியே அத்ரிராஜனைப்போலே வர்ஷதாரைக்கிருயாமல் பகவதநுபவ தத்பராரா யிருக்கிறபடியைக் கண்டு, அவனும் விஸ்மயப்பட்டு, இவருக்கு பக்திஸாரரென்று திருநாமத்தையும் சார்த்தி, அவர்வைபவத்தைக் கொண்டாடி, சிரஃகம்பநம்பண்ணி, அம்பரீஷனுலே துர்வாஸா அவமானப்பட்டானிறே; ஆகையாலே பாகவதர்கள் ஸுதுர்ஜயரென்று ஸ்வபக்திக் குறைத்துக்கொண்டு யதாஸ்த்தாநமேபோந்தான். பின்னையுமாழ்வார் பூர்வம்போலே யோகநிஷ்ட்டரா யெழுந்தருளியிருக்க, யாத்ருச்சிகமாக வ்யாக்ராரூடனுய் சுக்திஹாரனென்பா னொருகேசரன் ஆகாசமார்க்கத்திலே செல்லாநிற்க, ஆழ்வாருடைய யோகப்ரபாவத்தாலே, இவர்மேலேபோக க்ஷமனன்றிக்கே வ்யாக்ரமுந் திமிர்த்துநிற்க, அவனு மிதேதோவென்று பார்த்துக்கொண்டுவருமளவில், கீழே மௌநியாய், யோகத்திலே யெழுந்தருளியிருக்கிற ஆழ்வாரைக்கண்டு, விஸ்மயப்பட்டு, தத்க்ஷணத்திலே ஆகாசத்தினின்றும் பூமியில்வந்து, வ்யாக்ரவாஹநத்தில் நின்று மிறங்கி, இவரண்டையில்வந்து, பார்க்கவமுநீந்த்ரரே, இக்கந்தாவரணத்தைப்பொகட்டு நான் தருகிற திவ்யபட்டநிர்மிதமான இந்தக்கவசத்தைத் தரியுமென்று ஒரு கவசத்தைக்கொடுக்க, இவருமத்தை நிஷேதித்து ஸ்வஸங்கல்பத்தாலே மணிஸ்வரூ

பமாய் த்யுமணிப்ரபோபமமான கவசத்தை அவனுக்குக்காட்ட, அவனும் லஜ்ஜாவிஷ்டனாய், தன்கழுத்தின் ஹாரத்தை வாங்கி, இத்தை அக்ஷமாலையாகத் தரியுமென்று கொடுக்கத்தேட, இவரும் தங்கழுத்தில் துளஸீபத்மாக்ஷமாலையைவாங்கி, இத்தைப் பாராயென்ன, அது நவரத்னஹாரமாய் விளங்கக்கண்டு, அவனும் இவர் மஹாநுபாவர், மஹாபரிபூர்ணரென்று, தண்டனிட்டு, இவர் வைபவத்தைக்கொண்டாடி, யதாஸ்தாநமே போந்தான். பின்னையுமாழ்வார் யோகநிஷ்டராய் எழுந்தருளியிருக்கச்செய்தே, கொங்கணஸித்தனென்ற பெயரையுடையனாய், ரஸவாதியாயிருப்பானொருவன்வந்து இவ்வாழ்வாருடைய வைபவத்தைக்கண்டு, இவருக்குக் காணிகோடியைப் பேதிப்பதான ரஸகுளிகையைஸமர்ப்பிக்க, இவருமத்தை அநாதரித்து, நமக்குவேண்டாமென்று, அவனுக்குத் தம்முடைய பொன்னொத்தமேனியின் புழுதியோடே தங்காதிற்குறும்பியை யுருட்டி யிது காணிகோடாகோடியைப்பேதிக்குமென்று கொடுத்தருள, அவனுமப்படியே பரீக்ஷிக்க, அது சொன்னபடிக்கொத்திருக்கையாலே அதிப்ரீதியுடன் ஆழ்வாரைத் தண்டனிட்டு, தங்யோஹமென்று க்ருதார்த்தனாய்ப் போந்தான். அநந்தரம் திருமழிசைப்பிரானும் ஒரு குஹாந்தராவிஷ்டராய், நிப்ருதாக்ஷிவ்ருத்தியையுடையராய், யோகத்திலே யெழுந்தருளியிருக்க, அவ்வளவிலே பொய்கை பூதன் பேயாழ்வாராகிற முதலாழ்வார்கள் மூவரும், "எங்குந்திரிந் தரங்கனம்மானுக்கே காதல்செய்தொண்டராய்" ஸஞ்சரித்துக்கொண்டு வருகிறவர்கள், ஸூதூரத்திலே அப்ராக்ருத திவ்ய தேஜஸ்ஸைக்கண்டு அத்யாஸ்சர்யப்பட்டு, இத்தை ஆராயக்கடவோமென்று, எங்கும் திரிந்து வந்து, குஹாந்தராவிஷ்டபக்திஸாரரைக்கண்டு, இம்மஹாநுபாவராரோவென்று திவ்யமான நெஞ்சென்னும் உட்கண்ணாலேகண்டு, பார்க்கவமுநீந்த்ரரோ, ஸுகமேயிருக்கிறீரோவென்று குசலப்ரஸ்நம்பண்ண, அவரும் பத்ம மாதவீகுஸும கைரவோத்பவமுனிகாள், நன்றாயிருக்கிறீர்களோவென்றுவினவியருளி, அந்யோந்யம் வந்தநபரராய்க்கொண்டு, ஆஹ்லாத சீதநேத்ராம்புக்கள் பனிப்பப் புளகிக்ருதகாத்ரராய், ஒருவரையொருவர் ஆலிங்கித்துக்கொண்டு, மிகவும் ப்ரீதியுடனே எல்லாரும் ஸதாபரகுணாவிஷ்டராய் யோகத்திலே எழுந்தருளியிருந்தார்கள். இவர்களொருவர்க்கொருவர் பாலும் பாலும் சேர்ந்தாற்போலவும், தேனுந்தேனுங் கூடினாற்போலவும், பகவச்சரணாரவிந்த த்யாநாம்ருதாஸ்வாதநம் "தேனூறியெப்பொழுதும்தித்தித்து" ஐகரஸ்யத்தாலே யெல்லாருக்கும் ப்ரணயரஸ முந்மேஸ்தகமாம்படி பகவதநுபவம் பண்ணி யிருந்தார்கள். பின்பெல்லாரும் உகந்த திருவுள்ளத்தையுடையராய், ப்ரீதியுடனே மயிலா

புரத்தேற வெழுந்தருளி, அங்கே பேயாழ்வார் திருவவதரித்தருளின கைரவதீர்த்தத்தையும் ப்ரீதியுட னாலோகித்துக்கொண்டு, தத்தீரத்தில் சிலகாலம் யோகத்திலே யெழுந்தருளியிருந்து, பின்பு "ஓடித்திரியும் யோகிகள்" என்னும்படியே, பூர்வம்போலே பார்க்கவமுநீந்த்ரனை அநுவர்த்தித்து, அநுமதிகொண்டு, பூஸஞ்சரணார்த்தமாக முதலாழ்வார்கள் மூவரு மெழுந்தருளினார்கள். பின்பு ஆழ்வார் தம்முடைய திருவவதாரஸ்த்தலமான திருமழிசையிலே எழுந்தருளி, சாத்துகைக்குத் திருமண்வேண்டி, கல்லி, சோதித்தவிடத்தில், திருமண் அகப்படாமல் முசித்துக்கிடக்க, அப்போது திருவேங்கடத்தெந்தை இவர் ஸ்வப்நத்திலே யெழுந்தருளி, திருமண் இருக்குமிடம் அடையாளமாகக் காட்டியருள, இவருமங்கே திருமண் கண்டெடுத்து, அத்திருமண்ணைக்கொண்டு பன்னிரண்டு திருநாமஞ்சாத்தியருளி, பெரியப்ரீதியுடன் "சிந்தைமற்றொன்றின் றிறத்ததல்லால்" என்கிறபடியே, க்ஷுத்ர புருஷார்த்தங்களில் திருவுள்ளஞ்செல்லாதே, பகவதநுபவம் பண்ணிக்கொண்டு, திருமழிசையிலே எழுந்தருளியிருக்கிற இவர், பொய்கைப்பிரானவதரித்தருளின பொய்கை ப்ரதேசத்திலே, சிலகாலம் ஸேவித்திருக்கத் திருவுள்ளமாய்,(௮௮)"யத்ர ஸத்யவ்ரதந்நாம க்ஷேத்ரம் பாபவிநாஶநம் - புண்யக்ஷேத்ரேஷு ஸர்வேஷு தஸ்யைவ ஶ்ரைஷ்ட்யமீரிதம்" (యత్ర సత్య వ్రతన్నామ క్షేత్రం పాపవినాశనం - పుణ్యక్షేత్రేషు సర్వేషు తస్యైవ శ్రైష్ఠ్యమీరితం) என்று சொல்லுகிறபடியே புண்யக்ஷேத்ரங்களில் வைத்துக்கொண்டு ஶ்ரேஷ்டமாய் பாபஹரமுமாய் ஸத்யவ்ரதமென்று பேருடைத்தான கச்சிவெஃகாவிலே யெழுந்தருளி, (௮௯) "ஶயாநம் ஶேஷபர்யங்கே குந்தேந்துதவளப்ரபே - பணாரத்நஸஹஸ்ராம்ஶுநவாஸ்தரணவிஸ்த்ருதே - நீலஜீமூதஸங்காஶ: பத்மபத்ரநிபேக்ஷண: - ஸேவ்யமாநோ நிஶாந்தாக்ஷ்யா ஶ்ரியா கமலஹஸ்தயா - தரண்யா ச ஸுதந்த்ர்யா தாதா விஶ்வஸ்ய விஶ்வபுக்" (శయానం శేషపర్యంకే కుందేందుధవళప్రభే - ఫణారత్నసహస్రాంశు నవాస్తరణవిస్తృతే - నీలజీమూతసంకాశః పద్మపత్రనిభేక్షణః - సేవ్యమానో నిశాంతాక్ష్యా శ్రియా కమలహస్తయా - ధరణ్యా చ సుతన్వ్యా చ ధాతా విశ్వస్య విశ్వభుక్) என்றும் "தேவிமாராவார் திருமகள்பூமி" என்றுஞ்சொல்லுகிறபடியே லக்ஷ்மீபூமிகளாலே ஸேவ்யமானனாய்க்கொண்டு "பணங்களாயிரமுடைய நல்லரவணைப் பள்ளிகொள் பரமா" என்கிறபடியே பெரியதிருவநந்தாழ்வானை திருவணையிலே "வெஃகாவில் துயிலமர்ந்தவேந்தை ஸேவித்து, அவனை, பொய்கையாழ்வா ரவதரித்தருளின அந்தத்திருப்பொய்கைக்கரையிலே த்யாநம்பண்ணிக்கொண்டு, யோகத்தி

லே எழுநூறுஸம்வத்ஸர மெழுந்தருளியிருக்கிற காலத்திலே, இவர்திருவடிகளிலே கணிகண்ணன்வந்து ஆஶ்ரயித்து, பகவத்ப்ரவணராயிருக்க, அவ்வளவிலே ஒருஸ்த்ரீயினை அங்குள்ளவள்வந்து, ஆழ்வாரை ஸேவித்து, அவர் திருவடிகளிலே பக்திபுக்தையாய், அவர் எழுந்தருளியிருக்கிற விடத்தை, "கடைத்தலைசீக்கப்பெற்றால் கடுவினைகளையலாம்" என்கிறபடியே ஸம்மார்ஜநகோமயாநுலேபந ரங்கவல்யாத்பலங்காரங்களாலே அநுதிநம் ஶுஶ்ரூஷிக்க, ஒருநாள் யோகத்திலே யெழுந்தருளியிருக்கிற இவ்வாழ்வார் திருக்கண்களை விழித்துப்பார்த்து, இவள்செய்கிற கிங்கரவ்ருத்திக்கு மிகவு முகந்த திருவுள்ளத்தராய், அந்தவ்ருத்தையைப்பார்த்து, உனக்கபீஷ்டத்தைச்சொல்லிக்காணாய், உனக்கொரு வரப்ரதாநம்பண்ணுகிறோமென்றருளிச்செய்ய; அவளுமப்படியே ஆழ்வாரைக்குறித்து, அடியேனிடத்தில் க்ருபாதிசயமுண்டாகில் அடியேனுக்கு இந்த வார்த்திக்யம் போம்படி கடாக்ஷித்தருளவேணுமென்ன; ஆழ்வாருமப்படியே யாகக்கடவதென்று அவளைக் குளிரக்கடாக்ஷிக்குமளவில், ஆழ்வாருடைய கடாக்ஷத்தாலே ப்ராப்தயௌவனையாய் தேவஸ்த்ரீபோலே அதிஸுந்தரியாக; அவ்வளவிலே, தத்ராஜ்யாதிபதியானபல்லவராயனும் இவளைக்கண்டு, மந்மதபாணபாதிதனாய், தனக்குப் பத்நியாகவேணுமென்று ப்ரார்த்திக்க; அவளுமநுகூலித்து, அவனுடனே அதி மாநுஷமான போகங்களை யநுபவியாநிற்க; ஒருநாள் பல்லவராயன் தனக்கொரு நாளைக்கொருநாள் ஸ்வசரீரம் ஜரித்துவரக்கண்டு, இவளைக்குறித்து, உனக்கதிமாநுஷவைபவமான இந்தயௌவநமெங்ஙனேயுண்டாய்த்தென்று கேட்க; அவளுமவனைக்குறித்து, ஆழ்வாராலே தனக்குண்டானபடியைச் சொல்லி, நீயு முன்னகத்திலே அநுதிநமுபாதாநம்பண்ண வருகிற கணிகண்ணனை யநுவர்த்தித்து அவர்புருஷகாரமாக தத்தேசிகரான பக்திஸாரரையநுவர்த்தித்தாயாகில், உனக்கு மிப்படிப்பட்ட யௌவநமுண்டாமென்றுசொல்ல; அப்போது ராஜாவும் கணிகண்ணனையழைத்து, உம்மாசார்யனை நாம் ஸேவிக்கவேணும், அவனை நம்பக்கல் அழைத்துக்கொண்டு வரவேணுமென்று சொல்ல; கணிகண்ணரும், நம்மாசார்யர் ஒருவரகத்துக் கெழுந்தருளார். ஒரு ராஜாக்களையும் கணிசித்துப் பாராரென்ன; பின்னையும், இராஜாவான பல்லவராயன் தன்னைக்கவிபாடவேணுமென்று கணிகண்ணனை அபேக்ஷிக்க, வைகுந்தச்செல்வனார் சேவடியைப் பாடுகையொழிய, "நாக்கொண்டுமானிடம் பாடேன்" என்றும், "வாய்க்கொண்டு மானிடம்பாடவந்த கவியேனல்லேன்" என்றுமிப்படி தம்முடைய அத்யவஸாயஹேதுவான ஶிஷ்டாசார வசநங்களைச்சொல்லி, பகவத்பாகவத விஷயமொழிய நான் நரஸ்துதிபண்ணி

ஒருவரையும் பாடுவதில்லையென்ன ; ஆகிலும் நீர் நம்மைப் பாடவேணுமெ ன்று அவன் இவரைநிர்ப்பந்திக்க ; கணிகண்ணரும், " ஆடவர்களெங்ஙன கல்வாரருள்சுரந்து-பாடகமூரகமும் பாம்பணையும், நீடியமால்-நின்றானி ருந்தான்கிடந்தானிதுவன்றோ - மன்றார்பொழிற்கச்சிமாண்பு" என்று சொ ல்ல, அவனும் நம்மைப்பாடென்றால் இங்ஙனே சொல்லலாமோவென்று மிக வும் குபிதனாய், ஆகில் நம்இராஜ்யத்தில்நின்றும்போமென்ன ; (கூ0) " ஆ ஜ்ஞாபங்கோ நரேந்த்ராணாம் " ( ఆజ్ఞాభంగో నరేంద్రాణాం ) என்கிறபடியே சடக்கென ஸ்வாசார்யரான பக்திஸாரமுனிகள் திருமுன்பேசென்று தண்டம் ஸமர்ப்பித் து, அச்செய்தியை விண்ணப்பஞ்செய்து, அடியேனிவ்விடத்தில் நின்றும் விடைகொள்ளுகிறேனென்ன ; ஆழ்வாரும் நீர்போகிறீராகில் நாமிங்கிருக்க ப்போகிறோமோ ? நாம்புறப்பட்டால் எம்பெருமானிங்குக் கண்வளரப்போ கிறானோ ? அவனெழுந்தருளும்போது தத்பரிகரபூதரான ப்ரஹ்மாதிகள் இ ங்கிருக்கப் போகிறார்களோ வென்றருளிச் செய்து, " வெஃகாவினுன்னிய யோகத்துறக்கமானவனையும் " எழுப்பிக்கொண்டு வருகிறோமென்று சொல் லி, திருவெஃகாநயினார் திருமுன்பெழுந்தருளி, அவரைப்பார்த்து, " கணிக ண்ணன்போகின்றான்காமருபூங்கச்சி - மணிவண்ணாநீகிடக்கவேண்டா - து ணிவுடைய-செந்நாப்புலவனும்போகின்றேனீயுமுன்றன் - பைந்நாகப்பாய்சு ருட்டிக்கொள் " என்று ஆழ்வார் விண்ணப்பஞ்செய்ய, அப்படியே சொன் னவண்ணம் செய்து இவருடையபின்னே எழுந்தருள " சுடர்கொள்சோதி யைத் தேவரும்முனிவருந்தொடர " என்கிறபடியே மற்றுமத்தேசத்தில் ஆ லயங்களில் தேவதைகளும் பின்தொடர எழுந்தருளுகையாலே, (கூக) " அ விஷ்க்ருதா: பரிஷ்வங்கா: ஸம்ப்ராப்தோ ரோஷகாரணம் - உபதப்தோதகா நத்ய: பல்லவானீவ " ( అవిష్కృతాః పరిష్వంగాః సంప్రాప్తో రోషకారణం- ఉపతప్తోదకా నద్యః పల్లవానీవ ) என்று சொல்லுகிறபடியே, திருவயோத் யை ராமவிஶ்லேஷத்தாலே பொலிவையிழந்தாற்போலே காஞ்சீ மஹாநகரி யில் ஸ்த்தாவரங்களும் நதீதடாகங்களும் மிகவும் வாடி வடிவழகடங்கி வற் றித்தபிக்க, அந்தந்த ஆலயங்களிலே தேவதைகள் ஒருவருமின்றியேஅந்தகா ரம்கவிழ்ந்து உதயாஸ்தமயந்தெரியாதே " நீளிரவாய்நீண்டதால்" என்கிறப டியே, கணதிமிரபூயிஷ்டமானபடியை ராஜாவும் மந்த்ரிகளுங்கண்டு, போர க்லேசித்து, இவர்களைப் பின்தொடர்ந்து, ஓரிரவிருக்கையென்கிற வூரிலே யிவர்களைக்கண்டு, கப்படத்தைக்காட்டி, காலிலேவிழுந்து, கணிகண்ணனை வேண்டிக்கொள்ள ; கணிகண்ணரும் மீண்டெழுந்தருளும்படி ஆழ்வாரை

வேண்டிக்கொள்ள ; ஆழ்வாரும் மீண்டெழுந்தருளத் திருவுள்ளமாய் ஆஶ்ரிதபாதந்த்ரரான சொன்னவண்ணம் செய்த பெருமாளைப்பார்த்து, "கணிகண்ணன்போக்கொழிந்தான்காமருபூங்கச்சி- மணிவண்ணா நீகிடக்கவேண்டும் துணிவுடைய-செந்நாப்புலவனும்போக்கொழிந்தேனியுமுன்றன்-பைந்நாகப்பாய்படுத்துக்கொள்" என்றாழ்வார் விண்ணப்பம்செய்ய; அப்படியே சொன்னவண்ணம் செய்தெல்லார்க்கும் ப்ரத்யக்ஷமாம்படி காட்டிக்கொடுத்து, இட்டத்திருக்கைகீழாகக் கண்வளர்ந்தருளினார். இப்படி "விருப்புடையவெஃகாவை" ச்சேர்ந்து நாகத்தணையைப் படுக்கையாகப்படுத்துக்கொண்டு கண்வளர்ந்தருளின இந்த ஸௌலப்யத்தை யநுஸந்தித்திறே "வெஃகணைக்கிடந்ததென்னநீர்மையே" என்று ப்ரீதராய் அருளினார். அந்தநகரிதானும் "நிறைந்தசீர்நீள்கச்சி" என்னும்படி பொலிவையுடைத்தாயிருக்கையாலே, அவ்விடத்திலே, "வெள்ளத்தரவில்துயிலமர்ந்த வித்தினையுள்ளத்துக்கொண்டு" யோகத்திலே பின்னையும்சிலகாலமெழுந்தருளியிருந்து, அநந்தரம் கும்பகோணயாத்ராபேக்ஷை யுடையராய், (௯௨) "யோ நர: கும்பகோணேஸ்மிந் க்ஷணார்த்தமபி திஷ்டதி - கரஸ்தம் தஸ்ய வைகுண்டம் கிமுதாந்யவிபூதய:" (యో నరః కుంభకోణేస్మిన్ క్షణార్ధమపి తిష్ఠతి - కరస్థం తస్య వైకుంఠం కిముతాన్యవిభూతయః) என்கிறபடியே கும்பகோணவாஸம் "வைகுந்தமாநகர்மற்றது கையது" ஆகத்தக்க ப்ரபாவாதிசயத்தை யுடைத்தான திருக்குடந்தையிலே யெழுந்தருளி நித்யவாஸம்பண்ணி ஆராவமுதாழ்வாருடைய ஏரார்கோலத்தை ஸேவித்திருக்கத் திருவுள்ளமாய் "நலத்தால் மிக்கார்குடந்தைக்கிடந்தா யுன்னைக்காண்பானலைப்பாய்" என்கிறபடியே அதித்வரையோடே எழுந்தருளாநிற்கச்செய்தே பெரும்புலியூரென்கிற க்ராமத்திலேசென்றொருதிண்ணையிலே அவஸரித்தெழுந்தருளியிருக்க, அத்திண்ணையிலே யிருந்து அத்யயநம்பண்ணுகிறப்ராஹ்மணர்களிவரைக்கண்டுவிப்ரதிபத்திபண்ணி அத்யயநம்பண்ணுகிறத்தைத் தவிர்ந்திருக்க, பின்னையவர்களுக்கு விட்டதறுவாய் தோன்றாமையாலே தவறித்தடுமாற, ஆழ்வாருமத்தைக்கண்டு கறுப்புநெல்லை உகிராலேயிடந்து ஸம்ஜ்ஞையாலே யித்தை ஸூசிப்பித்தருள, பின்பவர்களுக்கும் (௯௩) "க்ருஷ்ணாநாம் வ்ரீஹீணாம் நகநிர்பிந்நம்" (కృష్ణానాం వ్రీహీణాం నఖనిర్భిన్నం) என்கிறவாக்யந்தோன்றி. (௯௪) "நஹ்யம்மயாநி தீர்த்தாநி ந தேவா ம்ருச்சிலாமயா:" (నహ్యమ్మయాని తీర్థాని న దేవా మృచ్ఛిలామయాః) என்கிறபடியே அவர்கள் தெளிந்துவந்து தண்டன் ஸமர்ப்பித்து க்ருதார்த்தரானார்கள். பின்னையுமந்த க்ராமார்ச்சனையான வெம்பெருமானு மிவ்

வாழ்வார் உபாதாநார்த்தமாக ஸஞ்சரித்தருளுகிற திருவீதிகள்தோறும் அபிமுகமாய்த்திரும்பியருள, இந்தவாஸ்சர்யத்தைநம்பியார்கண்டு, சில ப்ராஹ்மணர்க்குக்காட்டக் கண்டு அந்த க்ராமத்திலே யாகம்பண்ணுகிற பெரும் புலியூரடிகளுக்கு சில ப்ராஹ்மணர் யாகசாலையிலேசென்று "கண்டோங் கண்டோங்கண்டோம் கண்ணுக்கினியனகண்டோம்" என்றிவருடையப்ரபாவத்தைச்சொல்ல; தீக்ஷிதருமத்தைக்கேட்டு ஆழ்வாரெழுந்தருளியிருக்கிறவிடத்தேறவந்து "மெய்யடியார்கள்தம்மீட்டங்கண்டிடக்கூடுமேலதுகாணுங் கண்பயனாவதே" என்றுகொண்டு, தமக்கு (௯௫) "அக்ஷ்ணோ:ஃபலம்த்வாத்ருஶதர்ஶநம்" (అక్ష్ణోఃఫలంత్వాదృశదర్శనం) என்றுசொல்லுகிறபடியே அதிகௌதுகத்துடன் யாகசாலைவாசலிலே சென்று இவருடைய சக்திபஞ்சமயமான விக்ரஹத்தைஸேவித்து "போதுமினெமதிடம்புகுதுக" என்கிறபடியேநம்முடைய யாகசாலைக்கெழுந்தருளவேணுமென்றுவிண்ணப்பஞ்செய்து, எழுந்தருளுவித்துக்கொண்டுபோய், ஆழ்வாருக்கு அக்ரபூஜைபண்ண, அத்தைக்கண்டு, அங்குள்ள அத்வர்யுதொடக்கமானசடங்கிகளடைய, இவனைக்கொண்டு புகுந்து யாகத்தையுபஹதியாக்கித்தென்று, தர்மபுத்ரன் இராஜஸூயயாகத்திலே க்ருஷ்ணனுக்கு அக்ரபூஜையைப்பண்ணினபோது சிசுபாலன்பஹுமுகமாக பருஷோக்திகளைப்பண்ணினாற்போலே இவர்களுமாழ்வாரை "பொறுப்பரியனகள்பேசி" க்ரோதிக்க, தீக்ஷிதரும் வ்யாகுலாந்த:கரணராய் ஆழ்வாரைப் பார்த்து, "இவர்களேதேனும்பேசநான்கேட்கமாட்டேன்" என்றுவிண்ணப்பஞ்செய்ய, ஆழ்வாரும் தம்மை வெளியிடாதிருக்க வொண்ணாதென்று பார்த்து, (௯௬) "அஷ்டாங்கயோகஸித்தாநாம் ஹ்ருத்யாகநிரதாத்மநாம்-யோகிநாமதிகாரஸ்ய தேஶஸ்மிந் ஹ்ருதயாம்புஜே" (అష్టాంగయోగసిద్ధానాం హృద్యాగనిరతాత్మనాం - యోగినామధికారస్య దేశస్మిన్ హృదయాంబుజే) என்கிறபடியே தமக்கந்தர்யாமியாய் "அற்புதனநந்தசயநனை" ப்பார்த்து "அக்கரங்களக்கரங்களென்றுமாவதென்கொலோ-இக்குறும்பைநீக்கியென்னையீசனாக்கவல்லையேற் - சக்கரங்கொள்கையனேசடங்கர்வாயடங்கிட-வுட்கிடந்தவண்ணமே புறம்பொசிந்துகாட்டிடே" என்றெம்பெருமானுக்கு ஆழ்வார்விண்ணப்பஞ்செய்தருள "ஒண்சங்கதைவாளாழியானும்" "தம்மையேநாளும்வணங்கித்தொழுவார்க்குத்தம்மையேயொக்கவருள்செய்வர் ஆதலால்" என்கிறபடியே "அரவத்தமளியனோடு மழ்கிய பாற்கடலோடு மரவிந்தப்பாவையுந்தானுமாய் பெரியதிருவநந்தாழ்வான்மேலே "வடிவிணையில்லாமலர்மகள் மற்றை நிலமகள்பிடிக்கும்" படி கண்வளர்ந்தருளும்படியை அனைவருங்கண்டநுபவிக்கும்படி யாழ்வாருடைய திருமேனியிலே ப்ரத்யக்ஷமாக்கி ஆழ்வாருக்கு

ஸாரூப்யப்ரதாநம்பண்ணியருள, ஆழ்வாரும் ஸாரூப்யத்தைப்பெற்று எல்லாருங்காணலாம்படி யெழுந்தருளியிருக்க, முன்புகர்ஹித்தசடங்கிகளுடைய ஆழ்வாருடைய ஹ்ருதயத்தில் ப்ரகாசிக்கிற வெம்பெருமானுடைய திவ்ய மங்களவிக்ரஹத்தை அவர் உரஸ்ஸிலேஸேவித்து திருவடிகளிலேஸாதரமாக ஸாஷ்டாங்கப்ரணாமத்தைப்பண்ணி க்ஷமைகொண்டு ஆழ்வாரை ப்ரஹ்மரதம்பண்ணி யுபலாளித்து நக்ஷமாமிக்குலக்ஷ்யமாகாமல் " திருமாலடியார்களைப் பூசிக்கநோற்று ,, க்ருதார்த்தரானார்கள். ததநந்தரம் அவர்களையும் பஹுப்ரகாரமாக ஜ்ஞாநப்ரதாநம்பண்ணியருளி, பஹுசா க்ருபைபண்ணியருளி வாழ்வித்து " செழுமாமணிகள்சேருந்திருக்குடந்தையை ,, நோக்கி எழுந்தருளினார். அங்கே ஆராவமுதாழ்வாருடைய வேரார்கோலத்தையுங் கண்டு அவர்விஷயமாக நம்மாழ்வார் அருளிச்செய்த திருவாய்மொழியையும் திருச்செவி சாத்தியருளி, அநந்தரம் தம்முடைய நிஜஸம்புடசதங்களைக்காவேரீபயப்ரவாஹத்திலேப்ரக்ஷேபிக்க, நிரவக்ரஹப்ரவாஹத்தாலே நிஜஸம்புடசதங்கள் நீயமாநங்களாயுள்ளளவில், நான்முகன்திருவந்தாதியும் திருச்சந்தவிருத்தமும் எதிர்த்துவர, அவற்றையு மெடுத்துக்கொண்டு ஆராவமுதாழ்வாருடைய ஏரார்கோலத்தை ஸேவித்து " காவிரிகரைக்குடந்தையில் கிடந்தவாறெழுந்திருந்துபேசு ,, என்றாழ்வார் விண்ணப்பம்செய்ய, ஆராவமுதாழ்வாருமப்படியே உத்யோகிக்க, அந்த ஸௌலப்யகுணத்துக்குத் தோற்று " வாழிகேசனே ,, என்று மங்களாசாஸநம்பண்ண, எம்பெருமானும் அப்படியே உத்தாநசாயியாயருள, அப்படியான விக்ரஹத்தை த்யாநம்பண்ணிக் கொண்டு யோகத்திலே இரண்டாயிரத்து முந்நூறுஸம்வத்ஸரமெழுந்தருளியிருந்து, இப்படி திருமேனியுடனே அந்நாஹாரவர்ஜிதராய் பலமூலங்களிலே கிஞ்சித் காதாசித்கமாக அமுதுசெய்தருளிக்கொண்டு மூவாயிரத்தெழுநூறு ஸம்வத்ஸரம் பகவதநுபவம் பண்ணிக்கொண்டு எழுந்தருளியிருந்து, அநுபவஜநித ப்ரீத்யதிசயத்தாலே நான்முகன்திருவந்தாதி, திருச்சந்தவிருத்தமென்கிற திவ்யப்ரபந்தங்களையு மருளிச்செய்து, " ஆழ்பொருளைச் சிந்தாமற்கொண்மினீர்தேர்ந்து ,, என்றுபரமஸாத்விகராய் நாராயணைகபரரான முமுக்ஷுக்களுக்குத் தம் பரமக்ருபையாலே யுபகரித்தருளி லோகத்தை வாழ்வித்தருளினார்.

ஸ்ரீதிருமழிசையாழ்வார் திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

## ( ௫ )

## ஸ்ரீகுலசேகராழ்வார் ப்ரபாவம்.

(௬௭) "குஷ்யதே யத்ர நகரீ ரங்கயாத்ரா தினே தினே - தமஹம் ஶிரஸா வந்தே ராஜானம் குலஶேகரம்" (ఘుష్యతేయత్రనగరీరంగయాత్రాదినేదినే - తమహంశిరసావందే రాజానంకులశేఖరం) (௬௮) "கல்யப்தே ஸுகஸங்க்யயா வ்யபகதே மாஸே ச மாகாபிதே - வர்ஷே சாபி பராபவே ஸுரகுரோர்வாரே ச பக்ஷே ஶுசௌ - த்வாதஶ்யாக்யதிதௌ புனர்வஸுதினே ஶ்ரீத்யாக்யயோகான்விதே - த்ராதும் ந: குலஶேகர: க்ஷிதிபதி: ஶ்ரீகௌஸ்துபாத்மாபவத்" (కల్యబ్దేసుఖసంఖ్యయావ్యపగతేమాసేచమాఘాభిధే - వర్షేచాపిపరాభవే సురగురోర్వారేచపక్షేశుచౌ - ద్వాదశ్యాఖ్యతిథౌపునర్వసుదినే శ్రీత్యాఖ్యయోగాన్వితే - త్రాతుంనఃకులశేఖరఃక్షితిపతి శ్శ్రీకౌస్తుభాత్మాభవత్) இவ்விடத்திலே அவதாரக்ரமம்பார்க்கில் நம்மாழ்வார் திருவவதாரவைபவம் சொல்லலாயிருக்க ஸ்ரீகுலசேகராழ்வார் திருவவதாரவைபவம் சொல்லுகிறது அவயவநிரூபணம்பண்ணியே அவயவியை நிரூபிக்கவேண்டுகையாலே. ஸ்ரீகுலசேகராழ்வார் கொல்லிநகரென்கிற திருப்படைவீட்டிலே, சேரன்குலசேகராய்க்கொண்டு க்ஷத்ரியவர்ணத்திலே மாசிமாஸத்தில் புநர்பூசநக்ஷத்ரத்தில் ஸ்ரீகௌஸ்துபாம்சராய் வந்தவதரித்தருளினார். (௬௯) "தஸ்மாதபூச்சேரகுலப்ரதீப: ஶ்ரீகௌஸ்துபாத்மா குலஶேகராக்ய: - மஹீபதிர்மாகபுனர்வஸூத்யத்தினே ஹரே: பூர்ணகடாக்ஷலக்ஷ்ய:" (తస్మాదభూచ్చేరకులప్రదీప శ్శ్రీకౌస్తుభాత్మాకులశేఖరాఖ్యః - మహీపతిర్మాఘపునర్వసూద్యద్దినే హరేః పూర్ణకటాక్షలక్ష్యః) "மாற்றலரைவீரங்கெடுத்த செங்கோற் கொல்லிகாவலன் வில்லவர்கோன்சேரன்குலசேகரன்முடிவேந்தர்சிகாமணி" என்றுசொல்லப்படுகிற இவர், ரதகஜ துரகபதாதியென்கிற சதுரங்கபலத்தையுடையராய், ப்ரதிபக்ஷங்களையெல்லாம் காந்திசீகராம்படி காடேறவோட்டி "கொல்லிகாவலன் கூடல்நாயகன்கோழிக்கோன்குலசேகரன்" என்றும், "கூரார்ந்தவேல்வலவன்கோழியர்கோன்கொடைக்குலசேகரன்" என்றுஞ்சொல்லுகிறபடியே தம்முடைய செங்கோலே செங்கோலாக சிறியத்தைப் பெரியது நலியாதபடி (௭௦) "கோஸஹஸ்ரப்ரதாதாரம்" (గోసహస్రప్రదాతారం) என்கிற பெருமாளைப்போலே ஸ்ரீகுலசேகரப்பெருமாளும் அத்யுதாரராய் ராஜ்யம் பண்ணிக்

கொண்டு ஸவிநயராய் நிற்க, தம்மை ஸ்வதந்த்ரராகவும், நியந்தாவாகவும், அபிமாநித்துக்கொண்டு இருக்கிற இவரை உபயவிபூதிநிர்வாஹகனாய், ஸர்வ நியந்தாவான ஸ்ரீமந்நாராயணன் தன் நிர்ஹேதுக பரம க்ருபையாலே இவர் ராஜஸதாமஸரஹிதராய் ஸத்வகுணப்ரசுரராம்படி கடாக்ஷித்து, இவர்க்குமயர் வறமதிநலமருளி, தம்முடைய ஸ்வரூபரூபகுண விபூதிகளையெல்லாம் விசத தமமாகத் தானே காட்டிக்கொடுக்க, அவற்றையெல்லாம் பகவத்பக்தி ரூபாபந்ந ஜ்ஞாநத்தை யுடையராய்க்கொண்டு இவ்வாழ்வார் கண்டவநந்தரம், ஸம்ஸாரிகளான இத்தேஹிகள் தேஹாத்மாபிமாநத்தைப் பண்ணி, (௧0௧) "அக்ருத்யகரணாதாவப்யத்யந்தோத்ஸுகவ்ருத்திக: அர்த்தகாமாபிபூதோயமுந்மத்தவதவர்த்தத" (అకృత్యకరణాదావప్యత్యన్తోత్సుకవృత్తికః అర్థకామాభిభూతోయమున్మత్తవదవర్తత) என்கிறபடியே, தேஹவஶ்யராய் தேஹபோகத்தை யநுபவித்து, பகவத்விமுகராய், தேஹாத்மாபிமாநிகளாய், சப்தாதிவிஷய ப்ரவணரானஇஸ்ஸம்ஸாரிகள் நடுவேதாமிருக்கிறவிருப்பும் உயிர்க்கழுவிலிருந்தாற்போலவும் "கொள்ளென்றுகிளர்ந்தெழுந்தபெருஞ்செல்வம்நெருப்பு" என்கிறபடியே யானைக்கழுத்திலே தாமிருந்து ராஜ்யம்பண்ணி ஸ்வரூபமாக ராஜபோகத்தை யநுபவிக்கிற ராஜத்வமும் அல்லலென்றுதோற்றி, "எரிநீ யிற்சுடும்" என்கிறபடியே அக்நிகல்பமா யிருக்கையாலே, மிகவும் அஸஹ்யமாய், (௧0௨) "பரித்யக்தா மயா லங்கா மித்ராணி ச தநாநி ச" (పరిత్యక్తా మయా లఙ్కా మిత్రాణి చ ధనాని చ) என்றும், (௧0௩) "த்யக்த்வா புத்ராம்ஶ்ச தாராம்ஶ்ச ராகவம் ஶரணம் கத:" (త్యక్త్వా పుత్రాంశ్చ దారాంశ్చ రాఘవం శరణం గతః) என்றுஞ்சொல்லுகிறபடியே, ஸ்ரீவிபீஷணாழ்வான் ஸகலபோகங்களையும் ஸவாஸநமாக த்யஜித்து, ஸர்வலோக சரண்யரான பெருமாளை யாஶ்ரயித்தாற் போலே, இவரும், "இன்பமருஞ்செல்வமு மிவ்வரசும் யான்வேண்டேன்" என்று ப்ரதிகூலங்களான ப்ராக்ருதபோகங்களில் நசையற்று, "திருவரங்கப்பெருநகர்" என்னும், திருவரங்கத் தரவணையிற்பள்ளிகொள்ளும் "கடல் விளங்கு கருமேனியம்மான் றன்னைக் கண்ணாரக் கண்டுகக்குங் காதலையுடையராயும், "அற்றபத்தர்சுற்றிவாழுமந்தணீரரங்கத்திலே, தாமற்றபத்தராய்நித்யவாஸம் பண்ணி, "விண்ணுளாரிலும்சீரியர்" ஆய், "அணியரங்கன் திருமுற்றத்தடியார்" என்று, அநந்யதா லக்ஷணமன்றிக்கே, அதுவே நிரூபகமாக வுடையரான சாதுகோஷ்டியாரான ஸ்ரீவைஷ்ணவர்களுடைய "இன்பமிகுபெருங்குழுவுகண் டியானு மிசைந்துடனே யென்றுகொலோ விருக்குநாளே" என்றுகொண்டு, கோயிலையும் அங்குள்ள ஸ்ரீவைஷ்ணவ

ஸமூஹத்தையும் கண்டநுபவிப்பதெப்போதோ, என்றும், (௧0௪) "ஸ்ரீரங்கயாத்ராஸ்ரீரங்கயியாஸாபிசைவநாரத - உத்தாரயதிஸம்ஸாரம் நித்யவாஸஸ்து கிம்புந:" (శ్రీరంగయాత్రా శ్రీరంగయియాసాపిచైవనారద - ఉత్తారయతి సంసారం నిత్యవాసస్తు కిం పునః) என்றுஞ்சொல்லுகிறபடியே, ஸ்ரீரங்கயாத்ரையும் யியாஸையும் விடியா வெந்நரகைப்போக்கி வைகுந்தந் தரவற்றாயிருக்கிற அங்கே நித்யவாஸம்பண்ணில் சொல்லவேண்டாவிறே. என்கிற அர்த்தத்தை யறிந்தவராகையாலே ஸ்ரீரங்கயாத்ரையிலே ப்ரதிதிநம் ப்ரேமத்தையுடையராயும், (௧0௫) "த்ரைலோக்யவிஸ்ருதாபுண்யா ஸ்வாமிபுஷ்கரிணீதிசே - ஸம்ஸாரத்யைஸ்ஸகலைஸ்தீர்த்தைஸ்ஸஹாவிமலோதகா - தத்ர தேவர்ஷிகந்தர்வா ஸித்தாஸ்ச பரமர்ஷய: - வஸந்திநியதாஹாரா வேங்கடாஹ்வயபூதரே" (త్రైలోక్యవిశ్రుతాపుణ్యా స్వామిపుష్కరిణీతిచ - గంగాద్యైస్సకలైస్తీర్థైస్సహావిమలోదకా - తత్రదేవర్షిగంధర్వా స్సిద్ధాశ్చపరమర్షయః - వసంతినియతాహారా వేంకటాహ్వయభూధరే) என்றும், "வேங்கடத்தைப்பதியாக வாழ்வீர்காள்" என்றும் சொல்லுகிறபடியே, கங்காதி ஸகலதீர்த்தாதிகமான ஸ்வாமிபுஷ்கரிணியையுடையதாய், பரமருஷிகள்தொடக்கமான மஹாத்மாக்களாலே நித்யவாஸம் பண்ணப்பட்டாநிற்கிற திருவேங்கடமலையிலே, இவரும், ஸ்த்தாவர திர்யக் ஜந்மங்களை பரிக்ரஹித்து வாஸம் பண்ணவாசைப்பட்டு, இப்படி மற்றுமுண்டான திவ்ய தேசங்களெங்கும் எழுந்தருளி, அங்குள்ள எம்பெருமான்களையும் ஸேவித்து, அங்கே நித்யவாஸம் பண்ண வாசையை யுடையராயும், அஷ்டாதச புராணோபபுராணேதிஹாஸாதிகளை நிரீக்ஷித்து, தத்ஸாரபூதமான முகுந்தமாலையு மருளிச்செய்து, இப்படியிருக்கிற இவருக்குக் காலக்ஷேபமாவது (௧0௬) "வேதவேத்யே பரே பும்ஸி ஜாதே தஸரதாத்மஜே - வேத: ப்ராசேதஸாதாஸீத் ஸாக்ஷாத்ராமாயணாத்மநா" (వేదవేద్యేపరేపుంసి జాతేదశరథాత్మజే - వేదఃప్రాచేతసాదాసీ త్సాక్షాద్రామాయణాత్మనా) என்கிறபடியே, வேதவேத்யனான பரமபுருஷன் தசரதாத்மஜனாய் வந்தவதரித்தவிளுற்போலே அந்த வேதங்கள்தாமும் ஸ்ரீவால்மீகிபகவான்முகேந இதிஹாஸோத்தமமான ஸ்ரீராமாயணமாய்க்கொண்டு ப்ரகாசித்ததாகையாலே அதுவே தமக்கு, "செவிக்கினிய செஞ்சொல்" ஆக, "இன்னமுதமதியோமே" என்று ஸ்ரவித்துக்கொண்டு போராநிற்க, (௧0௭) "ஸ்த்ரீபும்ஸஸஹஸ்ராணி ரக்ஷஸாம் பீமகர்மணாம் - ஹதாந்யேகேந ராமேண

கயம்ய-ஸம்ஸவிஷ்யதி " (చతుర్దశ సహస్రాణిరక్షసాం భీమకర్మణాం- ఏకశ్చ రామో ధర్మాత్మా కథంయుద్ధం భవిష్యతి ) என்கிற ஶ்லோகார்த்தத்தைக் கேட்டருளுகிற தறுவாயிலே, பெருமாளும், இளையபெருமாளை பிராட்டிக்குத் திருமேனிக் காவலாக நிறுத்தி, கர த்ரிசிர தூஷணாதிகளாகிற பதினாலாயிரம் துஷ்ட்ட ராக்ஷஸருடனே, தர்மாத்மாவானபெருமாளொருவரே யுத்தோந்முகரானார்; எங்கு இளைக்கிறதோவென்று ருஷி வயிறுபிடிக்கிறுனென்றுகேட்கையாலே, இவ்வாழ்வாரும் ப்ரேம பரவசராய்க்கொண்டு, "அவத்தங்கள் விளையுமென்றதிசங்கையாலே, "வாளும்வில்லுங்கொண்டு, பின்செல்வார்மற்றில்லை" என்றும், "உருவார்சக்கரம்சங்குசுமந்திங்கும்மோடொருபாடுழல்வானோரடியானுமுளன்" என்றுஞ் சொல்லுகிறபடியே, இவரும் சதுரங்கபலத்தோடே பெருமாளுக்குப் படைத்துணையாக வெழுந்தருளாநிற்க, இவருடைய அதிப்ரவ்ருத்தமான இந்த யாத்ரையைக்கண்டு, இத்தைத் தவிர்க்கைக்காக, மந்த்ரிகள் உபாயேந சிலரை யெதிரேவரவிட்டு, பெருமாள்; அந்தப் பதினாலாயிரம் துஷ்ட்டராக்ஷசர்களையும் தாமொருவருமே நிரஸித்து மீண்டெழுந்தருளும்போது, பிராட்டி (௧௦அ) "தம்த்ருஷ்ட்வா ஶத்ருஹந்தாரம் மஹர்ஷீணாம் ஸுகாவஹம் - பபூவ ஹ்ருஷ்டா வைதேஹீ பர்த்தாரம்பரிஷஸ்வஜே" (తంద్రుష్ట్వా శత్రుహన్తారం మహర్షీణాంసుఖావహం - బభూవహృష్టా వైదేహీ భర్తారంపరిషస్వజే) என்கிறபடியே, திருமேனியில் வ்ரணங்களெல்லாந் தீரும்படி, திருமுலைத்தடங்களாலே எதிர்கொண் டணைத்து, ஆஶ்வாஸிப்பித்த இந்த சோகநிவர்த்தகமான ஶ்லோகத்தையும் சொல்லுவிக்கையாலே, இவருமத்தைக்கேட்டு, ஸந்துஷ்ட்டராய் மீண்டெழுந்தருளினவளவிலே, மந்த்ரிகள், நம்முடைய ராஜாவான இவர்க்கு ஸ்ரீவைஷ்ணவஸஹவாஸத்தாலே யித்தனைகலக்கங்களும் தேற்றங்களும் வந்தனவென்று, அவர்களுடையஸஹவாஸத்தைத் தவிர்ப்பிக்கவேணுமென்று, இவருடைய க்ருஹார்ச்சனை யெம்பெருமானுடைய திருவாபரணப் பெட்டியிலே, நவரத்ந சோபிதமாயிருப்பதொரு ஹாரத்தை யெடுத்து மறையவைத்து, இவருக்கந்தரங்கராய் உத்தேஶ்யரான ஸ்ரீவைஷ்ணவர்க ளெடுத்தார்க ளெடுத்தார்களென் றுரோபிக்க, அதுக்கவரும் "பரனன்பர்கொள்ளார்" என்று அவர்களுக்காகத்தாம் பாம்புக்குடத்திலே கையிட்டருளி ஜயிக்க, இத்தைக்கண்டு மந்த்ரிகள்; தாங்கள்செய்த அக்ருத்யத்தை விண்ணப்பஞ்செய்து, அந்த ஹாரத்தை யிவர் திருமுன்பே வைத்து, தண்டம் ஸமர்ப்பித்தார்கள். பின்பு ஆழ்வாருக்கும்; இவர்கள்நடுவே, ராஜ்யம்பண்ணியிருக்குமிருப்பு (௧௦௯) "நஸாளிஷீந

விதூய ஜநஸம்வாஸவைசஸம் - வரம் ஹுதவஹஜ்வாலா பஞ்ஜராந்தர்வ்யவஸ்திதி: ” ( విధూయ జనసంవాసవైశసం - వరం హుతవహజ్వాలా పంజరాంతర్వ్యవస్థితిః ) என்கிறபடியே பகவத்வைபவஞ் சொல்லப்பொறுதார்நடுவி லிருக்கு மிருப்பைக்காட்டில், அக்நிஜ்வாலா பஞ்சராந்தர்வ்யவஸ்த்திதி உத்க்ருஷ்டதமம், பகவத்பரராகையால் இவர்க்கு அக்நிஜ்வாலையிலே அகப்பட்டாற்போலே அதிதுஸ்ஸஹமா யிருக்கையாலே, தம்குமாரருக்கு ராஜ்யாபிஷேகம்பண்ணி, ராஜ்யபாரத்தை யவரிடத்திலேவைத்து, “ ஆனதசெல்வத்தரம்பையர்கள்தற்சூழ வானாளுஞ்செல்வமுமண்ணரசும்யான்வேண்டேன் என்றுகொண்டு, ஐஹிகாமுஷ்மிகதிவ்யமாநுஷபோகங்களில்நசையற்று, தமகந்தரங்கரான ஸ்ரீவைஷ்ணவஸஹவாஸத்துடனே, “ நல்லார்கள்வாழும்நளிரரங்கத்தை நோக்கி யெழுந்தருளி, நகட்டிலழுத்தின மாணிக்கம்போலே, “ உறங்குவான்போல் யோகுசெய்கிற “ அணியரங்கத் தம்மானை நித்யதரித்ரன் நிதியைக்கண்டாற்போலே, கண்களாரக்கண்டு, வாயாரவாழ்த்தி அநுபவித்து, அவ்வநுபவஜநித ப்ரீத்யதிசயத்தாலே, பகவத்பாகவதவைபவத்தை யெல்லாருமறிந் துஜ்ஜீவிக்கைக்காக, பெருமாள் திருமொழியென்கிற திவ்யப்ரபந்தத்திலே, பகவத்பாகவத வைபவத்தையெல்லா மருளிச்செய்து, ஸஜ்ஜநங்களுக் குபகரித்தருளி, லோகத்தை வாழ்வித்தருளினார்.

ஸ்ரீகுலசேகராழ்வார் திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

---

( ௯ )

## ஸ்ரீ பெரியாழ்வார் ப்ரபாவம்.

---

(௧௧௦) “ தாடாகவிகல்பாதிஷ்டை ஹரவத்ராகவம் விஷ்ணுசித்தம் யோகிஞ்ஞாநகேந்த்ர ஜயீமகேந மத்துஷத்ரீயாடிபவதைவாராவெநநாயெ வைராக்ராப்ஷிஞ்மாவயதிஷுநகோஷத்கெஷு - ஜ்யேஷ்டயகாவெஸவவகாநதாவெ ஜ்யேஷ்டாமதேணநாஜநிஸ்டநாயஃ - க்ருதத்ரயீராகுவெம ராத்துஹாத்து கடாக்ஷமக்ஷ்யம்கபேராவதெயஃ ” ( తాటాత్మైక ప్రతిఫలత్వగవత్వ



ஸ்ரீ பெரியாழ்வார்.

త్వం విస్తీర్యపాణ్డ్యకథకేన్ద్రజయీగజేన - గచ్ఛన్ప్రియాదుపగతేగరుడేననాథే ప్రేక్షాంశభంర యతిస్మనమోస్తుతస్మై - జ్యేష్ఠేధమాసేపవమానతారే జ్యేష్ఠోగుణేనాజనిభట్టనాథః - కృతత్రమారూపగరుత్మదాత్మాకటాక్షలక్ష్యంకమహావతేర్యః ) என்று திவ்யஸூரிசரிதையிலே சொல்லிற்றிறே. (௧௧௧) "தஸ்மாத்த்வாபரமேகலௌ யுபரே ஸம்வத்ஸரே க்ரோதநே சண்டாம்ஶௌ மிதுநம் கதே ஹ்யநவமீபக்ஷே வலக்ஷேபி ச - ஸ்வாத்யாம் பாஸ்வதி வாஸரே ஶுபதிதௌ வைகாதஶீ நாமநி ஶ்ரீமாநாவிரபூதசிந்த்யமஹிமா ஶ்ரீவிஷ்ணுசித்தோநக:" (తస్మాద్బాపగమేకలౌయుపరేసంవత్సరేక్రోధనే చణ్డాంశౌమిథునంగతేహ్యానవమీపక్షేవళక్షేఽపిచ- స్వాత్యాంభాస్వద్వాసరేశుభతిథౌవైకాదశీనామని శ్రీమానావిరభూదచిన్త్యమహిమాశ్రీవిష్ణుచిత్తోనఘః ) பெரியாழ்வார் "வேதவாய்த்தொழிலார்கள் வாழ்வில்லிபுத்தூர்" என்கிறபடியே செய்தவேள்வியரான வையத்தேவர் நித்யவாஸம் பண்ணி வாழாநிற்கிற ஸ்ரீவில்லிபுத்தூரிலே, ஆனிமாஸத்திலே, திருச்சோதியிலே, ஸ்ரீகருத்மதம்ஸமாய் அவதரித்தருளி, ப்ராஹ்மணோத்தமரான "வேயர்தங்கள்குலத்திலேயவதரித்து, விஷ்ணுசித்தனென்கிற திருநாமத்தையுடையராய், (௧௧௨) "ப்ரஹ்லாதோ ஜந்மவைஷ்ணவ:" (ప్రహ్లాదోజన్మవైష్ణవః) என்னும்படி வடபெருங்கோயிலுடையானுடையநிர்ஹேதுகக்ருபாகடாக்ஷத்தினாலே, (௧௧௩) "ஆத்மதாஸ்யம்ஹரேஸ்ஸ்வாம்யம்" (ఆత్మదాస్యంహరేస్స్వామ్యం) என்கிறபடியேஸஹஜபகவத்தாஸ்யத்தையுடையராய், (௧௧௪) "நாகிஞ்சித்கர்வதஶ்ஶேஷத்வம்" (నాకిం చిత్కుర్వతశ్శేషత్వం ) என்கிறவசநத்தையநுஸரித்து, இனி நமக்கு பகவத்விஷயத்திலே கிஞ்சித்கரித்து ஸ்வரூபம் நிறம்பெறவேணுமென்றுபார்த்து, அது செய்யுமிடத்து "தனக்கேயாகவெனைக்கொள்ளுமீதே" என்கிறபடியே, அவனுகந்தவடிமைசெய்கையே நமக்குக் கர்த்தவ்யமென்றநுஸந்தித்து, அதறிகைக்கு அவதாரங்களை யாராய்ந்து பார்த்தவிடத்தில், ஸர்வேஶ்வரன் "மண்ணின்பாரம் நீக்குதற்காகவும் தர்மஸம்ஸ்தாபநார்த்தமாகவும் (௧௧௫) "ஏஷ நாராயணஶ்ஶ்ரீமாந் க்ஷீரார்ணவநிகேதந: - நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராம் புரீம்" (ఏష నారాయణశ్శ్రీమాన్ క్షీరార్ణవనికేతనః - నాగపర్యంకముత్సృజ్యహ్యాగతోమథురాంపురీం) என்றும், (௧௧௬) "புண்யா த்வாரவதீ யத்ர யத்ராஸ்தே மதுஸூதந: - ஸாக்ஷாத்தேவ: புராணோஸௌ ஸ ஹி தர்மஸ்ஸநாதந:" ( పుణ్యాద్వారవతీయత్రయత్రాస్తేమధుసూదనః- సాక్షాద్దేవఃపురాణోఽసౌ సహిధర్మస్సనాతనః ) என்றும் ஸாதுபரித்ராணாதி த்ரயத்துக்காக, "திருவின்வடிவொக்குந்தேவகிபெறப்பிறந்து, "மைத்தடங்கண்ணி யசோ

தைவளர்க்க,வளர்ந்தருகிற "உருவுகரியவொளிமணிவண்ணனுனக்ருஷ்ணன், "சூட்டுநன்மாலைகடுயனவேந்தி விண்ணோர்கணன்னீ - ராட்டியங் தூபந்தரா நிற்கவே யங்கோர்மாயையினு - லீட்டியவெண்ணெய்தொடு வுண்ணப்போந் தவனுகையாலே அந்தவாஸனை பின்னுட்டி, கம்ஸனுக்குப்பணிசெய்துபோந்த ஸ்ரீமாலாகாரர் திருமாளிகையிலே யெழுந்தருளிப் பூவிரக்க, அவரும்; (கஎ) "ப்ரஸாத³பரமௌ நாதௌ² மம கே³ஹமுபாக³தௌ - த⁴ந்யோஹமர்ச்சயிஷ்யாமீத்யாஹ மால்யோபஜீவந:" (ప్రసాదపరమౌ నాథౌ మమ గేహముపాగతౌ - ధన్యోహమర్చయిష్యామీ త్యాహమాల్యోపజీవనః) என்றுகந்து சூட்டினபடியைக்கண்டு, இவ்விஷயத்துக்குப் பூவிடுகையே யுகப்பென்றறுதியிட்டு, வடதளபடசாயியாயிருக்கிற வடபெருங்கோயிலுடையானுக்கு, "நாட்கமழ்பூம்பொழிலாகத் திருநந்தவநஞ்செய்து, திருமாலைகட்டிச் சாத்திப் போருகிற காலத்திலே, "பருப்பதத்துக் கயல்பொறித்த பாண்டியர்" குலத்தில், ஸ்ரீவல்லப தேவராஜனென்கிற ராஜா தார்மிகனுகையாலே, சிறியத்தைப் பெரியது நலியாதபடி கூடலென்கிற மதுரையிலேயிருந்து ராஜ்யம்பண்ணிக்கொண்டு போருகிறகாலத்திலே, ஒருநாள்ராத்ரியிலே, ராஜா நகரசோதநார்த்தமாக வருகிறவளவிலே, ஒருப்ராஹ்மணன் அங்கொரு திண்ணையிலேயிருக்கக்கண்டு, ராஜா அவனையெழுப்பி, நீயாரென்றுகேட்க, அவனும் நானொரு ப்ராஹ்மணன், கங்காஸ்நாநம்பண்ணி வருகிறேனென்ன, உனக்குப் போமதுண்டாகில் ஒரு க்ரந்தஞ்சொல்லிக்காணுயென்ன, அந்த ப்ராஹ்மணனும், (கஅ) "வர்ஷார்த²மஷ்டௌ ப்ரயதேத மாஸாந் நிஶார்த²மர்த⁴ம் தி³வஸம் யதேத - வார்த⁴க்யஹேதோர்வயஸா நவேந பரத்ரஹேதோரிஹ ஜந்மநா ச" (వర్షార్థమష్టౌ ప్రయతేత మాసాన్ నిశార్థమర్థం దివసం యతేత - వార్ధక్యహేతోర్వయసా నవేన పరత్రహేతోరిహ జన్మనా చ) என்கிற ஶ்லோகத்தைச்சொல்ல, ராஜாவுமித்தைக்கேட்டு, வ்யுத்பந்நனுகையாலே, த்ருஷ்டத்தில் நமக்கொருகுறைகளுமில்லையே; இனி அத்ருஷ்டயத்நம் பண்ணும்படி யென்னென்று வ்யாகுலாந்த:கரணனுய், தனக்குப் புரோஹிதனை செல்வநம்பியைப் பார்த்து, புருஷார்த்தநிர்ணய பூர்வகமாக அத்ருஷ்டஸித்திக்கு விரகென்னென்ன, புரோஹிதனும், (கக்ஷ) "த⁴ர்மஜ்ஞஸமய: ப்ரமாணம்" (ధర్మజ్ఞసమయః ప్రమాణం) என்கையாலே வித்வாம்ஸர்களைத் திரட்டி, வேதாந்த ஸித்தமான பரதத்வநிர்ணயம்பண்ணுவித்து, அவ்வழியாலே பெறவேணுமென் றருளிச்செய்ய, ராஜாவும் அப்படியே யாகிறதென்று பஹுத்ரவ்யத்தை வித்யாஶுல்கமாக ஒருதோரணத்திலே கிழிச்சீரையிலே, கிழியாகக் கட்டுவித்து, ராஜ

யத்தில் வித்வான்களை யாஹ்வாநம் பண்ணச்சொல்லுகிறவளவிலே, வடபெருங்கோயிலுடையான்; ஸம்ஸாரிகள், "பூண்டவத்தப்புறங்கிடந்துதொண்டுபட்டுப் பொய்ந்நூலை மெய்ந்நூலென்றென்றுமோதி மாண்டவத்தம் போகாமே யிவ்வாழ்வாரை யிடுவித்து, லோகத்திலே வேதாந்தப்ரதிபாத்யமான பரத்வத்தை ப்ரகாசிப்பிக்கைக்காக, மெய்யடியாரான இவ்வாழ்வாருடைய ஸ்வப்நத்திலே யெழுந்தருளி, நீபோய்க் கிழியை யறுத்துக்கொண்டு வாருமென்றருளிச்செய்ய, அது வித்யாஶுல்கமாக நிர்மித்ததன்றே? "நலங்களாய நற்கலைகள் நாவிலும் நவின்றிலாத நான் என்கையில் கொட்டுத் தழும்பைக் காட்டிக் கிழியையறுக்கலாமோவென்ன, அதுமக்கு பரமோ; நாமன்றே வேதார்த்தப்ரதிபாதநத்துக்குக் கடவோமென் றாழ்வாரை நிர்ப்பந்தித்தருள, (௧௨௦) "ப்ராஹ்மே முஹூர்த்தே சோத்தாய" (బ్రాహ్మే ముహూర్తే చోత్థాయ) என்கிறபடியே, "சிற்றஞ்சிறுகாலே" எழுந்திருந்து, இதொரு ஸ்வப்நமிருந்தபடி யென்னென்று விஸ்மிதராய் விஶ்வஸித்து, பாண்டியனுடையவித்வத் கோஷ்டியேற வெழுந்தருளினவளவிலே, செல்வநம்பியும் ராஜாவும் த்விஜகுலதிலகரான இவ்வாழ்வாரைக் கண்டு, அப்யுத்தாந ப்ரணாமபூர்வகமாக மிகவுமாதரிக்க, இத்தைக்கண்ட வித்வான்கள், இவர்க்கு வேதாப்யாஸம் மிகவுமில்லையென்னும் புத்தியாலே, ராஜாவை யதிக்ஷேபிக்க, அவ்வளவிலே, அபிமாநதுங்கனான செல்வநம்பி, ஆழ்வாரைத்தண்டனிட்டு, வேதாந்தப்ரதிபாத்யமான பரதத்வத்தைநிஶ்சயித்தருளிச்செய்யவேணுமென்று விஜ்ஞாபித்தவளவிலே, (௧௨௧) "ஹஸிதம் பாஷிதம் சைவ கதிர்யா யச்ச சேஷ்டிதம் - தத்ஸர்வம் தர்மவீர்யேண யதாவத் ஸம்ப்ரபஶ்யதி" (హసితం భాషితం చైవ గతిర్యా యచ్చ చేష్టితం - తత్సర్వం ధర్మవీర్యేణ యథావత్సంప్రపశ్యతి) என்று சொல்லுகிறபடியே, ஸ்ரீவால்மீகிபகவான் ப்ரஹ்மாவின்ப்ரஸாதத்தாலே ஸர்வார்த்தங்களையும் ஸாக்ஷாத்கரித்தாற்போலேயும், (௧௨௨) "ஶங்கப்ராந்தேந கோவிந்தஸ்தம் பஸ்பர்ஶ க்ருதாஞ்ஜலிம் - உத்தாநபாததநயம் த்விஜவர்யம் ஜகத்பதி: - தத: ப்ரஸந்நவதநஸ் தத்க்ஷணாந்ந்ருபநந்தந: - துஷ்டாவ ப்ரணதோ பூத்வா பூததாதாரமச்யுதம்" (శంఖప్రాంతేన గోవిందస్తం పస్పర్శ కృతాంజలిం - ఉత్తానపాదతనయమ్ మునివర్యం జగత్పతిః - తతః ప్రసన్నవదనస్తత్క్షణాన్నృపనన్దనః - తుష్టావ ప్రణతో భూత్వా భూతధాతారమచ్యుతమ్) என்கிறபடியே, ஸ்ரீபாஞ்சஜந்ய ஸ்பர்ஶத்தாலே ராஜகுமாரனான த்ருவன் ஸர்வஜ்ஞனானாற்போலேயும், இவ்வாழ்வாரும் வடபெருங்கோயிலுடையானுடைய நிர்ஹேதுக கடாக்ஷத்தாலே ஸகலவேதார்த்தங்களையும், ததுபப்ருஂஹணங்களான புரா

ணேதிஹாஸங்களையும் ஸாக்ஷாத்கரித்து, (௧௨௩) "ஸமஸ்தஶப்தமூலத்வாதகாரஸ்ய ஸ்வபாவத:" (సమస్తశబ్దమూలత్వాదకారస్యస్వభావతః) என்னும், ஸமஸ்தசப்தமூலமாயிருந்துள்ள அகாரத்தை (௧௨௪) "அக்ஷராணாமகாரோஸ்மி" (అక్షరాణామకారోఽస్మి) என்று கீதோபநிஷதாசார்யன் தானே யருளிச்செய்கையாலும், (௧௨௫) "அகாரோ விஷ்ணுவாசக:" (అకారోవిష్ణువాచకః) என்றகாரவாச்யனை ஸ்ரீமந்நாராயணனே ஸர்வஸ்மாத்பரனென்று பரதத்வ சிங்ஹங்களான வாக்யங்களையும், (௧௨௬) "யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே யேந ஜாதாநி ஜீவந்தி யத்ப்ரயந்த்யபி ஸம்விஶந்தி தத்விஜிஜ்ஞாஸஸ்வ தத்ப்ரஹ்மேதி" (యతో వా ఇమాని భూతాని జాయంతే యేన జాతాని జీవన్తి యత్ప్రయన్త్యభి సంవిశన్తి తద్విజిజ్ఞాసస్వ తద్బ్రహ్మేతి) இத்யாதிவாக்யங்களையும், ஜகத்காரணத்வ முமுக்ஷூபாஸ்யத்வ மோக்ஷப்ரதத்வ ப்ரதிபாதகங்களான நாராயணாநுவாகாதி ஶ்ருதிகளாலும், (௧௨௭) "விஷ்ணோஸ்ஸகாஶாதுத்பூதம் ஜகத்தத்ரைவ ச ஸ்திதம் - ஸ்திதிஸம்யமகர்தாஸௌ ஜகதோஸ்ய ஜகச்ச ஸ:" (విష్ణోస్సకాశాదుద్భూతం జగత్తత్రైవ చ స్థితం - స్థితిసంయమకర్తాసౌ జగతోఽస్య జగచ్చ సః) என்றும், (௧௨௮) "நாராயணாத்பரோ தேவோ ந பூதோ ந பவிஷ்யதி - ஏதத்ரஹஸ்யம் வேதாநாம் புராணாநாஞ்ச ஸம்மதம் - ஸத்யம் ஸத்யம் புநஸ்ஸத்யம் உத்த்ருத்ய புஜமுச்யதே - வேதஶாஸ்த்ராத்பரம் நாஸ்தி ந தைவம் கேஶவாத்பரம்" (నారాయణాత్పరో దేవో న భూతో న భవిష్యతి - ఏతద్రహస్యం వేదానాం పురాణానాంచ సమ్మతం - సత్యం సత్యం పునస్సత్యం ఉద్ధృత్య భుజముచ్యతే- వేదశాస్త్రాత్పరన్నాస్తి న దైవం కేశవాత్పరమ్) என்றுமித்யாதி ஶ்ருதிஸ்ம்ருதீதிஹாஸபுராணாதிவசந ஸஹஸ்ரங்களாலும் பஹுமுகமாக ப்ரதிபாதித் தருளிச்செய்கையாலும், வித்யாஶுல்கமாகத் தோரணத்திலே கிழியாகக்கட்டிவைத்த தநம் இவர்முன்னே தானே தாழவளைய, ஆழ்வாரும் ப்ரீதியோடே "விளைந்துகிழியறுத்தான்" என்கிறபடியே அக்கிழியை அறுத்தருளினர். இத்தைக்கண்டு அதிக்ஷேபித்த வித்வாம்ஸருடன் அநுவர்த்தித்த ராஜாவுடன் வாசியற ஸர்வரும் விஸ்மிதராய்க்கொண்டு இவர் திருவடிகளிலே தண்டம் ஸமர்ப்பித்து "வேதாந்தவிழுப்பொருளின் மேலிருந்தவிளக்கை விஷ்ணுசித்தன் விரித்தனன்" என்று மிகவும் ப்ரீதியுடனே, ஆழ்வாரை, யானைக்கழுத்தின்மேலே யேறியருளப்பண்ணி, அந்தவித்வான்கள் சத்ரசாமரதாலவ்ருந்தாதிகள் தரித்துஸேவிக்க, "வேதப்பயன்கொள்ளவல்லனை" மெய்ந்நாவன்வந்தானென்று விருதூதித் திருச்சிந்நம் பரிமாற, "ஈண்டியசங்கமெடுத்தூத, ராஜா,

இவர்க்கு பட்டர்பிரானென்று திருநாமஞ்சார்த்தி, தானும் ஸபரிகரனாய் ஸேவித்துக்கொண்டு, நகரிவலமாகவருகிற மஹோத்ஸவத்தைக் காண்கைக்காக, புத்ரர்களை ப்ரஹ்மரதம்பண்ணும் ஸமயத்தில் மாதா பிதாக்கள் காண ஆதரித்துவருமாபோலே. ஸர்வேஶ்வரனும் தனக்கு நிருபகபூதையான பிராட்டிஸஹிதனாய்க்கொண்டு, “மஞ்சுயர்பொன்மலைமேலெழுந்தமாமுகில்” போன்ற வடிவுடன், பெரியதிருவடிமேலேகொண்டு, “திருச்சக்கரஞ்சங்கினொடும்” என்கிறபடியே திவ்யாயுததரனாய், “சீளர்ந்தபிரமன் சிவனிந்திரன் விண்ணவர்சூழ விளங்க வொருநாள்காணவாராய் விண்மீதே” என்கிறபடியே ப்ரஹ்மருத்ராதிகளெல்லாராலும் ஸேவ்யமானனாய்க்கொண்டு, ஆகாசத்திலே திவ்யமங்களவிக்ரஹ விசிஷ்டனாய், நெருங்கிநிற்கிற இத்திரளோடு ஸந்நிஹிதனாக, இந்தத்திவ்யமங்கள விக்ரஹத்தை ஸேவித்து. ஆழ்வார், ஸ்வஸம்ருத்தியைப் பார்க்கிறமாந்திராதே, பகவத்ப்ரஸாதத்தாலே நிரவதிக பக்தியைப் பெற்றவராகையாலே, அவனுடைய ஸர்வஜ்ஞத்வ ஸர்வசக்தித்வ ஸர்வரக்ஷகத்வாதிகளை யநுஸந்திப்பதற்குமுன்னே, முகப்பில், “நீலமுண்ட மின்னன்னமேனியிலுண்டான ஸௌந்தர்ய ஸௌகுமார்ய லாவண்ய யௌவனாதிகளைக்கண்டு, (கஉகூ) “அப்ராக்ருதம் ஸுதுர்தர்ஸ்யமயுதார்க்கஸமப்ரபம்” (అప్రాకృతం సుదుర్దర్శ్యమయుతార్కసమప్రభం) என்றும், (கா0) “ஸ்வஸ்யைவ ப்ரபயா ராஜந் துஷ்ப்ரேக்ஷ்யம் தேவதாநவை:” (స్వస్యైవ ప్రభయా రాజన్ దుష్ప్రేక్ష్యం దేవదానవైః) என்றும், “சுடர்ச்சோதி” என்றுஞ் சொல்லப்பட்டிருப்பதாய், காலக்ருத பரிணாமமன்றிக்கே ஸதைகரூபமாய், நித்யஸித்தமாய், பஞ்சோபநிஷண்மயமான பரமபதத்திலே, (காக) “ஸதா பஶ்யந்தி ஸூரய:” (సదా పశ్యన్తి సూరయః) என்கிறபடியே, நித்யஸூரிகளாலே ஸதா தர்ஶநம் பண்ணப்படுகிற வஸ்து, காலக்ருத பரிணாமமாய், க்ஷணக்ஷரணஸ்வபாவமாய், பரமாத்ம ஸ்த்தாநமான பரமபதத்தைப் பற்ற நரகோபமமாய், அரக்கரசுரர்க்கு வாஸபூமியாய், துர்வித்வான்கள் துரபிஸந்திபண்ணும் ஸ்த்தலமாய், கலிஸாம்ராஜ்யம்பண்ணுகிற “இருடருமாஞாலமான இத்தேசத்திலேவந்து சக்ஷுர்விஷயமா...தே; இவ்வஸ்துவுக்கென்னதீங்குவருகிறதோவென்னு மதிசங்கையாலே, யானைக்கழுத்தின்...லேகிடக்கிற மணிகளைத் தாளமாகக்கொண்டு, இந்த ஸௌந்தர்யாதிகளுக்கு ஒருதீங்கும்வாராதே நித்யமாகச் செல்லவேணுமென்று தம் ஸ்வரூபதசையை மறந்து, ப்ரேமபரவசராய்க்கொண்டு மங்களாசாஸநம்பண்ணியருளி, இவ்விஷயத்துக்கு நாமொருவரும் மங்களாசாஸநம்பண்ணுகைபோராதென்று, தமக்

குத்தோள்திண்டியான ஐஸ்வர்ய கைவல்ய பகவச்சரணார்த்திகளையும் மங்களாசாஸநயோக்யராம்படி திருத்திச் சேர்த்துக்கொண்டு, பலவகையாலும் திருப்பல்லாண்டுபாடியருளினார். அநந்தரம், அந்தராஜாவையும்விசேஷகடாக்ஷம் செய்தருளி, அவனாலே ஸத்க்ருதராய், "வில்லிபுத்தூருறைவான்றன்பொன்னடிகாண்பதோராசையினால் மீண்டு ஸ்ரீவில்லிபுத்தூரிலே யெழுந்தருளி, தநத்தை (௧௩௨) "யஷெவ்யூ தெகவூ தஊநம்" (యద్యేవ తే తస్య తద్ధనం) என்கிறபடியே வடபெருங்கோயிலுடையான் திருமுன்னேவைத்து தண்டம் ஸமர்ப்பித்து, (௧௩௩) "ப்ராஞ்ஜலிம்பரிஸமாப்ய ப்ரக்ருதஸநஸ்ரஜம்" (ప్రాంజలిం పరిసమాప్య ప్రకృతసుమస్రజం) என்கிறபடியே தாம் முதலுபக்ரமித்தருளின "காறார்நறுந்துழாய்க்கைசெய்த கண்ணியும்செண்பகமல்லிகையோடு செங்கழுநீர்இருவாட்சியுமான திருமாலைகட்டி, வடபெருங்கோயி லுடையானுக்கு நித்யமாகச்சாத்தி, ஸேவித்துக்கொண்டிருக்கிற இவ்வாழ்வார் தாம், அவதாரங்களை முன்னிட்டுக்கொண்டு, க்ருஷ்ணவதாரத்தில், ஸ்ரீமாலாகாரர் திருமாளிகையிலே யெழுந்தருளி, பூவிரந்து சாத்தினானென்றிறே முந்துறத் திருநந்தவநஞ்செய்து திருமாலை ஸமர்ப்பிக்கத் தொடங்கிற்றும். ஸ்ரீமாலாகாரர் திருமாலைசாத்தின வநந்தரம் மல்லரோடு பொருது வெற்றிகொண்ட தோளுக்குப் பல்லாண்டு பாடுகையாலும், க்ருஷ்ணவ்ருத்தாந்தத்திலே ப்ரவணராய், "கண்ணன்கேசவநம்பிபிறந்தனில்" என்று க்ருஷ்ணன் அவதரித்தது முதலாக, "வென்றிசேர்பிள்ளைநல்விளையாட்டையும்" என்கிற அதிமாநுஷசேஷ்டிதமான க்ருஷ்ணவ்ருத்தாந்தத்தை யிவருமவனைப்போலே கோபஜந்மத்தை யாஸ்த்தாநம்பண்ணி யநுகரித்து, அவனுடைய ஸௌசீல்ய ஸௌலப்யாதிகுணங்களிலே ஆழங்கால்பட்டுக்குமிழ்நீருண்ணுமல் நன்றாகவநுபவித்து, அநுபவஜநித ப்ரீத்யதிசயத்தாலே, பெரியாழ்வார் திருமொழியென்கிற திவ்ய ப்ரபந்தத்தையு மருளிச்செய்து, (௧௩௪) "ஷூதெஊநவிஷ—ஷூஷெூ" (స్థితే మనసి సుస్వస్థే) என்கிறபடியே "சித்தம்நன்கொருங்கித்திருமால்மேல்சென்ற சிந்தையராய்க்கொண்டு, சஙய போலப்பாடவல்ல ஸஜ்ஜநங்களுக்குபகரித்தருளி லோகத்தை வாழ்வித்தருளினார்.

ஸ்ரீபெரியாழ்வார்திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

———◆———

( ௭ )

## ஸ்ரீ ஆண்டாள்ப்ரபாவம்.

(௧௫) " 𑌨𑍀𑌳𑌾𑌤𑍁𑌙𑍍𑌗𑌸𑍍𑌤𑌨𑌗𑌿𑌰𑌿𑌤𑌟𑍀𑌸𑍁𑌪𑍍𑌤𑌮𑍁𑌦𑍍𑌬𑍋𑌧𑍍𑌯 𑌕𑍃𑌷𑍍𑌣𑌂 - 𑌪𑌾𑌰𑌾𑌰𑍍𑌥𑍍𑌯𑌂 𑌸𑍍𑌵𑌂 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌶𑌤𑌶𑌿𑌰𑌃𑌸𑌿𑌦𑍍𑌧𑌮𑌧𑍍𑌯𑌾𑌪𑌯𑌨𑍍𑌤𑍀 - 𑌸𑍍𑌵𑍋𑌚𑍍𑌛𑌿𑌷𑍍𑌟𑌾𑌯𑌾𑌂 𑌸𑍍𑌰𑌜𑌿 𑌨𑌿𑌗𑌳𑌿𑌤𑌂 𑌯𑌾 𑌬𑌲𑌾𑌤𑍍𑌕𑍃𑌤𑍍𑌯 𑌭𑍁𑌙𑍍𑌕𑍍𑌤𑍇 - 𑌗𑍋𑌦𑌾 𑌤𑌸𑍍𑌯𑍈 𑌨𑌮 𑌇𑌦𑌮𑌿𑌦𑌂 𑌭𑍂𑌯 𑌏𑌵𑌾𑌸𑍍𑌤𑍁 𑌭𑍂𑌯𑌃 " ( నీళాతుఙ్గస్తనగిరితటీసుప్తముద్బోధ్య కృష్ణమ్ - పారార్థ్యం స్వం శ్రుతిశతశిరస్సిద్ధమధ్యాపయన్తీ - స్వోచ్ఛిష్టాయాం స్రజనిగళితమ్ యా బలాత్కృత్య భుఙ్క్తే - గోదా తస్యై నమ ఇదమిదమ్ భూయ ఏవాస్తు భూయః ) (௧௬) " 𑌦𑍇𑌵𑌸𑍍𑌯 𑌮𑌹𑌿𑌷𑍀𑌂 𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌮𑌾𑌦𑍌 𑌗𑍋𑌦𑌾𑌮𑍁𑌪𑌾𑌸𑍍𑌮𑌹𑍇 - 𑌯𑌨𑍍𑌮𑍌𑌳𑌿𑌮𑌾𑌲𑌿𑌕𑌾𑌂 𑌪𑍍𑌰𑍀𑌤𑍍𑌯𑌾 𑌸𑍍𑌵𑍀𑌕𑌰𑍋𑌤𑌿 𑌸𑍍𑌵𑌯𑌂 𑌪𑍍𑌰𑌭𑍁𑌃 " ( దేవస్య మహిషీం దివ్యామాదౌ గోదాముపాస్మహే - యన్మౌళిమాలికాం ప్రీత్యా స్వీకరోతి స్వయం ప్రభుః ) (௧௭) " 𑌸𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌚𑌿𑌤𑍍𑌤𑌸𑍍𑌤𑍁𑌲𑌸𑍀𑌵𑌨𑌾𑌵𑌲𑌿𑌂 𑌖𑌨𑌿𑌤𑍍𑌰𑌵𑌜𑍍𑌰𑍇𑌣 𑌨𑌿𑌖𑌾𑌤𑌯𑌨𑍍 𑌕𑌿𑌲 - 𑌶𑍁𑌭𑍇 𑌮𑌹𑌾𑌤𑍇𑌜𑌸𑌿 𑌮𑌾𑌸𑌿 𑌫𑌾𑌲𑍍𑌗𑍁𑌨𑍀 𑌪𑍍𑌰𑌲𑍀𑌨𑌤𑌾𑌰𑍇 𑌤𑍁𑌲𑌸𑍀𑌵𑌨𑌾𑌨𑍍𑌤𑌰𑍇 " ( సవిష్ణుచిత్తస్తులసీవనావలిం ఖనిత్రవజ్రేణ నిఖాతయన్ కిల - శుభే మహాతేజసి మాసి ఫాల్గునీ ప్రలీనతారే తులసీవనాన్తరే ) (௧௮) " 𑌭𑍁𑌵𑍋𑌤𑍍𑌪𑌨𑍍𑌨𑌵𑌤𑍀𑌂 𑌕𑌾𑌞𑍍𑌚𑌨𑌬𑌾𑌲𑌕𑌨𑍍𑌯𑌕𑌾𑌂 𑌭𑍂𑌮𑍍𑌯𑌂𑌶𑌕𑌾𑌂 𑌵𑍀𑌕𑍍𑌷𑍍𑌯 𑌵𑌿𑌸𑌿𑌸𑍍𑌮𑌿𑌯𑍇 𑌮𑍁𑌦𑌾 " ( భువోత్పన్నవతీం కాఞ్చనబాలకన్యకాం భూమ్యంశకాం వీక్ష్య విసిస్మియే ముదా ) என்று திவ்யஸூரி சரிதையிலே சொல்லிற்றிறே. (௧௯) " 𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌨𑌾𑌂 𑌶𑌰𑌦𑌾𑌂 𑌕𑌲𑌾𑌵𑌵𑌸𑌰𑍇 𑌮𑍇𑌷𑍇 𑌨𑌶𑌾𑌨𑍍𑌤𑍍𑌯𑍇𑌰𑌵𑍇 𑌯𑌾𑌤𑍇 𑌕𑌰𑍍𑌕𑌟𑌕𑌂 𑌵𑌿𑌯𑌾𑌪𑍁𑌷𑌿 𑌚 𑌤𑍇𑌪𑌸𑍍𑌯𑍈𑌹𑌨𑌿 𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑌿 - 𑌨𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑍇𑌽𑌰𑍍𑌯𑌮𑌦𑍈𑌵𑌤𑍇 𑌕𑍍𑌷𑌿𑌤𑌿𑌭𑍁𑌵𑍋 𑌵𑌾𑌰𑍇 𑌚𑌤𑍁𑌰𑍍𑌥𑍍𑌯𑌾𑌂 𑌤𑌿𑌥𑍌 𑌗𑍋𑌦𑌾 𑌪𑍍𑌰𑌾𑌦𑍁𑌰𑌭𑍂𑌦𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑌮𑌹𑌿𑌮𑌾 𑌶𑍍𑌰𑍀𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌚𑌿𑌤𑍍𑌤𑌾𑌤𑍍𑌮𑌜𑌾 " ( సిద్ధానాం శరదాం కలావవసరే మేషే నశాన్త్యేరవే యాతే కర్కటకం వియాపుషచి తేపస్యైహని శ్రీమతి - నక్షత్రేర్యమదైవతే క్షితిభువో వారే చతుర్థ్యాం తిథౌ గోదా ప్రాదురభూదచిన్త్యమహిమా శ్రీవిష్ణుచిత్తాత్మజా ) " அன்னவயற்புதுவையாண்டாளுடைய திருவவதாரக்ரமமிருக்கும்படி யெங்ஙனேயென்னில்.

(௨௦) " 𑌅𑌯𑌤𑍇 𑌕𑍃𑌷𑌤𑌃 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌂 𑌲𑌾𑌙𑍍𑌗𑌲𑌾𑌦𑍁𑌦𑍍𑌧𑍃𑌤𑌾 𑌮𑌯𑌾 - 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌂 𑌶𑍋𑌧𑌯𑌤𑌾 𑌲𑌬𑍍𑌧𑌾 𑌨𑌾𑌮𑍍𑌨𑌾 𑌸𑍀𑌤𑍇𑌤𑌿 𑌵𑌿𑌶𑍍𑌰𑍁𑌤𑌾 - 𑌭𑍂𑌤𑌲𑌾𑌦𑍁𑌤𑍍𑌥𑌿𑌤𑌾 𑌸𑌾 𑌤𑍁 𑌵𑍍𑌯𑌵𑌰𑍍𑌧𑌤 𑌮𑌮𑌾𑌤𑍍𑌮𑌜𑌾 " (అయతే కృషతః క్షేత్రం లాఙ్గలాదుద్ధృతా మయా - క్షేత్రం శోధయతా లబ్ధా నామ్నా సీతేతి విశ్రుతా - భూతలాదుత్థితా సా తు వ్యవర్ధత మమాత్మజా) என்று

சொல்லுகிறபடியே, ஸ்ரீஜநகராஜன் யாகசாலைக்கு ஸ்தலமுழுது பண்ணுகிற்க, அந்த...டச்சாலையிலே பிராட்டி ப்ராதுர்ப்பவித்தருள, (கசக) "ஸீதாமுகுவை ஜ் தி" (ஸீதாலாங்கலபத்ததிஃ) என்கிறதுதானேநிருபகமாக, ஸீதையென்று திருநாமஞ்சார்த்தி யுவப்போடே ஸ்ரீஜநகராஜன், புத்ரியாக வளர்த்துக்கொண்டாற்போலே, மெய்யடியாரான விஷ்ணுசித்தர், தம் திருநந்தவநத்தில் திருத்துழாய்க்குக் கொத்தாநிற்க, அத்திருத்துழாய் மண்ணின்கீழே, திருவாடிப்பூரத்திலே, "பார்வண்ணமடமங்கை" என்கிற ஸ்ரீபூமிப்பிராட்டி ப்ராதுர்ப்பவித்தருள, "வில்லிபுதுவைநகர்நம்பி விஷ்ணுசித்தர்கண்டு, விஸ்மிதராய், "மின்னனைய நுண்ணிடையாளான இக்கந்நிகையைப் புத்ரியாக வெடுத்துக்கொண்டு, ப்ரீதியோடே. "சுரும்பார்குழற்கோதை" என்றுதிருநாமஞ்சார்த்தி, திருமகள்போல் வளர்த்துக்கொண்டு போருகிறகாலத்திலே, விஷ்ணுசித்தர், தங்கள்தேவரான வடபெருங்கோயி லுடையானுக்குச் சாத்தக் கட்டிவைத்ததிருமாலையை, ஆழ்வாரில்லாத அவஸரத்திலே, இப்பெண்பிள்ளை தான்சூடிக்கொண்டு, அவனுக்கு நேரொவ்வாதிருக்கிறேனோ ? ஒத்திருக்கிறேனோ ? என்று, காறைபூண்டு, கூறையுடுத்து, கைவளை குலுக்கி, கோவைச்செவ்வாய் திருத்தி, அவ்வொப்பனையழகைக்கண்ணாடியிலே கண்டு, இப்படிப் பலநாளும் பூர்வம்போலே பந்துபந்தாகச்சுருட்டிவைக்க, இத்தை ஆழ்வார் ஒருநாள்கண்டருளி, பெண்ணே ! இப்படியே யெப்போதுஞ் செய்வதென்று மிகவும் கோபித்து, அந்தத்திருமாலையை அற்றைக்கு வடபெருங்கோயிலுடையானுக்குச் சாத்தாமலிருக்க, அன்று ராத்ரியிலே, ஆழ்வாருடைய ஸ்வப்நத்திலே எம்பெருமானெழுந்தருளி, இற்றைக்கு நமக்கு மாலைகொண்டுவாராதிருப்பானென்னென்ன, தம்புத்ரி கோதை குழலிலேமுடித்த அபசாரத்தை விண்ணப்பஞ்செய்ய, எம்பெருமானும் ; அப்போதுகாணும் வாஸனையாய் ப்ரியமாயிருப்பதென்றருளிச்செய்ய, ஆழ்வாரும், அன்றுமுதல் இவ்வாண்டாள் "பின்னைகொல்நிலமாமகள் கொல்திருமகள்கொல் பிறந்திட்டாள்" என்று விசேஷ ப்ரதிபத்திபண்ணிப் போருவர். தொடுத்ததுழாய்மலர்சூடிக்களைந்தன சூடிமித்தொண்ட" ரான ஆழ்வார்திருமகளார் தாம் "சூடிக்கொடுத்த சுடர்க்கொடி" என்று அதுவே நிருபகமாகச் சூடிக்கொடுத்த நாய்ச்சியாராயிருப்பர்.

திருத்துழாய் பரிமளத்தோடே கூட முளைக்குமாபோலே, இந்நாய்ச்சியாரும் ஆஜந்மபால்ய யௌவநாவஸ்தைகள்தோறும் வளருகிற பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகளை யுடையளாய்க்கொண்டு, பகவத்விஷய ப்ராவண்யமுண்டான ஆழ்வார்களைக்காட்டில் அதிசயித்திருக்கும். புருஷனைப்புருஷன்

காமிக்குமதும், ஸ்த்ரீ ஸ்த்ரீயைக்காமிக்குமதும் மேட்டுமடையாயிருக்கும்; புருஷன் ஸ்த்ரீயைக்காமிக்குமதும், ஸ்த்ரீ புருஷனைக்காமிக்குமதும் பள்ளமடையாயிருக்கும்; ஆகையாலே அதிசயித்திருக்குமிறே. அந்த ப்ராவண்யமடியாக, "அவனைவிட்டகன்றுயிராற்றகில்லா" என்னும்நிலைகளையுடையளாய் (௧௬௨) "த்ருஷ்டே காமயதி த்ருஷ்டோ த்ருஷ்டோ ஹந்தி த்வாபர" (దృష్టే కామయతి ద్రష్టుం దృష్ట్వా హంతి చాపర) என்று க்ருஷ்ண விரஹத்தை ஸஹிக்கமாட்டாமல் கோபகந்நிகைகள் க்ருஷ்ணனை யநுகரித்து தரித்தாற்போலே, இவ்வாண்டாளும் மார்கழிநீராடி, நோன்புநோற்று, காமபஜநாதிகளைப் பண்ணியும் தரிப்போமென்று பார்த்து, சங்கத் தமிழ்மாலையாக நாய்ச்சியார்திருமொழி திருப்பாவை என்கிற திவ்யப்ரபந்தங்களையும் அருளிச்செய்து, ஜகத்துக்குபகரித்தருளி வாழுங்காலத்திலே, (௧௬௩) "பதிஸம்யோகஸுலபம் வயோத்ருஷ்ட்வா ச மே பிதா - சிந்தார்ணவகத: பாரம் நாஸஸாதாப்லவோ யதா" (పతిసంయోగసులభం వయోదృష్ట్వా చ మే పితా - చింతార్ణవగతః పారం నాససాదాప్లవో యథా) என்கிறபடியே, ஸ்ரீஜநகராஜன், பிராட்டிபருவங்கண்டு சிந்தார்ணவகதனானாற்போலே இவ்வாழ்வாரும் இந்நாய்ச்சியாருடைய விவாஹயோக்யபருவங் கண்டு சிந்தா வ்யாகுலாந்த:கரணராக, இவ்வாண்டாளும் மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேனென்ன, ஆழ்வாரும் பின்னை யெங்ஙனேயென்ன, இவரும், "மற்றொருவர்க் கென்னைப்பேசவொட்டேன் மாலிருஞ்சோலையெம்மாயவற்கல்லால்" என்கிறபடியே, அவன்முகத்தன்றி விழியேனென்ன; ஆழ்வாரும் நூற்றெட்டுத்திருப்பதியிலெம்பெருமான்களில் நீராருக்குவாழ்க்கைப்படுகிறீரென்ன; இவருமாழ்வாரைக்குறித்து, அவ்வவருடைய குணபதாநங்களைக் கீர்த்தித்தருளவேணுமென்ன, ஆழ்வாரும் வடபெருங்கோயிலுடையான் வைபவமடியாக பாண்டிமண்டலத்திலெம்பெருமான்கள் வைபவமும், மலைநாட்டுத்திருப்பதியிலெம்பெருமான்கள்வைபவமும், வடதிசைத்திருப்பதியிலெம்பெருமான்கள்வைபவமும், வடதிருவேங்கடவன்வைபவம்தொடங்கி தொண்டமண்டலத்திலெம்பெருமான்கள் வைபவமும், சோழமண்டலத்திலெம்பெருமான்கள் வைபவமும், அழகர்வைபவமும் எல்லாமருளிச்செய்ய, ஆண்டாளும் அதுகேட்டு, ஆநந்தாஸ்ருக்கள் துளிக்கப் புளகீக்ருதகாத்ரையாய், இன்னரங்கத்தின்னமுதருடைய குழலழகு வாயழகு கண்ணழகுகளைக்கேட்டு, அதிவ்யாகுலையாய், மாலேறிமோஹித்து, "வந்தானோதிருவரங்கன்வாரானோவென்றென்றேவளையுஞ்சோரும்" என்கிறபடியே மனமுருகி, மலர்க்கண்கள் துளிக்க, அழகிய

மணவாளனையே காமித்து, மந்திரக்கோடியுடுத்து, மணமாலைசூட்டி, "மைத்துனன்நம்பிமதுசூதன்வந்து கைத்தலம்பற்றி மத்தளங்கொட்ட வரிசங்கம் நின்றூத முத்துடைத்தாமநிரைதாழ்ந்தபந்தற்கீழ்" பெருப்பெருத்தகல்யாணங்கள்செய்யக் கனாக்கண்டொளியரங்கத்துள்ளோங்குமொளியுளாரான வணியரங்கத்தம்மானுக்கே தீர்த்தகாதலையுடையராக, அவ்வளவில் ஆழ்வாரும் ; கோதைக்குத்தக்கவரன் கோயில்பிள்ளை, என்றுகருதி, இதுகூடும்படியெங்ஙனேயென்று சிந்தைகலங்கி வ்யாகுலாந்தஃகரணராய் கண்வளர்ந்தருள ; திருவரங்கச்செல்வனார் ஆழ்வார் ஸ்வப்நத்திலே எழுந்தருளி, உம்புத்ரிகோதையைக்கொண்டு, அணியரங்கன்திருமுற்றத் தேறவாரீர், நாமேதகுதியாகப்பாணிக்ரஹணம்பண்ணுகிறோ மென்றருளிச்செய்ய ; ஆழ்வாரு முவந்து நிர்ப்பரராயிருக்கிறவளவிலே, திருவரங்கச்செல்வனார், நம் சத்ர சாமர தாலவ்ருந்தாதி ஸகலபரிஜந பரிச்சதங்களோடே ஆண்டாளை அழைத்துக்கொண்டுவாருங்கோள் ; ஸ்ரீவில்லிபுத்தூரேறப் போங்கோளென்று பவளச்செவ்வாய்திறந்து அருளிச்செய்துவிட, அனைத்துப்பரிகரத்தாரும், ஸ்ரீவில்லிபுத்தூரேறச்சென்று, ஆழ்வாரைக் கண்டு, நம்பெருமாளருளப்பாடிட்டருளினபடியை விண்ணப்பஞ்செய்ய, ஆழ்வாரும் ப்ரீதராய் அத்யாஶ்சர்யப்பட்டு, வடபெருங்கோயிலுடையானுக்கு விண்ணப்பஞ்செய்து, அவருடைய அநுமதியுடனே ஆண்டாளை மணிப்பல்லக்கிலே எழுந்தருளுவித்துக்கொண்டு, அழகியமணவாளரல்லா தறியாத பாதிவ்ரத்யமுடைய ஆண்டாளை பிறர்கண்படாமல் தட்டுப்பாயிட்டு மூடிக்கொண்டு, அகிலவாத்யத்துடனே அனைவரும் ஸேவிக்க வெழுந்தருளப் பண்ணிக்கொண்டு, திருவரங்கன் திருப்பதியே சென்றவாறே, ஆண்டாள்வந்தாள், சூடிக்கொடுத்தாள்வந்தாள், சுரும்பார்குழற்கோதைவந்தாள், திருப்பாவைபாடிய செல்விவந்தாள், தென்னரங்கம்தொழுந்தேசியள் வந்தாளென்று பலசின்னங்கள் பரிமாற எழுந்தருளுவித்துக்கொண்டுவந்து, அழகியமணவாளன் திருமண்டபத்தேசென்று தட்டுப்பாயைவாங்க, சூடிக்கொடுத்தநாய்ச்சியாரும் ; அகிலருங் காணும்படி, உதறியுடுத்த பட்டுச்சேலையும், பருத்த செங்கழுநீர்மாலையும், திருநுதற் கஸ்தூரிநாமமும், காதளவோடிக் கயல்போல்மிளிருங் கடைக்கண் விழியும், கொடியேரிடையும், கோங்கொத்தகொங்கைகுலுங்க, சிலம்பார்க்க,சீரார்வளையொலிப்ப, அன்னமென்னடைகொண்டு, அழகியமணவாளன் திருமுன்னே சென்று, உள்ளேபுகுந்து, கண்களாரக்கண்டு, கேசவநம்பியைக் கால்பிடிப்பாளென்னும் பேர்பெற்று, நாகபர்யங்கத்தை மிதித்தேறி, "தீமுகத்துநாகணைமேற்சேருந்திருவரங்கரைச்சேர்ந்து, திருவரங்கன்திருவடிவோடும்படி அங்



ஸ்ரீதொண்டரடிப்பொடியாழ்வார்.

கர்ப்பவித்தருள, இத்தைக்கண்டு ஆழ்வார் ஶிஷ்யரான வல்லபதேவனுள்ளிட்டார் அகிலரும் விஸ்மயப்பட, திருவரங்கச்செல்வனார் ஆழ்வாருக்கு அருளப்பாடிட்டருளி, க்ஷீரஸமுத்ரராஜனைப்போலே நீரும் நமக்கு ஶ்வஶுரராய்விட்டீரென்று மிகவுமுவந்தருளி, இவருக்குத் தீர்த்தம் திருமாலை திருப்பரிவட்டத்துடனே ஸ்ரீசடகோபனும் ப்ரஸாதித்து, வில்லிபுத்தூருறைவான் பொன்னடிபூண்டு வாழுமென்று விடைகொடுத்தருள, ஆழ்வாரும் அதிப்ரீதிவிஷாதத்துடன் ஸ்ரீவில்லிபுத்தூர் சேரச்சென்று, பூர்வம்போலே வடபெருங்கோயிலுடையான் கைங்கர்ய நிரதராய் வாழ்ந்துகொண் டெழுந்தருளி யிருந்தார்.

ஸ்ரீஆண்டாள் திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

---

## ௮

## ஸ்ரீதொண்டரடிப்பொடியாழ்வார் ப்ரபாவம்.

---

(௧௪௪) "ஶுசிமாஸி பாண்ட்யபுவி பூர்வபல்குநீகநபே நவீநதுளஸீவநாந்தராத் - உதிதாமுதாரகுணரங்கநாயகப்ரியவல்லபாம் வஸுமதீமுபாஸ்மஹே" ( శుచిమాసిపాణ్డ్యభువిపూర్వఫల్గునిఘనభేనవీనతుళసీవనాన్తరాత్ - ఉదితాముదారగుణరఙ్గనాయకప్రియవల్లభాంవసుమతీముపాస్మహే) (௧௪௫) "தமேவமத்வா பரவாஸுதேவம் ரங்கேஶயம் ராஜவதர்ஹணீயம் - ப்ராபோதகீம் யோக்ருத ஸூக்திமாலாம் பக்தாங்க்ரிரேணும் பகவந்தமீடே" ( తమేవమత్వాపరవాసుదేవం రఙ్గేశయంరాజవదర్హణీయం - ప్రాబోధకీంయోకృతసూక్తిమాలాం భక్తాఙ్ఘ్రిరేణుంభగవన్తమీడే ) (௧௪௬) "சோளக்ஷிதௌ தநுஷி மாஸி மஹேந்த்ரராத்ரௌ தாரேயஃ ப்ராதுராஸ முரஜித்வநமாலிகாம்ஶஃ- ரங்கேஶகேளிஸகமூர்த்வஶிகம் த்விஜேந்த்ரம் பக்தாங்க்ரிரேணுமநகாத்மகுணம் ப்ரபத்யே" ( చోళక్షితౌధనుషిమాసిమహేన్ద్రరాత్రౌ తారేయఃప్రాదురాసమురజిద్వనమాలికాంశః- రఙ్గేశకేళిసఖమూర్ధ్వశిఖంద్విజేన్ద్రంభక్తాఙ్ఘ్రిరేణుమనఘాత్మగుణంప్రపద్యే) (௧௪௭) "தத்ராத ஸுஜ்ஞாநவதாம் த்விஜேந்த்ராணாம் மஹேந்த்ர மஹாவிஷ்ணுபீடே- ஸ்ரீ

விப்ர நாராயண நாமதேய: ஶ்ரீரங்கபக்தோ வநமாலிகாம்ஶ:" (తత్రోదభూద్భాగవతాన్వయే జన్మాస్తు మాహేన్ద్రపుర్యాం ఖ్యామాసిచ మార్గశీర్షే - శ్రీవిప్రనారాయణనామధేయః శ్రీరఙ్గభక్తోవనమాలికాంశః) என்று திவ்யஸூரிசரிதையிலே சொல்லிற்றிறே.

(கச௮) "தேஹஶ்ரீஶரதுத்தரே ப்ரபவநாம்ந்யூர்ஜகேளாபாஸ்வரே சாபக்ராஹிணி பூமிஸூநுதிவஸே ஜ்யேஷ்டாபிதே ஶ்ரீமதி - புத்தே க்ருஷ்ணசதுர்தஶீதிதியுதே பக்தாங்க்ரிரேணுஸ்ஸ்வதீ- ரங்கேஶாங்க்ரிஸரோருஹைகஹ்ருதய: ப்ராபாவதாரம் புவி" (దేహశ్రీశరదుత్తరే ప్రభవనామ్న్యూర్జకేళాభాస్వరే చాపగ్రాహిణి భూమిసూనుదివసే జ్యేష్ఠాభిధే శ్రీమతి - బుద్ధే కృష్ణచతుర్దశీతిథియుతే భక్తాఙ్ఘ్రిరేణుస్స్వధీ- రఙ్గేశాఙ్ఘ్రిసరోరుహైకహృదయః ప్రాపావతారం భువి) ஸ்ரீதொண்டரடிப்பொடியாழ்வார், திருமண்டங்குடியென்கிற க்ராமத்திலே (கசக) "மாஸாநாம் மார்கஶீர்ஷோஹம்" (మాసానాం మార్గశీర్షోహం) என்று எம்பெருமான்தானே சொல்லப்பட்ட மார்கழிமாசத்தில், கேட்டைநக்ஷத்ரத்தில் ஸ்ரீவைஜயந்திவநமாலிகாம்ஶராய், ப்ராஹ்மணவர்ணத்திலேயவதரித்தருளினார். எம்பெருமானிவரை ஜாயமாநகடாக்ஷத்தாலே அமலங்களாகவிழித்துக் கடாக்ஷித்தருள, அத்தாலே ஸம்யக்ஜ்ஞாந பக்திவைராக்யங்களையுடையரான இவர்க்கு விப்ரநாராயணரென்று திருநாமஞ்சாத்தி, காலந்தப்பாமல் சௌளோபநயநாதிகளையும்பண்ணுவித்து, வேதசாஸ்த்ரம் முதலான அகில வித்யைகளையும் அதிகரிப்பிக்க. இவருமகிலவித்யாபாரங்கதராய், அதிவிரக்தராய் க்ருதோத்வாஹரான இவர் (கரு0) "மருத்வ்ருதாயா மத்யஸ்தம் சந்த்ரபுஷ்கரிணீதடே - ஶ்ரீரங்கமதுலம் க்ஷேத்ரம் ஶ்ரியா ஜுஷ்டம் ஶுபாஸ்பதம்" (మరుద్వృధాయామధ్యస్థం చన్ద్రపుష్కరిణీతటే - శ్రీరఙ్గమతులం క్షేత్రం శ్రియాజుష్టం శుభాస్పదమ్) என்கிறபடியே ஸர்வாதிஶாயிதமாக ஶ்லாகிக்கப்படுகிற ஸ்ரீரங்க க்ஷேத்ரத்திலே புகுந்து, (கருக) "விமாநமத்யே த்வ சது: ப்ரதக்ஷிணம் சதுர்தஶம் தஸ்ய க்ருதப்ரணாம: - ததந்தராவிஶ்ய விதிர்ததர்ஶ தமிந்த்ரநீலாசலஸந்நிகாஶம் - ப்ரஸந்நவக்த்ரம் நளிநாயதேக்ஷணம் க்ருபாமயம் காந்திநிகேதரூபம்" (విమానమధ్యే త్వ చతుః ప్రదక్షిణం చతుర్దశం తస్యకృతప్రణామః- తదన్తరావిశ్య విధిర్దదర్శ తమిన్ద్రనీలాచలసన్నికాశం - ప్రసన్నవక్త్రం నలినాయతేక్షణమ్ కృపామయం కాన్తినికేతరూపమ్) என்கிறவிக்ரஹத்தை சதுராநநன் ஸேவித்தாற்போலே, சதுரரில் அக்ரகண்யரானஇவரும் "அரவரசப்பெருஞ்சோதியநந்தனென்னும் அணிவிளங்குமுயர்வெள்ளை யணையின்மேலே பள்ளிகொள்ளும் பரவாஸுதேவரான அழகியமணவாளனைஸேவிக்க, இவர்விஷயவாசியறிந்து

வந்து பற்றுகிறதே பற்றாசாகப்பெரியபெருமாளும்தம்முடையக்ருபையாலே குழலழகர் வாயழகர் கண்ணழகரென்று சொல்லப்பட்டிருக்கிற (கஉ) "ஸௌந்தர்யாதிதிவ்யாத்ம குணாஸ்ரயம்" ( ... ) என்ற தம்முடைய வடிவழகைக் காட்டி இவரைத்தம்பக்கலிலே நிரதிசய பக்தியுக்த ராம்படிகடாக்ஷித்தருள; ஸ்ரீவிப்ரநாராயணரும் அபாரகாருணிகரான அரங்க ருக்காட்செய்யவேணுமென்று துளபத்தொண்டிலேநிஷ்டராய் புண்டரீக மென்று புண்யக்ருத் என்று புண்யக்ருத்தாகச் சொல்லப்பட்ட ஸ்ரீபுண்டரீக ரைப்போலேயும், (கங) "புஷ்பாஹம்" ( ... ) என்று நன்மாலை கள்சாத்தி ஸந்துஷ்டரான ஸ்ரீமாலாகாரரைப்போலேயும், (கச) "ஸஹஸ்ர நாமவாரஸ்ரீ நாராயணபாராயணஃ" ( ... ) என்கிற கைங்கர்யஸ்ரீயை யுடையராகையாலே ஸ்ரீமானென்று சொல்லப்பட்ட ஸ்ரீகஜேந்த்ராழ்வானைப்போலேயும் "எண்பகர்பூவுங்கொணர்ந் தேன்" என்று அஷ்டவிதபுஷ்பமான "அலங்கலந்தொடையல்கொண் டடி யிணைபணி" கிற பெரியாழ்வாரைப்போலேயும், இவருந்தம்மையே மாற்றந் தவிர்த்துத் திருவரங்கத்தே கிடந்த திருவுடையாள் மணவாளர்க்கு நித்யம் திருமாலைகட்டிச்சாத்தி திருநந்தவநஞ்செய்துகொண்டுபோருகிறகாலத்திலே, திருக்கரம்பனூரிலே திவ்யாங்கநாம்ஸாருபையான தேவதேவி யென்றொரு வேஸ்யை அதிசுந்தரமாய் வர்த்திக்கிறவள் ஒருக்கால் நிசுளாபுரேந்த்ரனை சோளராஜாவைஸேவித்துமீண்டுவருகிறபோது, ஸ்வஸகிகளோடேகூட மார் க்ககேதவ்யபநோதநார்த்தமாக ஸ்ரீவிப்ரநாராயணர்செய்கிறதிருநந்தவநத்திரு ச்சோலைநிழலிலே ஒருமரத்தடியிலேயிருந்து அத்திருச்சோலையில் ஸ்ரீயைச் சுற்றிச் சுழன்றுபார்க்க, பநஸாம்ரபாடல நாளிகேர நாரங்கஜம்பீரவிகுச கத லீகுரவிந்தவகுளாசோகபுந்நாக பூகீப்ரப்ருதி வ்ருக்ஷஷண்ட விடபாரூட சுக பிகசாரிகாதி சகுநைர்மதுரகூஜிதரஞ்ஜிதமாய், நிரந்தரவஸந்தமாய், மதுஸ்ர வகுஸுமாந்தராளத்திலே மஞ்ஜுகூஜந்மதுவ்ருதயுதமாய்,கேதகீமாலதீஜாதி மல்லிகாரவிந்த கல்ஹாரேந்திவர குரவகஜம்பூக பந்துரகந்தவாஹோபஸேவி தமாயிருக்கக்கண்டு, ஸ்வாக்ரஜையைக்குறித்து; இப்பொழிலெழில் ஸாமஹா ரமாய் நந்தநவநத்தையும் சைத்ரரதத்தையும் பரிஹஸியாநின்றதீ யென்ன ; அவளும் ஸமேராநநாப்ஜையான தேவதேவியைக்குறித்து; ஸ்வப்ரஸூந ப்ர கர்ஷத்தாலே நம்பெருமாள் திருமுடியை பூஷித்துவருமதாய் அவர் ம்ருகயா விஹார ஸாந்நிப்ரஸமநம்பண்ணுமது அஸ்மதாதிகளுக்கும் அத்வகேதஹர ணம் பண்ணுதொழியுமோ வென்று ப்ரியாலாபம்பண்ணிக்கொண்டு ஆராம லக்ஷ்மீவிநிஹிதேக்ஷணரானவர்கள் அங்கேவிப்ரநாராயணரைக்கண்டார்கள்.

அவரும் வளர்ந்த கேசஸ்மஸ்ருக்களையுடையராய், ப்ரவ்ருத்தரோம ப்ரகர்ஷ ஸ்ரீராஜிதாங்கராய், பரிதௌததந்தவஸ்த்ரோர்த்வபுண்ட்ரங்களையுடையராய், தரிக்கப்பட்ட துளஸீபத்மாக்ஷமாலையும் த்வாதசோர்த்வபுண்ட்ரங்களையு முடையராய், திவ்யோத்யாநஸ்த்த தருகுல்ம லதாதிகளுக்கு ஆலவாலகரண ஜலஸேசநாதி கைங்கர்யநிரதராயிராநிற்க, அத்தையிவர்களிருவரும்விஸ்மயத்துட னாலோகித்துக்கொண்டிருக்க; அவரும் தம் கைங்கர்யாஸக்தசித்தராய் இவர்களை முகமெடுத்துப்பாராமல் திரஸ்கரித்திருக்க; அவ்வளவிலே தேவதேவியும் ஸ்வாக்ரஜையைக் குறித்து, இவன் க்லீபனோ? உந்மத்தனோ? நாம் வந்து முன்னே நிற்க நிரீக்ஷியாதிருக்கிறா னென்ன, ஸ்வாக்ரஜையும் அவளைக் குறித்து; இவர் க்லீபருமன்று உந்மத்தருமன்று ரங்கேச கைங்கர்யாஸக்த சித்தராய் மஹாவிரக்தரான இவர் த்வத்ரூப ஸம்பத்தியைக் காறி யுமிழ்ந் திருப்பர். இவரை உன் விப்ரம விலாஸ ஹாஸேக்ஷணாதிகளாலே மோஹிப்பித்தாயாகில் நீயே வாரஸ்த்ரீமுக்யை; உனக்கு நான் ஆறுமாசம் தாஸியா யிருக்கிறேனென்ன; தேவதேவியும் ஸ்வாக்ரஜையைக்குறித்து, இவரை நான் வசீகரியாவிட்டால் உனக்கு நான் ஆறுமாசம் வெள்ளாட்டியாவேனென்று ப்ரதிஜ்ஞை பண்ணி, ஸ்வஸகிகளோடே கூட ஸ்வாக்ரஜையையுமனுப்பி, ஸ்வாலங்காரத்தையும் கழற்றிக்கொடுத்து, ஸாத்விகவேஷயுக்தையாய் ஆழ்வார்திருவடிகளிலே தண்டம்ஸமர்ப்பித்துநிற்க; ஆழ்வாரு மிதுவென்ன பெண்ணே யென்றுகேட்க, இவளும்; வாரஸ்த்ரீ வசத்திலே பாபவசாத் பிறந்த என்னை என் தாயானவள் ஸர்வஜ்ஞரையும் பஜித்து அர்த்தார்ஜ்ஜநம் பண்ணென்ன; அடியேன் பூர்வம் பாபங்களைப் பண்ணி இஜ்ஜந்மத்திலேபிறந்ததுமன்றியே இன்னம் பாபார்ஜ்ஜநம்பண்ணிப் படுகுழியிலே விழவேணுமோவென்று அர்த்தலுப்தையான அவளை பரித்யஜித்து ரங்கேசகைங்கர்யாஸக்தசித்தரான தேவர்திருவடிகளையாஸ்ரயித் துஜ்ஜீவிக்கிறேனென்று வந்தேன், ஆகிஞ்சந்யாநந்ய கதித்வமுடைய அடியேனை ஆராமரக்ஷணக்ருத்யே நியோகித்தால் தேவர் பெருமாளுக்குத்திருமாலைஸமர்ப்பித்து மாதுகரம்பண்ணி யெழுந்தருளுந்தனையும் காத்திருக்கிறேனென்ன; அவருமிரங்கி யருளி, தம்முடைய திருவாராதநமான எம்பெருமானுக்கு பைக்ஷத்தை அமுதுசெய்யப்பண்ணி, தாமுமமுதுசெய்து, நிஜபுக்தசேஷமுமிரங்கியருளினார். அதின் மற்றைநாள் அவளும் திருநந்தவநத்தில் திருத்துழாய்முதலான பூச்செடிகளுக்குக் குழிகட்டிச் சோதித்துக் கொத்தித் திருமஞ்சநம்பரிமாறிக்கொண் டிப்படியே ஆறுமாச மநுவர்த்தித்தாள். பின்னையுமொருநாள் குழியமண் சோதித்துத் திருமஞ்சநம் பரிமாறிக்கொண்டு

வாராநிற்கச்செய்தே வர்ஷாகாலமானவாறே பெருவர்ஷம் வர்ஷிக்க; ஸ்ரீவிப்ரநாராயணரும் பர்ணசாலையிலேசேர்ந்திருக்க; இவளுமிப்பாலே யிருந்து நனையாநிற்கக்கண்டு உள்ளேவாவென்றழைக்க; அவளுமுள்ளேபுகுந்தவளவிலே ஈரப்புடவையுடனே யிருக்கிறதைக்கண்டு தம்முடைய வுத்தரீயத்தையும் ப்ரஸாதிக்க, அவளுந் தரித்துக்கொண்டு ஆழ்வாரைப்பார்த்து திருவடிகளைப் பிடிக்கிறேனென்ன; ஆழ்வாருமநுகூலிக்க; அவளுந் திருவடிகளைப் பிடியாநிற்கச்செய்தே; ஸ்வாமீ! அடியேனுக்கு ஹிதமாயிருப்ப தொரு வார்த்தை யருளிச்செய்யவேணுமென்று மந்தஸ்மிதஞ்செய்து அபாங்கவீக்ஷணம்பண்ண; அவரும் விகரித்து அவள் கையைப்பிடிக்க; அவளும் தம்மையயானேனென்று அவரைக்காடாலிங்கநம்பண்ணிக்கொண்டு ரமித்து, ஒருக்காலும் காந்தாவிஷயா நபிஜ்ஞரான இவரை மநோபவாயோதந வைபவத்தாலே ஸ்வவிஷயே மக்நமநாவாக்கினாள். அதின்மற்றைநாள் ஸ்வக்ருஹத்தில்நின்றும் ஸ்வாபரணத்தையுமழைப்பித்துக்கொண்டுஸர்வாபரணபூஷிதையாய், இவரைத்தன்னுபிருப்யத்தாலே அவயவைகதேசத்திலே ஆழங்கால்படுத்தி மயக்கி, திருநந்தநவநத்திலே மல்லிகாலதாக்ருஹத்தையும் மாதவீகுஸுமோத்கர குஞ்ஜத்தையும் விசித்ர நிர்ப்பர மந்மதரஸோத்ஸவத்தையும் அநுபவிப்பித்து த்ருடாநுராகத்தாலே யொருவரையொருவர் ஒருக்ஷணமும் பிரியக்ஷமரன்றியேயிருந்தார்கள். ஸ்வஸம்பந்தத்தை ஸஹிப்பித்து, இவரை ஸ்வவசவர்த்தியாம்படிபண்ணி, தன்ஸகிகளும் தமக்கையுங்கண்டு ஸ்லாகிக்க, நிர்ணப்ரதிஜ்ஞையாய் ஸ்வக்ருஹமேவந்து, இவருடையவர்ணாஸ்ரமதர்மங்களையுங் குலைத்து, காமுகவேஷ யுக்தராம்படிபண்ணி, ப்ரக்ருதிபரவசராக்கி, அதிஸ்நிக்தைபோலே சிலகாலம் ரமியாநிற்க, இவரும் "சிலம்படியுருவில்கருநெடுங்கண்ணார் திறத்தன யறத்தையேமறந்து" என்கிறபடியே மிகவும் விஷயப்ரவணராய், ஸ்வதர்மாநுஷ்டாந ஸந்தியாவித்ரியையும்மறந்து, ஸ்த்ரீபோகமே காலக்ஷேபமாக வர்த்திக்கிற இவரை ஸர்வஸ்வாபஹரணம்பண்ணி சூந்யதரானவாறே தானுமநுராகசூந்யையாய் தள்ளிவிட; இவரும் அவள் க்ருஹத்வாரிகிந்நராய் மூசிக்கொண்டுகிடக்க, அவ்வளவிலே பெருமாளும் பிராட்டியும் அவ்வீதியிலே ஸவிலாஸஸஞ்சாரம்பண்ணிக்கொண்டெழுந்தருளாநிற்க; அவ்வளவிலே பிராட்டி இவரைக்கண்டு மந்தஹாஸம்பண்ணி, பெருமாளுடனே வேஸ்யாக்ருஹத்வாரி மூசிக்கொண்டு கிடக்கிறாரொன்று கேட்க; பெருமாளும் பிராட்டியுடனே; நமக்குப் பூமாலைதரும் விப்ரநாராயணன் வேஸ்யாஸக்தனாய் அவளாலே அர்த்தலோபாந்நிராக்ருதனாய் தத்வாரிகிந்நனாய் மூசிக்கொண்டு கிடக்கிறானென் றருளிச்செய்ய; பிராட்டி

யும் பெருமாளுடனே நமக்கு அந்தரங்கரானவர் அங்ஙனே விஷயாஸக்தரானாலும் விஶ்வமோஹநஹேதுவான தேவரீர் மாயைக்கு அவிஷயமோ? அவரை விஷயாஸக்தியிலுண்டான பாபத்தை நிஶ்ஶேஷமாக நிவாரிப்பித்து தேவரீர் திருவடிகளுக்கு அந்தரங்கராம்படி கடாக்ஷித்தருளவேணுமென்று விண்ணப்பஞ்செய்ய; பெருமாளும் பிராட்டிவார்த்தைக்கிசைந்து, தம் பஞ்சபாத்ரத்திலே பருத்ததொரு தபநீயமான சுத்தோதக பாத்ரத்தை யெடுத்துக்கொண்டுவந்து, வேஶ்யாக்ருஹத்வாரி நின்று, தேவதேவி ? கவாடோத்காடநம்பண்ணென்ன; தேவதேவியும் ஆரென்றுகேட்க; நானழகியமணவாளதாஸன் விப்ரநாராயணன் அனுப்பவந்தேனென்ன; தேவதேவியும் சடக்கெனக்கதவைத்திறந்து என்னென்றுவினவ; பெருமாளும் ஸ்ரீவிப்ரநாராயணன் உனக்கிந்த ஸ்வர்ணபாத்ரத்தைத் தந்தானென்ன; அவளும் ப்ரஹ்ருஷ்டையாய் தபநீயபாத்ரத்தை வாங்கிக்கொண்டு அவரை உள்ளே வரச்சொல்லுமென்ன, அழகியமணவாளதாஸனும் விப்ரநாராயணரண்டையிலே சென்று தேவதேவியும் உம்மை யுள்ளே வரச்சொன்னாளென்ன; இவர் கர்ணாம்ருதமான வார்த்தையைக்கேட்டு ஸந்துஷ்டராய் உள்ளே புகுந்து அவளுடனே க்ரீடாரதிபரராக; அவ்வளவிலே பெருமாளுங் கோயிலிலேபோந்து உரகமெல்லடிமேல் சாய்ந்தருளினார். அவ்வளவிலே பொழுதுவிடிந்தவாறே திருக்காப்பை நீக்கினவளவிலே ஸந்நிதியிலிருந்த தபநீய சுத்தோதகபாத்ரத்தைக்காணாமல் கோயில்பரிகரத்தாரடையப் பயப்பட்டு, ராஜகர்த்தர்க்கறிவிக்க; நிகளாபுரீந்த்ரனை ராஜாவுங்கேட்டு, நம்பியார் பரிசாரகர் எல்லாரையும் அபராததண்டம்வாங்க; அவ்வளவிலே தேவதேவியகத்து கடசேட ஜலாஹரணார்த்தமாக வந்தவள்தன்னோடுஸம்பந்தமுடையானொருவனைப் பாதிக்கக்கண்டு, இதுவென்னென்றுகேட்க, தபநீயபாத்ரம் போனத்தை யவளுக்குச்சொல்ல; அவளுங்கேட்டு, ஸ்ரீவிப்ரநாராயணன் எங்கள் தேவதேவிக்கு ஒரு ஸ்வர்ணபாத்ரங் கொடுத்திருக்கிறான், அவர்கள் மெத்தைத்தலைக்கணையிலே பாத்ரமிருக்கிறதென்ன, அவனுங்கேட்டு ராஜகர்த்தருக்குச்சொல்ல; அவர்களும்வந்து இவர்களைப்பிடித்துக்கொண்டு அவள்க்ருஹத்தைச்சோதித்து வட்டிலையு மெடுத்துக்கொண்டுபோய் ராஜாவுக்குக்காட்ட; ராஜாவும் வேஶ்யையைக்குறித்து; பெருமாளுடைமையை நீ இப்படியபஹரிக்கலாமோவென்ன; நாயிந்தே; நான் பெருமாளதென்றறியேன், இவன் தன்வட்டிலென்று தன்தூதன் அழகியமணவாளனென்பானொருவன்கையிலேவரவிட்டான் அறியாமல் வாங்கினேனென்ன; இவரும் நமக்கொருதூதனுமில்லை நானவ்வட்டிலையுமறியேனென்ன; அவளுமுண்டென்ன; இவருமில்லையென்ன; இப்படி

உபயருடைய விவாதமுங்கேட்டு, ராஜாவும் அந்தவேச்யையை அபராததண்டம்வாங்கி வட்டிலையும் பெருமாளுக்கு ஸமர்ப்பித்து இவனையும் ஸ்வர்ணஸ்தேயோக்தம் பரீக்ஷித்து தண்டிக்கக் கடவோமென்று காவலிலேவைத்து ஸ்வக்ருஹமே போந்தான். அவ்வளவிலே பிராட்டியும் பெருமாளுடனே ஸ்ரீவிப்ரநாராயணனை யினி லீலைக்குவிஷயமாக்காதே இரக்கத்துக்கு விஷயமாக்கிக்கொள்ளவேணுமென்ன, பெருமாளும் ராஜாவின் ஸ்வப்நத்திலேயெழுந்தருளி ஸ்ரீவிப்ரநாராயணர்க்கு ப்ராரப்தகர்மமிங்கேகழிக்கைக்காக நாமே தபநீயபாத்ரத்தைக் கொடுத்துத் தண்டிப்பித்தோமித்தனையல்லது அவர் தண்ட்யரன்று, அவர் நிர்த்தோஷர், அந்தவேச்யை தநமும் நமக்குவேண்டா, அவனைவிட்டுப் பூர்வம்போலே திருமாலைகைங்கர்யத்திலேநிறுத்துமென்று நியமிக்க, சோளபூபதியும் விடிவுகாலத்திலே யெழுந்திருந்து நம்பெருமாள் தனக்கு ஸ்வப்நத்திலே நியமித்தருளினபடியைச் சொல்லி விஸ்மயப்பட்டு ஸ்ரீவிப்ரநாராயணனை யழைத்து அநேகமாகஸத்கரித்துத் தண்டனிட்டான். இவரும் தம் நிஹீநக்ருத்யத்தை நினைத்து அநுதபித்து, "வினைகுழல் மடவார்கலவியை யருவருத்தஞ்சிறையேல்" என்கிறபடியே விஷயாஸக்திருசியைக் காறியுமிழ்ந்து அசம்யா கமந ப்ராயச்சித்தார்த்தமாக (௧௫) “𑌏𑌤𑌤𑍍𑌸𑌮𑌸𑍍𑌤𑌪𑌾𑌪𑌾𑌨𑌾𑌂𑌪𑍍𑌰𑌾𑌯𑌶𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑌂𑌮𑌨𑍀𑌷𑌿𑌭𑌿𑌃- 𑌨𑌿𑌰𑍍𑌣𑍀𑌤𑌂𑌭𑌗𑌵𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑌪𑌾𑌦𑍋𑌦𑌕𑌨𑌿𑌷𑍇𑌵𑌣𑌂” ( ఏతత్సమస్తపాపానాం ప్రాయశ్చిత్తం మనీషిభిః- నిర్ణీతం భగవద్భక్త పాదోదకనిషేవణం ) என்று சொல்லுகிறபடியே ஸர்வபாப ப்ராயச்சித்தமான பகவத்பாகவத ஸ்ரீபாததீர்த்தத்தையும் பிடித்து ஸ்வீகரித்துப் பூதராயருளினார்.

அநந்தர மிவருக்கு க்ராமகுலாதிகளால் வருமநர்த்தப் போன்றிக்கே நிலைநின்ற நிரூபகமான திருநாமமாவது (௧௬) “𑌯𑌸𑍍𑌯𑌮𑍂𑌰𑍍𑌧𑍍𑌨𑌿 𑌸𑍍𑌥𑌿𑌤𑌂 𑌯𑌾𑌵𑌤𑍍𑌵𑍈𑌷𑍍𑌣𑌵𑌾𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌰𑌜𑌶𑍍𑌶𑍁𑌭𑌮𑍍 - 𑌗𑌙𑍍𑌗𑌾𑌦𑌿𑌸𑌰𑍍𑌵𑌤𑍀𑌰𑍍𑌥𑌾𑌨𑌿 𑌤𑌾𑌵𑌤𑍍𑌤𑌿𑌷𑍍𑌠𑌨𑍍𑌤𑍍𑌯𑌸𑌂𑌶𑌯𑌃” ( యస్యమూర్ధ్ని స్థితంయావత్ వైష్ణవాఙ్ఘ్రిరజశ్శుభమ్ - గఙ్గాదిసర్వతీర్థాని తావత్తిష్ఠన్త్యసంశయః ) என்றும் (௧௭) “𑌨𑌿𑌰𑌪𑍇𑌕𑍍𑌷𑌂 𑌮𑍁𑌨𑌿𑌂𑌶𑌾𑌨𑍍𑌤𑌂 𑌨𑌿𑌰𑍍𑌵𑍈𑌰𑌂𑌸𑌮𑌦𑌰𑍍𑌶𑌨𑌂-𑌅𑌨𑍁𑌵𑍍𑌰𑌜𑌾𑌮𑍍𑌯𑌹𑌂𑌨𑌿𑌤𑍍𑌯𑌂𑌪𑍂𑌯𑍇𑌯𑍇𑌤𑍍𑌯𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌰𑍇𑌣𑍁𑌭𑌿𑌃” (నిరపేక్షం మునింశాన్తం నిర్వైరం సమదర్శనం - అనువ్రజామ్యహం నిత్యం పూయేయేత్యఙ్ఘ్రిరేణుభిః) என்றும், “மாயன்றமரடிநீறுகொண்டணியமுயலில் மற்றில்லைகண்டீரிவ்வணங்குக்கே” என்றும், “பாததூளிபடுதலாலிவ்வுலகம் பாக்யஞ்செய்ததே” என்றும், “தொண்டரடிப்பொடியாடநாம்பெறில் கங்கைநீர் குடைந்தாடும் வேட்கையென்னாவதே” என்றுமிவ்வர்த்தவிஷயமாக தத்வவி

த்துக்கள் பலராலும் உத்தேஸ்யதமமாக ஆதரிக்கப்பட்டிருக்கையாலே துளவத்தொண்டிலே நிஷ்டராய்ப்போரும் ஸ்ரீவைஷ்ணவர்களுடைய, ஸ்ரீபாததூளியென்றே தமக்குஜ்ஜீவநகரமான நிலைநின்றதிருநாமத்தையுடையராயும், (௧௫௮) "பாவோ நாந்யத்ர கச்சதி" (భావోనాన్యత్రగచ్ఛతి) என்றதிருவடியைப் போலவும் (௧௫௯) "ஐஶ்வர்யம் ஸாபி லோகாநாம் காமயே ந த்வயா விநா" (ఐశ్వర్యంసాపిలోకానాంకామయేనత్వయావినా) என்ற இளையபெருமாளைப் போலவும், "மாயாப்பெருவிறலுலகம்மூன்றினொடு நல்வீடுபெறினுங் கொள்வதெண்ணுமோதெள்ளியோர்குறிப்பே" என்ற நம்மாழ்வாரைப்போலவுமிவரும் "இந்திரலோகமாளுமச்சுவைபெறினும்வேண்டேன்" என்றுதத்வ்யதிரிக்தமான இதரபுருஷார்த்தங்களில் செல்லாத திருவுள்ளத்தையுடையராய், "என்னைத்தீமனங்கெடுத்தாய்" "மருவித்தொழுமனமேதந்தாய்" என்கிறபடியே இவரும் "மாதரார்கயற்கண்ணென்னும் வலையுட்பட்டு அழுந்துவேனை போதரேயென்றுசொல்லிப்புந்தியிற்புகுந்து தன்பாலாதரம்பெருகவைத்தவழகன்" என்றநுஸந்தித்து, க்ருதஜ்ஞராயும்அதுவுமன்றிக்கே "நாகத்தணைக்குடந்தை வெஃகாத்திருவெவ்வுள்நாகத்தணையரங்கம் பேரன்பில்" என்றும், "கண்டியூரரங்கம் மெய்யங்கச்சிபேர்மல்லை" என்றிப்படி பலவிடங்களிலும் மண்டித்திரிகிற மற்றையாழ்வார்களைப்போலன்றிக்கே, "யாவரும்வந்தடிவணங்க அரங்கநகர் துயின்ற" அழகியமணவாளனையல்லதறியாத பாதிவ்ரத்யத்தையுடையராக, அவ்வளவிலேநம்பெருமாளுமிவர்க்கு "மயர்வறமதிநலமருளி" தம்பரத்வாதி பஞ்சப்ரகாரரூபமான விபூதிசேஷ்டிதங்களை யெல்லாம் நிஸ்ஸந்தேஹமாகக்கரதலாமலகமாக்கி, தெளியக்காட்டிக்கொடுக்க, இவருந் தெளிவுற்றசிந்தையராய் நிரவதிகபக்தியைப்பெற்று வர்த்திக்கும்படியை தேவதேவிகண்டு, இவரைப்போலே உஜ்ஜீவிக்கவேணுமென்றுநினைத்து, தன் ஸர்வஸ்வத்தையும் நம்பெருமாளுக்கு ஸமர்ப்பித்து, பரமஸாத்விகையாய், ஸத்ஸங்கதிஸதாபஸ்யந்தியிலே வைக்குமென்னுமாபோலே நம்பெருமாள்கோயிலிலே ஸம்மார்ஜந கைங்கர்யநிரதையா யுஜ்ஜீவித்தாள். இவ்வாழ்வாருக்கு பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகள் தலைமண்டையிட்டு (௧௬௦) "பிதா புத்ரஶ்ச நாராயண:" (పితాపుత్రశ్చనారాయణః) என்றும், "தாயாய்த்தந்தையாய் மக்களாய்மற்றுமாய்முற்றுமாய்" என்கிறபடியே ஸர்வவிதோத்தாரகபந்துவாகப்பெரியபெருமாளைத்திருமந்த்ராநுஸந்தாநத்தாலே அநுஸந்தித்தருளி, அத்திருநாமோச்சாரணத்தால் தமக்குண்டான ராஜகுலமாஹாத்ம்யத்தாலே "திருவடிதன்னமம்மறந்தும்புறந்தொழாமாந்தரைதிறம்பேல்மின்கண்டீர்" என்று

யமன்பாசஹஸ்தனை ஸ்வபுருஷனைப்பார்த்து, கர்ணமூலத்திலேயுபதேசிக்க த்தக்கதாக "நமன்றமர்தலைகள்மீதே நாவலிட்டுழிதருகின்றோம்" என்று அம் மந்த்ரவைபவத்தைச் சொல்லி ஆநந்தித்து, யமாதிகள் தலையிலே யடியி ட்டு, ஸ்ரீவைஷ்ணவர்களடியே முடியிட்டு, திருமாலைகட்டி திருமாலைசாத்த நினைத்துத் திருமாலைசொல்லுகிற இவர் ஸ்ரீசௌநகபகவான் வக்தாவாக ஸ்ரீச தாநந்தர் ஸ்ரோதாவாகத் திருநாமங்களைக் கேட்டாற்போலே பெரியபெரு மாள் ஸ்ரோதாவாகத் தாம்வக்தாவாய்க்கொண்டு ப்ரகாசிப்பித்தருளி, (௧௬௧) "பூதாநி ககவர்க்கேண சவர்க்கேணேந்த்ரியாணி ச - டவர்க்கேண தவர்க்கேண ஜ்ஞாநகந்தாதயஸ்ததா - மந: பகாரேணைவோக்தம் பகாரேணத்வஹங்க்ருதி: - பகாரேண பகாரேண மஹாந் ப்ரக்ருதிருச்யதே" ( భూతానిచకవర్గేణ చవర్గేణేంద్రియాణిచ - టవర్గేణతవర్గేణ జ్ఞానగన్ధాదయస్తథా - మనః పకారేణైవోక్తం ఫకారేణత్వహంకృతిః - బకారేణభకారేణ మహాన్ప్రకృతిరుచ్యతే ) என்றும், "பொங்கைம்புலனும்பொறியைந்தும் கர்மேந்த்ரிய மைம்பூத மிங்கி வ்வுயிரோப்ரக்ருதிமானாங்கார மனங்கள்" என்கிறபடியே, சதுர்விம்சதிதத்வாத் மகமான இச்சரீரத்திலாத்மபுத்தியை "புறஞ்சுவரோட்டைமாடம்" என்றுநிவ ர்த்திப்பித்தும் (௧௬௨) "ஆத்மா து ஸமகாரேண பஞ்சவிம்ஶ: ப்ரகீர்த்தித:" ( ఆత్మాతుసమకారేణ పఞ్చవింశః ప్రకీర్తితః ) என்று சொல்லுகிறபடியே இருபத்தைந்தா மக்ஷரமான மகாரவாச்யனானையாலே ப்ரக்ருதேः பரனான ஆத்மஸ்வரூபத்தை யடியார்க்கென்று ஸ்வரூப நிர்த்தேசம்பண்ணியும், திரு மந்த்ரநிஷ்டராய், "மெய்ம்மையே மிகவுணர்ந்து - கடைத்தலையிருந்து வா ழும் சோம்பர்" பெரியபெருமானுக்கு அபிமதமென்று அவர்கள் தமக்கு உத் தேஸ்யராகையாலே, "உன்னடியார்க்காட்படுத்தாய்" என்று தமக்குப் பெரு மானுண்டாக்கின ததீயசேஷத்வத்தை ப்ரார்த்தித்தருளியும் இப்படி இவ் வர்த்தங்களை அகிலருமறிந் துஜ்ஜீவிக்கும்படி திருமாலை திருப்பள்ளியெழு ச்சி யென்கிற திவ்யப்ரபந்தங்களிலே விஶததமமாகவருளிச்செய்து, பிற்பா டரு மிவற்றை யநுஸந்தித் துஜ்ஜீவிக்கைக்காக வுபகரித்து லோகத்தை வாழ் வித்தருளினார்.

ஸ்ரீதொண்டரடிப்பொடியாழ்வார்திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

---

( கூ )

# ஸ்ரீ திருப்பாணாழ்வார்ப்ரபாவம்.

(கங) "ஸ்ரீலோகஸாரங்க மஹாமுநீந்த்ர ஸ்கந்தாதிரூடம் கலயாமி நித்யம் - களங்கஹீநம் கமநீயபக்திம் கவீஶ்வரம் காயகஸார்வபௌமம்" (శ్రీలోకసారఙ్గ మహామునీంద్ర స్కన్ధాధిరూఢం కలయామి నిత్యం - కళంకహీనం కమనీయభక్తిం కవీశ్వరం గాయకసార్వభౌమం) (கச) "அத தத்ர கலேஸ்த்ரிபேர மார்கமணௌ ரக்ஷிதலாஞ்சநாம்ஶஜ: - ஸமஜாயத பாணகுஞ்ஜக: ஸுகவி: கார்த்திகமாஸி ரோஹிணீபே" (అథతత్రకలేస్త్రిపేరమార్గమణౌరక్షితలాంఛనాంశజః - సముజాయత పాణకుంజ్జకస్సుకవిః కార్తికమాసిరైధభే) என்று திவ்யஸூரிசரிதையிலே சொல்லிற்றிறே.

(கரு) "ஸ்ரீவேலாப்திநிகமே கலியுகே ஸம்வத்ஸரே துர்மதௌ - பாநௌ வ்ருஶ்சிகபாஜி பஞ்சமதிநே வாரே புதஸ்யோத்தமே ரோஹிண்யா ஸஹிதே லஸத்யுடுபதௌ க்ருஷ்ணத்விதீயாதிதௌ - ஸஞ்ஜஜ்ஞே முநிவாஹநஶ்சரணயோ [illegible]" (శ్రీవేలాబ్ధినిగమేకలియుగే సంవత్సరే దుర్మతౌ - భానౌవృశ్చికభాజిపఞ్చమదినే వారేబుధస్యోత్తమే రోహిణ్యాసహితేలసత్యుడుపతౌ కృష్ణద్వితీయాతిథౌ - సఞ్జజ్ఞే మునివాహనశ్చరణయో [illegible]) திருப்பாணாழ்வார்; (கசா) "காவேரீதோயமாஶ்ரித்ய வாதோ யத்ர ப்ரவர்த்ததே - தத்தேஶவாஸிநாம் முக்தி: கிமுத தீரவாஸிநாம்" (కావేరీతోయమాశ్రిత్యవాతోయత్రప్రవర్తతే - తద్దేశవాసినాం ముక్తిః కిముత తీరవాసినాం) என்று சொல்லுகிறபடியே தன்னுடைய ஸ்வப்ரவாஹ ஸ்பர்ஶ ஸம்பந்தத்தாலே முக்திதரவல்ல நீர்மையையுடைத்தான திருக்காவேரிக்கரையிலே நிசுளாபுரியென்று சொல்லப்பட்டிருப்பதாய், மாடகூடப்ராஸாதோபஶோபிதமான உறையூரிலே, ஸூர்யவம்ஶப்ரதீபனான சோளபூபதி தர்மேண ப்ருத்வீபரிபாலநம் பண்ணுநிற்கச்செய்தே, க்ஷீரார்ணவராஜனிடத்தே பிராட்டி ப்ராதுர்ப்பவித்தருளினாற்போலே நம்பெருமாளிடத்தே ஏகாக்ரசித்தனான தர்மவர்மாவின் வம்ஶத்திலே, சோளனுக்குக் கந்நிகையாய் நீளாம்ஶையான உறையூர் நாய்ச்சியார் திருவவதரித்தருள, சோளராஜாவும், ஸ்ரீஜநகராஜன் பிராட்டியை ப்ரீதியோடே பெற்றெடுத்துவளர்த்தாற்போலே, உவப்போடே வளர்க்க, வளர்ந்தருளுகிற நாய்ச்சியார், பாலக்ரீடையிலும் நம்



ஸ்ரீ திருப்பாணாழ்வார்

பெருமாளையல்லது வேறொரு விளையாட்டறியாதவளாய், சகிகளோடேகூட விஹரித்து வளர்ந்தவள் ஒருநாள் உத்யாநத்திலே சகிகளோடேகூட ப்ராப்தயௌவனையானபின்பு லோலாலீலையாய் விஹரியாநிற்க, " வேட்டையாடிவருவானை விருந்தாவநத்தே கண்டோமே " என்கிறபடியே நம்பெருமாள் அங்கே ம்ருகயாவிஹாரபரராயெழுந்தருளக்கண்டு, மையலேறி, மோஹித்து, ஊரோவந்து, ஸ்வபிதாவான சோழராஜாவைக் குறித்து, நம்பெருமாளையல்லது வேறொரு புருஷற்கு வாழ்க்கைப்படேன் ; என்னை அவருக்கே உதகம்பண்ணிக்கொடுமென்ன ; சோழராஜாவும் சந்துஷ்டனாய், நம்பெருமாள் சந்நிதியிலேசென்று, அச்செய்தியை விண்ணப்பஞ்செய்ய ; பெருமாளும் நாமே பாணிக்ரஹணம்பண்ணுகிறோம், நமக்கே உதகம்பண்ணிக்கொடுமென்று திருவுளம்பற்ற ; ராஜாவும் சந்துஷ்டனாய், " துமுலமெழப்பறைகொட்டி., "தோரணம்நாட்டி,, அரங்கமாநகரையலங்கரித்து, பெரியப்ரீதியுடனே பெருப்பெருத்த கல்யாணம் செய்து நாய்ச்சியாரை உதகம்பண்ணிக்கொடுத்தான். பெருமாளும் ஜநகராஜன் திருமகளை உத்வாஹம்பண்ணினாற்போலே உவப்போடே திருமணம்புணர ; ராஜாவும் பொன்னரிசி முந்நூற்றறுபது பாரமும், அதுக்குத் தக்க முத்து மாணிக்கமயமான நவரத்நோபஹாரமும், நிரவதிக வஸ்த்ராபரணங்களும் கோகஜாஶ்வ தாஸீபூஷணங்களும் குறைவறக்கொடுத்து, ஸர்வத்திலும் பர்யாப்தி பிறவாமையாலே தன் ஸர்வஸ்வத்தையும் நம்பெருமாளுக்கே யாக்கி வாழுங்காலத்திலே, (உறந்தை) என்கிற உறையூரிலே, கார்த்திகைமாசத்தில் ரோஹிணீநக்ஷத்ரத்திலே பஞ்சமவர்ணத்திலே ப்ராஹ்மணவேள்விக் குறைமுடித்த பாகவதரைப்போலே ஸ்ரீவத்ஸாம்ஶரான திருப்பாணாழ்வார் அவதரித்தருளினார்.

(ககஎ) " ஜாயமாநம் ஹி புருஷம் யம் பஶ்யேந் மதுஸூதந: - ஸாத்த்விகஸ்ஸது விஜ்ஞேயஸ்ஸ வை மோக்ஷார்த்தசிந்தக: " (జాయమానం హి పురుషం యం పశ్యేన్మధుసూదనః - సాత్త్వికస్సతు విజ్ఞేయ స్స వై మోక్షార్థచింతకః) என்கிறபடியே நம்பெருமாள் இவர்க்கு ஜாயமாநகடாக்ஷத்தைப் பண்ணுகையாலே, கேவல ஸத்வகுண ப்ரசுரராய் மோக்ஷார்த்தியான இப்பாண்பெருமாள், தாம் "சேமமுடை நாரதனைப்போலவும், (ககஅ) " நிர்ஹ்ருத்ய யாதநாஸ்தாநே யேந கீதபலேந மாம் - ஏவமுக்த்வா து மாதங்கம் ராக்ஷஸஶ்ஶரணங்கத: " (నిర్హృత్య యాతనాస్థానే యేన గీతఫలేన మాం - ఏవముక్త్వా తు మాతఙ్గం రాక్షసశ్శరణంగతః) என்கிறபடியே சரணாகதனான ப்ரஹ்மரக்ஷஸ்ஸைக் குறித்து, (ககக) "யந்மயா வைஷ்ணவம் கீதம் கைஶிகம் ஶ்ருத்வா - தேந த்வம் ஸஹ்ருதோ மோக்ஷயி

அ

ஷ்யஸி கில்பி3ஷாத்" (యస్యయాంచ్చ మంగీతం స్వరాన్తైస్సుత్తమం - ఫలేనతస్యభద్ర న్తేమోక్ష్యసికిల్బిషాత్) என்று கைசிகபுராணத்தில் யாகதோஷம் பரிஹரித்த பாகவதனைப்போலவும் பகவத்ஜ்ஞாநவித்தைக்கு சார்வபௌமராய், "பரமாத்மனைச்சூழ்ந்துநின்று" ஸாமகாநம்பண்ணும் நித்யஸூரிகளிலே யொருவர் வந்தவதரித்தாரோ வென்று சொல்லலாம்படியான திவ்யசரித்ரங்களையுடையரான இப்பாண்பெருமாள், ஸ்வதேசாநுஸந்தாநத்தாலேஸ்வவர்ணாநுகூலமாக இரண்டாற்றுக்கும் நடுத்தாம்பிதியாமே தென்னாற்றின் தென்கரையிலே, திருமுகத்துறைக்கெதிரே, "தொழுமத்திசை யுற்றுநோக்கியே" என்கிறபடியே "திருவரங்கமேயான்திசையைநோக்கி, நாநின்று, "வலந்தாங்குசக்கரத்தண்ணல் மணிவண்ணற்காளென்றுள் கலந்து" கையும்வீணையுமாய்த் திருப்புகழ்கள்பலவும் பாடிக்கொண்டு, "சிந்திக்குந்திசைக்குந்தேறுங்கைகூப்பும்" என்கிறபடியே பெரியபெருமாளை அநவரதபாவனைபண்ணிப் போருகையாலே, (௧௭௦) "ததோ ஹ்ருஷ்டதநு:" (తతోహృష్టతనుః) என்கிறபடியே பெரியபெருமாளும் இவர்பக்கல் உவந்த திருவுள்ளத்தராக, அவ்வளவிலே நாய்ச்சியாரும்பெருமாளுடனேநமக்கந்தரங்கரானபாண்பெருமாள் புறம்பேநிற்பதென்னென்றுவிண்ணப்பஞ்செய்ய, பெரியபெருமாளும் இவரைப்பலகால் அருளப்பாடிட்டுப்போகவிட்டவிடத்திலும்,ஸ்வரூபத்தால் வந்தநைச்யத்தாலும் ஸ்வவர்ணத்தால்வந்தநைச்யத்தாலும்பிற்காலித்து, கடுநடையிட்டகல்கிற அளவிலே, பெரியபெருமாள், பின்னையுமிவர்பக்கலுள்ள க்ருபாதிசயத்தாலும், தன்னிரங்குச ஸ்வாதந்த்ர்யத்தாலும் ஸ்ரீலோகஸாரங்கமஹாமுநீந்த்ரரைப்பார்த்து, நமக்கந்தரங்கரான பாண்பெருமாளை நீர் நெகிழநினைத்துப் போரவேண்டா; அவரை, உமது தோளிலேகொண்டு நம்பக்கலில் அழைத்துக்கொண்டு வரவேண்டுமென்று ஸ்வப்நமுகேந அருளிச்செய்ய, அவரும் விடிவோரை யெழுந்திருந்து, (௧௭௧) "அத்3ய மே ஸப2லம் ஜந்ம ஸுப்ரபா4தா ச மே நிசா" (అద్యమేసఫలంజన్మ సుప్రభాతాచమేనిశా) என்கிறபடியே, இற்றைவிடிவு எனக்கு நல்விடிவாச்சுதென்று ஸ்வப்நத்தை நிரூபித்து, மிகவும் ஹ்ருஷ்டராய் "தோதவத்தித்தூமறையோருடன்திருமுகத்துறையிலே, "நாட்காலேநீராடி" அநுஷ்டாநம்பண்ணி, (௧௭௨) "ஸுதூ3ரமபி க3ந்தவ்யம் யத்ர பா4க3வத ஸ்தி2த:" (సుదూరమపిగన్తవ్యం యత్రభాగవతస్థితః) என்கையாலே, இவ்வாழ்வார் அதிதூரத்திலே நின்று, "யாழினிசைவண்டினங்களாளம்வைக்கு" மரங்கத்தைநோக்கி, நித்யமாக ஸேவித்து ஸ்தோத்ரம்பண்ணிக்கொண்டு நிற்கிறவிடத்தேற வெழுந்தருளி, இப்பாணாழ்வார் தி

ருவடிகளிலே தாளும் தடக்கையும் கூப்பிப்பணிந்து, தேவரீரை நம்பெருமாள் எழுந்தருளப்பண்ணுவித்துக்கொண்டு வரவேணுமென்று அடியேனை நியமித்தருளினரென்று விண்ணப்பஞ்செய்ய, ஆழ்வாரும் "குலந்தாங்கு சாதிகள் நாலிலுங்கீழிழிந்து" என்றும், "குலங்களாயவீரிரண்டிலொன்றிலும்பிறந்திலேன்" என்றும், "நீசனேனிறையொன்றுமிலேன்" என்றும் சொல்லுகிறபடியே, இவர் நைச்யத்தை முன்னிட்டுப் பிற்காலிக்க, "திருவரங்கப்பெருநகரை" நான் மிதிப்பேனோவென்ன, ஸ்ரீலோகசாரங்கமுநிகளும்; ஆகில்; அடியேனுடையதோளின்மேலே எழுந்தருளும், பெருமாள் அருளப்பாடிட்டருளினபடியே எழுந்தருளுவித்துக்கொண்டு போமென்றென்ன; ஆழ்வாரும், "செய்த்தலையெழுநாற்றுப்போலவன் செய்வனசெய்துகொள்ள" என்கிறபடியே, "அவன் செய்யுஞ்சேமத்தையெண்ணித் தெளிவுற்று" நிர்ப்பரராயிருக்க, ஸ்ரீலோகசாரங்க மஹாமுநீந்த்ரரும் ஆழ்வாரை; முக்தனைப்போருமவனை ஆதிவாஹிகர் எழுந்தருளுவித்துக்கொண்டு திருமாமணிமண்டபத்தேறப் போமாபோலே தமது திருத்தோளின்மேலேகொண்டு அழகியமணவாளன் திருமண்டபந் தவ்வருகே புகுத; பெரியபெருமாளும் தம்முடைய திவ்யமங்கள விக்ரஹத்தை, நிக்யகரித்ரனுக்குக் காட்டினாப்போலே இவருக்குக் காட்டிக்கொடுக்க, (௧௭௩) "𑌕𑌿𑌰𑍀𑌟𑌕𑍇𑌯𑍂𑌰𑌕𑌰𑍍𑌣𑌕𑍁𑌣𑍍𑌡𑌲𑌂 - 𑌪𑍍𑌰𑌲𑌮𑍍𑌬𑌮𑍁𑌕𑍍𑌤𑌾𑌮𑌣𑌿𑌹𑌾𑌰𑌭𑍂𑌷𑌿𑌤𑌂 - 𑌉𑌦𑌾𑌰𑌵𑌕𑍍𑌷𑌸𑍍𑌥𑌲𑌶𑍋𑌭𑌿𑌕𑍌𑌸𑍍𑌤𑍁𑌭𑌂 - 𑌶𑍍𑌰𑌿𑌯𑌾𑌚𑌦𑍇𑌵𑍍𑌯𑌾𑌭𑍍𑌯𑍁𑌷𑌿𑌤𑍋𑌰𑍁𑌵𑌕𑍍𑌷𑌸𑌂 - 𑌪𑍍𑌰𑌶𑌸𑍍𑌤𑌚𑌾𑌮𑍀𑌕𑌰𑌚𑌾𑌰𑍁𑌵𑌾𑌸𑌸𑌂 - 𑌸𑍁𑌮𑍇𑌖𑌲𑌂𑌨𑍂𑌪𑍁𑌰𑌶𑍋𑌭𑌿𑌤𑌾𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌕𑌂 - 𑌸𑍁𑌵𑌰𑍍𑌣𑌨𑌿𑌰𑍍𑌜𑌾𑌤𑌮𑍃𑌣𑌾𑌲𑌕𑍋𑌮𑌲𑌂 - 𑌦𑌧𑌾𑌨𑌮𑌚𑍍𑌛𑌚𑍍𑌛𑌵𑌿𑌯𑌜𑍍𑌞𑌸𑍂𑌤𑍍𑌰𑌕𑌂 - 𑌭𑍁𑌜𑍋𑌪𑌧𑌾𑌨𑌂𑌪𑍍𑌰𑌸𑍃𑌤𑌾𑌨𑍍𑌯𑌹𑌸𑍍𑌤𑌂 - 𑌨𑌿𑌕𑍁𑌞𑍍𑌚𑌿𑌤𑍋𑌤𑍍𑌤𑌾𑌨𑌿𑌤𑌪𑌾𑌦𑌪𑌙𑍍𑌕𑌜𑌂 - 𑌸𑍁𑌦𑍀𑌰𑍍𑌘𑌮𑍁𑌰𑍍𑌵𑌙𑍍𑌗𑌮𑌨𑍁𑌪𑍍𑌰𑌵𑍇𑌶𑌂 - 𑌭𑍁𑌜𑌗𑌤𑌲𑍍𑌪𑍇𑌪𑍁𑌰𑍁𑌷𑌂𑌦𑌦𑌰𑍍𑌶" (కిరీటకేయూరకర్ణకుండలం - ప్రలంబముక్తామణిహారభూషితం - ఉదారవక్షస్థలశోభికౌస్తుభం - శ్రియాచదేవ్యాభ్యుషితోరువక్షసం - ప్రశస్తచామీకరచారువాససం - సుమేఖలంనూపురశోభితాంఘ్రికం - సువర్ణనిర్జాతమృణాళకోమలం - దధానమచ్ఛచ్ఛవియజ్ఞసూత్రకం - భుజోపధానంప్రసృతాన్యహస్తం - నికుంచితోత్తానితపాదపంకజం - సుదీర్ఘముర్వంగముపప్రవేశం - భుజగతల్పేపురుషందదర్శ) என்று சொல்லுகிறபடியே, ப்ரஹ்மாதி ஸகல சேதநராலும் ஸேவ்யமானரான அழகிய மணவாளனை ஸேவிக்கப்புகுந்த ஆழ்வார்; மாதாவினுடைய சர்வாவயவங்களும் கிடக்கச்செய்தே, ஸ்தநந்தயப்ரஜை முலையிலே வாய்வைக்குமாபோலே சேஷிபக்கல் சேஷபூதன் இழியுந்துறை திருவடிகளாகையாலே "அரங்கத்தம்மான் திரு



× திருமங்கையாழ்வார் ×

றி " (కలయామికలిధ్వంసంకవిలోకదివాకరం - యస్యగోభిః ప్రకాశాభిరావిద్యన్నిహతం తమః-
పరకాలహరింవందే హరిపాదగుహాశయం - ఉన్నతప్రతికూలేభకుంభసంభేదవిభ్రమం - నాద
ప్రసభసన్త్రిప్తశైవశాక్యాదిద్విపం-పరకాలమృగేన్ద్రంత్వాం ప్రపద్యేచ్యుతవన్దినం" "సము
జాయతతత్రశాబరప్రముఖః కశ్చనసీలనామకః- పురుషోత్తమకార్ముకాంశజస్స్ఫురితే కాలికకృత్తి
కోడుని) என்று திவ்யஸூரிசரிதையிலே சொல்லிற்றிறே.

(கஎரு) " [illegible] " ( సుధాగానాం నానాంకలియుగభవానామపగమే నశైవక్షేమాసేశరదచర
మే దైవతగురోఃదినే తారేవహ్నాశ్శరకిరణే పూర్ణిమజుషిక్షితావావిర్భూతః కలిపురహా యు..
మహిమా )

திருமங்கையாழ்வார்; திருவாலித் திருநகரிலே திருக்குறையலூரிலே, நளவருஷம், கார்த்திகைமாசம், க்ருத்திகாநக்ஷத்ரத்திலே, ஸ்ரீகார்முகாம்ஸராய், அவதரித்தருளினர். ம்லேச்சவம்ஸத்தில் அவதரிக்கையாலே, அவர்களும் இவர்க்கு நீலநிறத்தனென்று திருநாமம் சார்த்தினர்கள், "தெரியேன்பாலகனாய்" என்கிறபடியே, பால்யாவஸ்த்தாநந்தரம் ப்ராப்தயௌவநராய் "மாரனார்வரிவெஞ்சிலைக்காட்செய்து, "தெரிவைமா ருருவமேமருவி" மிகவும் விஷயப்ரவணராய், ஸ்வகரக்ருத ஸஸ்த்ரப்ரகாண்டராய், சோளபூபதியை சேவித்து யுத்தேபராக்ராந்தராய் ப்ரவீரராயிருக்கிற இவர்க்கு, ஸஹாயபூதராக, நீர்மேல்நடப்பான், நிழலொதுங்குவான், சாயைபிடிப்பான், தாளூதுவான்என்று நாலுமந்த்ரிகளும் ஆடல்மாவலவன் என்கிற குதிரைநம்பிரானும் "தமர்கட்கெளியானை" என்கிற யானைநம்பிரானுமாக இப்படியிருக்கிறஇவரை; அந்தராஜாவும் ஒருதேசாதிபதியும் சிலசேனாநாயகனுமாக்கிவைத்துப் போருகிறகாலத்திலே; திருவாலிநாட்டிலே நன்றாயிருப்பதொரு "தடத்தவிழ் தாமரைப்பொய்கையிலே" "சிலம்பார்க்கவந்துதெய்வமகளிர்களாடும்சீர்" என்கிறபடியே, சில அப்ஸரஸ்ஸுக்கள் வந்து நாளும் ஜலக்ரீடை பண்ணிப்போக, அவர்களிலே திருமாமகளும் ஒரு அப்ஸரஸ்ஸு வேஷத்தை தரித்துக்கொண்டு குமுதமலர் கொய்யப் புறப்படுகையாலே கூடவந்தவர்கள் இவளைவிட்டுப்போக, இவள் மாநுஷ்யமான சரீரத்தை பரிக்ரஹித்துத் தனித்துநிற்க, அவ்வளவிலே, திருநாங்கூரில் எம்பெருமானை சேவித்திருப்பானொரு பிஷக்வரனை பாகவதோத்தமன் அநுஷ்ட்டாநார்த்தமாக வந்தவன், இப்பெண்பிள்ளையைக்கண்டு, நீ யார்? தனித்திருப்பானென்னெ

ன்றுகேட்க, அவளும்; கூடவந்த பெண்பிள்ளைகள் என்னைவிட்டுப்போனார்கள், என்னை இனி உம்மோடே கொண்டுபோமென்று தான்வந்த க்ரமத்தை அவர்க்குச்சொல்ல, அவரும் புத்ரஹீநராகையாலே மிகவுமுவந்து, நம்மூரோ வாவென்று அழைத்துக்கொண்டுபோய், ஸ்வபத்நிகையிலே குமாரிவந்த வரத்தைச்சொல்லி, போஷிக்கும்படி காட்டிக்கொடுக்க, அவளும் வந்த்யையாகையாலே அதிஸந்தோஷத்துடன் அங்கிகரித்து, இவள் குமுதமலர்கொண்டு நின்றதுவே நிரூபகமாக குமுதவல்லியாரென்று திருநாமம்சாத்தி, தங்களுக்கு ப்ரீதியாக வளர்த்துக்கொண்டு போருகிறகாலத்திலே, இவர்க்குச் சிலர்போய் இப்பெண்பிள்ளையினுடையரூபலாவண்யாதிகளை மிகவும் ச்லாகித்துச்சொல்ல, இவரும் அத்தைக்கேட்டு, "நின்றவாநில்லாநெஞ்சினராய், "அவர்தரும்கலவியேகருதியோடி, திருநகரியிலேசென்று, மருத்துவனை பாகவதனகத்திற்புகுந்து, அவனுடனே ஸம்பாஷணம் பண்ணிக்கொண்டிருக்கச்செய்தே, இப்பெண்பிள்ளை புறப்படக்கண்டு, விஸ்மயப்பட்டு, பாகவதபிஷக்வரரைக்குறித்து, ஸுரஸுந்தோபமையான ஸுதை அநபத்யரான உமக்கு எங்ஙனே யுண்டாய்த்தென்றுகேட்க, அவரும் இவருடனே அப்பெண்ணின் வரத்தைச்சொல்லி, இப்பெண்ணாலே அநபத்யதாஸுசம்தீர்ந்தேன்; அஜ்ஞாதகுலகோத்ரையான இவளை யாருக்கு வாழ்க்கைப்படுத்துவேனென்று மிகவும் விவாஹோசிதவயஸ்ஸைக் கண்டு வ்யாகுலாந்தஃகரணனாகாநின்றேனென்ன, இவரும் இப்பெண்ணை பத்நியாக நமக்குத் தரவேணுமென்று வஸ்த்ரபூஷணாதி த்ரவ்யங்களில் ஸங்கோசமறக்கொடுத்து, மிகவுமநுவர்த்தித்து விரும்பிக்கேட்க, அவர்களும் அப்பெண்பிள்ளையை இவருக்குக் கொடுப்பதாக உத்யோகிக்க, அப்பெண்பிள்ளையும் (௧௭௬) "தாபஃ புண்ட்ரஸ்ததா நாம" (తాపః పుణ్డ్రస్తథా నామ) என்கிற திருவிலச்சினை திருநாமமுள்ளவர்க்கொழிய மற்றொருவற்கென்னைப் பேசவொட்டேன் என்று தன்னுடைய நெஞ்சில் அத்யவஸாயத்தைச்சொல்ல, இவரும் அவ்வசநத்தைக்கேட்டு; (௧௭௭) "ஶுபஸ்ய ஶீக்ரம்" (శుభస్య శీఘ్రం) என்கிறபடியே அதித்வரையோடே திருநறையூரிலே சென்று, "பொன்னியலுமாடக்கவாடங்கடந்துபுக்கு" என்கிறபடியே, நம்பி திருமுன்பே வந்து, (௧௭௮) "அம்ருதமந்தநசக்ரேண பாஹுமூலேऽங்கிதஃ" (అమృతమన్థనచక్రేణ బాహుమూలేఽఙ్కితః) என்றும், "தீயிற்பொலிகின்றசெஞ்சுடராழிதிகழ்திருச்சக்கரத்தின் கோயிற்பொறியாலே யொற்றுண்டுநின்று" என்றும்சொல்லுகிறபடியே திருவிலச்சினையும் தரித்து, (௧௭௯) "ஸம்வேஷ்டிதஜ்ஞாயாய

[illegible]" ([illegible]) என்று சொல்லுகிறபடியே கேசவாதிநாமங்களையு முடையராய்வர, குமுதவல்லியாரும் ஆழ்வாரைப்பார்த்து, (௪௨௦) "[illegible]" ([illegible]) என்கையாலே ஒருஸம்வத்ஸரம் நித்யமாக ஆயிரத்தெட்டு ஸ்ரீவைஷ்ணவர்களை அமுதுசெய்வித்து அவர்களுடைய ஸ்ரீபாததீர்த்தமும் தளிகைப்ரஸாதமும் ஸ்வீகரித்து நிறைவேறினாலொழிய, உம்மை நான் பர்த்தாவாக அங்கீகரிப்பதில்லையென்று ஒருநியமம்பண்ண, அவரும் அதற்கிசைந்து ப்ராவண்யாதிசயத்தாலே ப்ரதிஜ்ஞைபண்ணிக்கொடுக்க, அதின்பின்பு குமுதவல்லியாரை நீலநிறத்தார்க்கு நாடும் ஊரும் அறிய நல்லதோர் கல்யாணஞ்செய்து, உதகபூர்வகமாக சமர்ப்பித்தார்கள்.

அநந்தரம் ஆழ்வாரும் அதிப்ரீதியுடனே திருமாலடியார்களைப் பூசிக்க நோற்க ஒருப்பட்டு, அதுக்குத்தம்முடைய தநத்தையிட்டுத் ததியாராதநம் பண்ணிக்கொண்டு போருகிறகாலத்திலே, பரகாலன் பகுதித்ரவ்யமெல்லாம் வ்ரயம்பண்ணித் ததியாராதநம் பண்ணுகிறானென்றுசோழராஜாவுக்குச்சொல்ல, அவனும் கேட்டுக் குபிதனாய் பகுதிக்கு இவர்பக்கல் தரவுவரக்காட்ட, இவரும் அந்தத்தரவுக்கு வந்த ராஜமநுஷ்யர்க்கு (௪௩) "[illegible]" ([illegible]) என்னுமாபோலே சில பர்யாயங்களைச் சொல்லக்கேட்டுச் சலித்து, ராஜமநுஷ்யர் பகுதித்ரவ்யம் தரவேணுமென்று நிர்ப்பந்திக்க, இவரும் குபிதராய் அவர்களைத்தள்ளிவிட, அவர்களும்போய் இவ்விசேஷத்தைச் சோழராஜாவுக்கு அறிவிக்க, அவனும் குபிதனாய், இவர் ஆஜ்ஞாபங்கம்பண்ணினதுக்கு மிகவும் சீறி, தன் சேநாதிபதியை யழைத்து, பரகாலனை இங்கே பிடித்துக்கொண்டுவாவென்று ஆஜ்ஞாபிக்க, அவனும் கஜதுரகபதாதியோடே சென்று இவரை வளைத்துப்பிடிக்கத்தேட, இவரும்துரகாதிரூடராய் ஸ்வபலஸஹிதராய்வந்து, ஆலித்துக்கொண்டு அவன்படைமேலேவிழுந்து, கஜதுரகபதாதிகளைத் துண்டித்து, பராஜிதராக்கியோட்டிவிட; சேநாதிபதியும் காந்திசீகனாய் ஓடி, வந்த பராஜயத்தை ராஜாவுக்குஅறிவிக்க, சோழபூபனும் கேட்டு, கோபஸம்ரக்தலோசநனாய், அப்போதே தன் சது

ரங்கபலத்தோடே புறப்பட்டுவர, அவனுடைய சேநாசமுத்ரம் இவரைவளை ய, இவரும்பூர்வம்போலே த்ருடகரவாளபயங்கரஹஸ்தராய் ஆலித்துக்கொ ண்டுவந்து, இவன்சேநாசமுத்ரத்தை மந்தராத்ரிபோலே மதிக்க, ஸர்வரும் பராஜிதராய் ஓடிவந்து ராஜாவின்மேலேவிழ, ராஜாவும் அதிரௌத்ரத்துட னே, ஓடுகிறபலத்தை நிறுத்தி, ஜகதேகதநுர்த்தரனை பெருமையோடே இ வரை ஸேநாசமுத்ர மத்யஸ்த்தராம்படி வளைய, இவரும் அதிவீரராய், ஸ்வ கரத்ருத சஸ்த்ரபலத்தாலே சேனையை மதியாமல் ஸம்ஹரிக்குமதுகண்டு, அதிசந்துஷ்டனாய், இவரை ; நீர் ஒன்றுக்கும்பயப்படவேண்டா ; உம்முடை ய ஶௌர்யவீர்யங்கண்டு மிகவும் சந்துஷ்டனானோம். நீர்செய்த அபகாரங்க ளையெல்லாம் மறந்தோம். அஞ்சாதே நம்மை நம்பிவருவதென்று தம் குரு தைவங்களைத்தொட்டு சபதம்பண்ணிக்கொடுக்க, இவரும் நம்பி அவனண் டையிலே சென்றவளவிலே, இவருடைய பராக்ரமத்தை மிகவும் ஶ்லாகித் து, நீர்செய்த த்ரோஹமெல்லாம் மறந்தோம், நம்பகுதி த்ரவ்யங்களைமாத் ரம் தரவேணுமென்று இவரைத் தன் மந்த்ரிவசமாக்கி ஊருக்கு மீண்டான். அந்தஸசிவனும் படைவீட்டிலே சென்று, இவரைப் பிடித்துக்கொண்டு வந் து, ஒருதேவதாலயத்திலே சிறைவைக்க, இப்படி அந்தக் கோயிலிலே மூன் றுநாள் அமுதுசெய்யாமல் உபவஸிதராயிருக்க, இப்படி உபவஸித்து ஆர்த்த ராயிருக்கிற இவர் ஸ்வப்நத்திலே பேரருளாளர் எழுந்தருளி, உமக்குப் பகு திக்குவேண்டிய த்ரவ்யம் தருகிறோம், காஞ்சீபுரத்தேற வாருமென்றருளிச் செய்ய, இவரும் நிஶ்சிதார்த்தராயிருக்க, பொழுது விடிந்தவளவிலே, கர தநம் தரவேணுமென்று வந்த அமாத்யனுடனே, காஞ்சீபுரத்தே ஆபத் தநமாகச் சிலதநம் சேமித்துக்கிடக்கிறது, அங்கே வந்தால் உங்கள்தநம் தருகிறோமென்ன, அவனும் ராஜாவுக்கு அறிவிக்க, அவன் அத்தையும் பா ர்ப்போம், ஜாகரூகராய்க் காவலிட்டுக்கொண்டு போதுங்கோள் என்று ஆஜ் ஞாபிக்க, இவரும் காவலுடனே காஞ்சீநகரியேறச்சென்று, நிக்ஷேபதநம் சோதித்துக் காணாமையாலே ஶ்ரமித்து மூடிக்கிடக்க, அவ்வளவிலே கருணா கரரான வரதராஜரும், அஞ்சாதே கொள்ளுமென்று, வேகவதீதீரத்திலே தந மிருக்கிறவிடம் அடையாளமாகக் காட்டியருள, இவரும் அங்கே தநம் கண் டெடுத்து, ந்ருபதநம்கொடுத்து, சேஷித்த தநத்தைத் ததீயாராதநார்த்தமா கவைத்துக்கொள்ள, அந்த அமாத்யனும் அந்தத் தநத்தை ந்ருபதிமுன்னே வைக்க, ராஜாவும் வரதராஜர் ப்ரஸந்நராய் த்ரவ்யம் தந்தபடிகேட்டு விஸ்மி தனாய், இவர் சாமாந்யர் அன்று ; மஹாபாகவதரிறே? இது, த்ரௌபதிக்குப் புடவைசுரந்தாற்போலே யிருந்ததென்று, இந்தத் தநத்தை நம் கோசத்திலே

வைக்கவொண்ணாதென்று பார்த்து, ஆழ்வாரை யழைத்து, அபராதக்ஷாபணம்பண்ணிக்கொண்டு, பஹுமுகமாக பஹுமாநம்பண்ணிப் போகவிட்டு, இவர் உபவாசமிருந்த தோஷத்தை அந்த த்ரவ்யத்தை தேவப்ராஹ்மணசமர்ப்பணம்பண்ணித் தீர்த்துக்கொண்டான். இவரும் சேஷித்த த்ரவ்யங்கொண்டு ததீயாராதநம் நடத்தி, தநமெல்லாம் தீர்ந்து, கையில் ஒன்றுமில்லாமையாலே இவர் வழிபறித்தாகிலும் தநார்ஜ்ஜநம்பண்ணித் ததீயாராதநம் விச்சிந்நமாக நடத்தவேணுமென்று, வழிபறித்துத் தநங்கொண்டுவந்து, ததீயாராதநம் பக்திபுரஸ்ஸரமாக நடத்திக்கொண்டு போராநிற்க, ஸர்வேஶ்வரனும் வழிபறித்தும் ஸ்ரீவைஷ்ணவர்க்கு ஆகையாலே இவர் சரமபுருஷார்த்தத்திலே நிஷ்டரானதுகண்டு, அந்த ஸுக்ருதமேபற்றாசாக இவனைவிசேஷகடாக்ஷம்பண்ணி அங்கீகரிக்கவேணுமென்று திருவுள்ளமாய், இவர் வழிபறிக்கைக்கு உசிதமான பரிகரத்தையுங்கூட்டிக்கொண்டு, திருமணங்கொல்லையில் திருவரசின்மேலே கொடிவைத்துப் பதுங்கியிருக்கிற வழியிலே, (௧அ௨) "𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌨𑍍𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑍋 𑌦𑍇𑌵𑌃 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌮𑌰𑍍𑌤𑍍𑌯𑌮𑌯𑍀𑌂 𑌤𑌨𑍁𑌮𑍍 - 𑌮𑌗𑍍𑌨𑌾𑌨𑍁𑌦𑍍𑌧𑌰𑌤𑍇 𑌲𑍋𑌕𑌾𑌨𑍍 𑌕𑌾𑌰𑍁𑌣𑍍𑌯𑌾𑌚𑍍𑌛𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌪𑌾𑌣𑌿𑌨𑌾" ( సాక్షాన్నారాయణో దేవః కృత్వా మర్త్యమయీం తనుం - మగ్నానుద్ధరతే లోకాన్ కారుణ్యాచ్ఛాస్త్రపాణినా ) என்றும் "பீதகவாடைப்பிரானார் பிரமகுருவாகிவந்து" என்றுஞ்சொல்லுகிறபடியே "வயலாலிமணவாளன் திருமணம் புணர்ந்துவருகிற மணவாளக்கோலமும் தாருமாய், ப்ராஹ்மணவேஷத்தை பரிக்ரஹித்து, பத்நீஸஹிதனாய், சர்வாபரணபூஷிதனாய், பஹுத்ரவ்யங்கொண்டு, அநேகம் திரளோடுவந்து தோற்ற; இத்திரளைக்கண்டு ஆலித்துக்கொண்டு, ஸாயுதராய், ஸபரிகரராய், பெரியஆர்வாரம் பண்ணிக்கொண்டு, இவனை வளைந்து சூழ்ந்து, வஸ்த்ராபரணங்களையும் அபஹரித்துக்கொண்டு அறுகாழியையும் திருமுத்தாலே கடித்து வாங்க; எம்பெருமானும் இத்தைக்கண்டு, நம் கலியனோவென் றருளிச்செய்தார். பின்பு இவையித்தனையும் சுமைசுமையாகக் கட்டியெடுக்கப்பார்க்க, அவை பேர்க்கவும் போராதபடியாலே மணவாளனை ப்ராஹ்மணனைப் பார்த்து, நீ மந்த்ரவாதம் பண்ணினாயென்று அருக்க, அம்மந்த்ரத்தை உமக்குச்சொல்லுகிறோம் வாருமென்று கழுத்தை யணைக்க, இவரும் ஓமென்று சம்மதித்து ஹடாத்கரித்து வாள்வலியால் கேட்க, நீ யென் செவியின்வழி புகுந்து என்கிறபடியே செவிக்கினிய செஞ்சொல்லை செவிக்கின்பமாக ஆழ்வாருடைய வலத்திருச்செவியிலே, (௧அ௩) "[illegible]",

( ఋచోయజూంషిసామానితథైవాథర్వణానిచ - సర్వమష్టాక్షరాన్తస్థం యచ్చాన్యదపివాఙ్మయం ) என்றும், (௧௮௪) “ 𑌸𑌰𑍍𑌵𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌸𑌾𑌰𑌾𑌰𑍍𑌥𑌃 𑌸𑌂𑌸𑌾𑌰𑌾𑌰𑍍𑌣𑌵𑌤𑌾𑌰𑌕𑌃 - 𑌗𑌤𑌿𑌰𑌷𑍍𑌟𑌾𑌕𑍍𑌷𑌰𑍋 𑌨𑍃𑌣𑌾𑌮𑌪𑍁𑌨𑌰𑍍𑌭𑌵𑌕𑌾𑌂𑌕𑍍𑌷𑌿𑌣𑌾𑌂 ” ( సర్వవేదాంతసారార్థః సంసారార్ణవతారకః - గతిరష్టాక్షరోనౄణామపునర్భవకాంక్షిణాం) என்றும், (௧௮௫) “ 𑌐𑌹𑌲𑍌𑌕𑌿𑌕𑌮𑍈𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌂 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌾𑌦𑍍𑌯𑌂 𑌪𑌾𑌰𑌲𑍌𑌕𑌿𑌕𑌂 - 𑌕𑍈𑌵𑌲𑍍𑌯𑌂 𑌭𑌗𑌵𑌨𑍍𑌤𑌂 𑌚 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑍋𑌯𑌂 𑌸𑌾𑌧𑌯𑌿𑌷𑍍𑌯𑌤𑌿 ” (ఐహలౌకికమైశ్వర్యం స్వర్గాద్యంపారలౌకికం - కైవల్యంభగవంతంచమన్త్రోయంసాధయిష్యతి) என்றுஞ்சொல்லுகிறபடியே சகலவேதஸங்க்ரஹமுமாய், அநந்தக்லேசபாஜநமான ஸம்ஸாரார்ணவத்தினின்றும் கரையேற்றவற்றாய், ஐஹிகாமுஷ்மிக ஐச்வர்யகைவல்யாபுநராவ்ருத்தி லக்ஷணரூப பரமபுருஷார்த்தம் முதலான அகிலார்த்தப்ரதமுமாய், (௧௮௬) “ 𑌓𑌮𑌿𑌤𑍍𑌯𑌗𑍍𑌰𑍇 𑌵𑍍𑌯𑌾𑌹𑌰𑍇𑌤𑍍 𑌨𑌮 𑌇𑌤𑌿 𑌪𑌶𑍍𑌚𑌾𑌤𑍍 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌾𑌯𑍇𑌤𑍍𑌯𑍁𑌪𑌰𑌿𑌷𑍍𑌟𑌾𑌤𑍍 𑌓𑌮𑌿𑌤𑍍𑌯𑍇𑌕𑌾𑌕𑍍𑌷𑌰𑌂 𑌨𑌮 𑌇𑌤𑌿 𑌦𑍍𑌵𑍇 𑌅𑌕𑍍𑌷𑌰𑍇 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌾𑌯𑍇𑌤𑌿 𑌪𑌞𑍍𑌚𑌾𑌕𑍍𑌷𑌰𑌾𑌣𑌿 ” (ఓమిత్యగ్రేవ్యాహరేత్ నమఇతిపశ్చాత్ నారాయణాయేత్యుపరిష్టాత్ ఓమిత్యేకాక్షరంనమఇతిద్వేఅక్షరేనారాయణాయేతిపంచాక్షరాణి) என்கிறபடியே, “ அவன்பெயரெட்டெழுத்துமென்று எட்டுத்திருவக்ஷரமாய், உபநிஷத்தில் அப்படியே பதத்ரயாத்மகமாய், அவற்றாலே ஸ்வரூபோபாயபுருஷார்த்த ப்ரகாசகமுமாய், மற்றை வ்யாபகத்வயம்போலன்றிக்கே இதிலே நாரசப்தமுண்டாகையாலே சப்தபூர்த்தியுமுடைத்தாய், “ பேராளன்பேரோதும் பெரியோர் ” என்கையாலே சிஷ்டபரிக்ரஹயுக்தமாய், (௧௮௭) “ 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌾𑌣𑌾𑌂 𑌪𑌰𑌮𑍋 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑍋 𑌗𑍁𑌹𑍍𑌯𑌾𑌨𑌾𑌂 𑌗𑍁𑌹𑍍𑌯𑌮𑍁𑌤𑍍𑌤𑌮𑌂 - 𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌞𑍍𑌚 𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌾𑌣𑌾𑌂 𑌮𑍂𑌲𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌸𑍍𑌸𑌨𑌾𑌤𑌨𑌃 ” (మన్త్రాణాంపరమోమన్త్రోగుహ్యానాంగుహ్యముత్తమం - పవిత్రంచపవిత్రాణాంమూలమన్త్రస్సనాతనః) என்கிறபடியே உத்க்ருஷ்டதமமாகச்சொல்லப்படுகிற மூலமந்த்ரமான பெரியதிருமந்த்ரத்தை நரநாராயணனாய்த்தனக்குத்தானே உபதேசித்துக்கொண்ட இழவுதீரக்கலியனுக்கு, கிழிச்சீரையோடே தநத்தைக்கொடுப்பாரைப்போலே, “ பெற்றதாயினுமாயினசெய்யும்நலந்தருஞ்சொல்லை நான் கண்டுகொண்டேன் ” என்று தம்வாயாரச்சொல்லும்படி உபதேசித்தருள ; அநந்தரம், (௧௮௮) “ 𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍍𑌯𑌾 𑌸𑌹 𑌹𑍃𑌷𑍀𑌕𑍇𑌶𑍋 𑌦𑍇𑌵𑍍𑌯𑌾 𑌕𑌾𑌰𑍁𑌣𑍍𑌯𑌰𑍂𑌪𑌯𑌾 ” (లక్ష్మ్యాసహహృషీకేశోదేవ్యాకారుణ్యరూపయా) என்கிறபடியே க்ருபைதானொரு வடிவுகொண்டாற்போலே காருண்யமயையான ஸ்ரீஸஹாயனையுங்கொண்டு, “ காய்சினப்பறவையூர்ந்து பொன்மலையின் மீமிசைக்கார்முகில்போல் ” என்றும், (௧௮௯) “ [illegible]

𑌸𑍁𑌪𑌰𑍍𑌣𑌪𑍃𑌷𑍍𑌠𑍇 𑌪𑍍𑌰𑌬𑌭𑍌𑌶𑍍𑌯𑌾𑌮𑌃 𑌪𑍀𑌤𑌾𑌮𑍍𑌬𑌰𑍋 𑌹𑌰𑌿𑌃 - 𑌕𑌾𑌞𑍍𑌚𑌨𑌸𑍍𑌯 𑌗𑌿𑌰𑍇𑌃 𑌶𑍃𑌙𑍍𑌗𑍇 𑌸𑌤𑌟𑌿𑌤𑍍𑌤𑍋𑌯𑌦𑍋 𑌯𑌥𑌾" ("సుపర్ణపృష్ఠే ప్రబభౌశ్యామః పీతాంబరో హరిః - కాంచనస్యగిరేశ్శృంగే సతటిత్తోయదో యథా) என்றுஞ்சொல்லுகிறபடியே ஸுவர்ணரூபியான பெரியதிருவடியை மேற்கொண்டு வந்து நீலமேகநிபமான அவ்வடிவை, "கநககிரிமீதிற்கார்முகில் படிந்துலாவுமாபோலே விளங்குகிற திவ்யமங்கள விக்ரஹசேவையை இவ்வாழ்வாருக்கு "மயர்வறமதிநலமருளி" ஸாக்ஷாத்கரிப்பித்தருள, இவ்வாழ்வாரும் தமக்கு நிர்ஹேதுகலப்தமான திருமந்த்ரத்தையும், அதுக்குள்ளீடான ஸ்ரீமந்நாராயணனுடைய ஸ்வரூபரூபகுணவிபூதி சேஷ்டிதங்களையும், "திருமாமகளாலருள்மாரி" என்னும்படி பெரியபிராட்டியாரருளாலே இவற்றையெல்லாம் இவர், "தக்கஞானக்கண்களாலே கண்டநுபவித்து, அநுபவஜநித ப்ரீத்யதிசயத்தாலே, பெரியதிருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருவெழுகூற்றிருக்கை, சிறியதிருமடல், பெரியதிருமடல் என்கிற இவ்வாறு ப்ரபந்தங்களையும் ஸ்ரீசடகோபவாங்மயமான த்ராமிடவேதசதுஷ்டயத்துக்கு ஷடங்கமாக, ஆசு, மதுரம், சித்ரம், விஸ்த்தாரம் என்கிற சதுர்வித கவிகளாலே யருளிச்செய்து, லோகத்துக்கு நாலுகவிப்பெருமாள் என்று ப்ரஸித்தமாம்படி உபகரித்தருளியும், முன்பு திருமொழி யருளிச்செய்துகொண்டு திவ்யதேசங்கள்தோறும் சேவித்துக்கொண் டெழுந்தருளாநிற்கச்செய்தே, சோழமண்டலத்திலே எழுந்தருளின அளவிலே, நாலுகவிப்பெருமாள் வந்தார், நங்கலியர்வந்தார், ஆலிநாடர்வந்தார், அருள்மாரிவந்தார், கொங்குமலர்க்குழலியர்கேள்வர்வந்தார், மங்கைவேந்தர்வந்தார், பரகாலர்வந்தார், பரவாதிமத்தகஜகண்டீரவர்வந்தார், என்று விருதூதிச்செல்லாநிற்க; அங்கே சம்பந்தன் சிஷ்யர்கள்வந்து, ஆழ்வாரை; எங்கள் சம்பந்தப்பெருமாள் இருக்கிறவிடத்திலே நீர் நாலுகவிப்பெருமாளென்று விருதூதிச்செல்லத் தகாதென்று தடுக்க, ஆழ்வாரும்; உங்கள் சம்பந்தப்பெருமாளுடனே தர்க்கிக்கக் கடவோமென்றருளிச்செய்ய; ஆகில் நம்மூரோ வாருமென்றழைத்துக்கொண்டுபோய் இவ்விசேஷத்தைச் சம்பந்தனுக்கு அறிவிக்க; அவனும் இவருடனேதர்க்கிக்கக்கடவோமென்றுவர; ஊரடையச்சைவராய், ஊரில் ஒருதிருமுற்றமின்றியே, ஸ்ரீவைஷ்ணவர்களுமின்றியே, வீரபாஷண்டபூயிஷ்டமாயிருக்கக்கண்டு, இவ்வாழ்வார்க்கு பகவத்விக்ரஹமின்றியே வாக்குக்கிளம்பாதிருக்க, இதுக்கு என்செய்யக்கடவோமென்று சிந்தித்திருக்கச்செய்தே, வைஷ்ணவியாயிருப்பாளொரு அம்மையாரைக்கண்டு இப்படியிருக்கிறது ஆகையால் உன் திருவாராதநமான எம்பெருமானை எனக்கு ஒருக்ஷணம் தரவேணுமெ

ன்றுகேட்டுக்கொள்ள, அவளும் ஆழ்வாருக்கு, தனக்காராதநமான வெண்ணெயுண்டதாடாளனை எழுந்தருள்வித்துக்கொடுக்க; ஆழ்வாரும்; அவளையுங்கொண்டு சம்பந்தனிருந்தவிடத் தேறச்சென்றிருக்க, அவனும்; இவரைக்குறித்து, ஒருகவிசொல்ல, இவரும்; அத்தைக்கேட்டு அந்தக்கவியை தூஷிக்க; ஆகில் நீர் ஒருகவி சொல்லுமென்ன; ஆழ்வாரும் “ஒருகுறளாயிருநிலம்” என்கிற திருமொழியும், “பொருவில்வலம்புரியரக்கன்முடிகள் பத்தும்” என்கிறதிருமொழியும் அருளிச்செய்து, தம்பெருமையெல்லாந்தோற்ற, ஆலிநாடனருள்மாரியரட்டமுக்கியடையார்சீயங்கொங்குமலர்க்குழலியர்வேள்மங்கைவேந்தன்கொற்றவேற்பரகாலன்கலியன் சொன்ன மூகத்தமிழ்மாலையென்ன, அவனும் இத்தைக்கேட்டு ப்ரத்யுத்தரம்சொல்லக்கவிசொல்ல க்ஷமமின்றியே, இப்படியுமொருவருண்டோவென்று ஆஶ்சர்யப்பட்டு, நாலுகவிப்பெருமாள் என்னும் விருது உமக்குச்செல்லும், விருதூதிக்கொண்டு செல்லீரென்று கும்பிட்டுப்போனான்.

அநந்தரம், (கக௯) “விமாநம்ப்ரணவாகாரம் வேதஶ்ருங்கம்மஹாத்புதம் - ஸ்ரீரங்கஶாயீ பகவாந்ப்ரணவார்த்தப்ரகாஶக:” (విమానం ప్రణవాకారం వేదశృంగం మహాద్భుతం - శ్రీరంగశాయీ భగవాన్ ప్రణవార్థప్రకాశకః) என்கிறபடியே, “மன்னுடையவிபீடணற்காய் மதிளிலங்கைத் திசைநோக்கி மலர்க்கண்வைத்த வென்னுடையதிருவரங்கர்க்கு விமாநம் பிரணவாகாரம்” என்று ப்ரணவாகாரமத்யஸ்த்தரான பெரியபெருமாளுக்கும், திருவரங்கச் செல்வனாரான அழகியமணவாளர்க்கும் விமாநமண்டப கோபுர ப்ராசாத ப்ராகாராதிரூபமான கைங்கர்யங்கள் செய்தருளவேணுமென்று திருவுள்ளமாய், அதுக்குத் தம்முடைய பரிஜநங்களையழைத்து, நம்பெருமாளுக்குத் திருமதிள் முதலான கைங்கர்யம்பண்ணுவிக்கத் தநார்ஜ்ஜநம்பண்ணும் விரகென்னென்றுகேட்டருள, அவர்களும் நாகபட்டணத்திலே புலையறமாயிருப்பதொரு புத்தப்ரதிமை ஹிரண்மயஸ்வரூபமாயிருக்கும். அத்தைக்கொண்டுவந்து சிந்நபிந்நமாக்கி, “அறுப்பதேகருமங்கண்டாய்” என்று விண்ணப்பஞ்செய்ய, ஆழ்வாரும் அவர்கள் சொன்னபடியே நாகபட்டணத்திலேபோய், “ஈயத்தாலாகாதோ இரும்பினாலாகாதோ பூயத்தால்மிக்கதொரு பூதத்தாலாகாதோ தேயத்தேபித்தளைநற்செம்புகளாலாகாதோ மாயப்பொன்வேணுமோமதித்துன்னைப்பண்ணுகைக்கே” என்று தத்பிம்பம் ஊளையிடும்படி அபஹரித்துக்கொண்டுவந்து பங்கப்படுத்தி, திருமதிள்கைங்கர்யத்துக்கு அர்ஹமாம்படி சுட்டுரைத்து நன்பொன்னாக்கிக்கொண்டு கலப்படிக்கொக்க வொருதுலை



* நம்மாழவார் *

படுத்தி, தத்ரவ்யத்தையிட்டுத் திருமதிள்முதலாக்ச் சிகரபர்யந்தமாகப்பண்ணவேணுமென்று உபக்ரமித்து, திருமதிள் கட்டுவிக்கிற செவ்வியிலே, ஸ்ரீதொண்டரடிப்பொடியாழ்வார் பெரியபெருமாளுக்குத் திருமாலைகட்டுவிக்கிற ஸ்தலம் நேர்பட, அவ்விடத்தைத்தப்பி யொதுங்கத் திருமதிள்கட்டுவித்தருளப் பார்த்தருளி, திருவுள்ள முவந்தருளி, தமக்குத் திருமாலைகொய்கிறகையாய் வர்த்திக்கிறதுக்கு உபகரணமான ஆயுதத்துக்கு அருள்மாரியென்று இவருடைய திருநாமத்தையும் சார்த்தி, ப்ரீதராயருளினார். திருமங்கையாழ்வாரும் திருமதிள் திருமண்டபம் மற்றுமுண்டான கைங்கர்யங்களும்முதலாகச் சிகரபர்யந்தமாகப் பண்ணுவித்து க்ருதார்த்தரா யருளினார்.

ஸ்ரீதிருமங்கையாழ்வார்திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

---

(யக)

## ஸ்ரீநம்மாழ்வார்ப்ரபாவம்.

---

(கககக) “ததஃகலியுகஸ்யாதௌ வைசாக்யாம்விச்வபாவநஃ-விஷ்ணுபக்திப்ரதிஷ்டார்த்தம்ஸேநேசோவதரிஷ்யதி. ஸேநேசகருணாலப்தி திவ்யமந்த்ர த்வயம்முதா - த்ராவிடாம்நாயவக்தாரம்சடகோபகுரும்பஜே. வகுளாபரணம்வந்தே ஜகதாபரணம்முநிம் - யஶ்ஶ்ருதேருத்தரம்பாகம்சக்ரே த்ரவிடபாஷயா. ஸ்ரீவிஜ்ஞாநதிநோத்தரே ஹரிகலௌவர்ஷே ப்ரமாத்யாஹ்வயே - மாஸேமாதவநாம்நி பக்ஷவிசாகாஹ்வயே - [illegible] [illegible]. வகுளாபரணம் ஸ்ரீ [illegible] - [illegible].” (తతఃకలియుగస్యాదౌ వైశాఖ్యాంవిశ్వభావనః - విష్ణుభక్తిప్రతిష్ఠార్థం సేనేశోవతరిష్యతి. సేనేశకరుణాలబ్ధ దివ్యమంత్రద్వయంముదా - ద్రావిడామ్నాయవక్తారంశఠకోపగురుంభజే. వకుళాభరణంవందే జగదాభరణంమునిం - యశ్శ్రుతేరుత్తరంభాగంచక్రేద్రవిడభాషయా. శ్రీవిజ్ఞానదినోత్తరేహరికలౌవర్షేప్రమాథ్యాశ్చయే - మాసే

మాధవనామ్ని భాగవతనేబుమ్షే విశాఖాభిధే - లగ్నే శుద్ధచతుర్దశీతిథియుతే శ్రీమత్తుళీరేపిచ-క్షేత్ర్యాం ప్రాదురభూత్ పరాఙ్కుశకవిర్భాగ్యోదయోస్మాదృశాం. వకుళాలఙ్కృతం శ్రీమచ్ఛఠకోపపదద్వయం - అస్మత్కులధనంభోగ్య మస్తు మే మూర్ధ్ని భూషణం) ஆழ்வார்களெல்லாரையும் அவயவபூதராகவுடைய நம்மாழ்வார் திருவவதாரக்ரமம் எங்ஙனேயென்னில்;

(கக௨) "அஸ்தி த்வீபேஷு தேஶேஷு காசிச்ச்ரீநகரீ திவ்யா-தாம்ரபர்ணீ நதீதீரே ஸாக்ஷாத்த்ருஷ்டா மஹர்ஷிபி:" (అస్తిద్వీపేషు దేశేషు కాచిచ్ఛ్రీనగరీ శుభా - తామ్రపర్ణీనదీతీరే సా బుద్ధ్యా ప్రోక్తా మహర్షిభిః) என்று சொல்லுகிறபடியே "வண்டலம்புஞ்சோலை வழுதிவளநாட்டிலே" (கக "கங்காச யமுநா சைவ ததா கோதா ஸரஸ்வதீ - நர்மதா ஸிந்து காவேரீ தாம்ரபர்ணீ ஸரித்வரா" (గఙ్గా చ యమునా చైవ తథా గోదా సరస్వతీ - నర్మదా సింధు కావేరీ తామ్రపర్ణీ సరిద్వరా) என்று சொல்லுகிறபடியே கங்காதிஸகலநதிகளிலும் உத்க்ருஷ்டதமமாகச் சொல்லப்பட்டிருப்பதான தாம்ரபர்ணியென்கிற பொருநையாற்றின்கரையிலே, ஸ்ரீநகரியென்று ப்ரக்யாதமான "நல்லார்நவில்குருகூர்" நகர்க்கு நிர்வாஹகரான இவ்வாழ்வார்தாமே, "எந்தைதந்தைதந்தைதந்தைக்கும்மூந்தை" என்றருளிச்செய்கையாலே, "ஏழாட்காலும்" புறந்தொழாமே, "குடிகுடியாட்செய்யும்", "தொண்டக்குலத்திலேபிறந்து" "ஏழாட்காலும் பழிப்பிலராயிருப்பர்; எங்ஙனே யென்னில்;

திருவழுதிவளநாடர் என்றொருவர்; அவர்பிள்ளை, அறந்தாங்கியார்; அவர்பிள்ளை சக்ரபாணியார்; அவர்பிள்ளை அச்யுதர்; அவர்பிள்ளை செந்தாமரைக்கண்ணர்; அவர்பிள்ளை செங்கண்ணர்; அவர்பிள்ளை போர்க்காரியார்; அவர்பிள்ளை காரியார்; அவர்பிள்ளை மாறன்; இவர்கள் தாம் இக்ரமத்திலே சந்தாநபரம்பரையாகக் குடியடியராய்ப் பழவடிமையாய் "வழிவழிவந்தாட்செய்யும் தொண்டரான இத்திருவம்சத்திலே போர்க்காரியார் என்கிறவர், உலகெல்லாம் வாழும்படி தம்முடைய புத்ரரான காரியாருக்கு விவாஹம்பண்ணுவிப்பதாகத்திருவண்பரிசாரத்திலே காரியாரைக்கொண்டுபோய், தமக்கு சமாந சம்பந்தயோக்யராய் வைஷ்ணவசந்தாநிகரான திருவாழ்மார்பர்திருமாளிகையிலே யெழுந்தருளி, அவரைப்பார்த்து, உம்முடைய புத்ரியான உடையநங்கையாரை நம்முடைய புத்ரரான காரியாருக்கு விவாஹம் பண்ணித் தரவேணுமென்று தமரும் பிறரும் அறிய ப்ரசங்கித்துக்கேட்க; திருவாழ்மார்பரும் மிகவும் சந்துஷ்டராய்க்கொண்டு சம்மதித்து, கல்யா

ணங்கோடித்து, "மத்தளங்கொட்ட வரிசங்கம் நின்றூத முத்துடைத்தாம நிரைதாழ்ந்த பந்தற்கீழ்" என்கிறபடியே உபலாலித்து, பெருப்பெருத்த கல்யாணங்கள் செய்து உதகபூர்வகமாக உடையநங்கையாரைக் காரியாருக்கு சமர்ப்பிக்க; காரியாரும், "வெள்வளைக்கைபற்ற" என்கிறபடியே பாணிக்ரஹணம்பண்ணிக்கொண்டு, மற்றுமுண்டான க்ரியாவிசேஷங்களையும்செய்து, திருவண் பரிசாரத்தில் திருவாழ்மார்பரான எம்பெருமானையும் திருவடி தொழுது மீண்டு, பெரியவண்குருகூரிலே யெழுந்தருளாநிற்க; (கஙஅ) "பதாகாத்வஜிநீம் ரம்யாம் தூர்யோத்குஷ்டநிநாதிநீம் - ஸிக்தராஜபதாம் ரம்யாம் ப்ரகீர்ணகுஸுமோத்கராம் - ஸபௌரை: ப்ரத்யுத்கதோ ராமம் ஜநைஶ்ச புரவாஸிபி:" (పతాకాధ్వజనీంరమ్యాంతూర్యఘోషనినాదినీం - సిక్తరాజపథాంరమ్యాంప్రకీర్ణకుసుమోత్కరాం - పౌరైఃప్రత్యుద్గతోరామంజనైశ్చపురవాసిభిః) என்று சொல்லுகிறபடியே, பெருமாள் ஸ்ரீமிதிலையிலேயெழுந்தருளி, "திக்குநிறைபுகழான்" ஆன ஸ்ரீஜநகராஜன் திருமகளைத் திருமணம் புணர்ந்து மீண்டெழுந்தருளும்போது, திருவயோத்யையில் ப்ராஹ்மணர்முதலான பௌரஜநங்கள் பட்டணத்தை யலங்கரித்து ஒப்பித்து மங்களவாத்யகோஷத்துடனே வந்து எதிர்கொண்டாற்போலே, "செம்பொன் மாடத்திருக்குருகூரிலுள்ளாரும் "பூரணப்பொற்குடம்வைத்துப் புறமெங்கும் தோரணம்நாட்டித் துமுலமெழப் பறைகொட்டி உபலாலித்து எதிர்கொள்ள; "குன்றம்போல்மணிமாடம் நீடுதிருக்குருகூரதனுள்" புகுந்து, இல்லறம் என்று ஶ்லாக்யமாகச் சொல்லப்பட்டிருப்பதான க்ருஹஸ்தாஶ்ரமத்திலே நியதரான காரியார் சிலநாளைக்குப் பின்பு தம்முடைய பத்நியாரான உடையநங்கையாரை; திருக்குருகூரில் நின்றும், பிறந்தகமான திருவண்பரிசாரத்துக்கு அழைத்துக்கொண்டுபோய்மீண்டு வாராநிற்கச்செய்தே, "தென்கொள்சோலைத் திருக்குறுங்குடியிலேசென்று, "நம்பியைத் தென்குறுங்குடிநின்ற வச்செம்பொனே திகழும் திருமூர்த்தியையும் சேவித்து, அடியோங்களுக்கு ஒரு சந்தாநம் தந்தருளவேணுமென்று ப்ரார்த்திக்க; நம்பியும் நாமேவந்து பிறக்கிறோமென்று அர்ச்சகமுகேந வரப்ரதாநம்பண்ணியருள; அவ்வசநம் கேட்டருளி ப்ரீதராய் நிற்கச்செய்தே, நம்பியும், பூததண்மாலைத் தண்டுழாயையும் க்ருபையுடனே ப்ரஸாதித்தருள; "தன்மன்னுநீள் கழல்மேல் தண்டுழாய், "நமக்கன்றிநல்கான் என்று கொண்டு, துணையோடும் பிரியாதே ஸ்வீகரித்து, மிகவும் உவப்போடே தங்களுக்கு ஆவாஸஸ்த்தலமான "நல்லார்பலர்வாழ்குருகூ" ரிலே வந்து பு

குந்து நித்யவாசம்பண்ணிக்கொண்டு போகிற அளவிலே, உடையநங்கை யார் கர்ப்பவதியாக; "திருமாலாலருளப்பட்ட சடகோபன் என்னலாம்படி எம்பெருமான் இவரிடத்திலே பாரெல்லாமுய்யும்படி சேனைமுதலியாரை நம்மாழ்வாராகக் கலியுகாதியிலே, கலிதினம் நாலாயிரத்து மூந்நூற்றிரண்டுநாள் சென்ற வர்த்தமாந பஹுதாந்யவருஷத்தில், வசந்தருதுவில், வைகாசி மாசம் சுக்லபக்ஷம் பௌர்ணமி கூடிய திருவைசாகநக்ஷத்ரத்தில், காவ்யவாஸர கர்க்கடக லக்நத்திலே, திவ்யயோக கரணங்களிலே, ஆதித்யராம திவாகராச்யுத பாநுக்களுதயத்திலே, நீங்காத உள்ளிருள்நீங்கி, சோஷியாத பிறவிக்கடல் சோஷித்து, விகஸியாத போதிற்கமல மலரும்படி வகுளபூஷணபாஸ்கரோதயமுண்டாய்த்து உடையநங்கையாராகிற பூர்வசந்த்யையிலே.

(௧௧௫) "[illegible]" ([illegible]) என்று திவ்யசூரிசரிதையிலே சொல்லிற்றிறே. திருவநந்தாழ்வானும் வர்ஷாதப நிவாரணார்த்தமாய் இவர்க்குமுன்னே திருப்புளியாழ்வாராய் வந்தவதரித்தருளினார்.

---

## (௰௨)

## ஸ்ரீமதுரகவியாழ்வார்ப்ரபாவம்.

(௧௧௬) "[illegible]" ([illegible]

రంకపీంద్రం శఠారిభక్తం శరణం ప్రపద్యే. యాతేసంవత్సరౌఘే హసదగదజనే ద్వాపరస్యేశ్వ రాబ్దే - చైత్రేమాసే ద్విసప్తోత్తరదివసవరే శుభ్రపక్షే చరూచ్యే - చిత్రాఖ్యే భాగణే వీర్యోగుణవతి చది నే ప్రాదురాసీచ్ఛఠారే - రన్తేవాసిద్విజేన్ద్రో మధురకవిరసౌ మాధ్యగుజ్జీవనాయ. హస్తస్థతాళ ద్వితయం ప్రపద్యే - శఠారివాగ్వ్యాసముదారకీర్తిం - మాధుర్యసంశ్లిష్టకవిత్వయుక్తం - మహాత్వసంభావితబుద్ధితత్త్వం)

மதுரகவியாழ்வார்; செல்வம் மல்கியவண்கிடந்த திருக்கோளூரிலே (கக௭) "சைத்ரஶ்ரீமாநயமாஸ꞉புண்ய꞉புஷ்பிதகாநந꞉" (చైత్రశ్రీమానయమ్మాసః పుణ్యః పుష్పితకాననః) என்று ஸ்ரீமத்தாகச் சொல்லப்படுகிற சித்திரைமாசத்தில், சித்ராநக்ஷத்ரத்திலே, ஸ்ரீகுமுத கணேசாம்சரான ஸ்ரீமதுரகவிகள் ஆதித்யோதயத்துக்கு அருணோதயம் முற்படுமாபோலே, வகுளபூஷண பாஸ்கரோதயத்துக்கு அருணோதயம்போலே முன்னே அவதரித்தருளினார். (கக௮) "கணேசாம்ஶகோ மதுரகவி꞉ ஸம்ஜ்ஞக꞉ சைத்ரமாஸி சித்ராயாமஜாயத" (గణేశాంశకుముదో నామ్నా కవిర్మధురసంజ్ఞకః - చైత్రమాసేశుభే చిత్రతారకాయామజాయత) என்றிதுவும் திவ்யஸூரிசரிதையிலே சொல்லப்பட்டதிறே.

(கக௯) "ஸாமஶாகாத்யயநபூர்வ ஶிகாவாந் ப்ரஹ்மவர்ண꞉" (సామశాఖాధ్యయనపూర్వశిఖావత్ బ్రహ్మవర్ణః) அவதரிக்கையாலே இவருக்குத்தத் தத்காலங்களிலே சௌளோபநயநாதிகளையும் செய்து, (உ00) "அங்காநி வேதாஶ்சத்வாரோ மீமாம்ஸா ந்யாயவிஸ்தர꞉ - புராணம் தர்மஶாஸ்த்ரம் ச வித்யா ஹ்யேதாஶ்சதுர்தஶ" (అంగాని వేదాశ్చత్వారో మీమాంసా న్యాయవిస్తరః - పురాణం ధర్మశాస్త్రంచ విద్యాహ్యేతాశ్చతుర్దశ) என்று சொல்லப்பட்ட சதுர்த்தசவித்யைகளையும் அதிகரிப்பித்தார்கள். அயீத வேதவேதாங்கருமாய் மஹாவிரக்தருமான இவர் (உ0க) "அயோத்யா மதுரா மாயா காஶீ காஞ்சீ ஹ்யவந்திகா - புரீ த்வாரவதீ சைவ ஸப்தைதே மோக்ஷதாயகா꞉" (అయోధ్యామథురామాయాకాశీకాంచీహ్యవన్తికా - పురీద్వారవతీచైవసప్తైతేముక్తిదాయకాః) என்று முக்திப்ரதமாகச் சொல்லப்பட்ட திருவயோத்யை முதலான திவ்யதேசங்களைச் சேவிக்க வெழுந்தருளினார். இப்படி இவர்கள் முன்னாக அவதரித்தருளின ஆழ்வார், "முத்தனையமுறுவல்செய்துமூக்குறிஞ்சிமுலையுணாதேமௌனத்தோடே எழுந்தருளியிருக்கச்செய்தேயும் வாட்டமின்றிக்கே பரிபூர்ணராயிருக்கிற இந்த ஆஶ்சர்யத்தை; காரியாரும் இவனைப்பெற்ற வயிறுடையாளான உடையநங்கையாரும் கண்டு, "உன்மனத்தாலென்னினைந்திருந்

தாய்" என்கிறபடியே எம்பெருமான்பக்கலிலே ந்யஸ்த்தபரராய்க் கொண்டிருந்து, இவ்வாழ்வார் திருவவதரித்தருளின "பத்துநாளுங்கடந்த விரண்டாநாள்" (௨0௨) "𑌶𑌂𑌖𑌤𑍀𑌰𑍍𑌥𑌸𑌮𑍀𑌪𑍇𑌤𑍁 𑌤𑌾𑌮𑍍𑌰𑌪𑌰𑍍𑌣𑍍𑌯𑌾𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑍇𑌤𑌟𑍇 - 𑌸𑍁𑌸𑍍𑌥𑌿𑌰𑌂𑌪𑍁𑌣𑍍𑌡𑌰𑍀𑌕𑌾𑌕𑍍𑌷𑌂 𑌶𑌂𑌖𑌚𑌕𑍍𑌰𑌧𑌰𑌂𑌹𑌰𑌿𑌂 - 𑌵𑌰𑌦𑌾𑌭𑌯𑌹𑌸𑍍𑌤𑌂𑌚𑌰𑌮𑌯𑌾𑌧𑌰𑌯𑌾𑌸𑌹 - 𑌨𑌵𑌨𑍀𑌰𑌦𑌨𑍀𑌲𑌾𑌭𑌂𑌪𑍀𑌤𑌵𑌾𑌸𑌸𑌮𑌚𑍍𑌯𑍁𑌤𑌂" (శంఖతీర్థసమీపేతు తామ్రపర్ణ్యాదక్షిణేతటే - సుస్థిరంపుణ్డరీకాక్షం శంఖచక్రధరంహరిం - వరదాభయహస్తంచరమయాధరయాసహ - నవనీరదనీలాభంపీతవాససమచ్యుతం) என்றுசொல்லுகிறபடியே திருச்சங்கணித்துறையை யுடைத்தான பொருநலாற்றின் தென்கரையிலே, திவ்யமங்கள விக்ரஹயுக்தனாய், சங்கசக்ரதரனாய், புண்டரீகாக்ஷனாய், வரதாபயஹஸ்தனாய், ஸ்ரீபூமீநீளாஸஹிதனாய்க்கொண்டு எழுந்தருளியிருக்கிற பொலிந்துநின்றபிரான்திருமுன்னேயெடுத்துக்கொண்டுபோய், அப்படிப்பட்டவிக்ரஹத்தைஸேவிக்கப்பண்ணி, இவருக்குமாறனென்று திருநாமஞ்சார்த்தி, திருப்புளியாழ்வாரடியிலே, "ஆணிப்பொன்னாற்செய்த வண்ணச்சிறுதொட்டிலிலே வளர்த்தி, இவரைபுத்ரப்ரதிபத்திபண்ணாமல், எங்கள்குடிக்கரசேயென்று விசேஷப்ரதிபத்திபண்ணி ஸேவித்துக்கொண்டுநிற்க; இவ்வாழ்வார் தாம், (௨0௯) "𑌜𑍍𑌞𑌾𑌨𑌘𑌨𑌪𑍂𑌰𑍍𑌣𑌶𑍍𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍇𑌤𑌿 𑌨𑌿𑌰𑍍𑌣𑍀𑌯 𑌮𑍂𑌲𑌸𑌂𑌶𑍍𑌰𑌯𑌃 - 𑌬𑌾𑌲𑌤𑍍𑌵𑍇 𑌷𑍋𑌡𑌶𑌾𑌬𑍍𑌦𑌾𑌤𑍍𑌤𑍁 𑌮𑍂𑌕𑌭𑌾𑌵𑌂 𑌗𑌮𑌿𑌷𑍍𑌯𑌤𑌿" (జ్ఞానఘనపూర్ణశ్శాస్త్రేతి నిర్ణీయ మూలసంశ్రయః - బాలత్వే షోడశాబ్దాత్తు మూకభావంగమిష్యతి) என்று சொல்லுகிறபடியே, திருப்புளியாழ்வாரடியிலே, பதினாறு திருநக்ஷத்ரமளவாக, "அவன்முகத்தன்றிவிழியேன்" என்று முகுளிதநயநருமாய், "ஆருக்குச் சொல்லுகேன்" என்று மௌநியுமாய் எழுந்தருளாநிற்க; இத்தை உடையநங்கையாரும் காரியாரும் கண்டு, இவர்; தம்மைப்போல் அதிகாரிகளைக்காணாமையால் லௌகிகரோடு வார்த்தை சொல்லாதிருக்கிறாரென்றறியாதே, திருக்குறுங்குடி நம்பிக்கு நாம் செய்ததென்னென்று சிந்தைகலங்கியிருக்க, இப்ரபாவங்களை; திருவயோத்யை ஸேவிக்க எழுந்தருளின ஸ்ரீமதுரகவிகளும் கேட்டருளியிருக்கச்செய்தே, ராத்ரி ஜலஸங்காநிவ்ருத்யர்த்தமாகப் புறப்பட்டவர், தென்றிசையிலே, ஒரு அப்ராக்ருத திவ்ய தேஜஸ்ஸைக்கண்டு, இது என் என்று திகைத்து நின்று, ஏதேனும் க்ராமநகரங்கள் வேகிறதோ? காட்டுத்தீயோ? என்று தம்மிலேவிசாரித்து, அற்றைக்குக் கண்வளர்ந்தருளினார். பின்னையும் இரண்டு மூன்றுநாள் இப்படியேகண்டு, இது ப்ராக்ருததேஜஸ்ஸன்று, அப்ராக்ருத திவ்யதேஜஸ்ஸாய்

ருந்தது, இக்காரணத்தை நாம் பரீக்ஷிப்போமென்று பகலெல்லாம் கண்வளர்ந்தருளி, ராத்ரி அத்தேஜஸ்ஸே குறியாக அதித்வரையுடனே மீண்டெழுந்தருளி, புண்யக்ஷேத்ரங்கள்தோறும் சோதித்துக்கொண்டுவந்து, (௨0௪) “[illegible]” (శ్రీరఙ్గమఙ్గళక్షేత్రం) என்கிற திருவரங்கப் பெருநகரிலே சோதிக்க, அதுக்குமப்பாலே தென்திசையிலேயாயிருக்க; பின்னையும் பூர்வம்போலே த்வரித்தெழுந்தருளி, மாடமாளிகைசூழ்ந் தழகாய திருக்குருகூரிலே சென்று, அப்பால் பார்த்துக் காணாமையாலே இது இங்கேயாயிருக்குமென்று சோதித்து வந்து, திருப்புளியாழ்வாரடியிலே, (௨0௫) “[illegible]” (పద్మాసనోపవిష్టం పాదద్వయనిహితస్వస్తిచైతన్యం - పరతత్త్వబోధముద్రం పరమాచార్యం పరాఙ్కుశం వన్దే) என்கிறபடியே, ஸஜ்ஞாநகநபூர்ணராய், உறங்காப்புளி நிழல்தன்னிலே முகுளிதநயநராய், ஷோடசவார்ஷிகராய், ஷோடசகலாபூர்ணனை சந்த்ரனைப்போலே பத்மாஸநோபவிஷ்டராய், பரதத்வபோதமுத்ராயுக்தராய், பரமாசார்யரான ஸ்ரீபராங்குசனைப்பார்த்து, இவர்க்குச் சைதந்யமுண்டோ? செவிகேட்குமோ என்று பரீக்ஷிக்கைக்காக, ஒரு குண்டுக்கல்லை அவர் முன்னே திடீரென்றெடுத்துப்போட, இவரும் அதுகேட்டு, திடுக்கென்று திருக்கண்களை மலர விழித்துப்பார்த்தருள; ஸ்ரீமதுரகவிகளும் இவர்க்கு வாக்குண்டோ? இல்லையோவென்று அறியக்கடவோமென்று அவரைக்குறித்து; “செத்ததின்வயிற்றிலே சிறியதுபிறந்தால் எத்தைத்தின் றெங்கேகிடக்கும்” என்ன; “அத்தைத்தின்றங்கேகிடக்கும்” என்றாழ்வாரருளிச்செய்ய; ஸ்ரீமதுரகவிகளும் கேட்டருளி, இவர் ஸர்வஜ்ஞராயிருந்தார், இம்மஹாநுபாவரை நாம் அநுவர்த்தித்து உஜ்ஜீவிக்கவேணுமென்று நினைத்து, மிகவும் ஹ்ருஷ்டராய், ஆழ்வார் திருவடிகளிலே ஸாஷ்டாங்கப்ரணாமமாகத் தாளுந் தடக்கையுங்கூப்பி விழுந்து சேவித்து, “மேவினேனவன்பொன்னடிமெய்ம்மையே” என்று ஆச்ரயித்து, க்ருதார்த்தராய், (௨0௬) “[illegible]” (గురుపాదామ్బుజం ధ్యాయేత్ గురోర్నామ సదా జపేత్) என்கிறபடியே த்ரிவிதகரணங்களாலும், “தத்பாதாம்புஜத்யாநம், தந்நாமகீர்த்தநம், தத்கிங்கரவ்ருத்திகளாக ஆழ்வாரை ஸதாநுபவம்பண்ணிக்கொண்டு எழுந்தருளியிருக்கிற அளவிலே, (௨0௭) “[illegible]” (ఆదిదేవో జగన్నాథో వాసుదేవో జగత్పతిః - చతుర్భుజశ్శఙ్ఖము

జ్యో॰ పరమేవ్యోమ్నితిష్ఠతి) என்று சொல்லுகிறபடியே சர்வகாரணபூதனுமாய், சர்வஸ்வாமியுமாய், சர்வநியந்தாவுமாய், நீலமேனியும் நான்குதோளும் உடையனாய், ஸ்ரீவைகுண்டத்திலே எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமந்நாராயணனானவன் ஆழ்வார்க்கு எதிர்விழி கொடுக்கவேணுமென்று திருவுள்ளமான அளவிலே, பெரியதிருவடியும் தம்முடைய பக்ஷபாதம் தோன்ற முன்னேவந்துநிற்க; (௨௦௮) " அயாகதம் கருடமமும்புரஸ்திதம் மஹாகிரிம்ஜலத இவாரு ரோஹவ: " (అయాగతంగరుడమముంపురస్థితం మహాగిరింజలదఇవారురోహనః) என்றும், " பொலிந்திருண்டகார்வானில்மின்னேபோற்றோன்றி - மலிந்ததிருவிருந்தமார்பன் - பொலிந்த - கருடன்மேற்கொண்டகரியான் " என்றும் சொல்லுகிறபடியே, கிருபாயிநியான பிராட்டிஸந்நிஹிதனாய் பெரியதிருவடிமேற் கொண்டுவந்து தோன்றி, தன்னுடைய ஸ்வரூபரூபகுண விபூதிசேஷ்டிதங்களையெல்லாம் யுகபதேவ ஸாக்ஷாத்கரித்து அநுபவிக்கலாம்படி ஆழ்வார்க்கு " மயர்வறமதிநலமருள ; ஆழ்வாரும், " பொன்னிலாமேனிமரதகத்தின்பொங்கிளஞ்சோதி " என்கிறபடியே, எம்பெருமானுடைய திவ்யாத்மஸ்வரூபத்தையும், தத்ஸ்வரூபப்ரகாசகமான திவ்யமங்கள விக்ரஹத்தையும், ததாச்ரயமான திவ்யகுணங்களையும் அநுபவித்து, அவ்வநுபவஜநித ப்ரீதி உள்ளடங்காமல், (௨௦௯) " ருசோ யஜூம்ஷி ஸாமானி ததைவாதர்வணானி ச " (ఋచోయజూంషిసామానితథైవాథర్వణానిచ) என்கிற வேதசதுஷ்டயத்தையும், இயற்பாவாக, திருவிருத்தம், திருவாசிரியம், பெரியதிருவந்தாதி என்கிற திவ்யப்ரபந்த த்ரயத்தாலே, ருக் யஜுஸ்ஸு அதர்வணம் என்கிற வேதத்ரயஸாரார்த்தத்தையும் அருளிச்செய்து, (௨௧௦) "வேதானாம் ஸாமவேதோஸ்மி" (వేదానాంసామవేదోస్మి) என்று கீதோபநிஷதாசார்யன் தானாகச்சொல்லப்பட்ட ஸாமவேதஸாரார்த்தத்தை சரமப்ரபந்தமான திருவாய்மொழியாலே யருளிச்செய்து, " மிக்கவேதியர்வேதத்தினுட்பொருள்நிற்கப் பாடியென்னெஞ்சுள்நிறுத்தினான் " என்கிறபடியே, " தேவுமற்றறியாத ஸ்ரீமதுரகவி ப்ரப்ருதிகளான ஸஜ்ஜநங்கள் திருவுள்ளத்திலே யறியக் கற்றுவல்லராம்படி ப்ரதிஷ்டிப்பித்து, " ஊரும்நாடுமுலகமுந் தம்மைப்போ " லே யாக்கி, புஷ்பத்யாகபோகமண்டபம் தொடக்கமான திவ்யதேசங்கள் எம்பெருமான்களும் திருப்புளியாழ்வாரடியிலே எழுந்தருளி, இவ்வாழ்வார்க்குத் திருமுகப்ரதானம்பண்ணி, தாங்களும், "எம்பெருமானுளனாகவே" என்கிறபடியே ஸத்தை பெற்றுநிற்க; நித்யஸூரிகளும் ஸ்வேதத்வீபவாசிகளும் இவ்வாழ்வாரையும் வைபவத்தையும் காண்கைக்காக வந்துநிற்க; அவர்களையும்சேவித்து, 'பொ

ஷிகபொலிக " என்று மங்களாசாஸநம் பண்ணி, இப்படியிருந்துள்ள ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ருத்திக்கு மங்களங்களை ஆஸாஸித்து, அவர்கள் வைபவத்தையறிந்து அநுபவித்த தமக்கு " மாறுளதோவிம்மண்ணின்மிசையே " என்றும், " இனியாவர்நிகரகல்வானத்தே " என்றும், " யான்பெரியன்நீபெரியையென்பதனையாரறிவாரொன்றெம்பெருமானுனே டே மார்தட்டியேறி " என்றும், இப்படி உபயவிபூதியிலும் தமக்கு ஸத்ருஸர் இல்லாத ப்ரபாவத்தையுடையராய், " உண்ணுஞ்சோறு பருகுநீர்தின்னும் வெற்றிலையுமெல்லாம்கண்ணன் " என்றும் பால்யாத்ப்ரப்ருதி பகவத்குணைகதாரகராயிருக்கிற இவ்வாழ்வார், (உகக) " ப்ராப்யஸ்ய ப்ரஹ்மணோ ரூபம் ப்ராப்துஶ்ச ப்ரத்யகாத்மந: - ப்ராப்த்யுபாயம் பலம் ப்ராப்தேஸ்ததா ப்ராப்திவிரோதி ச " (ప్రాప్యస్యబ్రహ్మణోరూపంప్రాప్తుశ్చప్రత్యగాత్మనః - ప్రాప్త్యుపాయంఫలంప్రాప్తేస్తథా ప్రాప్తివిరోధిచ) என்று சகலவேதசாஸ்த்ரங்களிலும் சொல்லப்படுகிற அர்த்த பஞ்சகத்தையும், (உகஉ) " த்வயார்த்த பரதரந்யாஸ்து ஸம்வேதேஷு பிதிவஜ " (ద్వయార్థపరతరన్యాస్తు సంవేదేష్వపిద్విజ) என்று மந்த்ர ஸ்ரேஷ்டமாகச் சொல்லப்படுகிற சர்வவேதசாஸ்த்ர ஸாரபூத சரணாகதிமந்த்ரார்த்தத்தையும், சரமப்ரபந்தமான திருவாய்மொழியிலே ஸுவ்யக்தமாம்படி யருளிச்செய்து, (உகங) " தர்ஶநம் பரபக்திஸ்யாத் பரஜ்ஞாநம் து ஸங்கம: - புநர்விஶ்லேஷபீருத்வம் பரமாபக்திருச்யதே " (దర్శనంపరభక్తిస్యాత్ పరజ్ఞానంతుసఙ్గమః - పునర్విశ్లేషభీరుత్వం పరమాభక్తిరుచ్యతే) என்கிறபடியே பரபக்திபரஜ்ஞாந பரமபக்திகளையுடையராய்க்கொண்டு, " தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள் சொல்லி அவாவற்று வீடுபெற்றருளினார்.

(உகச) " ஹஸ்தஸ்தாஶ்ரிதயம் ப்ரபத்யேஶ்வாரிவாஸ்யாஸமுதாரகீர்த்திம் - மாதுர்யஸம்ஶ்லிஷ்டகவித்வயுக்தம் மஹாத்வஸம்பாவிதபுத்தித்வம் " (హస్తస్థాశ్రితద్వయం ప్రపద్యేశ్వారివాస్యసముదారకీర్తిం - మాధుర్యసంశ్లిష్టకవిత్వయుక్తంమహాత్వసంభావితబుద్ధితత్త్వం.)

அநந்தரம், திருமால்திருப்பேர்வல்லாரடிக்கண்ணிசூடிய மாறனென்கிற திருக்குருகூர்நகர்நம்பிக்கு ப்ரதமசிஷ்யரான ஸ்ரீமதுரகவிகள், ப்ரபந்நஜநகூடஸ்தரான ஸ்வாசார்யவைபவத்தை, கண்ணிநுண்சிறுத்தாம்பு என்கிற திவ்யப்ரபந்தத்திலேயருளிச்செய்து, சரமார்த்தமான பஞ்சமோபாயநிஷ்டரான முமுக்ஷுக்களுக்கு உபகரித்தருளி, அர்ச்சாவதார ரூபமான ஆழ்வார் விக்ரஹத்தையும் ஏறியருளப் பண்ணி, அவர்க்கு நித்யபக்ஷமாஸாயந ஸம்வத்ஸரோத்ஸவங்களையெல்லாம் தாழ்வறநடத்திக்கொண்டு, மஹோஈ

த்ஸவங்கண்டருளப்பண்ணி, வேதந்தமிழ்செய்த பெருமாள்வந்தார், திருவாய்மொழிப்பெருமாள்வந்தார், திருநகரிப்பெருமாள்வந்தார், திருவழுதிவளநாடர்வந்தார், திருக்குருகூர்நகர்நம்பிவந்தார், காரிமாறர்வந்தார், சடகோபர்வந்தார், பராங்குசர்வந்தார், என்று பலசின்னம்பரிமாற, அவ்வளவிலே, கம்பநாடன் சிஷ்யர்கள்வந்து, எங்கள் கம்பனோடு தர்க்கித்து, சங்கப்பலகையேறினாலொழிய, வேதந்தமிழ்செய்த பெருமாள் என்று விருதுபிடிக்கவொட்டோமென்று தடுக்க, ஸ்ரீமதுரகவிகளும், அதுந்யாயமாம், எங்கள் ஆழ்வார் எங்கும் எழுந்தருளார், அவர் திவ்யஸூக்திக்குச் சங்கப்பலகை யிடங்கொடுத்ததாகில் இவர்க்கு இடங்கொடுத்ததாமென்றுசொல்லி, ஒருசிறுமுறியிலே, “ கண்ணன்கழலிணை ” என்று எழுதி, திருச்சிறுமுறியைச் சங்கப்பலகையின்மேலே வைக்க, அக்காலத்திலே, தென்மதுரையிலே கம்பநாடனோடு சேர முந்நூறுதமிழ்ப்புலவர் சங்கப்பலகையேறியிருக்க, அப்பலகை அவர்களெல்லாரையும் எடுத்துக்கவிழ்த்துப்போட்டு, ஆழ்வார் திவ்யஸூக்திச் சிறுமுறியொன்றையுமே தரித்துக்கொண்டுநிற்க; இதைக்கண்டு, கம்பநாடனும் பயப்பட்டு, “ ஈயாடுவதோகருடற்கெதிரேயிரவிக்கெதிர்மின்மினியாடுவதோ, நாயாடுவதோவுறுவெம்புலிமுன்னரிகேசரிமுன்னடையாடுவதோ, பேயாடுவதோவெழிலூர்வசிமுன்பெருமாள்வகுளாபரணன்றருசொல், ஓராயிரமாமறையின்பொருளின்னொருசொற்பொருமோவுலகிற்கவியே ” என்று ஆழ்வார்விஷயமாகக் கவிசொல்லி, அபராதக்ஷாபணம் பண்ணிக்கொண்டான். பின்னையும் அங்குக்கிடந்த தமிழ்ப்புலவர், ப்ரத்யேகம் ப்ரத்யேகம் கவிசொல்லி, அபராதக்ஷாபணம் பண்ணிக்கொண்டார்கள். இப்படி, (உகரு) “ [illegible]காஶயெந்நித்யம் ” ([illegible]) என்று ஸ்வாசார்யரான ஸ்ரீபராங்குசருடைய வைபவத்தை, “ ஊரும்நாடுமுலகமும் ” எல்லாமறியும்படி ப்ரகாசிப்பித்துக்கொண்டு சிலகாலம் எழுந்தருளியிருந்து லோகத்தை வாழ்வித்தருளினார்.

செத்ததின்வயிற்றிலே சிறியதுபிறக்கையாவது, செத்தது என்று அசித்து - அதெங்ஙனேயென்னில், அப்ராணிமத்தாய் ஜடமாயிருக்கையாலே அசித்தைச் சொல்லுகிறது. அதின்வயிற்றிலே சிறியது பிறக்கையாவது, சரீரத்தோடே ஆத்மாவுக் குண்டான சம்பந்தத்தை. சிறியதாவது - அணுபரிமாணமா யிருக்கிற ஆத்மாவைச் சொல்லுகிறது. சரீரத்தோடே ஆத்மாவுக்கு சம்பந்தமுண்டானால், அதுக்கு போக்யமும் அசித்கதமா யிருக்கிற சுகதுக்கங்கள். அத்தைத் தின்று அங்கே கிடக்கையாவது, சரீரகதமாயிருக்கிற சுகதுக்காதிகளை புஜித்துக்கொண்டு சரீரத்தையே

ஆஶ்ரயித்துக்கொண்டிருக்கை. தத்வதர்ஶிகளாக இப்படி அவதரித்தருளின இவ்வாழ்வார்கள் அருளிச்செய்த திவ்யப்ரபந்தங்கள் முக்யதமமான ப்ரமாணங்களாயிருக்க, தேவதாந்தரவிஷயமாக, "தெய்வநான்முகக்கொழுமுளையீன்று முக்கணீசனொடு தேவுபலனுதவி மூவுலகும் விளைவித்தவுந்தி ,, என்றும், "பூவினுன்முகனைப்படைத்ததேவன் ,, என்றும், "நான்முகனைமுழ்த்தநீருலகெல்லாம் படையென்று முதல்படைத்தாய் ,, என்றும், "நான்முகன்றன்னொடுதேவருலகோடுயிர்படைத்தான் ,, என்றும், "பிரமன்சிவனிந்திரனுதிக்கெல்லாம் நாபிக்கமலமுதற்கிழங்கு ,, என்றும், "பிரமனைத்தனுந்தியிலேதோற்றுவித்து ,, என்றும், "இருந்தண்கமலத் திருமலரினுள்ளே திரிந்த திசைமுகனைத்தந்தாய் ,, என்றும், "தன்னுந்திவா யன்று நான்முகனைப்பயந்தவாதிதேவன் ,, என்றும், "நான்முகனைநாராயணன்படைத்தான் ,, என்றும், "உந்தியிற்றோற்றினாய்நான்முகனை ,, என்றும், "உந்தியெழுந்தவுருவமலர்தன்னிற்சந்தச்சதுமுகன்றன்னைப்படைத்தவன் ,, என்றும், "உந்திமேனான்முகனைப்படைத்தான் ,, என்றும் இப்படி இவ்வாழ்வார்களெல்லாரும் ப்ரஹ்மருத்ராதிகளை சர்வேஶ்வரன்தானே ஸ்ருஷ்டித்தா னென்றருளிச்செய்தும்;

இங்ஙனன்றிக்கே, "உன்னிரை மலர்ப்பாதங்கள் சூடித்தொழுவார் ஒற்றைப்பிறையணிந்தானும் நான்முகனு மிந்திரனும் மற்றையமரு மெல்லாம் ,, என்றும், "கள்வாவெம்மையுமேழுலகும் நின்னுள்ளேதோற்றிய விறைவவென்று வெள்ளேறனுன்முக னிந்திரன்வானவர் புள்ளூர்திகழல்பணிந்தேத்துவர் ,, என்றும், "நாடோறும்வானவர் தம்மை யாளுமவனும் நான்முகனும் சடைமுடியண்ணலும் செம்மையா லவன்பாதபங்கயம் சிந்தித்தேத்தித்திரிவர் ,, என்றும், "நுண்ணுணர்வினீலார் கண்டத்தம்மானும் நிறைநான்முகனுமிந்திரனும் சேலேய்கண்ணார் பலர்சூழவிரும்பும் திருவேங்கடத்தானே ,, என்றும், "அரனுன்முகனேத்தும் செய்யநின்றிருப்பாதத்தையான் ,, என்றும், "மேவித்தொழும்பிரமன்சிவனிந்திரன் ,, என்றும், "நெற்றிபெற்றகண்ணன் விண்ணினாதனோடுபோதின்மே னற்றவத்தநாதனோடு மற்றுமுள்ளவானவர்க்கற்றபத்தியால்வணங்குபாதம் ,, என்றும், "நீறுசெஞ்சடைநீலகண்டனும் நான்முகனும் முறையால் சீறுவாசகம் செய்யநின்ற திருமால் ,, என்றும், "அவரிவரொன்றில்லையரவணையான்பாதம், எவர்வணங்கியேத்தாதாரொன்னில் - பவரும், செழுங்கதிரோனொண்மலரோனக்கண்ணுதலோவன்றே, தொழுந்தகையானூர்தொடர்ந்து ,, என்றும், இப்படி

ப்ரஹ்மருத்ராதிதேவதைகள் எம்பெருமானைக் கிட்டி, ஸ்தோத்ரம் பண்ணி, தண்டனிட்டுத் திரிவார்கள் என்றருளிச்செய்தும்;

இங்ஙனன்றிக்கே, "கேழ்த்தசீரரன்முதலாக்கிளர்தெய்வமாய்க்கிளர்ந்து, சூழ்த்தமரர்துதித்தாலுன்றொல்புகழ்மாசூணாதே" என்றும், "நினைந்து நைந்துள்கரைந்துருகியிமையோர்பலருமுனிவரும் புனைந்தகண்ணிநீர்சாந்தம் புகையோடேந்திவணங்கினாலுன்பெருமைமாசூணாதோமாயோனே" என்றும் "மாசூணாவான் கோலத்தமரர்கோன் வழிப்பட்டால் மாசூணாவுன்பாதமலர்ச் சோதிமழுங்காதே" என்றும், "பிறையேறுசடையானுநான்முகனுமிந்திரனு மிறையாதலறிந்தேத்தவீற்றிருத்தலிதுவியப்பே" என்றும், இப்படிப்ரஹ்மருத்ராதிகள், ஸத்வகுணோத்தரரானபோது, எம்பெருமானைக்கிட்டி ஸேவித்து ஸ்தோத்ரம்பண்ணினால் எம்பெருமானுக்கவத்யாவஹமென்றருளிச்செய்தும்;

இங்ஙனன்றிக்கே, "ஈளிர்மதிச்சடையனென்கோ நான்முகக் கடவுளென்கோ" என்றும், "சிவனாயயனாய்" என்றும், "கடிகமழ்கொன்றைச்சடையன்" என்றும், "நான்முகக்கடவுள்" என்றும், "பூத்தண்டுழாய்முடியாய்புனைகொன்றையஞ்செஞ்சடையாய்வாய்த்தவென்னான்முகனே" என்றும், "என்றிருமார்வன்றன்னையென்மலைமகள் கூறன்றன்னை என்றுமென்னாமகளை அகம்பாற்கொண்ட நான்முகனை" என்றும், "மூனியேநான்முகனேமுக்கணப்பா" என்றும், "அவாவறச்சூழரியையயனையரனையலற்றியவாவற்று" என்றும் இப்படி இத்திவ்யப்ரபந்தங்களிலே ஆதிமத்யாவஸாநமாக ப்ரஹ்மருத்ராதிகளை ஸர்வேஶ்வரன்தானே ஸ்ருஷ்டித்தானென்றருளிச்செய்தும், ஆக இப்படி ஒருக்காலருளிச்செய்வது ஒருக்காலருளிச்செய்யா திருக்கையாலே இவற்றை முக்யதமமான ப்ரமாணமென்று விஶ்வஸிக்கலாயிருந்ததில்லை.

எங்ஙனேயென்னில், இவ்வாழ்வார்கள் தாங்கள்தங்களுக்குதேவதாந்தரவிஷய வைராக்யமுண்டென்றுதோற்ற, "ஒலுவுலகினதியல்வே, ஈன்றோளிருக்கமண்ணீராட்டிப் படைத்திடந்துண் டுமிழ்ந்தளந்துதேர்ந்துலகளிக்கும் முதற்பெருங் கடவுணிற்பப் புடைப்பலவாநெறிதெய்வம்பேணுதல்தனாது புல்லறிவாண்மைபொருந்தக்காட்டி" என்றும், "மற்றுமோர்தெய்வமுளதென்றிருப்பாரோ டுற்றிலேன்" என்றும், "எம்பெருமானுண்டுமிழ்ந்தவெச்சிற்றேவர் அல்லாதார்தாமுளரே" என்றும், அதுவுமன்றிக்கே, "திடவிசும்பெரிவளிநீர்நிலமிவைமிசைப்படர்பொருண்முழுவதுமாயவையவைதொறும் உடன்மிசையுயிரெனக்கரந்தெங்கும் பரந்துளன் சுடர்மிகுசுருதியுளிவையுண்டசுரனே" என்றும், "போதின்மங்கை பூதலக்கிழத்திதேவியன்றியும்போதுதங்கு நான்முகனவன்மகன் மகன்சொலின்மாது தங்குகூறனேற

தூர்த்தியென்றுவேதநூலோதுகின்றதுண்மை ,, என்றும், “ நீர்த்தனுலகளந்த சேவடிமேற்பூந்தாமம் - சேர்த்தியவையேசிவன்முடிமேற்றான்கண்டு - பார்த்தன்றெளிந்தொழிந்த பைந்துழாயான்பெருமை - பேர்த்துமொருவராற்பேசக்கிடந்ததே ,, என்றும், “ கபாலநன்மோக்கத்துக்கண்டுகொண்மின் ,, என்றும், “ மார்க்கண்டேயனுங்கரியேகறுத்தமனமொன்றும்வேண்டா கண்ணனல்லாற்றெய்வமில்லை ,, என்றும், “ சத்தியங்காண்மினையாசிலையினாலிலங்கைசெற்றதேவனே தேவனாவான் ,, என்றும், இப்படி ப்ரமாணத்தாலும், ப்ரத்யக்ஷத்தாலும், சாக்ஷியாலும், (உகசு) “ 𑌯𑌦𑍇𑌤𑌤𑍍𑌪𑌰𑌮𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌲𑍋𑌕𑌵𑍇
𑌦𑍇𑌷𑍁𑌪𑌠𑍍𑌯𑌤𑍇 - 𑌸𑌦𑍇𑌵𑌃𑌪𑍁𑌣𑍍𑌡𑌰𑍀𑌕𑌾𑌕𑍍𑌷𑌸𑍍𑌸𑍍𑌵𑌯𑌨𑍍𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌃𑌪𑍍𑌰𑌭𑍁𑌃 ”
యదేతత్పరమంబ్రహ్మలోకవేదేషుపఠ్యతే - సదేవఃపుణ్డరీకాక్షస్స్వయన్నారాయణఃప్రభుః)
என்றுசொல்லப்படுகிற ஸ்ரீமந்நாராயணனே ஸர்வஸ்மாத்பரனென்று சாதித்தும், அதுவும்போதாமல், (உகஎ) “ 𑌪𑌰𑌃𑌪𑌰𑌾𑌣𑌾𑌂𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌯
𑌸𑍍𑌯𑌤𑍁𑌷𑍍𑌟𑍋𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨𑌃- 𑌸𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌯𑌸𑍍𑌥𑌾𑌨𑌮𑍇𑌤𑌤𑍍𑌸𑌤𑍍𑌯𑌂𑌮𑌯𑍋
𑌦𑌿𑌤𑌂 ” (పరఃపరాణాంపురుషో యస్యతుష్టోజనార్దనః - సప్రాప్నోత్యక్షయస్థానమేతత్స
త్యంమయోదితం) என்றும், (உகஅ) “ 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌸𑌮𑌂𑌨𑌭𑍂𑌤𑌂𑌨
𑌭𑌵𑌿𑌷𑍍𑌯𑌤𑌿 - 𑌏𑌤𑍇𑌨𑌸𑌤𑍍𑌯𑌵𑌾𑌕𑍍𑌯𑍇𑌨𑌸𑌰𑍍𑌵𑌾𑌰𑍍𑌥𑌾𑌨𑍍𑌸𑌾𑌧𑌯𑌾𑌮𑍍𑌯𑌹𑌂 ”
(నాస్తినారాయణసమంనభూతంనభవిష్యతి - ఏతేనసత్యవాక్యేనసర్వార్థాన్ సాధయామ్య
హం) என்றும், இப்படியே ருஷிகள் வாக்யங்களையும் அவற்றுக்கடியான ஶ்ருதிவாக்யங்களையுங் கொண்டு வித்வத்கோஷ்டியான ராஜஸ்தாநத்திலே பரதத்வ நிர்ணயம்பண்ணி விளைந்து கிழியறுத்தும், இப்படி நிஶ்சயம்பண்ணின ஆழ்வார்கள் ஒருக்கால் அருளிச்செய்தது ஒருக்கால் அருளிச்செய்திலர்க ளென்னவொண்ணாது, ஆனால் இவற்றுக்குக் கருத்தென்னென்னில் ; அந்த தேவதாந்தரங்களினுடைய ஸ்வரூபஸ்வபாவங்களுக்கீடாக அருளிச்செய்தார்களித்தனை, எங்ஙனேயென்னில் ; இவர்கள் கர்மவஶ்யரில் ப்ரதாநராகையாலே, (உகக) “ 𑌯𑍁𑌗𑌕𑍋𑌟𑌿𑌸𑌹𑌸𑍍𑌰𑌾𑌣𑌿𑌵𑌿
𑌷𑍍𑌣𑍁𑌮𑌾𑌰𑌾𑌧𑍍𑌯𑌪𑌦𑍍𑌮𑌭𑍂𑌃 - 𑌪𑍁𑌨𑌸𑍍𑌤𑍍𑌰𑍈𑌲𑍋𑌕𑍍𑌯𑌧𑌾𑌤𑍃𑌤𑍍𑌵𑌂𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌵𑌾𑌨𑌿
𑌤𑌿𑌶𑍁𑌶𑍍𑌰𑍁𑌮𑌃 - 𑌮𑌹𑌾𑌦𑍇𑌵𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌮𑍇𑌧𑍇𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌾𑌹𑍁𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂𑌦𑍇𑌵𑌦𑍇
𑌵𑍋𑌬𑌭𑍂𑌵 ” (యుగకోటిసహస్రాణివిష్ణుమారాధ్యపద్మభూః - పునస్త్రైలోక్యధాతృ
త్వంప్రాప్తవానితిశుశ్రుమః - మహాదేవస్సర్వమేధేమహాత్మాహుత్వాత్మానందేవదేవోబభూవ )
என்கிறபடியே, பூர்வஜந்மங்களிலே ப்ரஹ்மபதம் ருத்ரபதம் பெறுகைக்குத் தபஸ்ஸுபண்ணுகையாலே, அந்தத் தபஃபலமாக எம்பெரு

மானாலே ஸ்ருஷ்டர்களானார்களென்றும், இவர்கள் எம்பெருமான்திருமேனியைப்பற்றி லப்தஸ்வரூபராயிராதபோது இவர்களுக்கு ஸத்தைகுலையுமென்றும், இவர்கள் ஸத்வோத்ரிக்தரானபோது பகவத் ஸ்தோத்ராதி சேவைகளுக்கு யோக்யராயிருப்பர்களென்றும், இவர்கள் ராஜஸதாமஸப்ரசுரரானபோது அஹங்காரத்தாலே பண்ணும் துர்மானம் கனத்திருக்கையாலே இவர்கள் எம்பெருமானைக்கிட்டி ஸ்தோத்ரம்பண்ணி சேவிக்கை அவத்யாவஹமென்றும், இவர்களுடைய ஸ்வரூபஸ்த்திதி ப்ரவ்ருத்திநிவ்ருத்திகள் பகவததீநமாய் சரீரவச்சேஷமாயிருக்கையாலே, (௨௨௦) "ஏக ஏவ ஜகத்ஸ்வாமீ ஶக்திமாநச்யுத: ப்ரபு: - ததம்ஶாஶ்ஶக்திமந்தோ௨ந்யே ப்ரஹ்மேஶாநாதயோ௨மரா:" (ఏకఏవజగత్స్వామీశక్తిమానచ్యుతఃప్రభుః - తదంశాశ్శక్తిమన్తోన్యేబ్రహ్మేశానాదయోమరాః) என்கையாலும், அவன் தனக்கு சரீரமாக அருளிச்செய்கையாலே இத்திவ்ய ப்ரபந்தங்களை முக்யதமமான ப்ரமாணங்களென்னக் குறையில்லை. இவர்கள் ஸர்வேஶ்வரனுக்கு சரீரமானபடி யென்னென்னில்; (௨௨௧) "ஸ ஏவ ஸ்ருஜ்யஸ்ஸ ச ஸர்க்ககர்த்தா ஸ ஏவ பாத்யத்தி ச பால்யதே ச - ப்ரஹ்மாத்யவஸ்தாபிரஶேஷமூர்த்திர்விஷ்ணுர்வரிஷ்டோ வரதோ வரேண்ய:" (సఏవసృజ్యస్సచసర్గకర్తా సఏవపాత్యత్తిచపాల్యతేచ - బ్రహ్మాద్యవస్థాభిరశేషమూర్తిర్విష్ణుర్వరిష్ఠోవరదోవరేణ్యః) என்றும், (௨௨௨) "கல்பாந்தே ருத்ரரூபீ ஸந் க்ரஸதே ஸகலம் ஜகத் - தமாத்யம் புருஷம் விஷ்ணும் ப்ரணதோ௨ஸ்மி ஜநார்த்தநம்" (కల్పాంతేరుద్రరూపీసన్ గ్రసతేసకలంజగత్ - తమాద్యంపురుషంవిష్ణుంప్రణతోస్మిజనార్దనం) என்றும், (௨௨௩) "ஸ்ருஷ்டிஸ்தித்யந்தகரணீம் ப்ரஹ்மவிஷ்ணுஶிவாத்மிகாம் - ஸ ஸம்ஜ்ஞாம் யாதி பகவாநேக ஏவ ஜநார்த்தந:" (సృష్టిస్థిత్యన్తకరణీంబ్రహ్మవిష్ణుశివాత్మికాం - ససంజ్ఞాంయాతిభగవానేకఏవజనార్దనః) என்றும், "தாமோதரனுருவாகியசிவற்குந்திசைமுகற்கும்" என்றும், "அரனயனென வுலகழித்தமைத்துளனே" என்றும் அருளிச்செய்தார்கள். இவர்கள் ஸர்வேஶ்வரனுக்கு சரீரபூதராக, அவன் தான் ஆத்மாவாகக் கூடும்படி எங்ஙனேயென்னில்; சரீரவாசிசப்தம் சரீரிபர்யந்தாபிதாநம்பண்ணக்கடவதிறே. ஒருசரீரியானவன், (௨௨௪) "ஸ்தூலோ௨ஹம் க்ருஶோ௨ஹம்" (స్థూలో௨హం కృశో௨హం) என்றுதானும்சொல்லி, நீ தடித்தாய் இளைத்தாயென்று சொல்லுமாபோலே இவர்களையும் ஸர்வேஶ்வரன் தானாகச்சொல்லக் குறையில்லை. "நீர்வானமண்ணெரிகாலாய் நின்றநேமியான்" என்றும், "சூழ்ந்தகன்றாழ்ந்துயர்ந்தமுடிவில்பெரும்பாழேயோ சூழ்ந்ததனிற்பெரியபர நன்மலர்ச்சோ

தியோ சூழ்ந்ததனிற்பெரியசுடர்ஞானவின்பமேயோ ,, என்றும், " தேவராய்நிற்குமத்தேவுமத்தேவரில் - மூவராய்நிற்குமுதுபுணர்ப்பும் - யாவராய் - நிற்கின்றதெல்லாம்நெடுமால் ,, என்றும், " முதலாவார்மூவரம்மூவருள்ளும் முதலாவான்மூரிநீர்வண்ணன் ,, என்றும் இத்யாதிகளாலே அவனையொழிந்த சகல சேதநாசேதநங்களும் அவனதாக அருளிச்செய்தார்கள். இப்படி யருளிச்செய்கைக்கடி, (உஉரு) " யஸ்யாத்மாஶரீரம் யஸ்யப்ருதிவீஶரீரம் " (యస్యాత్మాశరీరం యస్యపృథివీశరీరం) என்கிறபடியே ஸர்வேஶ்வரனுக்கு ஆத்மாவும் சரீரம், அசித்தும் சரீரம் என்று வேதத்திலே சொல்லுகையாலே, (உஉசு) " விஶ்வரூபஞ்சதர்ஶயாமாஸ " (విశ్వరూపం దర్శయామాస) என்று அவன் தானும் அருளிச்செய்ததும், திருத்தேர்த்தட்டிலே அர்ஜ்ஜுநனுக்கு விஶ்வரூபத்தைக் காட்டுகையாலும் குறையில்லையிறே. (உஉஎ) " ப்ரஹ்மா நாம ஈஶோஹம் ஸர்வதேஹிநாம் - ஆவாம் தவாங்கஸம்பூதௌ தஸ்மாத் கேஶவநாமவான் " (కఃఇతిబ్రహ్మణోనామ ఈశోహం సర్వదేహినాం - ఆవాం తవాఙ్గసంభూతౌ తస్మాత్ కేశవనామవాన్ ) என்று சொல்லுகிறபடியே நாராயணன் பக்கலிலே ப்ரஹ்மருத்ராதிகள் ஜாதராணர்கள் என்றும், இவர்கள் திருநாபீகமலத்தையும் தக்ஷிணபார்ஶ்வத்தையும் பற்றி லப்தஸ்வரூபரா யிருப்பர்கள் என்றும், (உஉஅ) " பாதேநகமலாக்ஷேந ப்ரஹ்மருத்ரார்ச்சிதேநச - பஸ்யஶங்கரபுண்டரீகாக்ஷ பாததலமஸ்தகம் " (పాదేనకమలాక్షేన బ్రహ్మరుద్రార్చితేనచ - పస్యశఙ్కరపుణ్డరీకాక్ష ఆపాదతలమస్తకం) என்று இவர்கள் சேஷபூதராய் எம்பெருமானை அர்ச்சிப்பர்கள் என்றும், இவர்கள் தததீநமான ஸத்தா ஸ்திதி ப்ரவ்ருத்திகளை யுடையராகையாலே எம்பெருமான் தானேயென்று ஶ்ருதீதிஹாஸ புராணங்களும்சொல்லிற்றின. (உஉகூ) " பரமாத்மாபரோயோஸௌ நாராயணஸமாஹ்வயः - தஸ்யாங்கவாயிநீஶக்திர்தேவீ தத்தர்மசாரிணீ " (పరమాత్మాపరోయోసౌ నారాయణసమాహ్వయః - తస్యాఙ్గవాయినీశక్తిర్దేవీ తద్ధర్మచారిణీ) என்று சொல்லுகிறபடியே எத்தனையேனும் பிரிவாற்றகில்லாத பிராட்டியாரோபாதி ப்ரஹ்மருத்ராதிகளும் இவன் திருமேனியிலே ஸர்வகாலமிருப்பர்களோவென்னில் ; ஆபத்காலத்திலே அவர்களுக்கும் எம்பெருமான் திருமேனியிலே யொதுங்க இடங்கொடுக்குமத்தனை யல்லது எப்போதும் இரார்கள். இத்தால் ஸர்வேஶ்வரனுக்கு மஹத்தான சீலகுணமாகையாலே ஆழ்வார்கள் எப்போதும் அத்தையே அருளிச்செய்து கொண்டு போருவர்கள். " தாளதாமரையானுனதுந்தியான் - வாள்கொ

ணீண்மழுவாளியுன்னுகத்தான் - ஆளராய்த்தொழுவாருமமரர்கள் - நாளு மென்புகழ்கோநுனசீலமே ,, என்றும், " அக்கும்புலியினதளுமுடையா ரவரொருவர்பக்க நிற்கின்றபண்பனூர் ,, என்னக்கடவதிறே.

கலகங்களானல் அடைய வளைந்தானுக்குள்ளே இன்னசாதியென் னுமல் எல்லாருங் கூடியிருந்து, கலகந் தெளிந்தவாறே புறப்பட்டாலும் இவ்விடம் இன்னான்பற்று இவ்விடம் இன்னான்பற்று என்று சொல்லுமா போலே என்று நஞ்சீயருக்குப் பட்டர் அருளிச்செய்தாரிறே. கீழ் இவர் களுக்குச் சொன்ன வித்தையும் நமக்கும் ஒக்கும் ஒக்கும் என்றருளிச் செய்தார்கள். எங்ஙனேயென்னில் ; " வாடாதமலரடிக்கீழ் வைக்கவேவகு குக்கின்று ,, என்றும், " என்னையாக்கிக்கொண்டு ,, என்றும், "அந்நாள் நீதந்தவாக்கை ,, என்றும், இங்ஙனன்றிக்கே, " என்னைத் தன்பொன்ன டிக்கீழிருத்தி ,, என்றும், இவ்வளவுமன்றியே, "குலதொல்லடியேன்,, என்றும், " குடிகுடிவழிவந்தாட்செய்யும்தொண்டர் ,, என்றும், " அடி யோம்போற்றி ,, என்றும், இங்ஙனன்றிக்கே, " அருவினையேன்களவேழ் வெண்ணெய்தொடுவுண்டகள்வாவென்பன் ,, என்றும், " உயிர்வேறின்றி யொன்றாகவே ,, என்றும், இப்படி தமக்கொன்றும் பிறர்க்கொன்றுமா காமல் அருளிச்செய்தாரிறே.

இனி ; அவர்களோடு ஸமரோ இவ்வாழ்வார்க ளென்னில் ; அன் று ; கர்மத்தையிட்டு ஸ்ருஷ்டித்தானென்றது அவர்களை, ஸ்வேச்சையா லே அவதரிப்பித்தானென்றது இவர்களை. ஆபத்காலத்திலே ஆபந்நிவார ணார்த்தமாகக் காதாசித்கமாகத் திருமேனியிலே யிடங்கொடுத்து வைத் தானென்றது அவர்களை. இவர்களை நீக்கமில்லாவடியார் ,, என்னக்கடவ திறே. அவர்கள் ராஜஸ தாமஸ மிஶ்ரஸத்வம் தலையெடுத்தபோது பகவ த்விஷய ப்ரவ்ருத்தி கனத்திருக்கையாலே சேஷபூதரென்கிறது அவர்க ளை. இவர்கள் "முக்குணத்திரண்டவையகற்றி ஒன்றினிலொன்றுநின்று, நிலைநின்ற தொண்டரான, " அறந்திகழுமனத்தவர் ,, என்றுசொல்லுகிற சுத்தஸத்வநிஷ்டரா ரகையாலே தெளிவுற்ற சிந்தையரான சேஷபூதரெ ன்கிறது இவர்களை. அவர்கள் ஸத்வகுணங்குலைந்து ராஜஸதாமஸ ப்ரசு ரானபோது அஹங்கரித்து, (உரு௦) " கொயம்விஷ்ணு ,, (கோऽயம்விஷ்ணு: என்றும், " பரிவின்றிவாணனைக் காத்துமென்றன்று படையொடும் வ ந்தெதிர்ந்த ,, என்றும், இப்படிபாணாஸுரயுத்தாதிகளிலே ஈஶ்வரனோடே எதிரம்புகோக்கையாலே ஈஶ்வரனைக்கிட்ட அவத்யமென்றும், பகவத் வி ஷயாதிகாரத்துக்கு முன்புண்டான ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளிலே பெ

ல்லாங்குகளை யநுஸந்தித்தும், "பின்னுகன்தன்னோடெதிர்வனவனெனக் குநேரான்,, என்று தாமருளிச்செய்தாரிறே. ஆகையாலே ஸமர் என்ன வொண்ணாது. ஆனால், இவ்வாழ்வார்கள் உத்க்ருஷ்டஜந்மஜாதரன்றிக்கே நிக்ருஷ்டஜந்மஜாதரான இவர்களுடையபாஷாகாநரூபமாய், பௌருஷேயமாய், அநித்யமாயிருக்கிற இவற்றை; அபௌருஷேயமாய், நித்யமாய் நிர்த்தோஷப்ரமாணமான வேதத்தோடொக்க த்ருடதர ப்ரமாண மென்னும்படி யெங்ஙனேயென்னில்; இவர்கள் உத்க்ருஷ்டஜந்மத்திலே அவதரித்தால் உத்க்ருஷ்டஜந்ம ஜாதர்க்கொழிய அபக்ருஷ்ட ஜந்மஜாதர்க்கு ஈடேறவழியில்லையாகையாலும், ப்ரபத்திஸர்வாதிகாரமாகையாலும், இவர்கள் ஸம்ஸாரநிமக்நரை யுயர்த்தத் தாழவிழிந்தார்களிறே. (உ௱க) "ஹரிகீர்த்திம் விநைவாந்யத் ப்ராஹ்மணேந நரோத்தம - பாஷாகாநந்நகாதவ்யம் தஸ்மாத்பாபம் த்வயாக்ருதம்" (హరికీర్తిం వినైవాన్యత్ బ్రాహ్మణేన నరోత్తమ - భాషాగానన్నగాతవ్యం తస్మాత్పాపం త్వయాకృతం) என்று சொல்லுகையாலே பகவந்நாமகீர்த்தநத்துக்கு பாஷாகாநரூப தோஷமில்லாமையாலும் வடமொழி மறையென்றது தென்மொழிமறையை நினைத்தாகையாலும், "செந்திறத்தமிழோசைவடசொல்லாகி,, என்றும், "செந்தமிழும்வடகலையுந்திகழ்ந்தநாவர்,, என்றும், "ஆகஸ்த்யமுமநாதி,, என்றும், "பொய்யில்பாடல்,, என்றும், "பொய்ம்மொழியொன்றில்லாத மெய்ம்மையாளன்,, என்றும் சொல்லப்படுகிற ஶடத்வேஷிகலிஜித் வசநவிருத்தமிறே. ஆகையாலே பாஷாகாநரூபதோஷமேயில்லை.

இனி; புருஷபுத்திமூலமான தோஷத்துக்கு, "யானொய்த்தன்னைத்தான் பாடித்தென்னாவென்னுமென்னம்மான்,, என்று சொல்லுகிறபடியே இவ்வாழ்வார்கள் நாவிலிருந்து இன்கவிபாடும் பரமகவிகளாக நன்கு வந்து நன்றாக பரமசேதநனான பரவாசுதேவன்தானே பாடி ப்ரகாசிப்பித்ததாகையாலும், "அன்னமாயன்றங்கறநூலுரைத்த,, என்று சொல்லுகிறபடியே ஹம்ஸாவதாரமாய் ப்ரஹ்மாவுக்கு வேதத்தை யுபகரித்தாற்போலேயும், வ்யாஸனை உத்தேசித்து வேதத்தை விஸ்தரிப்பித்தாற்போலேயும் ப்ரகாசிப்பித்ததாகையாலே இப்ரபந்தங்களுக்குப் புருஷபுத்தி ஜநிததோஷமேயில்லை. ஸுப்தப்ரபுத்தரான சிஷ்யர்களை உபாத்யாயர் ஓதுவிக்குமாபோலேயும், ப்ரளயாவஸ்த்தையிலும் தம் திருவுள்ளத்திலேவைத்துக்கொண்டிருந்து, ஸ்ருஷ்டிகாலம் வந்தவாறே வேதத்தை ப்ரகாசிப்பித்தாற்போலே ப்ரகாசிப்பித்ததாகையாலே அநித்யதோஷ ப்ரஸங்கமேயில்லை. ஆகையாலே வேதத்துக்குண்டான ப்ராமாண்யம் இதுக்

கும் ஒக்குமிறே. (உ௱௨) "யோ வேதவர்ணேஷு து வர்ணபுத்திம் ஸாமாந்யதோ வைவித்யாதி மர்த்ய: - ஸயாதி கோராந்நரகாநஸங்க்யாந் பிஶாசதாமேதி மஹீதநேஷு" (యోవేదవర్ణేషుతువర్ణబుద్ధిం సామాన్యతో వైవిధ్యాతిమర్త్యః - సయాతిఘోరాన్నరకానసంఖ్యాన్ పిశాచతామేతిమహీతనేషు) என்று சொல்லுகிறபடியே (உ௱௩) "த்ரைகுண்யவிஷயா வேதா:" (త్రైగుణ్యవిషయా వేదాః) என்று த்ரிகுணாத்மபுருஷர்களை விஷயீகரிக்கும் வேதத்துக்கிப்படியானால், "சழக்குநாக்கொடு புன்கவிசொன்ன வழுக்களை" வர்ணங்களல்லாத சுத்த ஸத்வமயமான த்ரமிடோபநிஷத் ஸாரத்துக்குச் சொல்லவேண்டாவிறே. (உ௱௪) "அர்ச்சாவதாரோபாதாந வைஷ்ணவோத்பத்தி சிந்தநம் - மாத்ருயோநிபரீக்ஷாயாஸ்துல்யமாஹுர் மநீஷிண:" (అర్చావతారోపాదానవైష్ణవోత్పత్తిచింతనం - మాతృయోనిపరీక్షయాస్తుల్యమాహుర్మనీషిణః) என்கிற இத்தைவிட் டின்பப்பாக்களில் த்ரவ்யபாஷாநிரூபணஸமம் இன்பமாரியிலாராய்ச்சி என்றிறே இவ்வர்த்தத்தை ஆசார்யஹ்ருதயத்திலே அழகியமணவாளப்பெருமாள் நயினாரும் அருளிச்செய்தாரிறே. ஆகையால் அருளிச்செயலில் அப்ராமாண்யபுத்தி மாத்ருயோநி பரீக்ஷையோடொக்குமிறே. ஆனபின்பு இவையே முக்யதம ப்ரமாணங்களென்றுநின்றது. ஆழ்வார்களுக்கு எம்பெருமான் ப்ரத்யக்ஷ ஸாக்ஷாத்காரமோ? ஜ்ஞாநஸாக்ஷாத்காரமோ வென்னில்; ஜ்ஞாநஸாக்ஷாத்கார மல்லது ப்ரத்யக்ஷஸாக்ஷாத்காரமேயில்லை. ஆகில், "கமலக்கண்ணனென்கண்ணினுளான் காண்பன்" என்றும், "நம்பியை நான் கண்டபின்" என்றும், "கண்ணுள்ளூம் நீங்காவே" என்றும் சொல்லுகிறவை செய்யும்படி எங்ஙனேயென்னில்; அவையும்ப்ரத்யக்ஷஸமாநாகாரமான ஜ்ஞாநஸாக்ஷாத்காரமாகக்கடவது. "நள்ளிராவுநண்பகலுநானிருந்தோலமிட்டால், கள்ளமாயாவுன்னையென்கண்காணவந்தீயாயே" என்றும், "பக்கநோக்கிநின்றலந்தேன்பாவியேன்காண்கின்றிலேன்" என்றும் மற்றுமிப்படிபாட்டுக்கள்தோறும் பெரிய ஆர்த்தியோடேகூப்பிட்டும், "காணவந்தென்கண்முகப்பே" என்கிற பாட்டின்படியே ப்ரஹ்மருத்ராதிகளும் அகப்படக்கூப்பிட்டாலும் காணவொண்ணாதவஸ்துவை நடையழகு நிலையழகு கண்ணழகுகளை ப்ரத்யக்ஷமாக அநுபவிக்கவேணுமென்று கூப்பிடுகிற இதுக்கு ப்ரயோஜநமில்லையென்று நிராஸமாவது. பின்னையும் அவனை சாபல்யாதிசயத்தாலே, "அப்பனேயடலாழியானே" என்கிற பாட்டின்படியே ப்ரதம பரிஷ்வங்கமே தொடங்கிக் காணவேணுமென்று அபேக்ஷ்யமான

ஆத்மவஸ்து குருத்துவற்றாக வுலரும்படி பார்த்துக் கண்மறைந்து காண்கிலேன் என்று ப்ரத்யக்ஷமாக, (உ௲௫) "நமாம்ஸசக்ஷுஷாபிவீக்ஷதே தம்" (నమాంసచక్షుషాభివీక్షతేతం) என்று மாம்ஸசக்ஷுஸ்ஸுக்குக் காணவொண்ணாதென்று நிராஸராய் "தக்கஞானக்கண்களாலேகண்டுதழுவுவன்" என்று ப்ரத்யக்ஷஸமான ஜ்ஞாந ஸாக்ஷாத்காரமொழிய, "கட்கண்ணாலேகாணவில்லை, என்று நிர்த்தரிக்கையாலே கீழ் கண்டேன் என்று பலவிடங்களிலும் அருளிச்செய்ததும் ஜ்ஞாநஸாக்ஷாத்காரமாகக்கடவது. கண்டேன் என்றபத்தும் உட்கண்ணாலே என்று ஆசார்ய ஹ்ருதயத்திலே அழகியமணவாளப்பெருமாள் நயினாருமருளிச்செய்தாரிறே. ஆகையால் இவ்வர்த்தம் சுத்த ஸம்ப்ரதாயஸித்தம். உள்ளதனைக்காலம் ஏத்திற்றாகிலும் மாம்ஸசக்ஷுஸ்ஸுக்குக் காணவொண்ணாதென்னுமிடத்தை, "என்றேனுங்கட்கண்ணாற்காணாதவவ்வுரு" என்றும், ஜ்ஞாநசக்ஷுஸ்ஸாலே காணுமத்தனையென்னுமிடத்தை, "நெஞ்சென்னுமுட்கண்ணாற் காணவுணர்ந்து" என்று பிறர்க்குபதேசித்தாரிறே. "நீயெம்பெருமானிறெம்பெருமான்றிசையுமிருநிலனு மாயெம்பெருமானாகின்றா லடியோங் காணுமால்" என்றும், "முன்னைவண்ணம்பாலின்வண்ணமுழுதுநிலைநின்றவின்னவண்ணமென்றுகாட்டீர்" என்றும் அருளிச்செய்ததும், ஜ்ஞாநஸாக்ஷாத்காரமே உள்ளதென்னுமிடத்தை "சிறிதுந்திருமேனி யின்னவண்ணமென்று காட்டீர்" என்று மருளிச்செய்தாரிறே. திருமங்கையாழ்வாரும்.

பூதத்தாழ்வார்களும்; "ஞானச்சுடர்விளக்கேற்றியிறே" "திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்" என்றும் அருளிச்செய்ததும். இனி; ப்ரத்யக்ஷமாக அநுபவிக்கலாவது அர்ச்சாவதாரம். ஆகையாலே அவதார விசேஷங்களாய் ஶ்ரேஷ்டதம ஜந்மஜாதராய் அகிலருமுஜ்ஜீவிக்கும்படி அநாதியான அகஸ்த்யபாஷாரூபமான த்ராவிடவேத ப்ரபந்தங்களை, பெண்ணும் பேதையும் அநுபவிக்கும்படி உபகரித்தருளின ஆழ்வார்கள் பக்கலிலும் அருளிச் செயல்களிலும் விஶ்வாஸ பாஹுள்ய முண்டானவர்கள் ஜீவந்முக்த ரென்கிறது, (உ௲௬) "ந ஶப்தஶாஸ்த்ராபிரதஸ்ய மோக்ஷோ நசைவ ரம்யாவஸதப்ரியஸ்ய ஏகாந்தஶீலஸ்ய த்ருடவ்ரதஸ்ய ஸர்வேந்த்ரியப்ரீதிநிவர்த்தகஸ்ய - ந போஜநாச்சாதநதத்பரஸ்ய ந லோகசித்தக்ரஹணேரதஸ்ய - அத்யாத்மவித்யாரதமாநஸஸ்ய மோக்ஷோ த்ருவம் நித்யமஹிம்ஸகஸ்ய. ஸம்ப்ரதாயஸாரஸ

வபூதாநுகம்பீ விஷயஸுகவிரக்தோஜ்ஞாநத்ருப்த: ப்ரசாந்த: அநியதநியதாந்நோ நைவஹ்ருஷ்டோ நருஷ்ட: ப்ரவஸித இவ கேஹே வர்த்ததே யஸ்ஸமுக்த: '' (నశబ్దశాస్త్రాభిరతస్య మోక్షో న చైవరమ్యావసథప్రియస్య ఏకాంతశీలస్య దృఢవ్రతస్య పంచేంద్రియప్రీతినివర్తకస్య - న భోజనాచ్ఛాదనతత్పరస్య న లోకవృత్తిగ్రహణే రతస్య. అధ్యాత్మవిద్యారతమానసస్య మోక్షో ధ్రువో నిత్యమహింసకస్య. శమదమనియతాత్మా సర్వభూతానుకంపీ విషయసుఖవిరక్తో జ్ఞానతృప్తః ప్రశాన్తః అనియతనియతాన్నో నైవహృష్టో న రుష్టః ప్రవసితఇవ గేహే వర్తతే యస్సముక్తః) என்கிறபடியே அஸச்சாஸ்த்ராபிருசியையும் லோகயாத்ரையையும் கைவிட்டு, ஏகாந்தசீலராய், சிரச்சேத பட்டாபிஷேக பர்யந்தமான மஹாபத் ஸம்பத்துக்கள் சம்பவித்தாலும் ஸ்வாசாரப்ரச்யுதி வாராதபடி த்ருடாத்யவஸாய யுக்தராய், இந்த்ரிய கிங்கரன்றிக்கே விஷ்ணுகிங்கரராய், ஆத்மயாதாத்ம்யஜ்ஞாந பரிசீலந பரராய், பூதஹிம்ஸையைவிட்டு ஶமதமாத்யாத்ம குணங்களை யுடையராய், சர்வபூததயாபரராய், அர்த்தகாமங்களை அருவறுத்துவிட்டு, ஜ்ஞாநபூர்த்தியையுடையராய், பாஹ்யகரண சாந்தியுக்தராய், நியதாஹாரராய், அத்யுத்க்ருதருமன்றியே கோபிகளுமன்றியே பார்யாபுத்ராதிகள்பக்கல் ஆசாபாசரஹிதராய், ஆசார்யவிஶ்வாஸ முடையரானவர்கள் திருவாய்மொழியையறியக்கற்று வல்லாராழ்கடல் ஞாலத்துள்ளேஸ்ரீவைஷ்ணவர்களென்கிறது. இவ்வாழ்வார்கள் தம் பரமக்ருபையாலே இத்திவ்ய ப்ரபந்தங்களை உய்பவர்க் குய்யும்வண்ணமாக அருளிச்செய்து லோகத்தை வாழ்வித்தருளி, தன்னுடைச்சோதிக் கெழுந்தருளினார்கள்.

ஸ்ரீமதுரகவியாழ்வார் திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

---

ஆழ்வார்களின் வைபவங்கள்

முற்றிற்று.



ஸ்ரீமாநாதமுனிகள்



    

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

( க )

# ஸ்ரீமந்நாதமுநிகள்ப்ரபாவம்.

இவ்வாழ்வார்கள் பரம க்ருபையாலே, இத்திவ்யப்ரபந்தங்களை ; உய்பவர்க் குய்யும்வண்ணமாக அருளிச்செய்து உபகரித்தருளி தன்னுடைச்சோதிக் கெழுந்தருளினபின்பு, நெடுங்காலம் கழிந்தவாறே, வீரநாராயணபுரத்திலே மன்னனாரை ஸேவித்து நித்யவாசம்பண்ணிக்கொண்டு அவர்திருவடிகளிலே ஸர்வவிதகைங்கர்யங்களையும் செய்துகொண்டுபோருகிற ஈஶ்வரபட்டாழ்வாரும், அவர் குமாரர் நாதமுநிகளும், அவர்குமாரர் ஈஶ்வரமுநிகளும் ஒருநாளளவிலே, மன்னனார் திருமுன்பே சென்று, தண்டன் ஸமர்ப்பித்து, தேவரீர் ; (உ௩எ) " 𑌪𑌰𑌿𑌤𑍍𑌰𑌾𑌣𑌾𑌯 𑌸𑌾𑌧𑍂𑌨𑌾𑌂 𑌵𑌿𑌨𑌾𑌶𑌾𑌯 𑌚 𑌦𑍁𑌷𑍍𑌕𑍃𑌤𑌾𑌂 - 𑌧𑌰𑍍𑌮𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌪𑌨𑌾𑌰𑍍𑌥𑌾𑌯 𑌸𑌂𑌭𑌵𑌾𑌮𑌿 𑌯𑍁𑌗𑍇 𑌯𑍁𑌗𑍇 " (పరిత్రాణాయసాధూనాం వినాశాయచదుష్కృతాం - ధర్మసంస్థాపనార్థాయసంభవామియుగేయుగే) என்கிற திருமுகப்படியே, துஷ்டநிக்ரஹ சிஷ்டபரிபாலநார்த்தமாக அவதரித்து, விளையாடியருளின ஸ்ரீமதுரை, திருவாய்ப்பாடி, ஸ்ரீப்ருந்தாவநம், யமுநாதீரம், ஸ்ரீகோவர்த்தநகிரி, ஸ்ரீமத்வாரகை முதலாக, மற்றும் திருவயோத்யை, ஸ்ரீசாளக்ராமக்ரி, ஸ்ரீபதரிகாஶ்ரமம், ஸ்ரீநைமிசாரண்யம், ஸ்ரீஸிம்ஹகிரிகளாதியாகிற வடதிசையிலுள்ள திவ்யதேசங்களெங்கும் திருவடிதொழுது வரவேணுமென்று விண்ணப்பஞ்செய்ய ; மன்னனாரும் அப்படியே செய்யுங்கோளென்று அர்ச்சகமுகேந விடைகொடுத்தருள ; இவர்களும் ஸகுடும்ப

மாகப் புறப்பட்டுப்போய், உத்தரதேசத்திலுண்டான "வடதிசைமதுரை சாளக்கிராமம் வைகுந்தந்துவரை யயோத்தியிடமுடைவதரி" முதலான திவ்யதேசங்களைத் திருவடிதொழுது, (௨௩௮) "யமுநாஞ்சாதிகம்பீராம் நாநாவர்த்தசதாகுலாம்" (యమునాంచాతిగంభీరాం నానావర్తశతాకులాం) என்று புராணரத்நமான ஸ்ரீவிஷ்ணுபுராணத்திற் சொல்லுகிறபடியே, அதிகம்பீரமாய், பலசுழிகளையுடைத்தாய்ப் பெருகாநிற்கிற யமுநாதீரத்திலே கோவர்த்தநபுரம் என்கிற க்ராமத்திலே, "தூயபெருநீர் யமுனைத் துறைவன்" என்கிற எம்பெருமானைத் திருவடிதொழுது, மிகவும் ப்ரீதராய், இவ்விடத்திலே நித்யவாசம்பண்ணக் கடவோமென்று நிஶ்சயித்திருந்து, அவர்திருவடிகளிலே ஸர்வவித கைங்கர்யங்களும் பண்ணிக்கொண்டு, ஸேவித்திருக்கிறகாலத்திலே, மன்னனாரும்; நம்முடைய வீரநாராயணபுரத்தேற வரவேணுமென்று நாதமுநிகளுக்கு ஸ்வப்நங் காட்டியருள; இதுவொரு ஆஶ்சர்யமிருந்தபடி யென்னென்று, இவர்களும் தங்களிலே விசாரித்து, இனி நமக்குச் செய்யவடுப்பதென்னென்று யமுனைத்துறைவர் திருமுன்னே நின்று, தண்டன் சமர்ப்பித்து, இச்செய்தியை விண்ணப்பஞ்செய்ய; அவரும் அர்ச்சகமுகேந அப்படியே செய்யுங்கோளென்று தீர்த்தப்ரஸாதமும் ப்ரஸாதித்து விடைகொடுத்தருளினர். இவர்களும் அங்குநின்றும்குடும்பஸஹிதமாகப்புறப்பட்டு, வாராணசிவழியாயெழுந்தருளி, (௨௩௯) "ஸப்தஸ்வபி ச லோகேஷு லோகாலோகே சராசரே - நாஸ்தி நாஸ்தி ஸமம் க்ஷேத்ரம் க்ஷேத்ரமுத்தமம் புருஷோத்தமம்" (సప్తస్వపి లోకేషు లోకాలోకే చరాచరే - నాస్తినాస్తిసమం క్షేత్ర ముత్తమంపురుషోత్తమం) என்று சதுர்த்தசபுவநங்களிலும் ஸ்வஸத்ருஶரஹிதமாகச் சொல்லப்படுகிற ஸ்ரீபுருஷோத்தமத்தேற வெழுந்தருளி, ஸ்ரீஜகந்நாதனையும் திருவடி தொழுது, அங்குநின்றும் புறப்பட்டு, ஸிம்ஹாத்ரியேற வெழுந்தருளி, ஸிம்ஹகிரியப்பனையும் சேவித்து, அங்குநின்றும்போந்து, (௨௪௦) "அஹோ வீர்யமஹோ ஶௌர்யமஹோ பாஹுபராக்ரம: - நாரஸிம்ஹம் மஹாதைவமஹோபலமஹோபிலம்" (అహోవీర్యమహోధైర్యమహోబాహుపరాక్రమం: నారసింహంమహాదైవమహోబలమహోబిలం) என்றுசொல்லப்பட்ட அஹோபிலநரஸிம்ஹத்தையும் திருவடிதொழுது, அங்குநின்றும் போந்து, "பரன்சென்றுசேர்திருவேங்கடமாமலை" என்கிற திருமலையாழ்வாரையும் சேவித்து (௨௪௧) "ஶேஷாத்ரிவாஸீ நந்தஸ்ஸ்ரீவேங்கடேஶ - ..."

ஸிணீதீரே ரமயா ஸஹ மோததே" (మాయాదీపరమానన్ద స్వభక్త్యై ర్నిత్యముక్తమం - స్వామిపుష్కరిణీతీరే రమయా సహమోదతే) என்கிறபடியே 'ஜகத்காடக்ருத்ஸ்தாரியான ஸ்ரீவைகுண்டநாதன்; பரமபதத்தையும் உபேக்ஷித்து, இவ்விபூதியிலுள்ளாரை ரக்ஷிக்கையிலுள்ள நசையாலே திருக்கோனேரிக்கரையிலே, திருமகளுடனே சர்வசுலபனாயிருக்கிற திருவேங்கடத்தப்பனையும் திருவடிதொழுது, அவ்விடத்தே நித்யவாசம்பண்ணுவோமென்று பார்க்க; மன்னனார் திருவுள்ளமாகாமையாலே, அதிசீக்ரமாக அங்குநின்றும் புறப்பட்டு, கடிகாசலத்தேற வெழுந்தருளி, "கடிகைத்தடங்குன்றின்மிசையிருந்தவக்காரக்கனி யழகியசிங்கரையும்சேவித்து, அங்குநின்றும்போந்து, "புட்கொடியம்போரேற்றின் நயினாரையும்சேவித்து, பெரியவுடையாரையும் சேவித்து, அங்குநின்றும்போந்து, (உசஉ) "நகரீணாஞ்ச ஸர்வாஸாம் காஞ்சீ விசிஷ்யதே - கிரீணாஞ்சாபி ஸர்வேஷாம் ஸ்ரேஷ்டோ ஹஸ்திகிரிஸ்ஸ்ம்ருத: - வேகவத்யுத்தரே தீரே புண்யகோட்யாம் ஹரிஸ்ஸ்வயம் வரதஸ்ஸர்வபூதாநாமத்யாபி பரித்ருஶ்யதே" (నగరీణాం చ సర్వాసాం పురీణాం కాంచీ విశిష్యతే - గిరీణాం చాపి సర్వేషాం శ్రేష్ఠో హస్తిగిరి స్స్మృతః - వేగవత్యా ఉత్తరే తీరే పుణ్యకోట్యాం హరిస్స్వయం - వరద స్సర్వభూతానా మద్యాపి పరిదృశ్యతే) என்று சொல்லுகிறபடியே, வேகவதியின்வடகரையிலே, உத்தமமான கச்சிமாநகரத்திலே, கிரிகளில் வைத்துக்கொண்டு ஶ்ரேஷ்டமான ஹஸ்திகிரியின்மேலே, புண்யகோட்யாக்யமான விமானமத்யத்திலே யெழுந்தருளிநின்று, ஸர்வசேதநராலும் ஸேவ்யமாநராய் ஸர்வபலப்ரதரான பேரருளாளரையும் சேவித்து, அவ்விடத்தில் மற்றுமுண்டான திருப்பதிகளையும் சேவித்து, அங்குநின்றும் போந்து, திருவயிந்திரபுரத்தில் தேவநாயகனையும் திருவடிதொழுது, அங்குநின்றுமெழுந்தருளி, திருக்கோவலூராழ்வார்கள் நயினாரையும் திருவடிதொழுது, அங்குநின்றும்போந்து, (உசங) "ரங்கம் ரங்கமிதி ப்ரூயாத் க்ஷுத்ப்ரஸ்கலநாதிஷு - விஷ்ணுலோகமவாப்நோதி ஸர்வபாபக்ஷயாந்நர:" (రంగం రంగమితి బ్రూయాత్ క్షుత్ప్రస్ఖలనాదిషు - విష్ణులోకమవాప్నోతి సర్వపాపక్షయాన్నరః) என்று சொல்லுகையாலே தும்மல்தொடக்கமான கலக்கங்கள்வந்தால், தத்தோஷநிவர்த்த்யர்த்தமாகத் திருவரங்கம்பெரியகோயில் என்றநுசந்தேயமாய், அதுவேபாபஹரமாய்மோக்ஷப்ரதமுமான திருவரங்கப்பெருநகரிலே யெழுந்தருளி, நம்பெருமாளையும் சேவித்து, அங்குநின்றுமெழுந்தருளி, திருக்குடந்தையில் ஆராவமுதாழ்வாரையும் சேவித்து, அங்குநின்றும் மீண்டுவீரநாராயணபுரத்து மன்னனார்கோயிலேறவெழுந்தருள; அங்குள்ள ஸ்ரீவைஷ்ணவர்களெல்லாரும் எதிர்கொண்

டுவரப்புகுந்து, மன்னனாரைத்திருவடிதொழுது அதிப்ரீதராய்நிற்க; மன்ன
னாரும்திருவுள்ளம்போர உவந்தருளி, அங்குள்ள ஸ்ரீவைஷ்ணவரெல்லாரை
யும் அழைத்தருளி, நமக்குப்ரியமாயிருக்கு மிவர்களைப்போர ஆதரித்துக்கொ
ண்டு போருங்கோளென்றருளிச்செய்ய ; அவர்களும் அதுக்கிடாகத்திருமா
ளிகைகட்டிக்கொடுத்து, அமுதுபடிமுதல்மற்றும் திருமாளிகைக்குவேண்டு
மவையெல்லாம் “ நாளும்பைங்கானமீதெல்லாமுனதேயாக ,, என்கிறபடியே
நடத்திக்கொண்டுபோருகிறகாலத்திலே, இவர்களும் மன்னனாருக்குத்திருவ
தவநம்செய்து, திருமாலைகட்டிச்சாத்தி ; அமுதுபடி, சாத்துபடி, திருவிள
குமுதலானவைகளெல்லாம்குறைவறநடத்தி, வித்வத்கோஷ்டிகளும்சாஸ்த்
ப்ரவர்த்தநங்களும் எல்லாம்பண்ணிக்கொண்டிருக்கச்செய்தே, மேல்நாட்டு
ல் நின்றும் சில ஸ்ரீவைஷ்ணவர்கள் எழுந்தருளி, மன்னனாரைசேவித்து, ௨
வர்திருமுன்னே “ ஆராவமுது ,, என்கிறதிருவாய்மொழியை யநுசந்தித்
ருள ; அத்தை நாதமுநிகள்கேட்டருளி, அதிப்ரீதராய், அவர்களைப்பார்த்து
ஆயிரத்துள்இப்பத்தென்றிருந்தது, இப்ரபந்தம்உங்களுக்கு முற்றப்போமே
வென்றுகேட்டருள ; அவர்களும்இப்பத்துப்பாட்டு மேவருவதென்றுவின
ணப்பஞ்செய்ய ; இவரும் உங்கள்நாட்டிலே ஸ்ரீகோசமுண்டோ ? பாட
போவாருமுண்டோ வென்று கேட்டருள ; எங்களுக் கிவ்வளவுபாடம் வ
வது, வேறொருவிடத்திலுமில்லையென்று அவர்கள் விண்ணப்பஞ்செய்ய
இவரும் அவர்களுக்கு மன்னனாருடைய தீர்த்தப்ரஸாதமும் ப்ரஸாதிப்பி
தருளி, நாதமுநிகளும் சடகோபன் அவதரித்தருளின திருக்குருகூர் ப்ரதே
சத்திலே யுண்டாகவேணுமென்று திருநகரிக்கெழுந்தருளி, ஆழ்வாரையு
பொலிந்துநின்ற பிரானையும் சேவித்து, அங்கே ஸ்ரீமதுரகவிகளுடைய சி
யரான ஸ்ரீபராங்குசதாஸரை ஸேவித்து, இவ்விடத்திலே திருவாய்மொ
யோதினவர்களுண்டோ ? ஸ்ரீகோசமுண்டோ என்றுகேட்டருள ; அவரு
திருவாய்மொழியும் மற்றுமுள்ள திவ்யப்ரபந்தங்களும் நெடுங்காலமுண்
ப்ரமுஷிதமாய்த்து, இப்போது எங்களாசார்யரான ஸ்ரீமதுரகவிகள் அடியே
னுக்கு ; கண்ணிநுண்சிறுத்தாம்பு என்கிற திவ்யப்ரபந்தத்தை ப்ரஸாதி
தருளி, இக்கண்ணிநுண் சிறுத்தாம்பை ஆழ்வார் திருமுன்பே ஏகாஸ
திலேயிருந்து, ஏகாக்ரசித்தராய், ஆழ்வார்திருவடிகளை த்யானித்துக்கொண்
நியமத்துடனே பன்னீராயிரமுரு அநுஸந்திக்க ஆழ்வார்ப்ரஸந்நராவரென்
அருளிச்செய்தாரென்ன ; நாதமுநிகளும் அந்த திவ்யப்ரபந்தத்தை அடியே
னுக்கு ப்ரஸாதித்தருளவேணுமென்று தண்டன் சமர்ப்பித்து விண்ணப்ப
செய்ய ; அவரும் இவருக்கு மிகவு முவப்புடனே அந்த திவ்யப்ரபந்தத்

ஓதுவித்தருள; நாதமுநிகளும் ஓதி, திருப்புளியாழ்வாரடியிலே, ஆழ்வார் திருமுன்பே பன்னீராயிரமுரு கண்ணிநுண்சிறுத்தாம்பை நியமத்தோடே அநுஸந்திக்க; (௨௪௪) "ஆஸ்திகோ தர்மஶீலஶ்ச ஶீலவாந் வைஷ்ணவஶ்ஶுசி: - கம்பீரஶ்சதுரோ தீரஶ் ஶிஷ்ய இத்யபிதீயதே" (ఆస్తికో ధర్మశీలశ్చ శీలవాన్ వైష్ణవశ్శుచిః - గంభీరశ్చతురో ధీరశ్శిష్య ఇత్యభిధీయతే) என்று சொல்லப்படுகிற சிஷ்யலக்ஷணமான ஆஸ்திக்யாதிகுணங்களையுடையரான நாதமுநிகளுக்குப் பெரியபிராட்டியார் நியோகேந மிகவும் ப்ரஸந்நராயருளி, இந்நாதமுநிகளைக் குறித்து அசரீரிவாணி சொல்லுமாபோலே திருவாய்மலர்ந்து, ஏன்காணும் நம்மைக்குறித்து பஹுகாலம் உபாசியாநின்றீர் என்றுகேட்டருள; நாதமுநிகளும் திருவாய்மொழி முதலான திவ்யப்ரபந்தங்களை அடியேனுக் கிரங்கியருளவேணுமென்று விண்ணப்பஞ்செய்ய; ஆழ்வாரும் ப்ரீதியுடனே சர்வேஶ்வரன் தமக்கு "மயர்வறமதிநல மருளினாற்போலே நாதமுநிகளுக்கு, (௨௪௫) "திவ்யஜ்ஞாநசக்ஷு:" (దివ్యజ్ఞానచక్షుః) என்கிறபடியே திவ்யஜ்ஞாநசக்ஷுஸ்ஸை ப்ரஸாதித்தருளி, ரஹஸ்யத்ரயார்த்தத்தையும் திருவாய்மொழிமுதலான மற்றுமுள்ள நாலாயிரப்ரபந்தங்களையும் அகிலதர்ஶந தாத்பர்யங்களையும் அஷ்டாங்கயோகரஹஸ்யத்தையும் ப்ரஸாதித்தருளினார். "மிக்கவேதியர்வேதத்தினுட்பொருள் - நிற்கப்பாடியென்னெஞ்சு ணிறுத்தினான்" என்றுசொல்லுகிறபடியே நாதமுநிகளும்க்ருதார்த்தராய், பொலிந்து நின்றபிரானையும் ஆழ்வாரையும் சேவித்திருக்கிற அளவிலே, மன்னனார் இப்ரபந்தங்களை நம்முடைய முன்னே ஒரு உருச்சொல்லவாருமென்று நாதமுநிகளுக்கு ஸ்வப்நமுகேந அருளிச்செய்ய; இவரும் மற்றைநாள் பொலிந்துநின்றபிரானையும் ஆழ்வாரையும் சேவித்து நின்று, இச்செய்தியை விண்ணப்பஞ்செய்ய; ஆழ்வாரும் அர்ச்சகமுகேந, ஆகில்? நீர் வீரநாராயண புரத்தேறப்போய் இப்ரபந்தங்களை சமதமாத்யாத்மகுணங்களை யுடையரான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அறியக்கற்று வல்லராம்படி ஓதுவியுமென்று நியமித்து, தீர்த்தப்ரஸாதங்களையும் ப்ரஸாதித்து, விடைகொடுத் தருளினார். நாதமுநிகளும் மீண்டு வீரநாராயணபுரத்தேற வெழுந்தருளும்போது வழியிலுள்ள திருப்பதிகளையும் அந்தத் திருப்பதிவைபவமான திவ்ய ப்ரபந்தாநுஸந்தாநம்பண்ணிக்கொண்டு சேவித்துமீண்டு, வீரநாராயணபுரத்தேறவந்து புகுந்து, மன்னனாரைத் திருவடிதொழுது நின்று, தம்மை ஆழ்வார் விசேஷ கடாக்ஷம்பண்ணி திவ்ய ப்ரபந்தங்களையும் ப்ரஸாதித்தருளின செய்தியை மன்னனாருக்கு விண்ணப்பஞ் செய்ய; மன்னனாரும் மிகவு முவப்புடனே இவருடன் உருவும் ஸ்வப்நமுகேந அருளிச்செய்து, சம்ஸாரிகளை யுஜ்ஜீவிப்

பிக்கைக்காக நாம் கரணகளேபரங்களைக் கொடுத்தும், சாஸ்த்ரங்களைத் தந்தும், நாமேவந்து பிறந்தும் இவையித்தனையும் செய்தவிடத்திலும் கார்யகரமாயிற்றில்லை. பின்பு ஆழ்வார்களுடைய திவ்யப்ரபந்தமுகேந வாய்த்துத் திருத்திற்று. இப்படிப்பட்ட ப்ரபந்தங்கள் ப்ரமுஷிதமாய்க் கிடக்க வொண்ணாதென்று பார்த்தருளி, இவரைக்கொண்டு இவற்றை ப்ரகாசிப்பிக்கவேணுமென்று நினைத்து, நீர் இவற்றை இயலு மிசையு மாக்குமென்று அர்ச்சகமுகேந நியமித்தருள; நாதமுனிகளும் தம்முடைய மருமக்களான கீழையகத் தாழ்வாரையும் மேலையகத் தாழ்வாரையும் அழைத்தருளி, ஆழ்வார் தம்மை விசேஷகடாக்ஷம் பண்ணியருளின இத்திவ்யப்ரபந்தங்களை இயலுமிசையுமாக்கவேணும், அதுசெய்மிடத்து இன்கவிபாடும் பரமகவிகளாலே "செஞ்சொலாலெடுத்ததெய்வநன்மாலை"யானதிவ்யப்ரபந்தமாகையாலேஇத்தை திவ்யகாநத்திலே சேர்த்துப் பாடவேணுமென்று அவர்களையுங் கூட்டிக்கொண்டு, ஸ்ரீவேதவ்யாஸபகவான் வேதங்களை உதாத்தாநுதாத்த ஸ்வரித ப்ரசயயுக்தங்களாக வுச்சரிக்கலாம்படி பண்ணினாற்போலே நாதமுனிகளும் இத்திவ்யப்ரபந்தங்களை திவ்யகாநத்திலே யடைத்து, இயலுமிசையுமாக்கிப் பாடுவித்தருள; இது லோகத்திலே ப்ரஸித்தமாயிற்று. அநந்தரம் அந்த ராஜ்யத்துக்கு ராஜாவான சோழன்வாசலிலே, கங்கைகொண்டசோழபுரத்தினின்றும் தேவகாநம் பாடுவாளொருத்தியும் மநுஷ்யகாநம்பாடுவாளொருத்தியுமாகிய இரண்டு வாரஸ்த்ரீகள் தங்களிலே வாதமாய்வந்து, ராஜசந்நிதியிலே வித்வான்களைத் திரட்டிப்பாட; ராஜாவும் அங்குள்ளவித்வான்களும் மநுஷ்யகாநம்பண்ணுகிறவளைக்கொண்டாடி, அவளுக்கு ஆனையும் மாலையும் த்யாகமும் கொடுத்து, தேவகாநம்பாடுகிறவளை அநாதரித்துத் தள்ளிவிட; அவளும், நான்பாடுகிறபாட்டும் காநமும் தேவதைகளறியு மித்தனையென்று தேவாலயங்கள்தோறும் புக்குப் பாடிக்கொண்டு வந்து, மன்னனார் கோயிலிலே அவர்முன்னேபாட; நாதமுனிகளும் அதைக்கேட்டருளி, உகந்து கொண்டாடி, அவளுக்கு மன்னனாருடைய தீர்த்த ப்ரஸாதமும் திருப் பரிவட்டமும் ப்ரஸாதிப்பித்தருளினார். அவளும் இவரை தண்டனிட்டுப்போய் அந்த ராஜாவுடன், நான்பாடுகிற தேவகாநம் அறிவாரொருவர் வீரநாராயணபுரத்தில் மன்னனார்கோயிலிலே யிருக்கிறாரென்ன; ராஜாவும் நாதமுனிகளை எழுந்தருளவேணுமென்று அழைத்துவரவிட; இவரும் திருவாய்மொழி முதலான திவ்யப்ரபந்தங்களை திவ்யகாநத்திலே யடைத்தோம், நாட்டார் இதின்வைலக்ஷண்யமறியார்கள். இத்தை நாம் அறிவிக்கவேணுமென்று திருவுள்ளம்பற்றி ராஜகோஷ்ட்டியேற வெழுந்தருள; ராஜாவும்எழுந்திருந்து தண்

டன்ஸமர்ப்பித்து ஆசநமிட்டெழுந்தருளியிருந்து ஆசீர்வதிக்க, ராஜாவும் ஆதரத்துடனே இவள்பாடுகிறதேவகாநம்தேவரீர் அறிவீரோவென்றுகேட்க; இவரும் மநுஷ்யகாநம் பாடுகிறவளையும் தேவகாநம் பாடுகிறவளையும் இருவரையும் பாடச்சொல்லிக் கேட்டருளி, ராஜாவைக்குறித்து, இவள்பாடுகிற மநுஷ்யகாநம் உங்களுக்குத்தெரியும், இவள்பாடுகிற தேவகாநம் தேவர்களுக்குத்தெரியும் உங்களுக்குத் தெரியாதென்ன, ராஜாவும் தேவரீர் அறிவீரொன்றுமிடம் நாங்களறியும்படி யெங்ஙனேயென்ன, நாற்பதுநூறு தாளத்தைச் சேரவொற்றச்சொல்லி, இது இத்தனையெடை, இது இத்தனையெடையென்று நாதமுநிகளருளிச்செய்ய; அவற்றை ராஜாவும் தனித்தனியே நிறுத்துச் சோதித்துப்பார்க்க; அவையெல்லாம் முந்நிரியும் ஏறுமற்குறையாமலிருந்தபடியைக்கண்டு போர ஆஶ்சர்யப்பட்டு, நாதமுநிகளுடைய ஸ்ரீபாதத்திலே தண்டனிட்டு, பஹுத்ரவ்யத்தை ஸமர்ப்பிக்கத்தேட; இவரும், சதுர்முக பசுபதி ஶதமகப்ரப்ருதி பதங்களை நிராகரித்திருக்கும் நிஸ்ப்ருஹராகையாலே நமக்கிவையொன்றும் வேண்டாவென்று ராஜாவை ஆசீர்வதித்து மீண்டு, வீரநாராயணபுரமே யெழுந்தருளி, மன்னனார் திருவடிகளில் கைங்கர்யைகநிரதராய் வாழ்ந்துகொண்டிருக்குங் காலத்திலே, இவர் ஸ்ரீபாதத்தில் ஆஶ்ரயித்து, (௨௪௬) "ஶரீரம் வஸு விஜ்ஞாநம் வாஸ: கர்ம குணாநஸூந் – குர்வர்த்தம் தாரயேத்யஸ்து ஸ ஶிஷ்யோ நேதர: ஸ்ம்ருத:" (శరీరం వసువిజ్ఞానం వాసఃకర్మగుణానసూన్ - గుర్వర్థం ధారయేద్యస్తు సశిష్యోనేతరస్మృతః) என்று சொல்லப்படுகிற குணங்களை யுடையரான உய்யக்கொண்டார், குருகைக்காவலப்பன், நம்பிகருணாகரதாஸர், ஏறுதிருவுடையார், திருக்கண்ண[illegible], வானமாதெய்வயாண்டான, உருப்பட்டூர் ஆச்சான் பிள்ளை, சோகத்தூராழ்வான், என்கிற எண்மர்க்கும், (௨௪௭) "அஹோ த்வயஸ்ய மாஹாத்ம்யம் அஹோ வீர்யமஹோ பலம் – மந்த்ரரத்நம் ஶுபகரம் வேதஸாரம் ஸநாதநம்" (అహోద్వయస్యమాహాత్మ్య మహోవీర్యమహోబలం - మంత్రరత్నంశుభకరం వేదసారంసనాతనం) என்கிறபடியே மந்த்ரரத்நமென்று ஶ்லாகித்துச் சொல்லப்படுகிற த்வயார்த்தத்தையும் ப்ரஸாதித்து, திருவாய்மொழி முதலான திவ்யப்ரபந்தங்களையும் ஓதுவித்து, வேதசாஸ்த்ரங்களையும் அதிகரிப்பித்து, ரஹஸ்யத்ரயஸாரார்த்தமாய் சகலஜகத்காரணபூதனை ஸ்ரீபுருஷநிர்ணயத்தையும் ந்யாஸதத்வத்தையும் அருளிச்செய்து, "கரியகோலத்திருவுரு"வை த்யானித்துக்கொண்டு யோகத்திலே யெழுந்தருளியிருந்தார்.

ராஜா இவருடைய யோகவைபவங் கேட்டு, அங்கேறவந்து, மன்னனாரையும்சேவித்து, தானும் ஸ்த்ரீகளுமாகவந்து, இவர் யோகத்திலே எழுந்தருளியிருக்கும்படியைக் கண்டு, ஆஸ்சர்யப்பட்டு, மீண்டுபோகிற அளவிலே, இவர் "திருவுடைமன்னரைக்காணில்திருமாலைக்கண்டேனே" என்கிறபடியே அவர்களை க்ருஷ்ணனும் கோபிமாருமாகநினைத்து, அவர்கள்பின்னே கங்கைகொண்ட சோழபுரத்தேற வெழுந்தருளாநிற்க, இதுகேட்டு, உய்யக்கொண்டார், குருகைக்காவலப்பன் உள்ளிட்ட முதலிகளடையப் பின்தொடர்ந்தெழுந்தருளி, கங்கைகொண்ட சோழபுரத்தேகண்டு, தேவரீர் இப்படி செய்யலாமோவென்று விண்ணப்பஞ்செய்ய, நாதமுனிகளும் அவர்களுடனே க்ருஷ்ணனும் பெண்களுமாக நினைத்து வந்தேனென் றருளிச்செய்து மீண்டெழுந்தருளினார். சிலநாள் கழிந்தவாறே, பின்னையு மொருக்கால் ராஜா வந்து மன்னனாரைசேவித்து மீண்டுபோகிறவன், தன் சாமந்தன் தலையிலே அடியிட்டு, யானைக்கழுத்திலேற, இத்தை நாதமுனிகள்கண்டு, ஸர்வேஸ்வரன் ப்ரஹ்மருத்ராதிகள்தலையிலே அடியிட்டு, பெரியதிருவடிமேற் கொள்ளும்படி யிதுவாகாதேயென்று மோஹித்தாரென்று ப்ரஸித்தமிறே. பின்னையும் சிறிதுகாலம் யோகத்திலே யெழுந்தருளி யிருந்து, குருகைக் காவலப்பனைப்பார்த்து, நீர் யோகரஹஸ்யத்தை அப்யஸியுமென்று அஷ்டாங்க யோகக்ரமத்தை அவருக்கு அருளிச்செய்தருளினார்.

உய்யக்கொண்டாரையும் பார்த்து, நீரும் யோகரஹஸ்யத்தை அப்யஸியுமென்ன; உய்யக்கொண்டாரும், பிணம்கிடக்க மணம்புணரலாமோ, இந்த சரீராவஸாந தசையிலே அநுபவிக்க வமையுமென்று விண்ணப்பஞ்செய்ய, ஆகில், நீர் சாஸ்த்ரத்தையும் திருவாய்மொழிமுதலான திவ்ய ப்ரபந்தங்களையும் ப்ரவர்த்திப்பியுமென் றருளிச்செய்து, தம்புத்ரராகிய ஈஸ்வரமுனிகளைப்பார்த்து, உமக்கொரு குமாரர் உண்டாகப்போகிறார், அவருக்கு யமுனைத் துறைவனென்று திருநாமம் சார்த்துமென்று அருளிச்செய்து, உய்யக்கொண்டாரையும் குருகைக் காவலப்பனையுங் குறித்து, உங்களுக்கு நாம்சொன்ன தர்ஸநதாத்பர்ய யோகரஹஸ்யார்த்தவிசேஷங்களை யமுனைத்துறைவர்க்குஉபதேசியுங்கோளென்று நியமித்தருளி, முன்புபோலே யோகத்திலே யெழுந்தருளியிருந்தார்.

அநந்தரம், அந்தராஜா ஸபரிகரனாய், வேட்டைக்குவந்து மீண்டு போகாநிற்கச்செய்தே, இவருடைய பெண்பிள்ளைகள் வந்து, ஐயா! நம் மகத்திலே ஒருகுரங்கும் இரண்டு வில்லிகளும் ஒரு பெண்பிள்ளையுமாக வந்து நாதமுனிகள் எங்கேயென்று தேடிப்போனார்கள் என்றவாறே, நாத

முநிகளும், (உசஅ) "அநுகச்சத்யயம் ஸீதாபி லக்ஷ்மண: - ப்ருஷ்டதஸ்து தநுஷ்பாணிர் லக்ஷ்மணோ நுஜகாம ஹ" (అగ్రతః ప్రయయౌ రామస్సీతామధ్యేసుమధ్యమా - పృష్ఠతస్తుధనుష్పాణిర్లక్ష్మణోऽనుజగామహ) என்று சொல்லப்பட்ட பெருமாளும் பிராட்டியும் பின்சென்ற வில்லியான இளையபெருமாளும் ப்ரயோஜநாந்தர நிரபேக்ஷராகையாலே பெருமாளுகந்து ஸஹ போஜநயோக்யரான ஐந்த்ரவ்யாகரண பண்டிதனுமாக வடக்குமென்று திருவுள்ளம்பற்றி, பின்தொடர்ந்தெழுந்தருளி, வழியில் எதிரே சந்தித்தவர்களை; இப்படி போகிறவர்களைக் கண்டீர்களோவென்று கேட்டருள; அவர்களும் போகிறார் போகிறார்களென்று சொல்ல; கடுநடையிட்டு நெடுந்தூர மெழுந்தருளி, கங்கைகொண்ட சோழபுரத்தில் கீழ்வாசலளவாக வெழுந்தருளி, அங்குள்ளவர்களை இப்படி போகிறவர்களைக் கண்டீர்களோ வென்று கேட்டருள; அவர்களுங் கண்டிலோமென்ன; அவர்களுங் காணக்காணமறைந்திட, இவரும் ஏங்கி யடித்துக்கொண்டு விழுந்து மோஹித்து, அதுவே ஹேதுவாக (உசகூ) "பரந்து வைஷ்ணவம் லோகம் நித்யாநந்த ஸுகாவஹம் - தத்ர ஸம்வாஹிநீம் திவ்யாம் விரஜாம் வேத ஸம்பவாம் - ஸர்வே ஹிரண்மயாஸ்தத்ர ஸர்வே வேதமயா ஸ்த்ரியா: - அப்ராக்ருதமயா நித்யா: புநராவ்ருத்திவர்ஜிதா: - ஏகாந்திநஸ்ஸதா ப்ரஹ்ம த்யாயிநோ யோகிநோ ஹியே - தேஷாந்தத்பரமம் ஸ்தாநம் யத்வை பச்யந்தி ஸூரய:" (పరన్తువైష్ణవంలోకం నిత్యానన్దసుఖావహం - తత్రసంవాహినీందివ్యాం విరజాంవేదసంభవాం - సర్వేహిరణ్మయాస్తత్ర సర్వేవేదమయాస్స్త్రియాః - అప్రాకృతమయానిత్యాః పునరావృత్తివర్జితాః - ఏకాన్తినస్సదాబ్రహ్మ ధ్యాయినోయోగినోహియే - తేషాన్తత్పరమంస్థానం యద్వైపశ్యన్తిసూరయః) என்று சொல்லுகிறபடியே, பிணைகொடுக்கிலும் போகவொட்டாத "அடியார் நிலாகின்றவைகுந்த" மாநகரை ப்ராபித்தருளினார்.

கலந்து பிரிந்த பிராட்டி பத்துமாசம் பிரிந்திருந்தாள், இவர்கண்டுகந்து காண்பதற்குமுன்னே காணப்பெறாத விழவிழுந்நிக்கொண்டுபோகவெழுந்தருளினார். நாதமுநிகள்திருநக்ஷத்ரம், ஆநிமாசத்தில்அநூராதை. அவர் தனியன் (உருO) "நமோ சிந்த்யாத்புதாக்லிஷ்ட ஜ்ஞாநவைராக்யராசயே - நாதாய முநயே கா தபகவத்பக்திஸிந்தவே." (నమోऽచిన్త్యాద్భుతాక్లిష్ట జ్ఞానవైరాగ్యరాశయే - నాథాయమునయేऽగాధ భగవద్భక్తిసిన్ధవే.)

இச்செய்தியை உய்யக்கொண்டார், குருகைக்காவலப்பன், ஈச்வர முநிகள் முதலானோரெல்லாருங்கேட்டு வ்யாகுலப்பட்டு, அங்கேறப்போய் அவருடைய விமலசரம விக்ரஹத்தைச்சேவித்து, தங்கள் கண்ணிலும் நெஞ்சிலுந் தேக்கிக்கொண்டு சோகார்த்தராய்க்கிடந்து துடித்து, தங்களிலேதேறி தரித்து நின்று, சரமகைங்கர்யத்தை ஈச்வரமுநிகள் திருக்கையாலே ப்ரஹ்மமேதவிதிஸம்ஸ்காரமடங்கச்செய்வித்துப்பள்ளிபடுத்தருளினார்கள். பின்பு வீரநாராயணபுரத்தேற வெழுந்தருளி மற்றுஞ் செய்யவேண்டுங் க்ருத்யங்களெல்லாம் ஈச்வரமுநிகளைக்கொண்டு செய்வித்து, நாதமுநிகளெப்போதும் யோகத்திலே எழுந்தருளி யிருக்குமிடத்தருகே குருகைக் காவலப்பனும் யோகத்திலே யெழுந்தருளியிருந்தார்.

ஸ்ரீமந்நாதமுநிகள் திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

(உ)

## ஸ்ரீ உய்யக்கொண்டார்ப்ரபாவம்.

அநந்தரம் உய்யக்கொண்டாரும், நாதமுநிகள் ஸ்ரீபாதத்திலே யாச்ரயித்த முதலிகளையுங் கூட்டிக்கொண்டு, தர்சநார்த்தங்களையும், திருவாய்மொழிமுதலான திவ்ய ப்ரபந்தங்களையு மருளிச்செய்துக்கொண் டிருக்குங் காலத்திலே, இவர் ஸ்ரீபாதத்திலே யாச்ரயித்த முதலிகள் மணற்கால்நம்பி, திருவல்லிக்கேணிப்பாண்பெருமாளரையர், சொட்டைப்பூசிச் செண்டலங்காரர், ஸ்ரீபுண்டரீகாக்ஷதாஸர், உலகுபெருமாள்நங்கை யென்கிற இவ்வைவர்கள்.

இவர்களில் மணற்கால்நம்பி பன்னிரண்டு ஸம்வத்ஸரம் ஸ்வாசார்யரான உய்யக்கொண்டார் திருவடிகளிலே (உருக) "அஹம்ஸர்வம்கரிஷ்யாமி" (अहं सर्वं करिष्यामि) என்கிற இளையபெருமாளைப்போலே ஸர்வவித கைங்கர்யங்களும் பண்ணிக்கொண்டு போருகிறகாலத்திலே, உய்யக்கொண்டார் தேவிகளாகிய ஆண்டாள்திருநாட்டுக்கெழுந்தருள, திருமாளிகைகைங்கர்யமெல்லாம் தமக்கே பரமாய் நடத்திக்கொண்டு போகச்செய்கே. உய்



ஸ்ரீ உய்யக்கொண்டார்.

யக்கொண்டார் பெண்பிள்ளைகளிருவரையும் நீராடப்பண்ணி எழுந்தருளப் பண்ணிக்கொண்டுவரச்செய்தே, வழியிலே வாய்க்கால் சேறாயிருக்கக்கண்டு அவர்கள் திகைத்துநிற்க; தாம் படியாய்க்கிடந்து அவர்கள் தம் முதுகிலே அடியிட்டெழுந்தருள்வித்துக்கொண்டு போக, உய்யக்கொண்டாரும் இச்செய்தியைக்கேட்டருளி இவரிப்படி செய்வதேனென்றுபோர ப்ரீதராய், இவருத்தமாங்கத்தை திருவடித் தாமரைகளாலே யலங்கரித்து, பொன்னடிப் பூமுடிசூட்டி, உமக்கு நாம் செய்யவேண்டுவ தென்னென்று கேட்டருள, "உற்றேனுகந்துபணிசெய்துனபாதம் பெற்றேனீதேயின்னம்வேண்டுவதெந் தாய்" என்று தேவரீர் திருவடிகளில் சேவையே வேண்டுவதென்ன; உய்யக்கொண்டாருமுகந்து, உகப்பின்மிகுதியாலே (௨௱௨) "𑌅𑌤𑍀𑌤𑌾𑌨𑌾𑌗𑌤𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌤𑍍𑌮𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌕𑌂-𑌸𑌰𑍍𑌵𑌵𑍇𑌦𑌾𑌰𑍍𑌥𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌂𑌸𑌰𑍍𑌵𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑌦𑌰𑍍𑌶𑌨𑌂. 𑌮𑌾𑌨𑌸𑌂𑌵𑌾𑌚𑌿𑌕𑌂𑌪𑌾𑌪𑌂𑌕𑌾𑌯𑌿𑌕𑌞𑍍𑌚𑌤𑍍𑌰𑌿𑌧𑌾𑌤𑍍𑌮𑌕𑌂 - 𑌦𑍍𑌵𑌯𑌸𑍍𑌮𑌰𑌣𑌮𑌾𑌤𑍍𑌰𑍇𑌣𑌨𑌾𑌶𑌂𑌯𑌾𑌤𑌿𑌸𑍁𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌂" (అశేషాన్గతజ్ఞానమాత్మతత్త్వప్రకాశకం-సర్వవేదార్థవిజ్ఞానం సర్వశాస్త్రార్థదర్శనం. మానసంవాచికంపాపం కాయికంచత్రిధాత్మకం-ద్వయస్మరణమాత్రేణనాశంయాతిసునిశ్చితం) "என்றுசொல்லுகிற வைபவமுடைய பரமார்த்தமான த்வயத்தையே மீளவும் ப்ரஸாதித்தருளினார்.

பின்பு சிலநாள் கழிந்தவாறே, உய்யக்கொண்டார் திருநாட்டுக்கெழுந்தருளுகிறபோது, இனிதர்சநப்ரவர்த்தகர் ஆர் ஆவாரென்று மணக்கால்நம்பி விண்ணப்பஞ்செய்ய; அவரும், இங்குள்ள முதலிகளையுங்கூட்டிக்கொண்டு நீரே தர்சநம் நிர்வஹிக்கக்கடவீர்; பின்பு ஈச்வரமுநிகள் திருவயிற்றிலே சொட்டைக்குலத்திலே ஸ்ரீமந்நாதமுநிகளுக்கு ஒரு திருப்பேரனாரவதரிப்பர், அவருக்கு யமுனைத்துறைவனென்று திருநாமஞ் சாத்துவித்து, தர்சநப்ரவர்த்தகராம்படி சகல ரஹஸ்யார்த்தவிசேஷங்களையு முபதேசியும்; அவர் தர்சநப்ரவர்த்தகராவர். இந்த கைங்கர்யத்தை நாதமுநிகள் தம் அந்திமதசையிலே அடியேனுக்கு நியமித்தெழுந்தருளினார், நானது செய்யப் பெற்றிலேன்; நீரவரை யநுவர்த்தித்தாகிலும் ரஹஸ்யார்த்தங்களை யுபதேசியுமென்று நியமித்தருளி, ஸ்ரீமந்நாதமுநிகள் திருவடிகளிலே த்யாநபரராய்க் கொண்டு, பத்மாஸநோபவிஷ்டராய், அணையிலே சாய்ந்தருளி, திருநாட்டுக்கெழுந்தருளினார். இத்தால் ஆசார்யாஜ்ஞாபரிபாலநம் அவச்யகரணீயமென்றபடி. உய்யக்கொண்டார் திருநக்ஷத்ரம், சித்திரையில் கார்த்திகை. அவர் தனியன் (௨௱௩) "𑌨𑌮𑌃𑌪𑌙𑍍𑌕𑌜𑌨𑍇𑌤𑍍𑌰𑌾𑌯𑌨𑌾𑌥𑌶𑍍𑌰𑍀𑌪𑌾𑌦𑌪𑌙𑍍𑌕𑌜𑍇 - 𑌨𑍍𑌯𑌸𑍍𑌤

ஸர்வஸ்வபராயாஸ்மத்குலநாதாயதீமதே" (నమః పఙ్కజనేత్రాయ నాథశ్రీపాదపఙ్కజే - న్యస్తసర్వభరాయాస్మత్కులనాథాయధీమతే.)

ஸ்ரீஉய்யக்கொண்டார்திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

---

( ௫ )

## ஸ்ரீ மணற்கால் நம்பி ப்ரபாவம்.

---

உய்யக்கொண்டார் திருநாட்டுக் கெழுந்தருளினபடியைக் கண்டு, மணற்கால்நம்பி யுள்ளிட்ட முதலிகளெல்லாரும் மிகவும் சோகார்த்தராய், ஆசார்யவிஶ்லேஷாஸஹிஷ்ணுக்களாய் கோஷித்துக்கொண்டுவிழுந்து, போரக்லேசித்து, தங்களிலே தேறி நின்று, நம்பியும்; உய்யக்கொண்டாரை ப்ரஹ்மமேதத்தாலே ஸம்ஸ்கரித்து பள்ளிபடுத்து, மேலுஞ் செய்யவேண்டுங் க்ருத்யங்களெல்லாஞ் செய்தருளி, முதலிகளையுங் கூட்டிக்கொண்டு தர்ஶநம் நிர்வஹித்தருளாநிற்கச்செய்தே; பின்பு சிலகாலங் கழிந்தவாறே, ஈஶ்வரமுநிகளுக்கு ஒரு குமாரர் ஆடிமாசத்தில் உத்திராடத்திலே திருவவதரித்தருளினார்.

அதுகேட்டு அதிஸந்துஷ்டராய், நம்பியும் அங்கேறவந்து, அவருக்கு (உருச) "ஜாதகர்மண்யதைதேஷு விஷ்ணோஶ்சக்ரஸ்ய தாரணம் - சௌளோபநயநே சாபி தந்நாம்த்யயநேபி வா - விதிநா வைஷ்ணவஶ்சக்ரம் தாரயித்வா த்விஜோத்தம:" (జాతకర్మణ్యథైతేషు విష్ణోశ్చక్రస్య ధారణం - చౌళోపనయనే చాపితన్నామ్ధ్యయనేపి వా - విధినా వైష్ణవశ్చక్రం ధారయిత్వా ద్విజోత్తమః) என்கிறபடியே, ஈஶ்வரமுநிகளைக்கொண்டு ஜாதகர்மத்தைப் பண்ணுவித்து, "பத்து நாளுங்கடந்த விரண்டாநாள்" திருவிலச்சினை முதலாக நாமகரணத்தையும், (உருரு) "வைஷ்ணவைர்வைஷ்ணவஸ்ஸூத்ரைஶ்ச குர்யாத் ஸம்யக் த்விஜோத்தம: - தஸ்ய ... நாமகர்ம ... - ... நாமகரணம்" (వైష్ణవైర్వసూత్రైశ్చ కుర్యాత్ సమ్యగ్ద్విజోత్తమః - తస్యద

ஷீணக்ஷேஷுஜபேதஷ்டாக்ஷரம்த்வயம் - மூர்த்நாஹம் ஸ்தம்பிதஷ்டீக்ஷுஜபேச்சுத்வாதசாக்ஷரம் - நாம கர்மோத்தம ... ஷட்க்ஷணம் ... பாஷநாசநம்) என்கிறபடியே ஸ்ரீமந்நாதமுநிகள் நியமப்ரகாரத்திலே யமுனைத்துறைவனென்று திருநாமஞ் சாத்துவித்து நம்பியும் ப்ரீதராயருளினார்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

( ச )

## ஸ்ரீ யமுனைத்துறைவர்ப்ரபாவம்.

பின்பு ஈஸ்வரமுநிகளும் அந்தப்ராஸன சௌளோபநயநாதிகளையும் தத்தத்காலங்களிலே செய்தருளி, அத்யயநம் பண்ணுவிக்கிற காலத்திலே, இவருக்கு மேதையிருக்கும்படி, ஸஹாத்யாயிகளைப்பார்த்து இவரிரண்டாஞ் சந்தை சொல்லும்போது, ஓதினவிடத்தையே ஓதுகிறீர்களென்று அருளிச் செய்து தவிர்ந்திருப்பர் ; ஓதப்போகின்றால் ஓதினவிடத்தையே ஓதாநின்றார்களென்பர் ; இப்படிக்கிவர் அங்கோபாங்கங்களோடே பதக்ரமஸஹிதமாக க்ரந்தத்ரய தந்த்ரத்ரயமும் அத்யயநம்பண்ணி திருக்கல்யாணமுஞ் செய்தருளினார்.

அநந்தரம் சிலநாளைக்குப் பின்பு ஈஸ்வரமுநிகளும் திருநாட்டுக்கெழுந்தருள; யமுனைத்துறைவரும் அவரை ப்ரஹ்மமேதத்தாலேஸம்ஸ்கரித்து பள்ளிபடுத்த பின்பு, செய்யவேண்டுங்க்ருத்யங்களெல்லாஞ்செய்தருளினார்

அநந்தரம் சிலநாளைக்குப்பின்பு, யமுனைத்துறைவரும் மஹாபாஷ்யபட்டருடனே சாஸ்த்ராப்யாஸம் பண்ணுங்காலத்திலே, அந்த ராஜ்யத்தின் ராஜாவின் புரோஹிதனாய், பெரியவித்வானான ஆக்கியாழ்வானுக்கு, அந்த தேசத்தில் வித்வான்க ளெல்லாரும் தஸபந்தமிறுத்துப் போருகையாலே மஹாபாஷ்யர்பக்கலிலும் தஸபந்தத்துக்குத்தரவுவந்தது ; அத்தைப்பார்த்து மஹாபாஷ்யபட்டரும் முசித்துக்கிடக்க; யமுனைத்துறைவர் அவரை இப்படி முசித்துக்கிடக்கிறதென்னென்று கேட்க; அவரும் இச்செய்தியை இவருக்குச்சொல்ல; அத்தைக் கேட்டருளி இவரும் வந்ததரவைக்கிழித்து விட்டார். ஆக்கியாழ்வானு மித்தைக்கேட்டு, வெறுங்கவியோ ? தந்த்ரபாரகனோ ! என்றுகேட்டுவரவிட்டான். அநந்தரம் யமுனைத்துறைவரும் (உடுக்க

" நவயம்கவயஸ்து கேவலம் நவயம்கேவலதந்த்ரபாரகா: - கவிதந்த்ர

திவாதிவாரணப்ரகடாடோபவிபாடநக்ஷமா:" (నవయం కవయస్తు కేవలం న వయం కేవలతన్త్రపారగాః - అపితు ప్రతివాదివారణ ప్రకటాటోపవిపాటనక్షమాః) என்று இஶ்லோகத்தையருளிச்செய்து எழுதிப்போகவிட்டருள; ஆக்கியாழ்வானும் அத்தை வாசித்துக்கொண்டு, இப்படிக்கொரு வித்வானுண்டோ ? என்றாஶ்சர்யப்பட்டு, இத்தை ராஜாவுக் கறிவிக்க; ராஜாவும் யமுனைத்துறைவனை சடக்கென வருவதென்று ஸ்வஹஸ்தம் வரவிட்டான். அந்த ராஜஹஸ்தத்தையுங் கிழித்துவிட்டார். இச்செய்தியை ராஜாவுக்கறிவிக்கக்கேட்டு, ஆகில்; அவர் ஸாமாந்யரல்லராயிருந்ததென்று, ராஜா இவருக்கு தண்டிகையும் சிவியாரையும் கொடுத்துவரவிட்டான். இவரும் தண்டிகையிலே ராஜாஸ்தாநத்தேற வெழுந்தருளி, (உருஎ) "ஆசைலாதத்ரிகந்யாசரணகிஸலயந்யாஸ தந்யோபகண்டாதாரக்ஷோநீதஸீதாமுககமலஸமுல்லாஸஹேதோஶ்சஸேதோ:, ஆசப்ராச்யப்ரதீச்யக்ஷிதிதரயுகளாதர்க்கசந்த்ராவதம்ஸாந்மீமாம்ஸாஶாஸ்த்ரயுக்மஶ்ரமவிமலமநா ம்ருக்யதாம் மாத்ருஶோந்ய:" (ఆశైలాదద్రికన్యాచరణకిసలయన్యాస ధన్యోపకణ్ఠాదారక్షోనీతసీతాముఖకమలసముల్లాస హేతోశ్చ సేతోః,ఆచప్రాచ్యప్రతీచ్యక్షితిధరయుగళాదర్కచన్ద్రావతంసాన్మీమాంసాశాస్త్రయుగ్మ శ్రమవిమలమనా మృగ్యతాం మాదృశోన్యః) என்றிஶ்லோகத்தைச்சொல்லியெழுதி பத்ராவலம்பநம்பண்ணியருளினார் ; ஆக்கியாழ்வானும் இத்தைக்கண்டு, மிகவுங் குபிதனாய், இவருடனேநான்தர்க்கிக்கக்கடவேனென்ன; ராஜா யமுனைத்துறைவனைப்பார்த்து இவருடனே தர்க்கியுமென்ன ; யமுனைத்துறைவரும் அவனைக்குறித்து; நானுமிவரும் தர்க்கித்தால் வெற்றியுந் தோல்வியும் உங்களுக்குத்தெரியாது, நாங்களிருவரும் தோற்றோமென்றுஞ்சொல்லுவதில்லை, ஆகையாலே ஜயாபஜயமறியும்படிக்கு மத்யஸ்தரானவித்வான்களை யழைப்பிக்கவேணுமென்ன; ராஜாவும் அப்படியாமென்று வித்வான்களையழைப்பித்துக்கொண்டு, மண்டபத்திலேதன்மஹிஷியையுங்கூட்டிக்கொண்டிருக்க; ராஜமஹிஷியும், ராஜாவுடன்யமுனைத்துறைவனைக்காட்டி, இவர்தோலார், தோற்றாராகில்; நான் நாய்க்கெரித்திடக் கடவேனென்ன ; ராஜாவும் தன்மஹிஷியுடன்; ஆக்கியாழ்வான் தோற்றானாகில் ; இவர்க்கு அர்த்தராஜ்யந் தரக்கடவேனென்ன ; அவ்வளவிலே ஆக்கியாழ்வானும் யமுனைத்துறைவனைப்பார்த்து, லௌகிகங்களிலேநீர் அன்றென்றத்தை ஆமென்னக்கடவேன், ஆமென்றத்தை அன்றென்னக்கடவேன், வென்றவன் தோற்றவன் றலையிலே தாடனம்பண்ணக்கடவனென்ன; யமுனைத்துறைவரும் அவனைப்பார்த்து (உருஅ) "த்வந்தூ

ரகவாஸ்யா - ராஜாஸாவஹுளஃ - ராஜபத்நீ பதிவ்ரதா" ([illegible] - ராஜா ஸார்வபௌமஃ - ராஜபத்நீ பதிவ்ரதா) என்றிப்படி லௌகிகத்திலே மூன்றுவார்த்தை யருளிச்செய்ய; ஆக்கியாழ்வானும் நிருத்தரனுயிருந்தான்; பின்பு ஶாஸ்த்ரத்திலே புகுந்தவாறே உத்தமமம், மத்யமம். அதம மென்று மூன்று, இதில் மூன்றுவார்த்தையிலேயாதல், ஐந்துவார்த்தையிலேயாதல், ஏழுவார்த்தையிலேயாதல் ஜயித்தாயாகில்; உன்னது ஜயமென்று யமுனைத் துறைவர் ப்ரதிஜ்ஞைபண்ணியருள, அவனும்மூன்றுவார்த்தையிலும், ஐந்து வார்த்தையிலும், ஏழுவார்த்தையிலும் முழுக்கத்தோற்றுன். வென்றவன் தோற்றவன் தலையிலே தாடனம்பண்ணக்கடவனென்று முன்பே ப்ரதிஜ்ஞை பண்ணினவிதுக்கு, நீ ராஜபுரோஹிதனுமாய், வயோவ்ருத்தனுமாகையாலே யானதுசெய்யேனென்று யமுனைத்துறைவ ரருளிச்செய்ய, இத்தைக் கேட் டிருந்தவித்வான்களெல்லாரும் சந்தோஷித்து, இவரை ப்ரஹ்மரதம்பண்ணிக் கொண்டுவர, ராஜமஹிஷியும், என்னையாளவந்தாரோவென்றுயமுனைத்துறை வரை யெடுத்தணைத்துக்கொண்டு, தன் பர்த்தாவுடன் மணிமாட மாளிகைக் குள்ளே புகுந்தாள்; ராஜாவும் இவர்க்குத் தன்னர்த்தராஜ்யமுங்கொடுத்து, தேவிகளையுமழைப்பிக்க, ஆளவந்தாரும் பத்நீ ஸஹிதராய்க்கொண்டு ராஜ போகத்திலே சுகமே யெழுந்தருளியிருந்தார்.

அநந்தரம், மணற்கால்நம்பியும் இதுகேட்டருளி கொண்டைக்கோல் கொண்டுகூத்தாடியருளி, ஆளவந்தாரைக்காணவேணுமென்று பேராசையோ டே அங்கேறவெழுந்தருளினூர். அவ்விடம் ராஜபதமாய், கட்டுங்காவலுமா யிருக்கையாலே, ஆளவந்தாரைக் காணப்போகாமல் திருமடைப்பள்ளியிலே புகுந்து, இவர் தளிகைக்கு திருப்போனகம் சமைக்கிறஸ்ரீவைஷ்ணவர்களைப் பார்த்து, ஆளவந்தார் விரும்பி யமுதுசெய்யும் கறியமுதென்னென்றுகேட் டருள, அவர்களும் தூதுளையென்று சொல்ல, நம்பியும் அன்றுமுதல் தூது ளையிட்டு மடைப்பள்ளிக் காறுமாஸம் நடத்தியருளினூர். இப்படி நடத்தின விடத்திலும் ஒருவிசாரமற்றிருக்கையாலே, இவரும் முசித்து நாலுநாள்தவி ர்ந்திருந்தார். ஆளவந்தாரும் அமுதுசெய்யும்போது நாலுநாளாக தூதுளை யின்றிக்கே யிருப்பானென்னென்று தளிகைக்குச் செய்வாரைக்கேட்டருள; அவர்களும் ஒரு வ்ருத்தப்ராஹ்மணர் ஆறுமாசமுண்டு நாடோறு நடத்திப் போருகிறது, நாலுமூன்றுநாளுண்டு தவிர்ந்தாரொன்றுவிண்ணப்பஞ்செய்ய, ஆளவந்தாருங் கேட்டருளி, விஸ்மயப்பட்டு, இனி அவர்வந்தவாறேநமக்கறி வியுங்கோளென்று அருளிச்செய்ய; மற்றைநாள் நம்பியும் இன்னம் பார்ப் போமென்று கறியமுதுகொண் டெழுந்தருளினவாறே, அவர்களும் ஆள

வந்தார்க்கறிவிக்க, அவரும் அழையுமென்றருளப்பாடிட்டவாறே, இவரையெழுந்தருளப்பண்ணுவித்துக்கொண்டு போய், அவர்களும் ஆளவந்தாரைக் காண்பிக்க, ஆளவந்தாரும் இவரைக்கண்டு ப்ரத்யுத்தாநாபிவாதந பூர்வகமாக ஆசநமிட்டு, நீர் இத்தனைநாள் நமக்கிந்தத்தூதுளை கொண்டுவந்து இடுவதேதுக்காக ? உமக்கர்த்தம் வேணுமோ ? க்ஷேத்ரம்வேணுமோ? என்று மணற்கால்நம்பியைக் கேட்டருள, நம்பியும், இவைநமக்கொன்றும்வேண்டா, உங்கள் பூர்வர்கள் தேடின அர்த்தம் என்கையிலேயிருக்கிறது. அவைகளிருக்கிறவிடமும் நானறிவேன், அதுகாட்டுமளவும், என்கையிலர்த்தம் கைக்கொண்டருளுந்தனையும், நித்யமாக நாம் உம்பக்கல் வந்துபோம்படி வாசல்தகையாமலிருக்க அப்பணையிடவேணுமென்றருளிச்செய்ய ; ஆளவந்தாரும்அப்படியே வாசல்தகையாதபடிகட்டளையிட, நம்பியும்அன்றுமுதல்கீதையின் செம்மைப்பொருள் தெரியும்படி கீதை பதினெட்டத்யாயமு மருளிச்செய்ய ; ஆளவந்தாரும் ஆரணசாரமான கீதையினுட்பொருள்கேட்டருளி, ஒருநாளைக்கொருநாளார்த்திபிறந்து, அவ்வஸ்துவை ஸாக்ஷாத்கரிக்கலா முபாயமில்லையோவென்று நம்பியைக்கேட்க, நம்பியும் ஸாக்ஷாத்கரிக்கலா முபாயமுண்டென ஏகாந்தத்திலே யெழுந்தருளியிருந்து, மெய்ம்மைப்பெருவார்த்தையான சரமஶ்லோகார்த்தத்தை ப்ரஸாதித்தருள, அத்தைக்கேட்டு ஆளவந்தாருக்கு, நெல்லுக்குப் பால்கட்டத் தலைவணங்குமாபோலே சரணாகதி நெஞ்சிலேபடப்பட, ஆநுகூல்யம் மிகுந்து, சரண்யவிஷய ப்ராவண்யாதிசயத்தாலே இஸ்ஸம்ஸாரத்தில் அருசிபிறந்தபடிகண்டு, அவரையுங் கூட்டிக்கொண்டு (௨௩௯) " 𑌨𑌚𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯𑌸𑌂𑌕𑍋𑌚𑌂 𑌨𑌚𑍈𑌵𑌯𑌮𑌗𑍋𑌚𑌰𑌂 - 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌰𑌙𑍍𑌗𑌂𑌮𑌹𑌾𑌪𑍁𑌣𑍍𑌯𑌂 𑌕𑍋𑌨𑌸𑍇𑌵𑍇𑌤𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌮𑌾𑌨𑍍 " (నచజ్ఞానస్యసంకోచం నచైవయమగోచరం - తస్మాద్రఙ్గంమహాపుణ్యం కోనసేవేతబుదిమాన్) என்கிறபடியே ஜனவாசகக்கழுமாய், நமன்றமராலாராயப்பட்டறியாததுமாய், புண்யவர்த்தகமுமான திருவரங்கந்திருப்பதியே யழைத்துக்கொண்டுபோய், பெரியபெருமாளைத் திருவடிதொழப்பண்ணி, (௨௪0) " நிதிரவ்யய: " (నిధిరవ్యయః) என்கிறபடியே உங்கள் பூர்வர்கள் தேடிவைத்த மஹாநிதிகாணுமென்றுகாட்ட, ஆளவந்தாரும் பெரியபெருமாளுடைய " முடிவில்லதோரெழில் நீலமேனி " யையும் சேவித்து " பழுதேபலபகலும் போயினவென்றஞ்சியழுதேனரவணைமேற்கண்டுதொழுதேன் " என்கிறபடியே கீழிழந்தநாளுக்குக்கூப்பிட்டு, கண்ணுங்கண்ணீருமாய்அரங்கத்தம்மானையநுபவித்து, "பிறந்தார்பிறந்தெய்தும் பேரின்பமெல்லாந் துறந்தார்தொழுதாரத்தோள்" என்கி

றபடியேயும், (உகூக) "க்ஷேத்ராணி மித்ராணி தநாநி நாத புத்ராச்ச தாரா: பசவோ க்ருஹாணி - த்வத்பாதபத்மப்ரவணாத்மவ்ருத்தேர் பவந்தி ஸர்வே ப்ரதிகூலரூபா:" (క్షేత్రాణి మిత్రాణి ధనాని నాథ పుత్రాశ్చ దారాః పశవో గృహాణి - త్వత్పాదపద్మప్రవణాత్మవృత్తేర్భవన్తి సర్వే ప్రతికూలరూపాః) என்கிற ப்ரதிகூலங்களெல்லாம் பரித்யஜித்து, (உகூஉ) "ஸர்வஸங்காந் பரித்யஜ்ய" (సర్వసంగాన్ పరిత్యజ్య) என்னும்படியேயும் ஸர்வஸங்கபரித்யாக பூர்வகமாக ஆஶ்ரமப்ராப்தி பண்ணியருளி, "அண்டர்கோனணியரங்கனென்னமுதனைக்கண்டகண்கள்மற்றொன்றினைக்காணாவே" என்கிறபடியே, வேறொருவிஷயமறியாதே (உகூங) "பரமாத்மநி யோ ரக்தோ விரக்தோऽபரமாத்மநி" (పరమాత్మని యో రక్తో విరక్తోऽపరమాత్మని) என்கிறபடியே அபரமாத்ம வைராக்யமுடையராய், பரமாத்மாஸக்தசித்தராய், பெரியபெருமாளைஸேவித்துக்கொண்டெழுந்தருளியிருக்கிறகாலத்திலே, இவர் ஸ்ரீபாதத்தில் ஆஶ்ரயித்தமுதலிகள் பெரியநம்பி, திருக்கோட்டியூர்நம்பி, பெரியதிருமலைநம்பி, மாறனேர்நம்பி, திருக்கச்சிநம்பி, ஆளவந்தாராழ்வான், திருமாலையாண்டான், வானமாமலையாண்டான், தெய்வவாரியாண்டான், ஈசனாண்டான், ஜீயராண்டான், திருக்குருகூரப்பன், திருமோகூரப்பன், திருமோகூர்நின்றான், தெய்வப்பெருமாள், வகுளாபரணசோமயாஜியார், திருக்குருகூர்தாஸர், திருமாலிருஞ்சோலைதாஸர், வடமதுரைப்பிறந்தான், ஆட்கொண்டியம்மங்கி, என்று இவ்விருபது முதலிகளும் ஆளவந்தார் ஸ்ரீபாதத்திலே ஆஶ்ரயித்தார்கள். இவர்களெல்லாரும் வித்வான்களுமாய், தர்ஶநப்ரவர்த்தகருமாயிருக்கிறகாலத்திலே, மணக்கால்நம்பி ஆளவந்தாரைப் பார்த்து இன்னமொரு ரஹஸ்யவிசேஷம் குருகைக்காவலப்பன் பக்கலிலேயுண்டு, அங்கேபோய்க் கேளுமென்றருளிச்செய்ய, ஆளவந்தாரும் அதுவேன்? தேவரீருக்கு அந்தரஹஸ்யமின்றிக்கே போவானென்னென்ன, நம்பியும் உங்கள் திருப்பாட்டனார் நாதமுநிகள் எங்கள் ஆசார்யரானஉய்யக்கொண்டாருக்கு அந்தரஹஸ்யம் அருளிச்செய்யத்தேட, அவரும் பிணங்கிடக்க மணம்புணரலாமோ வென்று ஶரீராவஸாநதசையில் அநுபவிக்க வமையுமென்று விண்ணப்பஞ்செய்தார், ஆகையாலே அந்தரஹஸ்யவிசேஷம் இல்லையாய்த்தென்ன, ஆகிலும் அங்கேறப்போமென்று, கோயிலிலே யெழுந்தருளியிருந்து ஆளவந்தார் தர்ஶநம்நிர்வஹிக்கக்கண்டு, செய்ததிதுவாய்த்து.

ஸ்ரீமானாய், ஹர்ஷப்ரகர்ஷத்துடனே வாழ்கிற காலத்திலே, மணக்கால்நம்பி ஸ்ரீபாதத்திலே ஆஶ்ரயித்த முதலிகள் ஆளவந்தார், தெய்வத்துக்

கரசுநம்பி, கோமடத்துத்திருவெண்ணகரப்பன், திருவெவ்வுளூராவுடையார் பிள்ளை, வங்கிபுரத்தாய்ச்சி என்றிவரைவர். இவர்களுக்குத் தர்ஶநதாத் பர்யவிசேஷமும் அருளிச்செய்துகொண்டு சிலகாலம் எழுந்தருளியிருந்து தம் அந்திமதசையிலே ஆளவந்தாரைப்பார்த்து, நாதமுநிகளோடு உபயஸம் பந்தமுடையரான நீர் அவர்திருவடிகளே உமக்குப் ப்ராப்யமும் ப்ராபகமு மென்று அத்யவஸித்துக்கொண்டிரும், மேலும் உம்மைப்போலே யொரு தர்ஶநப்ரவர்த்தகரையும் உண்டாக்கியருளி கோயிலைவிடாதே நெடுங்காலம் எழுந்தருளியிருமென்று அருளிச்செய்து, உய்யக்கொண்டார் திருவடிகளை த்யானித்துக்கொண்டு திருநாட்டுக்கெழுந்தருளினார். இத்தால் ஆசார்ய பர மாசார்யர்களுடைய திவ்யாஜ்ஞாபரிபாலநம்பண்ணி உபயருடையவுக்தி பல த்தபடிகண்டு உகந்தார் இவரொருவருமேயிறே. மணற்கால்நம்பிதிருநக்ஷத் ரம் மாசியில்மகம். அவர்தனியன், (௨௬) "அயத்நதோ யாமுநமாத்மதாஸ மலர்க்கபாதாம்புருஹைகஸம்ச்ரயேண - யஃக்ரீதவாந் ஆஸ்தித யௌவராஜ்யம் நமாமிதம் ராமமமேயஸத்த்வம்" (అయత్నతో యామునమాత్మదాసమలర్క పాదాంబురుహైకసంశ్రయేణ - యఃక్రీతవానాస్థితయౌవరాజ్యం నమామితం రామమమేయసత్త్వం

மணற்கால்நம்பி திருநாட்டுக்கெழுந்தருளினபடி கண்டு ஆளவந்தாருள்ளிட்டமுதலிகள் எல்லாரும் மிகவு மவஸந்நராய் சோகித்து தங்களிலே தரித்து நிற்க, ஆளவந்தாரும் அவரை ப்ரஹ்மமேதத்தாலேஸம்ஸ்கரித்தருளி, செய்யவேண்டுங் க்ருத்யமெல்லாஞ் செய்தருளினார்.

ஸ்ரீமணற்கால்நம்பிதிருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

---

அநந்தரம், ஆளவந்தாரும் முதலிகளும், அப்பன் யோகத்திலேயெழுந்தருளியிருக்குமிடத்தேற வெழுந்தருளி, இவரை ஸமாதிபங்கம் பண்ணவொண்ணாதென்று, தும்முதல், இருமுதல், அடியோசைப்படுதல்செய்யாதே, மௌநத்தோடே சுவர்ப்புறத்தே பின்னே தெரியாதேநிற்க, அப்பனும் யோகத்திலே யெழுந்தருளியிருக்கிறவர், பின்திரும்பிப்பார்த்தருளி, இங்கே சொட்டைக்குலத்திலாரேனும் வந்தாருண்டோ வென்று கேட்டருள, ஆளவந்தாரும் அடியேன் யமுநைத்துறைவன் விடைகொண்டிருக்கிறேன் என்றெழுந்தருளிவந்து, அப்பன் ஸ்ரீபாதத்திலே சேவித்திருந்து, அடியோங்கள் சுவர்ப்புறத்தே பின்னேதெரியாதபடிநிற்க, தேவரீரிங்ஙனருளிச்செய்கைக்கு

வேறதுவென்னென்று ஆளவந்தார்கேட்டருள, அப்பன் அருளிச்செய்தபடி! அடியேனுந் தானுமாய் அநுபவியாநின்றால் பெரியபிராட்டியார் திருமுலைத் தடத்தாலே நெருக்கி யணைத்தாலும் அவள்முகங்கூடப்பாராத ஸர்வேஶ்வரன், என்தோள்களையமுக்கி நாலுமூன்றுதரம் சுவர்ப்புறத்து எட்டிப் பார்த்தான், இப்படி இவன் பார்க்கும்போது, சொட்டைக்குலத்தில் உள்ளார் ஆரேனும் வந்தாருண்டாக வேணுமென்று இருந்தேன்காணு மென்று அருளிச்செய்தார். ஆளவந்தாரும் இத்தைக்கேட்டுப்போர வித்தராயருளி, அடியேனுக்கும் இந்த யோகரஹஸ்யக்ரமத்தை அருளிச்செய்யவேணுமென்று அப்பன் ஸ்ரீபாதத்திலே தெண்டனிட்டுக்கொண்டு விழுந்துகிடக்க, அப்பனுமுகந்து, அப்படியே செய்கிறோமென்று முடிபிடித்தெடுத்து நம்முடைய சரீராவஸாநத்திலே சொல்லுகிறோம், வருகிறபுஷ்யமாஸத்திலே, குருபுஷ்யயோகத்திலே, அபிஜிந்முஹூர்த்தத்திலே, நமக்கு சரீராவஸாநமாயிருக்கும், அதுக்குமுன்னாக உதவவேணுமென்று திருமுகமெழுதிக் கொடுத்தருளினார். ஆளவந்தாருந் திருமுகத்தையுங் கொண்டு கோயிலேற வெழுந்தருளினார்.

பின்பு பெருமாள் திருவத்யயநத்திருநாளிலே, திருவத்யயநங்கேட்டருளும்போது ஆழ்வார்திருவரங்கப்பெருமாளரையர் "கெடுமிடர்" என்கிற திருவாய்மொழியை அபிநயித்துப் பாடியருளுகிறவர் ஆளவந்தார் திருமுகமண்டலத்தைப் பார்த்தருளி "நடமினோநமர்களுள்ளீர் நாமுமக்கறியச் சொன்னோம்" என்று பலகாலும்பாடியருள, ஆளவந்தாரும் இத்தைக்கேட்டருளி, ஆழ்வாருடைய தமிரிலே அந்தர்ப்பூதமாம்போது திருவநந்தபுரம் புக்கு ஸேவிக்கவேண்டி யிருந்ததென்று, அப்போதே திருவோலக்சத்தில் நின்றுமெழுந்திருந்து, பெரியபெருமாளுக்கும்,பெருமாளுக்கும்தண்டஞ்சமர்ப்பித்து, அவாருமதிகொண்டு,புறப்பட்டருளி, மடத்துக்குக்காவலாகத்தெய்வவாரியாண்டானைவைத்து, திருவநந்தபுரத்துக்கெழுந்தருளி "படமுடையரவின்பள்ளிபயின்றவநந்தபுரத்தம்மானை" யும் த்வாரத்ரயேண திருவடிதொழுது, அங்கே யெழுந்தருளியிருந்தவளவிலே, ஸந்நிதியில் முதலிகளைப் பார்த்து, குருகைக்காவலப்பன் நமக்கிட்டுத்தந்த திருமுகத்தைக்கொண்டுவாருங்கோளென்று அருளிச்செய்ய, முதலிகளுங் கொண்டுவந்து ஸமர்ப்பிக்கப் பார்த்தருளி, மாஸமும், திவஸமும், அன்றாயிருந்தபடியாலே ஒரு புஷ்பக விமானம்பெற்றிலோமே யென்றுபோர ஶோகார்த்தராய் மீண்டு எழுந்தருளாநிற்க; தெய்வவாரியாண்டானுக்கு ஆளவந்தார் விஶ்லேஷம் பொறாமல், திருமேனிசோஷிக்க, இங்கிருந்தமுதலிகள் இவர்க்கு வைத்யர்கள் பலனா

யும் அழைத்துக்கொண்டு பார்ப்பித்தவிடத்தில், இவர்க்கு விஷயஸ்ப்ருஹை யாக்கும், இப்படியாய்த்தென்ன ; உமக்கெந்தவிஷயஸ்ப்ருஹையாயிருக்கி தென்று முதலிகள்கேட்க, அவரும் அடியேனுக்கு ஆளவந்தார் விஷயமெ ழிய வேறொருவிஷயமுண்டோ வென்று அருளிச்செய்ய ; ஆகில் இவனை அங்கேறக் கொண்டுபோங்கோளென்று வைத்யர்கள் பலருஞ்சொல்ல, மு லிகளும் இவரைக் கட்டணத்திலே கொண்டுபோக, ஒருநாளைக்கொருநாள் திருமேனியிலே வாட்டந்தீர்ந்து, பின்புநடக்கவல்லராய், வருகிறவளவிலே ஆளவந்தாரும், திருவனந்தபுரத்தில்நின்றும்மீண்டு,எழுந்தருளுகிறவழியிலே காமணையாற்றின்கரையிலே, திருவநந்தபுரத்துக்கு அரைக்காத வழியிலே விட்டு எழுந்தருளியிருக்க ; தெய்வவாரியாண்டானும், ஆளவந்தாரை சே வித்து, அவர் ஸ்ரீபாதத்திலே தண்டம் சமர்ப்பித்துக்கொண்டு விழுந்து கிட க்க ; ஆளவந்தாரும் இவரெழுந்திருக்கமாட்டாமல் கிடக்கிறபடியைக்கண்டு பெருமாள் ஸ்வதந்த்ரருமாய், சூரருமாய் இருக்கையாலே ஸ்ரீபரதாழ்வானை வைத்தவிடத்தேயிருந்தார் ; அடியேன் ஸ்வதந்த்ரனுமின்றிக்கே, சூரனுமின் றிக்கேயிருக்கையாலேயிறே, நீர்வைத்தவிடத்தில் இராமல்வந்ததென்று அரு ளிச்செய்ய ; இத்தைக்கேட்டு தெய்வவாரியாண்டானும், வந்து ஸ்வரூப ஹாநி பட்டேன் என்று மிகவும் ஸத்தை குலைந்துகிடக்க ; இவர் எழுந்தி ராதபடிகண்டு, என்னை ஸ்வதந்த்ரனுமாய், சூரனுமாக்கினை லொழிய எழு திரோனென்று கிடக்கிறாயோ வென்று ஆளவந்தார் அருளிச்செய்ய, தெய்வ வாரியாண்டானும் இவ்வார்த்தையைக் கேட்டு, வந்து ஸ்வரூபஹாநிபட்ட வோபாதி, இதுவுமொரு ஸ்வரூபஹாநி யாயிற்றேவென்று பரபரவென்று எழுந்திருந்துநிற்க ; ஸ்ரீபாதத்துமுதலிகளும், (உகரு) "ஜஸாநுஜ்ஞா ப்ராவ் வொஜ்தா" (జూనుజ్ఞాప్రావ్యోజ్తః) என்கிறஇளையபெருமாள்படி இவர்க் குண்டாய்த்தென்ன ; ஆளவந்தாரும் இதொரு அதிகாரவிசேஷமிருந்தபடி யென்தான் என்று போரவுகந்தருளி, மிகவும் மெலிந்திரோயென்று முதுகு தடவி அதிக்ருபாசித்தராய்,திருவநந்தபுரத்துத்திருக்கோபுரம் அதோதோன் றுகிறது. அங்கேபோய், ஆயிரந்தலையுடைய அநந்தசயநனை ஸேவித்துவாரு மென்று அருளிச்செய்ய, இவரும் என்னுடைய திருவநந்தபுரம் எதிரேவந்த தென்று ஸ்வாசார்யரான ஆளவந்தாரைக்காட்டி யருளினர். இதுக்குக் கரு த்து (உகசு) "[illegible]" ([illegible]) என்று "வில்லார் மணிகொழிக்கும் வேங்கடப்பொற்குன்றமுதல் செல்லார்பொழில்சூழ் திரு

ப்பதிக-ளெல்லாம் - மருளாமிருளோடமத்தகத்துதந்தா னருளாலேவைத்தவ வர்" என்கிற இந்த அத்யவஸாயம் இவருக்கு உண்டானபடிகண்டு மிக வும் உகந்தருளினார். "நின்றவண்கீர்த்தியும்" என்றுதொடங்கி, "உன்னி ணைமலர்த்தாளென்றனக்குமது" என்றுநின்றார்களிறே. இவரையுங்கூட்டிக் கொண்டு, ஆளவந்தார் மீண்டு கோயிலேறவெழுந்தருளி, பெரியபெருமாளை யுஞ் சேவித்துக்கொண்டு, அங்கே தாமும் ஸ்ரீபாதத்துமுதலிகளுமாக இரு ந்து, தர்சநம் நிர்வஹித்தருளுகிறபோது; இனிமேல் தர்சநப்ரவர்த்தகரா வார் ஆரொன்று, விசாரமுண்டாய் ஒருவரையுங்காணுதே முசித்து சிந்தித் திருக்[illegible]த்திலே:—

## ( இளையாழ்வார் அவதாரவைபவம். )

ஆளவந்தார் ஸ்ரீபாதத்தில் ஆஶ்ரயித்தமுதலிகளில், பெரியதிருமலை நம்பி, "வேங்கடத்தைப்பதியாகவாழ்வீர்" என்கிறபடியே திருவேங்கட முடையானை "அடிக்கீழமர்ந்துபுகுந்து" சேவித்துக்கொண்டு எழுந்தருளி யிராநிற்க; அவர் உடன்பிறந்த பெண்பிள்ளைகள் ஸ்ரீபூமிபிராட்டியார் என் றும், பெரியபிராட்டியார் என்றும் பெயருடைய இருவரிலே, மூத்த ஸ்ரீபூமி பிராட்டியார், ஆஸுரிகேசவப்பெருமாள்என்கிற ஸர்வக்ரதுதீக்ஷிதர்க்கு திரு மணம்புணர்ந்தாள். இளையஸ்ரீபெரியபிராட்டியார்மழலைமங்கலத்துக்கமலநயந பட்டர்க்கு வட்டமணிகுலத்திலே திருமணம்புணர்ந்தாள். அவர்களும் தம் தாம் புக்ககங்களிலே வாழுங்காலத்திலே, (௨௯௭) "அநந்தஃ ப்ரதமம் ரூபம் லக்ஷ்மணஸ்து ததஃபரம் - பலபத்ரஸ்த்ருதீயஸ்து கலௌ கஶ்சித்பவிஷ்யதி" (అనన్తః ప్రథమం రూపం లక్ష్మణశ్చ తతః పరం - బలభద్రస్తృతీయస్తు కలౌ [illegible]) என்கிற வசநத்தின்படியே, பெரிய திருவநந்தாழ்வானும், [illegible] அகிலாத்மோஜ்ஜீவநார்த்தமாக தம் திருவவதாரத்துக்கு இடம்பார்த்து, ராமதிவாகரரச்யுதபாநுக்கள்; கௌஸல்யை தேவகிகளுடைய கர்ப்பங் களை விரும்பினாப்போலே, ராமாநுஜதிவாகரராய், ஸ்ரீபெரும்பூதூரிலே ஸ்ரீ பூமிபிராட்டியார் கர்ப்பத்தை ப்ராபித்தருளி (௨௯௮) "ஶ்ருதிஸ்ம்ருதி[illegible] ப்ராயேண பதிதா த்விஜாஃ - [illegible]" (శ్రుతిస్మృతి[illegible] ప్రాయేణ పతితా ద్విజాః - [illegible]) என்கிறபடியே, கலிஸாம்ராஜ்யம்பண்ணும் "இருள் தருமாஞால" த்திலே "கலியுங்கெடுங்கண்டுகொள்மின்" என்கிறபடியே, கலியிருள்நீங்கிபெரியக்ருதயுகம்பற்றி, "பேரின்பவெள்ளம்பெருகும்படியில்"

(௨௬௯) “ யீஜூஹுவூா” (ధీల్లఞ్ఝా) என்கிறகணக்கின்படியே, சகவருஷம் தொளாயிரத்து முப்பத்தொன்பது சென்ற வர்த்தமாந பிங்களஸம்வத்ஸரத்தில் ஸ்ரீமத்தான சைத்ரமாஸத்தில் சுக்லபக்ஷத்தில், பஞ்சமிகுருவாரஸஹிதமான திருவாதிரைநக்ஷத்ரத்திலே சுபமுஹூர்த்தங்களிலே பாரெல்லாம் உய்யும்படி ப்ராதுர்ப்பவித்தருளினர். இவர்க்கு ஜாதகர்மமும் ஆஸூரி கேசவப்பெருமாள் செய்தருளினர்.

இச்செய்தியைத் திருமலைநம்பியும்கேட்டருளி, ஸ்ரீபெரும்பூதூரேறச் சென்று, ஸர்வக்ரதுகேசவசோமயாஜியாரைக்கண்டு, ஸத்கரித்து அவர் புத்ரனையும் முகவொளிதிகழ்க்கடாக்ஷித்தருளி, இவன் ஸர்வலக்ஷணஸம்பந்நன், ஸகலஶாஸ்த்ரங்களையும் அதிகரிக்குமாகையாலே, (௨௭௦) “ லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்நः ” (లక్ష్మణోలక్ష్మీసంపన్నః) என்கிற இளையபெருமாள் திருநாமத்துக்குத்தகுதியாயிருந்தானென்றுபன்னிரண்டாந்திவஸத்திலே(௨௭௧) “தக்ஷிணஸ்துபுஜம் பூர்வம் சந்த்ரேண ப்ரதிபந்நः- ராமம் ஸம்ப்ரதிபேதே ச பஶ்சாச்சங்கேந வை த்விஜோத்தமः ” (దక్షిణస్తుభుజంపూర్వంచన్ద్రేణప్రతిపన్నః - రామంసంప్రతిపేదే పశ్చాచ్ఛంఖేనైవద్విజోత్తమః) என்று சொல்லுகிறபடியே இவர்க்கு நாமகரணத்திலே, திருவிலச்சினை முன்னாக இளையாழ்வாரென்று திருநாமம் சாத்துவித்தருளினர். பின்னையும் அந்நப்ராஶநசௌளோபநயநாதிகளையுந் தத்தத்காலங்களிலே ஶாஸ்த்ரோக்தப்ரகாரத்திலேசெய்து அங்கோபாங்கங்களோடேகூட பதக்ரமஸஹிதமான வேதாத்யயநத்தையும் பண்ணி, சதுர்த்தஶவித்யாபாரங்கதராய், ஷோடசகலாபூர்ணனான சந்த்ரனைப்போலே, ஷோடசகர்ம ஸம்ஸ்க்ருதராய், ஷோடசவார்ஷிகரானவாறே ஸர்வோபகாரக்ஷமமான க்ருஹஸ்தாஶ்ரமத்தை அங்கீகரித்தருளி, பெருமாள்கோயிலிலே திருப்புட்குழியிலே, யாதவப்ரகாச னென்பானொரு ஏகதண்டியான ஸந்யாஸி, பூர்வபக்ஷம் வேதாந்தம் வாசிப்பிக்கிறானென்று கேட்டருளி, இளையாழ்வாரும் அங்கேயெழுந்தருளி, அவன்பக்கல் ஶ்ரோதாக்களோடே தாமும் ஸஹஶ்ரோதாவாய், வேதாந்தம்வாசித்தருளாநிற்க, அவ்வளவிலே மழலைமங்கலத்துக்கமலநயநபட்டருக்கு ஒரு புத்ரன் அவர்பத்நி பெரியபிராட்டியாரிடத்திலே, க்ரோதநஸம்வத்ஸரத்தில், பௌர்ணமியும் சோமவாரமுங்கூடின புநர்பூச நக்ஷத்ரத்திலே அவதரித்தருள, ஜாதகர்மாநந்தரம், திருமலைநம்பியும் அங்கேற வெழுந்தருளி, கமலநயநபட்டரையுங்கண்டு ஸத்கரித்து, பெரியபிராட்டியார் புத்ரனையும் தம் தாமரைக்கண்களாலே நோக்கி, இவன் ஸதாத்மகுணங்களை யுடையனாய், ஸர்வ வித்யை

ளையும் அதிகரித்து வைதிகபக்ஷவாளும் என்று திருவுள்ளம் உகந்தருளி, கமலநயநபட்டரையுங்கொண்டு கோவிந்தனென்று திருநாமஞ் சாத்துவித்து நாமகரணம்பண்ணுவித்தருளினார். இவரும்சௌளோபநயநாதிஸம்ஸ்காரவிசிஷ்டருமாய் க்ருஹஸ்தாஶ்ரமப்ராப்தி பண்ணியருளி, ஸர்வஶாஸ்த்ரங்களையும் அப்யசித்து, திருப்புட்குழியிலே யாதவப்ரகாசனுடனே இளையாழ்வார் வாசிக்கிறாரென்றுகேட்டு, பேராசையோடே அங்கேவந்து, தாமும்வேதாந்தம் வாசிக்கத்தொடங்கினார், யாதவப்ரகாசனும், (உஎஉ) "ஸத்யஂஜ்ஞாநமநந்தஂப்ரஹ்ம" (ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம) என்கிறஶ்ருதிவாக்யத்துக்குக்கண்டத்வமுண்டத்வபூர்ணஶ்ருங்கத்வங்கள் ஒரு கோவ்யக்தியிலே கடிக்கும்போதிரேப்ரஹ்மத்துக்குஇந்தவிசேஷணங்கூடிவதென்று அபார்த்தப்ரதிபாதநம் பண்ண, இளையாழ்வார் அத்தைநிஷேதித்து, "ஸத்ய" சப்தத்தாலே, க்ஷணிகவ்யாவ்ருத்தியையும், "ஜ்ஞாந" சப்தத்தாலே அசித்வ்யாவ்ருத்தியையும், "அநந்த" சப்தத்தாலே, சேதநவ்யாவ்ருத்தியையும்பண்ணி, சேதநாசேதநவிலக்ஷணமாய், நித்யமாயிருக்கும் ப்ரஹ்மமென்ன; அவனும் ஹூங்காரம்பண்ணினான். பின்பு ஒருநாள் இளையாழ்வார், யாதவப்ரகாசனுக்கு அப்யஞ்ஜநத்தொழில்செய்யாநிற்க, அவ்வளவிலே (உஎந) "தஸ்யயதாகப்யாஸஂபுண்டரீகமேவமக்ஷிணீ" (தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ) என்கிறஶ்ருதிக்கு அவன் அநுசிதார்த்தஞ்சொல்ல, இவர்க்கு அதுகேட்டு சோகமுண்டாய், அந்தசோகாஶ்ரு அவன்தொடையிலேவிழ, அதுநெருப்புபட்டாப்போலே அவன்தொடையைச்சுட, அவனும்பதறி, இவர்முகம்பார்த்து, துக்கமாவானென்னென்ன; இவரும் (உஎச) "கஂபிபதீதிகபிः" (கம் பிபதீதி கபிः) என்று சூர்யனாய், (உஎரு) "ஆஸஉபவேஶநே" (ஆஸ உபவேஶநே) என்று உபவேஶநமாஶ்ரயணமாய், சூர்யாஶ்ரயணத்தையுடைத்தானகமலம்போலே என்று இத்யாதிப்படியே, யோஜனையிருக்க, அயதார்த்தங்கேட்டவாறேயென்ன, யாதவப்ரகாசனும் அதுகேட்டுக் குபிதனாய், நான்சொன்னபடிகேட்கில் வாசித்திரும், அல்லாவிடில் விட்டுப்போமென்ன, இவரும் அப்படியே சிந்தைகலங்கித் தவிர்ந்திருக்க, அவனும் தன்னுடைய சிஷ்யர்களில் அநுகூலரையழைத்து, ஏகாந்தத்திலே நீங்கள் நான்சொன்ன அர்த்தத்தை சம்மதித்திருக்க, இளையாழ்வார் ஒருவருமே எதிர்த்தட்டாக வர்த்தாபியாநின்றார், இவராலே நம்முடைய அத்வைதரீதிசிறுக்கும், இவன்முடியும்படி விரகென்னென்றுகேட்க, அவர்களும் பலபடி படும்வகைசொல்ல, அவனும் அவ்வோவர்த்தங்களுக்குப் பழிபாவமுண்டாம், அவைவாராமையும் நினைத்தபடிகூட

வும், மணிகர்ணிகையிலே ம்ருதியுண்டாக்குகையே என்னகவாயில் உள்ளதென்ன, அழகியதென்று, ஸர்வரு மைகமத்யம்பண்ணிக்கொண்டு, துர்யோதனன் தர்மபுத்ரர்விஷயத்திலே, ஜதுக்ருஹத்திலே விஶ்வாஸம்பண்ணினப்போலே அந்தரங்கித்து, இளையாழ்வாரை அழைத்து, நீரில்லாவிடில் எங்களுக்கொரு சாயலாயிருந்தது, கோபியாமல் க்ரந்தத்தை அவிச்சிந்நமாக நடத்துமென்று நன்மையுரைத்து உள்ளிட்டுக்கொண்டு, ஒருநாள் கங்காயாத்ரையை உத்யோகித்து, புறப்பட்டுப்போம்போது, நின்றவிடங்களிலே இளையாழ்வாரும் கோவிந்தபட்டரும் கூட்டரவுபடாதபடி பண்ணிக்கொண்டு க்ஷாத்ரகோடி, கணிதசிஷ்யர்கள் ஶுஶ்ரூஷிக்க, வழிசெல்லாநிற்க, விந்த்யப்ரதேசத்திலே, ஒருபள்ளக்கரையிலே ஜலஸ்பர்ஶார்த்தமாக இளையாழ்வாரும் கோவிந்தபட்டரும் கூடிநின்றவாறே, கோவிந்தபட்டரும் அவிஜநமான சமயமறிந்து, இவர்களுடைய கங்காயாத்ர நிமித்தத்தை இளையாழ்வாருக்கு ஸூசிப்பித்து அகன்றுபோகச்சொல்லி, தாம் ஒருவரேபோந்தார்.

இளையாழ்வாரும் வ்யாகுலப்பட்டு அவ்வழியைவிட்டு, குறுக்கப்போய், ஒருமரத்தடியிலே நின்று பார்க்க, அவ்விடம் "வெம்பியெறிகானகமாய்" நிர்ஜலப்ரதேசமுமாய், ஶுஷ்ககண்டகாவ்ருதமாய் "பொருந்தார்கை வேல்நுதிபோல், பரற்பாயமெல்லடிகள் குருதிசோர, விரும்பாதகான்விரும்பிவெயிலுறைப்பவெம்பசிநோய்கூற" என்கிறபடியே உளன்று வெம்பரற்களையுடைத்தாய் தீக்ஷ்ணதாபகர ரவிகிரணங்களையுடைத்தான (உஎ௬) "விந்த்யாடவீஷு சாயாஸு" (విన్ధ్యాటవీషు ఛాయాసు) என்றுசொல்லுகிற விந்த்யாடவியாகிற சிறந்தகாட்டிலேதனியேநின்று "ஆவாரார்துணை" என்று பக்கம்நோக்கிநின்று "வழிதிகைத்தலமருகின்றேன்" என்னும்படி திக்விப்ரமம்பிறந்து, "மதியெல்லாமுள்கலங்கி" அடியிடத் திமிர்த்துக்கொண்டு, திகைத்துநிற்க, ஸர்வேஶ்வரனும் (உஎஎ) "நாஹமாத்மாநமாஶாஸே மத்பக்தைஸ்ஸாதுபிர்விநா" (నాహమాత్మానమాశాసే మద్భక్తైస్సాధుభిర్వినా) என்றிருக்கும் அவனுகையாலே (உஎஅ) "ஸதாரஸ்ஸஶரஸ்ஸாயுத:" (సదారస్సశరస్సాయుధః) என்கிறபடியே வாளும் வில்லுங்கொண்டு "இடர்கெடவந்து" பத்நீஸஹிதனாய் ஒருவில்லியாய்வந்து முன்னே தோன்றினன்; இவரும் அவர்களைக்கண்டு கலக்கந்தீர்ந்து, உள்ளந்தேறி நின்று, நீங்கள் எங்கு நின்றும்வந்திகோள், எங்கேறப்போகிறிகோள் என்றுகேட்க, அவர்களும் உத்தரதேசம் ஸித்தாஶ்ரமத்தில்நின்றும்வருகிறோம், ஸத்யவ்ரதக்ஷேத்ரதேசமேறப்போகிறோமென்ன, இவரும் நாம் உங்களுடனே புண்யகோடியேறவரு

வாளுக நினைத்திராநின்றேனென்ன, நல்லது வாருமென்று அவர்கள்முன்னடியிட, இவரும் அவர்கள்பின்னேசெல்ல, அவர்களும் ஸ்வாதீநமாகவழிநடத்த, விந்த்யம்பிற்காலித்து சந்த்யாகாலமானவளவிலே, காலோசிதமான கர்மாநுஷ்டாநங்களையுஞ் செய்து, உபவாசத்திலே, அவர்களுடனே, ஓரிடத்தே கண்புதைய, "முடியாவல்விடாய்" முன்னடிதோன்றாமல், காளராத்ரியாய், காடாந்தகார பூயிஷ்டமாய், நள்ளிருளானவாறே, ஒரு ராஜவ்ருக்ஷத்தடியிலேயிருந்தார்கள். அப்போது வ்யாதபத்நியும், நல்லதண்ணீர் மடுக்க வாசைப்பட; வ்யாதபுருஷனும் கிட்டவே பாநார்ஹமான கிணற்றிலே, மதுரநிர்மல சீதள சந்தயுதபாநீயம் வெடியக் காட்டுகிறேனென்ன; இளையாழ்வாரும் அதுகேட்டு, ஐயோ? பரமோபகாரிகளான இவர்களை லப்தமநோரதராக்கும்படிக்கு, இது நமக்கு அபிஜ்ஞதேசமாய்விட்டதே என்று நிர்விஷண்ணரா யிராநிற்க; "கனவிருளகன்று" "கீழ்வானம்வெள்ளென்ற" வாறே "கொழுமலரணவிக்கூர்ந்தது குணதிசைமாருதம்" வீச, "அரிஅரியென்றபேரரவங்கேட்டு" எழுந்திருந்து, சடக்கெனக்காலீநகர்மத்தைச்செய்து, வழிநடத்துமவர்களைத் தேடிக் காணாமல், ஸர்வதோதிக்குமாக நோக்கிக் கூப்பிட்டு, நாலடிதோன்றினவழியே நடந்துவர, "கதிரவன்குணதிசைச்சிகரம்வந்தணைய" ஜநபதங்கள் ஸ்பஷ்டங்களாகத் தோற்றக் கண்டு, நேற்று நின்றநிலைக்கு இப்படியுமொரு வெளிநாடு காணப்பெற்றதேயென்று போர ஆஸ்சர்யயுக்தராய் நோக்க; அங்கே ஒரு தோப்புங் கிணறுமாய், நாலிரண்டுபேருமாய்நிற்கக்கண்டு, இவரும் இது எத்தேசம், எவ்வூர், எந்த ஸ்த்தலமென்று அவர்களைக்கேட்க; அவர்களும் இதென்ன ப்ராஹ்மணா? புண்யகோடிவிமாநம்முன்னேநிற்கத்தெரியாதோவென்ன; இவர் அதுகேட்டு ஸந்தோஷமத்யுந்மஸ்த்தகமாய், ராவணவதம் கேட்டிருந்த பிராட்டி ஸந்தோஷம்போலவும், (உஎக) 'த்ருஷ்டாஸீதா'' (దృష్టాసీతా) என்ற வார்த்தையைக் கேட்ட பெருமாள் ஸந்தோஷம்போலவும், மதுவநத்திற் புகுந்த திருவடி ஸந்தோஷம்போலவும், தத்க்ஷணத்திலே கர்த்தவ்யதாமூடராய், அவர்களைப் பிராட்டியும் பெருமாளுமாகநினைத்து, க்ருஷ்ணாவதாரஸௌசீல்யமே நினைத்து, "எத்திறம்" என்ற ஆழ்வாரைப்போலே மோஹித்துக்கிடந்தார்.

பின்பு (உ௮0) "ஸமௌநராஸீத்ஸ்வயம்" (సమౌనరాసీత్స్వయం) என்னும்படியே, தன்னிலே வ்யாமோஹந்தெளிந்தவாறே, (உ௮க) "ஸக்ருஷ்ணஸஹயாதவஸஹஸ்வை" (సకృష్ణసహయాదవసహస్రై) என்னும்படி கூடத்திரிந்த அர்ஜுநனை ப்ரமிப்பித்தாற்போலே, என்னையும் நீர்மையால் "நெஞ்சம்வஞ்சித்துப்புகுந்து உருக்காட்டாதேயொளிப்பதே" என்னுமாபோலே,

பலவகை சொல்லிப் புலம்பி, தம்மிலே உள்ளந்தேறி, ஆநந்தநிர்ப்பரராய், பெரிய ராஜமார்க்கத்தாலே சென்று, வையமாளிகையேறி, "தென்னத்தியூரர்கழலிணைக்கீழ்ப்பூண்ட வன்பாளன்" என்கிறபடியே திருப்பொலிந்த சேவடிகளை சேவித்து, விழுந்தெழுவது தொழுவதாய், ஆநந்தாஶ்ருக்கள் பனிப்ப, புளகீக்ருதகாத்ரராய், ஆநந்தித்து, அவன் அந்தர்த்தாநம்பண்ணின தற்கு அவன்கருத்தறிந்து, அச்சாலைக்கிணற்றிலே பேரருளாளர் திருவாராதநத்துக்கு உதவத்திருமஞ்சநங்கொண்டுவந்து ஸமர்ப்பித்துக்கொண்டு போராநின்றார்.

அங்கே யாதவப்ரகாசனும் திரளுமாக இவர்கள் வருமளவும்நிற்க, அவ்வளவிலே கோவிந்தபட்டர் வர, வந்தீரோ, இளையாழ்வார் எங்கே? என்றுகேட்க, அவரை நான் கண்டிலேனென்ன, அவனும் தன்சமீபவர்த்திகளைப்பார்க்கவிட, அவர்களும் பார்த்துத்தேடிக்காணாமையாலே, ஐயோ? காட்டிலே என்னதீங்குவந்ததோ! என்று, ஸர்வரும்துக்காகுலராய், முன்னே நடந்து, ப்ரயாணகதியிலேபோய், கங்காதீரத்தை யடைந்தார்கள். அங்கே போய் அவர்களெல்லாரும் கங்கையிலே மாகஸ்நாநம்பண்ணாநிற்க, ஒருநாள் கோவிந்தபட்டரும், அகமர்ஷணஸ்நாநம் பண்ணுகிறபோதிலே, ஒருலிங்கம் வந்துசேர, இதென்னென்று விஸ்மிதராய், யாதவப்ரகாசனுக்குக் காட்ட, அவனும் போர ப்ரீதனாய், நீர் தெய்வஜ்ஞ ராகையாலே கங்காஸ்நாநபலம் கைசேர்ந்தாற்போலே, கங்காதரனே கைப்புகுந்தான் என்று யாதவப்ரகாசனும் இவரிடத்தே விசேஷப்ரதிபத்தியுக்தனாக, எல்லாரும் லிங்கம்கைசேர்ந்ததுவே நிரூபகமாக இவர்க்கு உள்ளங்கைகொணர்ந்தநயினாரென்று பேரிட்டு அழைக்கத்தொடங்கினார்கள். யாதவப்ரகாசனும், கங்காஸ்நாநம் பண்ணி மீண்டு, ஜகந்நாதம் அஹோபிலம் வழியாகவர, உள்ளங்கைகொணர்ந்தநயினாரும், இந்தலிங்கத்தை ஒரு உசிதஸ்த்தாநத்திலே ப்ரதிஷ்டிப்பித்து வருகிறேனென்ன, யாதவப்ரகாசனும் அப்படியே செய்யுமென்று இவரை மார்க்கமத்யே அனுப்பிவிட்டு, பெருமாள்கோயிலேறப் போந்தான்.

பின்பு உள்ளங்கைகொணர்ந்த நயினாரும், தன்ஜந்மபூமியான மழலைமங்கலத்திலே சென்று, அங்குள்ள விசேஷ வித்வந்மஹாஜநங்களையும் திரட்டி, ஸ்வகரஸ்த்த லிங்கத்தை அங்கே ப்ரதிஷ்டிப்பித்து, தத்பக்தனாயிருக்கிறவளவிலே; காளஹஸ்திநாதன், இவர் இருப்புக்குவிரும்பி, நீர் நம்பக்கல் வந்திருக்கவேணுமென்று நயினாருக்கு ஸ்வப்நங்காட்டி, தன் ஸ்த்தாநத்தார் ஸ்வப்நத்திலும் உள்ளங்கைகொணர்ந்த நயினாரை அழைத்துக்கொண்டு வாருங்கோளென்று ப்ரேரிக்க; அப்படியே அநேகதுக்கொத்தில் உள்ளா

ரும் மழலைமங்கலத்திலே வந்து, இவரைப்பலவகை பஹுமாநம் பண்ணி அழைத்துக்கொண்டுபோய், ஸ்த்தாநநிர்வாஹத்துக்குவேண்டின இலச்சினை மோதிரமுங் கொடுத்து, இவரைத்தங்களுக்கு முக்யராக்க, இவரும் தத்பக்தி யுக்தராய் அங்கே யிருந்தார்.

அநந்தரம், யாதவப்ரகாசனும், பெருமாள்கோயிலிலேவந்து, இளையாழ்வாரைக்கண்டு ஆஸ்சர்யப்பட்டு, மிகவுஞ் சந்தோஷித்து, விந்த்யப்ரதேசத்திலே உம்மைக்காணாமையாலே அந்யதாசங்கைபண்ணி, கனக்க நிர்வேதப்பட்டிருந்தோம்; இவ்வளவும் உம்மைக் கண்டதேயென்ன, இவரும் வழிதப்பி உங்களைக்காணாமல் அகன்றுபோய், விந்த்யாஜேநபோந்தவ்ருத்தாந்தத்தை ஸவிஸ்தாரமாக விஸ்தரிக்க; அவனுங் கேட்டு, இவரண்டைலோகாதீதமாயிருந்ததென்று, உள்கலந்து ஸுப்ரீதனாய்ஸ்வகோஷ்ட்டியிலே கூட்டிக்கொண்டு க்ரந்தத்தை நடத்தாநிற்க;—

அவ்வளவிலே, இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் பேரருளாளர் ஸந்நிதியில்நின்றும் நம்பெருமாளை சேவிக்கவெழுந்தருளி, நம்பெருமாளைத்திருவடி தொழுது, ஆளவந்தார் திருவடிகளிலே சேவித்து நிற்க; ஆளவந்தாரும் பெருமாள்கோயில் விசேஷங் கேட்டருளும்போது, ப்ராஸங்கிகமாகப்பெருமாள்கோயிலிலே யாதவப்ரகாச னென்பானொரு ஏகதண்டசந்யாசிபக்கல் ஸ்ரீபெரும்பூதூர் இளையாழ்வார் என்றொருவர் வேதாந்தம் வாசியாநிற்க, (உஅஉ) "ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம" (సత్యంజ్ఞానమనన్తంబ్రహ్మ) என்றஸ்ருதிவர, அவன் அதுக்கு வ்யாவ்ருத்திதோன்ற அர்த்தஞ்சொல்ல, இளையாழ்வாரும் குணயோகஞ் சொல்லலாயிருக்க, வ்யாவ்ருத்திசொல்லச்சேராதென்ன, அவனும் ஹுங்காரம்பண்ணினான்; பின்னையும் ஒருநாள் அவனுக்கு அப்யஞ்ஜநமிடும்போது, (உஅ௩) "தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ" (తస్యయథాకప్యాసంపుణ్డరీకమేవమక్షిణీ) என்கிறதற்கு அநுசிதார்த்தஞ் சொல்லக்கேட்டு, க்லேசித்து சோகாஸ்ரு அவன்தொடையிலே விழ, அது பொறிப்பட்டாற்போலேயாக, அவனும் பதறி, இவர்முகம் பார்த்து, க்லேசஹேதுவேதென்ன, இவரும் ஸூர்யனைக்கண்டு அப்போதலர்ந்த கமலம்போலவிருக்கும் பரமபுருஷன் திருக்கண்கள் என்று இங்ஙனேயோஜனையிருக்க, அபார்த்தங் கேட்டவாறே என்ன; இந்தவ்ருத்தாந்தங்களை ஸவிஸ்தாரமாக விண்ணப்பஞ்செய்ய, ஆளவந்தாருங் கேட்டருளி, (உஅச) "அஸங்குசிதவாத்ருஷ்டிஸம்ஸக்திஹஸந்திகாயாபிவஹவ்யவாஹா: - ஸந்த்ரேவஸஞ்ஞாயதிஸம்ஸக்திதந்த்ரேவஸாஹஸ்ரவீக்ஷணாம்" (అసంకు

వాత్రమాసంభవన్తిహస న్తికాయామిషహవ్యవాహాః - అత్రైవసన్తోయదిసంభవన్తితత్రైవ లాభస్సరసీరుహాణాం) என்கிறபடியே, இந்தளத்திலே தாமரைபூத்தாற்போலே, இவ்விபூதியிலே இப்படியும் ஒருமஹாநுபாவனுண்டாகப்பெற்றதேயென்று போரப்ரீதராய், முதலிகள் முகம்பார்த்தருளி, அப்பொழுதே அவனைக்காண வேணுமென்று, பேராசையோடே முதலிகளும் தாமுமாகப் புறப்பட்டு, நம்பெருமாளுக்கு விண்ணப்பஞ்செய்து, அவர் அநுக்ரஹங்கொண்டு எழுந்தருளி, பயணகதியிலே திருக்கோவலூர் வழியாகவந்து, ஆழ்வார்கள் நயினாரையுந் திருவடிதொழுது, (உஅரு) "ஸக்ஷீணாபிஸர்வாஸாம்ச்ரேஷ்டாபரமஹம்ஸா - நாம்நாகாஞ்சீதிவிக்யாதாபுரீணாமிவதேநுநீ" (పురీణామపిసర్వాసాంశ్రేష్ఠాపరమహంసా - నామ్నాకాఞ్చీతివిఖ్యాతాపురీష్వివధేనునీ) என்று சொல்லப்படுகிற மாஹாத்ம்யத்தை யுடைத்தான பெருமாள்கோயிலேற வெழுந்தருள; அங்குள்ள ஸ்ரீவைஷ்ணவர்களும், வரந்தரும்பெருமாளரையரும், ஸ்ரீசடகோபரும், தீர்த்தப்ரஸாதங்களுங்கொண்டு, அதிஸம்ப்ரமத்துடனே எதிர்கொள்ளவெழுந்தருள, ஆளவந்தாரும் மிகவும் ஸந்துஷ்டராய், ஸாஷ்டாங்கப்ரணாமம்பண்ணி, தீர்த்தப்ரஸாதங்களும் ஸ்வீகரித்தருள, திருக்கச்சிநம்பியும் மிகவும் உகப்போடே திருவடிகளிலே அடைவுகெட விழுந்து சேவிக்க, ஆளவந்தாரும் அதிப்ரீதியுடனே அவரை முடிபிடித்தெடுத்து ஸ்ரீகஜேந்த்ரதாஸரே! பேருளாளர்க்கு அந்தரங்கத்திருவாலவட்டகைங்கர்யம் அவிச்சிந்நமாய் நடக்கிறதோவென்ன, அவரும்வாய்புதைத்து, தேவரீருடைய நிர்ஹேதுகக்ருபையாலே பேருளாளர் கொண்டருளுகிறார் என்று விண்ணப்பஞ்செய்ய, பின்பு நம்பியையுங் கூட்டிக்கொண்டு, "உலகேத்துமாழியான் அத்தியூரான்" என்கிற அர்த்திதார்த்த பரிதாந தீக்ஷிதரான பேருளாளனை சேவிப்பதாகப் புகுந்து, ப்ரதமம் பேருளாளன் பெருந்தேவியாரை சேவித்து மீண்டு, ப்ரதக்ஷிணமாக எழுந்தருளாநிற்க, (உஅசு) "உதக்புஷ்பமஹாகஸ்தம் வல்மீகம் மஹதோந்நத: - பூஜநீயஸ்ததாஸ்தே ஶேஷ: பணப்ருதாம்வர:" (ఉదక్పుష్పమహాగస్థంవల్మీకం మహతోన్నతః - పూజనీయశ్చతత్రాస్తే శేషఃఫణభృతాంవరః) என்று சொல்லுகிற திருப்புற்றின்சமீபத்திலே திருவநந்தாழ்வானையும் சேவித்து, அதுக்குக்கிழக்காக, கரிய மாணிக்கத்தாழ்வானையும் சேவித்து ஆளவந்தாரும் முதலிகளும் எழுந்தருளியிருக்கிறவளவிலே, யாதவப்ராகாசனும் திரளுமாகப்பெரிய பெருமாளைசேவித்து, ப்ரதக்ஷிணம்பண்ணிக்கொண்டு வாராநிற்க, ஆளவந்தாரும் இவர்களிலே இளையாழ்வார் ஆர் என்று நம்பியைக்கேட்டருள, அவ

ரும் சிவந்து நெடியவலியவராய், (உஅஎ) “𑌆𑌯𑌤𑌾𑌶𑍍𑌚 𑌸𑍁𑌵𑍃𑌤𑍍𑌤𑌾𑌶𑍍𑌚 𑌬𑌾𑌹𑌵𑌃” (ఆయతాశ్చ సువృత్తాశ్చ బాహవః) என்கிறபடியே ஆஜாநுபாஹுவாய் நடுவே வருகிறவனென்று விண்ணப்பஞ்செய்ய, ஆளவந்தாரும் அவனை ஸந்தோஷத்தாலே ப்ரஸந்ந மதுர கம்பீரநயநங்களாலே, ப்ருயோப்ருயோசெவ்வரியோடப் பார்த்தருளி, ஆ முதல்வனிவனென்று விசேஷகடாக்ஷம் பண்ணியருளி, பெருமாளைநோக்கி (உஅஅ) “𑌯𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌕𑌲𑌯𑌾 𑌬𑌧𑌿𑌰𑌶𑍍𑌶𑍃𑌣𑍋𑌤𑌿 𑌪𑌙𑍍𑌗𑍁𑌃 𑌪𑍍𑌰𑌧𑌾𑌵𑌤𑌿 𑌜𑌵𑍇𑌨 𑌚 𑌵𑌕𑍍𑌤𑌿 𑌮𑍂𑌕𑌃 । 𑌅𑌨𑍍𑌧𑌃 𑌪𑍍𑌰𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌸𑍁𑌤𑌂 𑌲𑌭𑌤𑍇 𑌚 𑌵𑌨𑍍𑌧𑍍𑌯𑌾 𑌤𑌂 𑌦𑍇𑌵𑌮𑍇𑌵 𑌵𑌰𑌦𑌂 𑌶𑌰𑌣𑌂 𑌗𑌤𑍋𑌽𑌸𑍍𑌮𑌿” (యస్య ప్రసాదకలయాబధిరశ్శృణోతి పంగుఃప్రధావతిజవేనచవక్తిమూకః - అంధఃప్రపశ్యతిసుతం లభతేచవంధ్యాతందేవమేవవరదంశరణంగతోస్మి) என்று தேவரீர் ஸகலபலப்ரதராகையாலே “தாம்வேண்டுங்காமமே காட்டுங்கடிது” என்கிறபடியே, அவ்வவருடைய இஷ்டகார்யங்களைத்தந்தருளுகையாலே, அடியேனுக்கும் இளையாழ்வாராகிற மஹாநுபாவன், நம் தர்ஶநப்ரவர்த்தகராம்படி விசேஷகடாக்ஷஞ்செய்தருளவேணுமென்று சரணம்புகுந்தேனென்று விண்ணப்பஞ்செய்து, பின்பு ஹஸ்திகிரியின்மேலேயெழுந்தருளி, பேரருளாளரையுஞ்சேவித்து, தீர்த்தப்ரஸாதமும் ஸ்வீகரித்தருளி, திருக்கச்சிநம்பியையும் பேரருளாளர் கோயிலிலேநிறுத்தி, ஆளவந்தார் அப்போது இவர்க்கொரு நல்வார்த்தை சொல்ல அவசரங்காணுமையாலே, மீண்டு, தாமும் முதலிகளுமாகக் கோயிலுக்கெழுந்தருளினார்.

அநந்தரம், யாதவப்ரகாசனும் தம்பக்கல் ஶ்ரோதாக்களுடன் வேதார்த்த வ்யாக்யாநம்பண்ணிக்கொண்டு இருக்கச்செய்தே, அந்தராஜ்யத்தில் ராஜாவின் பெண்பிள்ளையை ப்ரஹ்மரக்ஷஸ்ஸு பிடிக்க, இவ்விடங்களிலே மந்த்ரவாதிகள் உண்டோவென்று ஆராய்ந்து, யாதவப்ரகாசன் பேர மந்த்ரவாதியாயிருக்குமென்று சிலர்சொல்லக் கேட்டு, ராஜாவும் அவனுக்கு இச்செய்தியை அறிவியுங்கோ ளென்று ஆள்போகவிட, ராஜமநுஷ்யர் வந்து, இவனுடன் ராஜாவின் பெண்பிள்ளையை ப்ரஹ்மரக்ஷஸ்ஸு பிடித்த தென்று ராஜா உமக்கு அறிவிக்கச் சொன்னுரென்றுசொல்ல, இவனும்; யாதவப்ரகாசன் உன்னைப் போகச்சொன்னனென்று ப்ரஹ்மரக்ஷஸ்ஸுக்குச்சொல்லுங்கோளென்று வந்தவர்களுக்குச்சொல்லிப்போகவிட, அவர்களும்போய் யாதவப்ரகாசன் உன்னைப்போகச்சொன்னனென்றுசொன்னவாறே, அவன் றன்னை அங்குநின்றும் போகச்சொன்னேனென்றுசொல்லுங்கோளென்று அந்த ப்ரஹ்மரக்ஷஸ்ஸுசொல்ல, ராஜாவின் மநுஷ்யர் இச்செய்தியை யாதவப்ரகாச

னுக்கறிவிக்க, அவனும் போரக்குபிதனுய், தானும் திரளுமாகப்போய், ராஜ கோஷ்ட்டியிலே மஹாமந்த்ரத்தை ஜபித்துக்கொண்டு, ப்ரஹ்மரக்ஷஸ்ஸின் அருகில் நின்று ம்ருஷ்ட்டிபிடிக்க, அதுவும் மூடக்கின காலைநீட்டி, வாடா! யாதவப்ரகாசா? நீ ஜபிக்கிற மந்த்ரம் நானறியேனோவென்று அந்தமந்த்ரத் தையுஞ்சொல்லி, நான் இந்த மந்த்ரத்துக்கும் உனக்கும் போவேனோ, நீ உன்ஜந்மம் அறியாய், என்ஜந்மமும் அறியாயென்ன, யாதவப்ரகாசனும், ஆகில்? நீ பிரானே, சர்வஜ்ஞனுமாயிருந்தாய், என்னுடையஜந்மமேது, உன் னுடைய ஜந்மமேதென்றுகேட்க, அதுவும், உன்னுடைய ஜந்மம் மதுராந்த கத்து ஏரிக்கரையிலே யிருப்பதொரு புற்ருய், அதிலே ஒரு உடும்பா யிருப் புதி, கோயில் பெருங்கூட்டம் திருமலைக்கெழுந்தருளும்போது அங்கே ஸ்ரீ வைஷ்ணவர்கள் நீராடி யமுதுசெய்கிற விடத்திலே சிந்தின ப்ரஸாதத்தை யும் தீர்த்தத்தையும் ஸ்வீகரித்தாய், அத்தாலே உனக்கிந்த வித்வஜ்ஜந்மம் உண்டாய்த்து. என்னுடையஜந்மம் ப்ராஹ்மணவர்ணத்திலேபிறந்து, யாகம் பண்ணி, அதிலே மந்த்ரலோப க்ரியாலோபங்கள் பிறந்து, அத்தாலே ப்ர ஹ்மரக்ஷஸ்ஸு ஆனேனென்று சொல்ல, ஆகில்! நீ யாருக்குப் போவுதியெ ன்ன, ரக்ஷஸ்ஸும் உன்பக்கலிலே வாசிக்கிறவர்களிலே யொருவர், நித்யசூரி களில் தலைவராயிருப்பர்காணென்ன; இவனும் அவர் ஆரென்றுகேட்க; அது வும் இவரென்று இளையாழ்வாரைக்காட்டி, அவரைத்தண்டனிட்டு, இவர்போக ச்சொன்னாராகில் போகிறேனென்ன; ஆகில்; இளையாழ்வீர், நீர் இத்தைப் போகச்சொல்லுமென்று அவன் சொல்ல; இவரும் நீ இவளைவிட்டுப்போ வென்ன; அதுவும் உன்திருவடித்தாமரைகளை என்தலைமேலே வைத்தாலொ ழியப்போகேன் என்ன; இவரும் உகந்து அப்படியே செய்தருள; அதுவும் ஸந்துஷ்டமாய் சிரித்துக் கும்பிட்டு எழுந்திருந்து, போகிறேனென்ன; இளை யாழ்வாரும், ஆகில், நீபோகிறதற்குஅடையாளங்காட்டிப்போவென்ன, அது வும், இவ்வரசிலே நானிருப்பேன்,இப்போது இவ்வரசைமுறித்துக்கொண்டு போகிறேனென்றுசொல்லி அவ்வரசை முறித்துக்கொண்டுபோய்த்து. யாத வப்ரகாசனும் இளையாழ்வாரை மிகவும் உபஶ்லாகித்து மீண்டு தன்னுடைய மடமே வந்து புகுந்தான்.

அநந்தரம் ஆளவந்தார் கோயிலிலே ஒருநாள் வ்யாக்யாந ஸமயத்தி லே "இலிங்கத்திட்டபுராணத்தீரும்" என்கிறபாட்டு ப்ரஸ்துதமாக, அப் போது நமக்குப்பின்பு இத்தர்ஶநம் நிர்வஹித்து நடத்துவார் ஆரையுங் கா ணப்பெற்றிலோமென்கிற விசாரத்தாலே இளையாழ்வார்பக்கல் திருவுள்ள மாய், இப்போ இளையாழ்வாரை யாதவப்ரகாசனோடு உறவறுத்து, நம்பக்கல்

சேர்க்கும் விரகுண்டோவென்று அருளிச்செய்து, பின்னையும் பேரருளாளனைக்குறித்து, நம் ப்ரபத்தியை ஸபலமாக்கி யருளவேணுமென்று மீளவும் ப்ரார்த்தித்தருளினர்.

பின்பு யாதவப்ரகாசனும், மீளவும் ஒருநாள் க்ரந்தம் நடத்தாநிற்கச்செய்தே, (உ௮௧) "ஸவ௱ம்வெலிதம்ப்ரஹ்ம நேஹநாநாஸ்திகிஞ்சந" (ஸர்வம்கல்விதம்ப்ரஹ்ம நேஹநாநாஸ்திகிஞ்சந) இத்யாதி வாக்யங்களை, அத்வைத பரமாய் யோஜித்து, ஜீவப்ரஹ்மணோரைக்யம் ப்ரதிபாதிக்க, இவரும் அத்தை நிராகரித்து, அவன்வாக்யங்களை விசிஷ்டாத்வைதபரமாக யோஜித்து, அர்த்தஞ்சொல்ல, அவனும் குபிதனாய், இன்றுதொடங்கி என்னிடம்வாசிக்கவேண்டாம், உம்முடைய புத்திக்குத் தகுதியானவிடத்தே போய் க்ரந்தம்வாசியுமென்று போகச்சொன்னான்.

இவரும் அதிப்ரீதியோடே மீண்டு, தம் திருமாளிகையிலே வந்து, திருத்தாயாருக்கு இச்செய்தியைச் சொல்ல, அவரும், வாரீர்பிள்ளாய், இதுக்கு முன்பு நீர் படித்ததுபோரும், திருக்கச்சிநம்பி, பெருமாளைச் சேவித்து, பெருமாளுக்கு அந்தரங்கராயிருக்கிறார், நீர் அவரைச் சேவித்து அவர் அருளிச்செய்வதைச்செய்துகொண்டிருமென்று சொன்னார். அப்படியே இளையாழ்வாரும், திருக்கச்சிநம்பியைச்சேவித்து க்ருதார்த்தராய் (உ௯0) "க்ருதகாரிதிராம்வத" (க்ருதகார்ய:ஸம்வத) என்றாற்போலே அடியேன்செய்யும் கைங்கர்யத்தை நியமித்தருளிச்செய்யவேணுமென்று விண்ணப்பஞ்செய்ய, நம்பியும், முன்புபோலே பெருமாளுக்குச்சாலைக்கிணற்றுத்தண்ணீர் உகப்பாயிருக்கும், திருவாராதநகாலத்துக்கு உதவ ப்ரதிதிநம் ஒருகுடம் திருமஞ்சநங்கொண்டுவந்து ஸமர்ப்பியும் என்றருளிச்செய்ய, இளையாழ்வாரும் அப்படியே தப்பாமல், தம் கைங்கர்யம் செய்துகொண்டு சேவித்திராநிற்க,—

## ( ஸ்ரீயமுனைத்துறைவர் வைபவம். )

அவ்வளவிலே ஸ்ரீயாளவந்தார் திருமேனியிலே நோவுசாத்தியெழுந்தருளியிருக்கச்செய்தே, திருவரங்கப் பெருமாளரையரைப்புருஷகாரமாக்கிக்கொண்டு, திருக்கோட்டியூர்நம்பியும், பெரியநம்பியும் ஆளவந்தார் ஸ்ரீபாதத்திலே தண்டனிட்டு, அடியோங்களுக்குத் தஞ்சமாயிருப்பதொருஅர்த்தம் ப்ரஸாதித்தருளவேணுமென்று விண்ணப்பஞ் செய்ய, ஆளவந்தாரும் முதலிகள் இருவரையும் திருவுள்ளம்பற்றி, உங்களுக்குத் தஞ்சமாயிருப்பதொரு அர்த்தம் இது; கோயிலாழ்வாரே உங்களுக்கு உயிர்நிலை, உங்களுக்கு

த்தஞ்சமென்றுபுத்திபண்ணிப்போருங்கோளென்றும், பெரியபெருமாள்திருவடிகளின்கீழே வீணையுங் கையுமாய்ச் சேவித்திருக்கும் திருப்பாணாழ்வார் விக்ரஹத்தைப்பாதாதிகேசாந்தமாகச் சேவித்துக்கொண்டு போருங்கோள் என்று திருவுள்ளமாக, திருவரங்கப்பெருமாளரையர் முதலான முதலிகள் மூவரும் அப்படியே திருவுள்ளம்பற்றி யிருக்கிறவளவிலே, ஆளவந்தாரும் திருவரங்கப்பெருமாளரையர் முன்னான இம்முதலிகள் மூவரையுங்குறித்து, இதற்கு ப்ரமாணமாகத்திருவேங்கடமுடையான் உயிர்நிலே யறிந்து போரும் குறும்பறுத்தநம்பியையும், பேரருளாளப்பெருமாள் உயிர்நிலேயறிந்து போரும் திருக்கச்சிநம்பியையும், பெரியபெருமாள் உயிர்நிலே யறிந்து போரும் திருப்பாணாழ்வாரையும், திருப்பாணாழ்வார் உயிர்நிலே யறிந்துபோரும் திருவரங்கப்பெருமாளரையரையுங் காட்டியருளி, ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையரையும் பார்த்தருளி, நீர் பெரியபெருமாள் உயிர்நிலேயறிந்து சேவித்துப் போருகிற விக்ரஹமே அடியேனுக்கு உபாயோபேயமென்று புத்திபண்ணிப் போருவனென்று அருளிச்செய்ய, திருவரங்கப்பெருமாளரையரும் ஆளவந்தார்ஸ்ரீபாதத்திலே தண்டம் சமர்ப்பித்து, தேவரீர் நித்யவிபூதியிலே சென்று, பரமபதநாதனேச்சேவித்து, இமையாதகண்ணராய்க்கொண்டு போரத்திருவுள்ளம்பற்றி யருளித்தோவென்று விண்ணப்பஞ்செய்ய, ஆளவந்தாரும்அவரைக்குறித்து, நீர் பாரஸம்ருத்திக்கு உகந்து அத்யவஸித்திருமென்று அருளிச்செய்து, பின்னேயும் ஆளவந்தார் இம்முதலிகள் மூவரையும் திருவுள்ளம்பற்றி, ஒருவன் ப்ரபந்நனுல் பகவததீநமான ஆத்மயாத்ரையிலும், கர்மாதீநமான தேஹயாத்ரையிலும் அந்வயம் உண்டென்று இருந்ததானல், ஆத்மஸமர்ப்பணங்குலேந்து நாஸ்திகனுய்விடும், ஆகையாலே த்ரிவிதகரணங்களிலும் உபயயாத்ரையிலும் அந்வயம் இல்லே, நாராயணனுக்கு நைரந்த்ர்யவேஷம் தம்பக்கல் பேற்றுக்கு (உகூக) "நமஃ" (நமஃ) என்னுதவர்களே "வானவர்நாட்டையும் நீகண்டுகொள்" என்று அதொரு ஔதார்யவிசேஷமுண்டு. நாரங்களுக்கு நைரந்த்ர்யவேஷம் "நாராயணனேநமக்கேபறைதருவான்" என்கிறபடியே நிர்ப்பரராயிராதே, தம்பேற்றுக்கு த்வரித்திருக்கையும் ஸ்வரூபஹாநி. எம்பெருமானே ரக்ஷகனென்றிருக்கையும் ஸ்வரூபஹாநி, எம்பெருமான் ரக்ஷ்யனென்றிருக்கையும் ஸ்வரூபஹாநி, இப்படியிருந்தானகில் அநந்யார்ஹ சேஷத்வத்துக்கும், ஸ்வஸ்வாமி ஸம்பந்தத்துக்கும்சேராதென்று அருளிச்செய்ய, மீளவும், இவர்கள், ஸ்ரீபாதத்திலே தண்டனிட்டு, அடியோங்களுக்குப்பற்றும் உபாயமேதென்றுகேட்க, ஆளவந்தாரும் நீங்கள் அடியேனே புத்திபண்ணிப்போருகை அடியேனுக்கு ஸ்வரூப

ஹாஸி. "எம்பெருமான்றன்தொழுவா ரெப்பொழுதுமென்மனத்தே யிருக்கின்றாரோ" என்று, அதுவே உங்களுக்கு உபாயோபேயமென்று புத்திபண்ணிப்போருங்கோளென்று அருளிச்செய்ய, முதலிகளும் தம் திருவுள்ளத்திலே முசித்திருக்கிறவளவிலே, ஆளவந்தாரும் இவர்களைக்கண்டு நீங்கள் முசிக்கவேண்டா, உங்களுக்குத் திருமந்த்ரார்த்தம் போகமண்டபம், சரமஶ்லோகார்த்தம் புஷ்பமண்டபம், மந்த்ரரத்நார்த்தம் த்யாகமண்டபம்; இதற்கு ப்ரமாதாக்கள் திருப்பாணாழ்வார் முதலானார்களென்று அருளிச்செய்தார். இத்தைத் திருவரங்கப்பெருமாளரையர் திருவுள்ளம்பற்றி, தேவரீர் அவதாரம் தீர்த்தம் ப்ரசாதித்துப்போனவளவில் க்ருமி கீடாதிகளுக்கு ஒழிவுவந்தால் செய்வதில்லையென்று அருளிச்செய்ய, ஆளவந்தாரும் அவ்வார்த்தையைக்கேட்டு ஹலாத்கரித்து ப்ரத்யுத்தரமருளிச்செய்யாமலிருக்க; இவ்வார்த்தையை முதலிகள் இருவரும் திருவுள்ளம்பற்றி, ஆளவந்தார் வ்யோகத்தில் நாம் ப்ராணத்யாகம் பண்ணக்கடவோமென்று நிஶ்சயித்திருக்கிறவளவிலே; பெரியபெருமாள் திருவோலக்கத்திலே இவ்விசேஷம்பிறக்க, பெரியபெருமாளும், திருவரங்கப்பெருமாளரையர் திருக்கோட்டியூர்நம்பி முதலாக அருளப்பாடிட்டு, ஆளவந்தார் வ்யோகத்திலே நீங்கள் அவிவேகம் பண்ணினீர்களாகில் நம்மாணையென்று ஆஜ்ஞாபித்து, திருவரங்கப்பெருமாள் திருக்கையிலே அவர்களைக் காட்டிக்கொடுத்தருள; அவரும், முதலிகளிருவரையும் கையைப்பிடித்துக்கொண்டு, ஆளவந்தார் ஸ்ரீபாதத்திலே சென்று இவ்விசேஷத்தைவிண்ணப்பஞ்செய்ய, அவரும் இத்தைக்கேட்டு, நம்பேற்றுக்கு ஸஹியாதவர்கள் பெரியபெருமாள் இரண்டாற்றுக்குநடுவே திருவாராதநங் கண்டருள ஸஹியாதவர்கள் என்றருளிச்செய்து, நம்முடைய வ்யோகத்தில் அவிவேகம்பண்ணினீர்களாகில், உய்யக்கொண்டார் மணக்கால்நம்பி முதலான பெரியபெருமாள் உகந்த முதலிகள் நம் சடகோபன் திருவுள்ளத்தை மறுத்தவர்களாதிகோளென்று தம்முடைய திவ்யாஜ்ஞையிட; இவர்களும் திருவுள்ளத்திலே நொந்திருக்கிறவளவிலே, ஆளவந்தாரும் பகவத்பாகவதவிஷயங்களிலே தாமிடாதே, பாகவதவிஷயத்திலே பகவத்நோக்கானவனாய், பகவானை குருபரம்பராநியாக திருவடிவிளக்குமாபோலே பாகவதவிஷயத்திலும் தன்சத்தைமாண்டு ஆசார்யவிக்ரஹத்தை அநுஸந்தித்துத் தீர்த்தங்கொண்டுபோகையும்; அவர்களுக்குத் தீர்த்தங் கொடுக்குமிடத்தில் அர்த்தகாம பரவசரன்றிக்கே, தாங்களும் நேரே ஆசார்யனை நோக்கி குருபரம்பரா பூர்வகமாக த்வயத்தை அநுசந்தித்துக் கொடுக்கையும் இவர்க்கு உபாதேயம்; ஜ்ஞாநாதிகவிஷயமுமாய், சமூஹமுமாய்ச் சென்றவளவிலே

இருவரும் அர்த்தகாமபரவசராய், ப்ராக்ருத சரீரத்திலே நோக்காய், சமூஹத்திற்சென்று, முதலிகளையிழந்து திருவுள்ளம்கன்றுமாகில், ஆசார்யனேயாகிலும் இவர்களுக்குத்திர்த்நம் உபாதேயமன்று என்றருளிச்செய்ய; இம்முதலிகளும் அவ்வார்த்தையைத் திருவுள்ளம்பற்றியிருக்கிறவளவிலே, ஆளவந்தாரும் முதலிகளைப்பார்த்து உங்களுக்குச்சரமார்த்தம் பெரியபெருமாள் திருவடிகளிலே ஒரு கருமுகைமுகிழ் வெடிக்கவைக்கையும்; ஆசார்ய விஷயத்தில் ப்ரதமதசை மத்யமதசையென்று சரமதசையை யநுசந்தித்துப் போருகை உத்தாரகப்ரதிபத்தியென்று அருளிச்செய்து, திருவரங்கப்பெருமாளரையரை தண்டனிட்டு திருக்கோட்டியூர் நம்பியையும் பெரியநம்பியையும் அவர்கையிலே காட்டிக் கொடுக்க, திருவரங்கப்பெருமாளரையரும் அவர்களைக் கைக்கொண்டு, நீங்கள் ஆசார்யவிஶ்லேஷத்தில் அவிவேகம்பண்ணினீர்களாகில் உங்களுக்கு தேசவிசேஷமின்றிக்கே நித்யஸூரிகள்திரளிலும் புகுரப்பெறுதே யிழக்கிகோள் என்றருளிச்செய்ய, ஆளவந்தாரும் இத்தைக்கேட்டு, திருவுள்ளமுகந்து, உங்களுக்குத் திருவரங்கப்பெருமாளரையருடைய விக்ரஹமே உபாயோபேயமென்று புத்திபண்ணிப் போருங்கோளென்று அருளிச்செய்ய; அவர்களும் அப்படியே புத்திபண்ணியிருந்தவளவிலே, ஆளவந்தார் திருமேனியில் நோவாறி, ஆரோக்யமுண்டாய், நீராடி, பெரியபெருமாளுக்கும் உத்ஸவமாய், பெரிய திருமஞ்சநங்கண்டருளி, உடுத்து, முடித்து, சாத்துப்படிசாத்தி, அங்குள்ள ஸ்ரீரங்கமாமறையோர் சேவிக்க, அமுதுசெய்தருளி, திருத் திரைநீக்கியிருக்கிறவளவிலே; ஆளவந்தார் திருவோலக்கத்தேற வெழுந்தருளி, க்ருதாஞ்சலிபுடராய் சேவித்து நிற்க, பெரியபெருமாளும், நினைவறிந்து, திருவரங்கப்பெருமாளரையரை அருளப்பாடிட்டருள, அவரும்சேவிக்குமடைவையொழிய "சூழ்விசும்பணிமுகிலே" சேவிக்க, திருவோலக்கமடைய இதென்னென்று விஸ்மயப்பட! பெரிய பெருமாள் நெற்றியில் மாலை நழுவிவிழ, நம்பியாரெடுத்து ப்ரசாதிக்கிறோமென்று இருக்கிறவளவிலே, திருவரங்கப்பெருமாளரையர் சடக்கெனவெடுத்து ஆளவந்தாருக்கு ப்ரசாதித்தருள; அவரும் திருவுள்ளமுகந்து நிற்க, அரையரும் உம்முடைய நினைவு சித்தித்ததென்ன, பெருமாளும் தீர்த்தப்ரசாதம் சடகோபன் ப்ரசாதித்து விடைகொடுத்தருள; ஆளவந்தாரும், மடத்தேறச்சென்று, திருவரங்கப்பெருமாளரையர், திருக்கோட்டியூர்நம்பி, பெரியநம்பி முதலான முதலிகளெல்லாரையும், தீர்த்தங்கொண்டு அமுதுசெய்யப்பண்ணி, தண்டனிட்டு சர்வாபராதங்களையும் பொறுத்தருளவேணுமென்று க்ஷமைகொண்டு எழுந்திராமல் நிற்க, திருவரங்கப்பெருமாளரைய

ரும் உமக்கொரு அபசாரமுண்டோவென்று முடிபிடித் தெடுக்க எழுந்திருந்து, பின்பு அமுதுசெய்து, இவர்களுக்குப்பூர்வம்போலே நல்வார்த்தையருளிச்செய்துகொண்டிராநிற்க; அவ்வளவிலே ஆளவந்தார் திருமேனியிலே ரோவுசாந்தினொன்று கேட்டு, இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் பேரருளாளர் சந்நிதியில் நின்றும் கோயிலேறச் சென்று, ஆளவந்தார் திருவடிகளிலே சேவித்திருக்க; ஆளவந்தாரும் பெருமாள்கோயில் விசேஷம் கேட்டருளி, இளையாழ்வார் செய்கிற தென்னென்று கேட்டருள? அவர்களும். இப்போது இளையாழ்வார் யாதவப்ரகாசனிடத்தே பிறம்பிறந்து, அவனைத் துறந்து, பேரருளாளர் பக்கல் ப்ரவணராய் நில்லாநின்றார், என்று விண்ணப்பஞ்செய்ய; ஆளவந்தாரும் கேட்டருளி, உகந்து, பேரருளாளர் நம்முடைய ப்ரபத்தியை ஸபலமாக்கி யருளினார், என்று பெரியப்ரீதியோடே, பேரருளாளன் பெருமையைப் பேசவல்லராய்க்கொண்டு, ஸ்தோத்ரத்தை விண்ணப்பஞ்செய்து, ஸ்வாமிமாநாந்தர்ப்பூதரான பெரியநம்பி திருக்கையிலே கொடுத்து, அவரைப்பார்த்து இளையாழ்வார் இப்போது யாதவப்ரகாசனிடத்தே சேராதே, அவனைவிட்டு தேவப்பெருமாள்பக்கலிலே ப்ரவணராயிராநின்றுரென்று கேட்டோம்; இக்காலத்தில் நீர் அங்கேறப்போய் அவரை நம்மோடொக்கச் சேர்க்கவேணுமென்று நியமித்தருள, அவரும் அப்படியே சடக்கெனப் புறப்பட்டுப் பெருமாள்கோயிலுக் கெழுந்தருளினார்.

ஆநந்தரம், ஆளவந்தார் பின்னையும் திருமேனியிலே ரோவுசாந்தி, மிகவுந் தளர்ந்து கண்வளர்ந்தருள; அங்குள்ள முதலிகளும் பெரியபெருமாள் திருவுள்ளம் ஏதோவென்று, தங்களிலே சிந்தித்திருக்கிறவளவிலே; பேரருளாளப்பெருமாளுடைய "வையங்கண்ட வைகாசித்திருநாளில். அவப்ருதஸ்நாத்தினன்று, ஆளவந்தாரும் நீராடி, பெரியபெருமாளைத் திருவடிதொழச்சென்று, உத்தமசித்தி யமுதுசெய்து, திருத்திரைநீக்கினவளவிலே, தண்டஞ்சமர்ப்பித்து, பாதாதி கேசாந்தமாகவும், கேசாதி பாதாந்தமாகவும் சேவித்து, திருவடிக்கீழ் திருப்பாணாழ்வாரையும் அநுபவித்து, நம்பியார் சடகோபன் ப்ரசாதிக்கப்பெற்று. தீர்த்தம் ப்ரசாதம் ப்ரசாதிக்கப்பெற்று, திருப்பதியாரும் திருத்தளிகைப்ரசாதம் ப்ரசாதித்து விடைகொடுத்தருள, ஆளவந்தாரும் ஸ்ரீபாதத்து முதலிகளுடன் மடமேசென்று, மீண்டு முதலிகளைத்தீர்த்தங்கொண்டு அமுதுசெய்தருளப் பண்ணி. முஹூர்த்த மிட்டு, வைகாசிமாதம், ஆறுந்தேதி, ஸ்ரவணநக்ஷத்ரம், அபிஜிந்முஹூர்த்தத்திலே, முதலிகள் சேஷமும் அங்கீகரித்து, ஆழ்வார்களை சரணம்புகுந்து, ஆசார்யர்கள், முதலிகள், ஸ்த்தாநத்தார் முதலாகளெல்லாரையும் அழைப்பித்து, க்ஷமை

கொண்டு வேண்டிக்கொள்ள; அவர்களும் பெரியபெருமாளுக்கொரு அபராதம் உண்டாகிலன்றோ? உமக்கு அபராதமுண்டாவதென்ன, திருவரங்கப் பெருமாளரையர் முதலான முதலிகளை அங்குள்ள முதலிகள் திருக்கையிலே காட்டிக்கொடுத்தருளி, ஸ்தாநத்தாரைப் பார்த்து பெரிய பெருமாளுடைய திருவாராதநம், திருமந்த்ரபுஷ்பம் காலாகாலத்திலே நடத்திக்கொண்டு போருங்கோள், ஆசார்யர்கள், முதலிகள், தேசாந்தரிகள் முதலானோரை வரவழைத்துக்கொண்டு போருங்கோளென்றுகாட்டிக்கொடுத்தருள, அவர்களும் அப்படியே ஆகிறதென்று அங்கீகரித்து, இது புதுமையாயிருந்ததென்று எல்லாரும் விடைகொடுத்துப்போக, அநந்தரம் மணக்கால்நம்பியை த்யாநித்துக்கொண்டு, பத்மாசநத்திலே யோகமாக எழுந்தருளியிருந்து, அவர் திருவடிகளைத் தம்முடைய நெஞ்சிலும், கண்ணிலும், திருமுடியிலும் வைத்துக்கொண்டு, அவர் திருவடிநிலைகளைத் தம்முன்னேவைத்துக்கொண்டு, "ப்ரஹ்மவல்லி," "ப்ருகுவல்லி," "புருஷஸூக்தம்," "அர்ச்சிராதி," "சூழ்விசும்பணிமுகில்" முதலாக முதலிகள் சேவிக்க, திருச்சங்குபணிமாற, சகல வாத்யங்களும் முழங்க, ப்ரஹ்மரந்த்ரத்தாலே, ஆளவந்தார் திருநாட்டுக்கெழுந்தருளினார்.

(ஸ்ரீயாளவந்தாரைத் திருப்பள்ளிபடுத்தியருளின, ப்ரஹ்மமேதஸம்ஸ்காரவிதி.)

திருவரங்கப் பெருமாளரையர் முதலாக எல்லாரும், வேரற்றமரம் போலே கோஷித்துக்கொண்டு விழுந்து சோகிக்க, அங்குள்ளார் இவர்களைத் தேற்றி, ஆளவந்தார் குமாரர், பிள்ளைக்கரசுநம்பியைக் குறித்து, இனிமுன்பு நடக்கும் க்ரமத்தைச் செய்தருளவேணுமென்ன; தாஸிகள்வந்து திருவாசல் திருவலகிட்டு, திருநீர்பரிமாறி.ஸ்த்தலசுத்திபண்ணி,திருக்காவணமிட்டுக் கோடித்து, தர்ப்பமாலைகட்டி, செங்கழுநீர்மாலைகட்டி, பலபட்டுகளாலும், ஸுப்ரசாமரங்களாலும், குச்சுக்கட்டி யலங்கரித்து,திருக்காவணத்தில் நாலுவாசலிலும் கதளித்தாறுநாட்டி, இளங்கமுகு கரும்புநாட்டி, பல பலங்கள் நாட்டி, நாலுவாசலிலும் கொடியாடைகட்டி, சித்ராதபத்ரங்களை வைத்து, பூர்வதக்ஷிண பஶ்சிமோத்தர சதுர்த்வாரங்களிலே பலாஶாஶ்வத்தகாதிரௌதும்பர தோரணங்கள் நாட்டி யலங்கரித்து, த்ரோணவ்ரீஹிசொரிந்து பரப்பி, நடுவே பூர்ணகும்பம்வைத்து, நாலுகோணங்களிலும், பூர்ணகும்பங்களைவைத்து, கேசவாதி நாமோச்சாரணம் பண்ணிக்கொண்டு, த்வாதச கலசங்களை ப்ராகாதியாக ஸ்த்தாபித்து, கலசங்களுக்கு,குஶ, தூர்வா, தர்ப்ப, விஷ்ணுகாந்திமுதலான புஷ்பாதிகளையிட்டு, குருபரம்பரா பூர்வகமாக த்வ

யாநுசந்தாநத்துடன், கும்பார்ச்சனை பண்ணி, த்வாதசநாமத்தாலே கலசஸ்த்தாபநம்பண்ணுவித்து, பின்பு பஞ்சாம்ருதஸ்நாநம்பண்ணுவித்து, ஈசாந்யபாகத்தில் சங்கர்ஷண கும்பமொழிந்த நாலுகும்பங்களையுங் கொண்டு, ஸ்ரீபுருஷசூக்தத்தாலே திருமஞ்சநம்பண்ணுவித்து, மூதவிகள் திர்த்தங்கொண்டு, சுருளமுதுதிருத்தி வேண்டிக்கொண்டு, அவர்களை வலம்வந்து, வாசல் முன்னில்கோமயக்ருதஸ்த்தலத்தின்மேலே த்ரோணவ்ரீஹிபரப்பி, உலூகல மூசலங்களை மந்த்ரபூதஸ்நாநம்பண்ணுவித்து, நவவஸ்த்ரவேஷ்டநம்பண்ணி, அவ்வுலூகலத்தை ஸ்த்தண்டிலோபரிக்ருத வ்ரீஹியின்மேலே வைத்து, அதிலேஹரித்ராநிக்ஷேபம்பண்ணி, சுத்தவஸ்த்ரசகலமாலாலங்க்ருதைகளாய், சக்ரமுத்ராமுத்ரிதைகளாய், வைஷ்ணவிகளான விஷ்ணுதாசிகள், திரிவிக்ரமன் திருவீதியை வலம்வந்து, திருவாசலில் ஸ்ரீவைஷ்ணவ சமூஹத்துக்குத் தண்டனிட்டு, ஸ்ரீவைஷ்ணவர் அநுஜ்ஞைகொண்டு நடுவேவந்து, நவவஸ்த்ரவேஷ்டித மேருதைவத்யமான அம்மூசலத்தைக்கைக்கொண்டு, த்வாதசநாமோச்சாரணம்பண்ணி, திருச்சூர்ணமிடிக்க, திருவரங்கப்பெருமாளரையர் முதலானோர், ஸ்த்தண்டிலமத்யஸ்த்தமாய், நவகண்ட ப்ருதிவ்யாகாரமாக உல்லேகநம்பண்ணி, வ்ரீஹ்யுபரிஸ்த்தாபிதமாய்.பூமிதைவத்யமான உல்லேகநத்தில் அஷ்டதிக்குகளிலும் திவ்யசூர்ண, திவ்யதைல, திவ்யாநுலேபந, திவ்யமால்ய, திவ்யலாஜ, திவ்யதுக்த, திவ்யததி, திவ்யசுத்தஜல பூர்ணங்களாய், தர்ப்ப பவித்ராஸ்வத்த பத்ரபவித்ரிதங்களான கலசங்களை த்வயாநுசந்தாநத்துடன் ஸ்த்தாபித்து, பரமாகாசதைவத்யமான சூர்ப்பத்திலே, திவ்யநக்ஷத்ரதைவத்யமான நிஸ்க்ருஷநவலாஜத்தை நிறைத்து, பூர்வதிக்கிலே வைத்து, ஸ்ரீவைஷ்ணவர்களைத்திர்த்தங்கொண்டு, ஸ்ரீபாததீர்த்தம் நிறைந்த கும்பத்தைமேற்கேவைத்து, ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு சமர்ப்பணீயமான திவ்யக்கிழியை வடவருகேவைத்து, பெருமாள் சாத்திக்களைந்து வரவிட்டருளின திருமாலை திருப்பரிவட்ட ப்ரசாதங்களையும் பொற்றளிகையிலே தென்னருகேவைத்து, ஆளவந்தாரைத் தண்டனிட்டு, விமலசரமவிக்ரஹத்தை நெஞ்சிலும் கண்ணிலும் தேக்கிக்கொண்டு, சூழவெழுந்தருளியிருந்து, திருப்பல்லாண்டு, கண்ணிநுண்சிறுத்தாம்பு, சூழ்விசும்பணிமுகில், திருவரங்கப்பெருமாளரையர் இசையுடன்இயலாக அநுசந்தித்து, திவ்ய ந்ருத்தகீதவாத்யத்துடன், திருவீதியிலே இயலாக திருவிருத்தத்தை யநுசந்தித்துக்கொண்டு வலம்வந்து, மடத்துவாசலிலே இயல்சாத்தி, திவ்யதைல திவ்யசூர்ணங்கள் சாத்தி, நீராட்டப்பண்ணி, பெருமாள் சாத்திக் களைந்து வரவிட்டருளினதிவ்யாநுலேபந திவ்யமால்ய திவ்யபீதாம்பரத்திருப்பரிவட்டத்தையும் ஆளவந்

தாருக்குச் சாத்தி அலங்கரித்து, ஆளவந்தார் திருமேனியிலே சாத்திக்களைந் ததாய், தத்ப்ரசாதமாய்,சேஷித்த எண்ணெய்ப்ரசாதம் ஸ்ரீசூர்ணப்ரசாதங்க ளெல்லாம், திருவரங்கப்பெருமாளரையர் முதலானோர் ப்ரசாதப்பட்டு, அப் போதையிலிருப்பை நெஞ்சிலே ஸமாச்ரயமாகத் தேக்கிக்கொண்டு, ஸ்ரீ பாதத்திலேவிழுந்து, திருவடிகளைத் திருக்கண்களிலும், திருமார்பிலும், திரு முடியிலும் தரித்து, அவர்ப்ரபத்தியை அநுசந்தித்து, திருமிடறு தழுதழுப் ப, திருமேனிகள்வாட, திருமுத்துதிர்த்து, திருமூக்கு வேர்பிடிக்க, ஆசார்ய விச்லேஷாஸஹிஷ்ணுக்களாய் ஆர்த்தராய் பரவசராய்க்கொண்டு சோகிக்க, அங்குள்ள முதலிகள்வந்து இவர்கள் திருக்கண்களைத் துடைத்து, ஆச்வா சிப்பித்துத்தேற்ற, மேன்மையிலே மெள்ளமெள்ள நடையிட்டுவந்து, தேறி நின்று, பீடயாநத்திலே ஆளவந்தாரை யேறியருளப்பண்ணி, அநுசந்தாந த்துடன்ஸ்ரீபாதந்தாங்கிக்கொண்டு,திருச்சங்கம்பணிமாற, ந்ருத்தகீதவாத்யங் கள் எங்கும் முழங்க, வேதபாராயணம்பண்ண, இயல் அருளிச்செயல் நட க்க, நடைபாவாடையிட்டு, கரும்பும் குடமும் ஏந்தி, பொரியும் புஷ்ப புஞ்சமும் எங்குஞ்சிதற, திருப்பதியில் சுமங்கலிகள் மங்களதீபமேந்திமுன் னேசெல்ல, இருபக்கமும் சாமரமிரட்ட, வெள்ளைவட்டமிட, தர்மநத்தில் ஆளவந்தார் திருநாட்டுக்கெழுந்தருளினார் என்று ஒற்றைச் சிந்நம்பணிமாற, திருவீதிகள்தோறும் வலம்வந்து, திருக்கரம்பன் துறையிலே எழுந்தருள் வித்துக்கொண்டுபோய், ஒழிந்த சங்கர்ஷணகும்ப பூர்ணஜலங்கொண்டு அநு சந்தாநத்துடன் திவ்யஸ்த்தலசுத்திபண்ணி, யதிஸம்ஸ்காரவித்யுக்தமானபடி களடங்கச்செய்து, சுநித்துப் பள்ளிபடுக்கிறவளவிலே.—

அங்கே, பெரியநம்பி பயணகதியிலேபோய், பெருமாள் கோயிலுக் கெழுந்தருளி,இச்செய்தியைத்திருக்கச்சிநம்பிக்கருளிச்செய்து, அவர் புருஷ காரமாகப் பேரருளாளர் சந்நிதிக்குச்சென்று,அவர்முன்னே ஸ்தோத்ரத்தை அநுசந்தித்து, தீர்த்தப்ரசாதமும் ஸ்வீகரித்து, சந்நிதியில் நின்றும் புறப் பட்டு இளையாழ்வார் திருமஞ்சநங் கொண்டுவருகிற சாலைக்கிணற்று வழி யிலே, ஆளவந்தார் ஸ்தோத்ரத்தை அநுசந்தித்துக்கொண்டு இராநிற்க, (உகூஉ) "ப்ரஹ்மாசிவஸ்ஸதமக: பரமஸ்ஸ்வராடித்யேதேபியஸ்ய மஹிமா ர்ணவவிப்ருஷஸ்தே" (బ్రహ్మాశివశ్శతమఖః పరమస్స్వరాడిత్యేతేపియస్యమహిమార్ణ వవిప్రుషస్తే) என்கிற ச்லோகத்தை இளையாழ்வார் கேட்டருளி, இது அரு ளிச்செய்ததாரென்று பெரியநம்பியைக்கேட்க, ஆளவந்தார் திவ்யசூக்தி யென்று பெரியநம்பியருளிச்செய்ய, இவரும் அவரை அடியேன் சேவிக்க வேணுமென்ன, நம்பியும், ஆகில் என்கூடவாரீர் என்றருளிச்செய்ய, இவ

ரும் திருமஞ்சனத்தைப்பெருமாள் திருமுன்னே சமர்ப்பித்து, பெருமாளை சேவித்து விடைகொண்டு, திருக்கச்சிநம்பியையும் சேவித்து அவர்க்கு இச்செய்தியை விண்ணப்பஞ்செய்து, பெரியநம்பியுடனே கோயிலேற வெழுந்தருளி, கோயிலுக்கு ஆஸந்நமாக வெழுந்தருளிவாராநிற்க, திருக்கரம்பன் துறையிலே திரண்ட பெரியதிரளைக்கண்டு, இத்திரளேதென்று எதிரேவருகிற வர்களைக்கேட்க, அவர்களும் ஆளவந்தார் திருநாட்டுக் கெழுந்தருளினார் என்ன, இத்தைக்கேட்டு இவரும் ஏங்கி மோஹித்து விழுந்து சோகார்ணவ நிமக்நராய்க்கிடந்து துடிக்க, அவ்வளவிலே, இளையாழ்வாரும் மிகவும் (உகூ) "வஹூயாவிலலாவஹ" (ബഹുധാവിലലാപഹ) என்னுமாபோலே, பலவகையாகப்புலம்பி அஸ்தமிதாங்யபாவராய் நிவர்த்தநோந்முகராய் கண் பனிசோராநிற்க, பெரியநம்பியும் "வாளேறுகாணத் தேளேறுமாயுமாபோலே தன்னுடைய வ்யஸநத்தைமறந்து (உகச) "ஶ்ரேயாம்ஸிவஹூவிக்நாநி பவந்திமஹதாமபி" (ശ്രേയാംസിബഹുവിഘ്നാനിഭവന്തിമഹതാമപി) என்கிறபடியே ஶ்ரேயஸ்ஸுக்களுக்கு அநேகவிக்நங்கள் பெரியோர்களுக்கும் உண்டாம், ஆகையாலே நீர் சோகிக்கவேண்டாவென்று இளையாழ்வாரைத்தேற்றி, அவரைக் கையைப்பிடித்துக்கொண்டுபோய், ஆளவந்தாருடைய விமலசரமவிக்ரஹத்தை சேவிக்கப்பண்ண; இளையாழ்வாரும் அவரைத்தண்டனிட்டு, இது ஒரு அலப்யலாபம் இருந்தபடி யென்னென்று விஸ்மிதராய், ஆபாதசூடமாக சேவிக்குமளவில், மூன்று திருவிரல்கள் மடங்கியிருக்க, இவரும் அது கண்டு, முன்னும் இவர்க்கிப்படியுண்டோவென்றுமுதலிகளைக்கேட்க, அவர்களும் இல்லை இப்போது கண்டதித்தனையென்ன, இளையாழ்வாரும் இவர் திருவுள்ளத்தில் ஏதேனும் ஒருகருத்துண்டாகவேணுமென்றுவிசாரித்தருளி, முதலிகளைப்பார்த்து, முன்பு வ்யாக்யாநசமயங்களிலே அபிமத சல்லாபங்களைக் கேட்டிருந்தவர்களுண்டோவென்ன, ஸ்ரீபாதத்து முதலிகளெல்லாருங் கூடவேறொன்று மறியோம், வ்யாசபராசரரிடத்திலே, உபகாரஸ்ம்ருதியும், நம்மாழ்வார் பக்கல் ப்ரேமாதிசயமும், விசிஷ்டாத்வைதபரமாக வ்யாசஸூத்ரத்தில் வ்யாக்யாநவாஞ்சையும் பலகாலும் அருளிச்செய்யக் கேட்டிருக்கையாயிருக்குமென்ன, இவரும் அகவாயிலெண்ணத்தி லேற்றமறிந்து, இச்சரீரமும் த்ருடமாய், இவ்வாசார்ய க்ருபையும் அடியேனிடத்தில் பரிபூர்ணமாய் இருக்குமாகில், சர்வேஶ்வரன் அடியேன் நினைத்தபடி கூட்டுவாராகில், இவ் விழவுமூன்றையும் தீர்க்கக்கடவேனென்ன, உடனே திருவிரல்கள் நிமிர, இத்தைக்கண்டு அகிலரும் ஆஶ்சர்யப்பட்டு இவ்வாசார்யக்ருபையும் உம்மிடத்திலேயுண்டு, இவருடைய திவ்யசக்தியும் உம்மிலேகூடும், நீரே இத்தர்ஶநத்

துக்கு நிர்வாஹகராவீரென்று சர்வரும் இவரை மங்களாசாஸநம் பண்ண, இளையாழ்வாரும் "என்கண்ணுள்ளும் நெஞ்சுள்ளும் நீங்காவே" என்னும் படியே அவ்விக்ரஹசேவையைக்கண்ணிலும் நெஞ்சிலுந்தேக்கிக்கொண்டு, நம்பெருமாள் நமக்குச் செய்தபடி யென்னென்று போரக்லேசித்து, அவப்ருதஸ்நாநஞ் செய்தருளி, பெரியநம்பியைத் தண்டனிட்டு, நம்பெருமாளையும் திருவடிதொழாதே அவரை வெறுத்து மீண்டு பெருமாள் கோயிலேற வெழுந்தருளினார்.

ஆளவந்தார் தனியன், (௨௯௫) "𑌶𑍍𑌰𑍀𑌰𑌾𑌮𑌮𑌿𑌶𑍍𑌰𑌸𑌚𑍍𑌛𑌿𑌷𑍍𑌯𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌰𑍍𑌥𑌕𑍋𑌵𑌿𑌦𑌂-𑌵𑌾𑌦𑌾𑌵𑌵𑌾𑌪𑍍𑌤𑌰𑌾𑌜𑍍𑌯𑌾𑌰𑍍𑌧𑍋𑌵𑌿𑌰𑌕𑍍𑌤𑍋𑌯𑌾𑌮𑍁𑌨𑍋𑌭𑌵𑌤𑍍-𑌯𑌤𑍍𑌪𑌾𑌦𑌾𑌮𑍍𑌭𑍋𑌰𑍁𑌹𑌧𑍍𑌯𑌾𑌨 𑌵𑌿𑌧𑍍𑌵𑌸𑍍𑌤𑌾𑌶𑍇𑌷𑌕𑌲𑍍𑌮𑌷𑌃 - 𑌵𑌸𑍍𑌤𑍁𑌤𑌾𑌮𑍁𑌪𑌯𑌾𑌤𑍋𑌹𑌂 𑌯𑌾𑌮𑍁𑌨𑍇𑌯𑌨𑍍𑌨𑌮𑌾𑌮𑌿𑌤𑌂." (శ్రీరామమిశ్రసచ్ఛిష్యంవన్దేతత్త్వార్థకోవిదం-వాదావవాప్తరాజ్యార్ధోవిరక్తోయామునోభవత్ - యత్పాదాంభోరుహధ్యానవిధ్వస్తాశేషకల్మషః - వస్తుతాముపయాతోహంయామునేయన్నమామితం.) (௨௯௬) "𑌸𑌿𑌂𑌹𑌾𑌸𑌨𑌾𑌂𑌶 𑌭𑌵𑌮𑍀𑌶𑍍𑌵𑌰𑌦𑌾𑌸𑌨𑌿𑌷𑍍𑌠 𑌮𑍁𑌕𑍍𑌤𑌾𑌮𑌣𑌿𑌮𑍍𑌮𑌹𑌿𑌤 𑌨𑌾𑌥𑌮𑍁𑌨𑍀𑌨𑍍𑌦𑍍𑌰 𑌪𑍌𑌤𑍍𑌰𑌂-𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌵𑌿𑌶𑍇𑌷𑌜𑌲𑌧𑌿𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌵𑌾𑌦𑌿𑌤𑍂𑌲𑌝𑌞𑍍𑌝𑌾𑌨𑌿𑌲𑌂 𑌹𑍃𑌦𑌯𑌚𑌿𑌨𑍍𑌤𑌯 𑌯𑌾𑌮𑍁𑌨𑌾𑌰𑍍𑌯𑌂" (సింహాసనాంశభవమీశ్వరదాసనిష్ఠ ముక్తామణిమ్మహితనాథమునీన్ద్ర పౌత్రం - ప్రజ్ఞావిశేషజలధింప్రతివాదితూలఝఞ్ఝానిలంహృదయచిన్తయయామునార్యం.) பின்னை யாளவந்தாரை கநித்து, திருப்பள்ளிபடுத்து, செய்யவேண்டும் க்ருத்யங்களெல்லாஞ் செய்தருளினார்கள்.

ஸ்ரீயமுனைத்துறைவர் திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

———:O:———

## (*) ஸ்ரீ இளையாழ்வார்வைபவம்.

அநந்தரம், இளையாழ்வாரும் பயணகதியிலே, பெருமாள்கோயிலுக்கெழுந்தருளி, திருக்கச்சிநம்பி ஸ்ரீபாதத்திலே தண்டனிட்டு, இச்செய்தியைவிண்ணப்பஞ்செய்ய, அவரும் போரக்லேசிக்க, இவரும் எண்ணினவாறாகாமையாலே அத்யந்தமவஸந்நராய் க்லேசிக்க, திருக்கச்சிநம்பியும் போர

(*) ஆசார்யர்கள் க்ரமத்தில் ஸ்ரீஇளையாழ்வாருக்கு, ஸ்ரீபெரியநம்பிகள் முற்பாடரானமையால் - ௫ - வது இலக்கம் போடாமல் நிறுத்தி, ஸ்ரீபெரியநம்பிகள் வைபவத்திற்கு - ௫ - வதும் ஸ்ரீஇளையாழ்வார் தர்ஸநப்ரவர்த்தகராம்போது இவர்க்கு - ௮ - வது இலக்கமும் போடப்படுமென்றுணர்க.

ருளாளர் ஸர்வஜ்ஞருமாய், ஸர்வஶக்தருமா யன்றே இருக்கிறார், உம்மு டைய நினைவின்படியே தலைக்கட்டி யருளுவர், அஞ்சவேண்டா வென்று தேற்றமிட்டு, பின்பு ஆளவந்தாருக்‌கு ஸ்ரீசூர்ணபரிபாலநஞ் செய்து பெருக் கத் திருவத்யயநம் நடத்தியருளினார்.

இளையாழ்வாரும் தைர்யாவலம்பியாய், பேரருளாளரை சேவித்து, பூர்வம்போலே திருமஞ்சந கைங்கர்யம் செய்துகொண்டிராநின்றார். பின்பு நம்பிபக்கல், இளையாழ்வாருக்குப்ரேமங் கநத்துவர, நம்பிக்கும் இவர்பக்கல் க்ருபை மிகுத்துவர, நம்பியுடைய அநுபவமெல்லாம் அறிந்து, அவர் ஸ்ரீபா தத்திலே ஆஶ்ரயிக்கவேணுமென்று வந்து தண்டன்சமர்ப்பித்து, இவ்வாத் மாவை தேவரீர் உஜ்ஜீவிப்பித்தருளவேணுமென்ன, நம்பியும் வாரீர் இளை யாழ்வாரே, பேரருளாளர் பொருளல்லாதவென்னைப் பொருளாக்கி யடிமை கொண்டது கண்டு நீர் விரும்பினீர், ஆகிலும் (௨௯௭) “க்ஷேப்யக்ராபி ஜாயந்தே யோகிநஸ்ஸர்வயோநிஷு-ப்ரத்யக்ஷிதாத்மநாதாநாம் நை ஷாம்சிந்த்யம் குலாதிகம்” (క్షేప్యక్రాభిజాయన్తే యోగినస్సర్వయోనిషు - ప్రత్యక్షితాత్మ నాధానాం నైషాంచిన్త్యంకులాదికం) என்கிறபடியே, ஆத்மகுணத்துக்குச் சேர்ந் திருந்துள்ள பரம வைதிக நிஷ்டையை யுடையராய்ச் செய்ய நினைத்தீர், ஆகிலும் வர்ணாஶ்ரமத்துக்கடுத்த வைதிகமர்யாதைக்குப் போந்திராதென்று விலக்கியருளினார்.

அதின்மற்றைநாள், இளையாழ்வாருக்கு திருக்கச்சிநம்பி யிடத்தில் ப்ரசாதப்ரதிபத்தி பிறந்து, ததங்வயபுத்யா, நம்பியைத்திருமாளிகையிலே யமுதுசெய்யவேணுமென்றுவிண்ணப்பஞ்செய்ய, நம்பியும் சம்மதித்தருள, இளையாழ்வாரும், அதிப்ரீதியோடே தந்திருமாளிகையிலேஎழுந்தருளி இச் செய்தியை தேவியாருடன் அருளிச்செய்து, தளிகைக்குப் பாங்காகப் பண்ணி நன்றாகஸவ்யஞ்சநாந்நம் செய்யென்றுநியமித்தருளி, தாமும்நீராடி நித்யகர்மாநுஷ்டாநங்களையும் செய்தருளி, திருமஞ்சன கைங்கர்யமும், சடக்கெனக்கொண்டுவந்து பேரருளாளர்க்குச்சமர்ப்பித்து, தம்முடைய க்ரு ஹார்ச்சனையானபேரருளாளரையும் அமுதுசெய்தருளப்பண்ணி, நம்பியை யழைக்க, தெற்குத் திருவீதியாலே நம்பி மடத்தைநோக்கி மேற்கே யெழு ந்தருளினார். அதற்கு முன்னே நம்பியும் மடத்தினின்றும் புறப்பட்டு பெரு மாளையும்சேவித்து, மற்றொருவீதியாலே இளையாழ்வார் திருமாளிகையிலே எழுந்தருளி, திருவாலவட்டகைங்கர்யத்துக்கு உதவப்போகவேணுமென்று சடக்கென அமுதுசெய்தருளி எழுந்தருளினார். அநந்தரம் இளையாழ்வார்

தேவிகளும் அவர்அமுதுசெய்தருளினதளிகையைக் கோலாலேதள்ளி, அவ்விடத்தை கோமயத்தாலே ஸ்த்தலசுத்திபண்ணித் தெளித்து, தாமும் நீராடி நிற்கிறவளவிலே, இளையாழ்வாரும் மடத்தேதேடிக்காணுமல், மீண்டெழுந்தருளி தேவிகள் நீராடினபடியைக் கண்டு, இதென்னென்று கேட்டருள, தேவிகளும் அந்த ஸ்ரீவைஷ்ணவர்எழுந்தருளி அமுதுசெய்து திருவாலவட்டகைங்கர்யஞ் செய்தருளவேணுமென்று பெருமாளை சேவிக்க மீண்டு எழுந்தருளினர். அவர் சாத்தாதவராகையாலே அவர் அமுதுசெய்ததளிகையைக் கோலாலேதள்ளிக் கோமயத்தாலே ஸ்த்தலசுத்திபண்ணினேன், அத்தாலே சரீரம் அலம்பவேண்டித்தென்ன, அவளைப்பார்த்து நீராடினதற்கு மிகவுங் கோபித்து தம்மபீஷ்டம் சித்தியாதபடியாலும் போர க்லேசித்து, இனிநமக்குச் செய்யவடுப்ப தென்னென்று "எண்ணாதனகளெண்ணும்" என்கிறபடியே தம் திருவுள்ளத்திலே விசாரித்தருளி, நம்பிமடத்தேறவெழுந்தருளி நம்பியுடனே சென்று, அடியேன் சில நினைவுகள் நினைத்திருந்தேன், அவையெவையென்று தேவரீர் பெருமாளுக்கு விண்ணப்பஞ்செய்து, அவர் அருளிச்செய்தத்தை தேவரீர் அடியேனுக்குஅருளிச்செய்தருளவேணுமென்று இளையாழ்வார் விண்ணப்பஞ்செய்ய, நம்பியும் அன்றுராத்ரி பெருமாளையநுபவித்து, ஏகாந்தமானவளவிலே; நம்பி, நம்முடன் சிலவார்த்தை சொல்லுவாரைப்போலே யிருந்தாய் ? என்று பெருமாள் திருவுள்ளமாயருள, நம்பியும் பெருமாளுடனே இளையாழ்வார் சிலநினைவுகள் நினைந்திருந்தேன், அவையெவையென்று தேவரீரைக் கேட்டுவந்து சொல்லவேணுமென்று மிகவும் ஆதரவாயிராநின்ருர், அவற்றையருளிச்செய்யவேணுமென்று விண்ணப்பஞ்செய்ய ; பெருமாளும், ஸஹஜதாஸ்யத்தை யுடையனாய், சந்தாநுவர்த்தநம் பண்ணியிருப்பா னொருத்தன், நாம் சாந்தீபனுடனே வித்யாப்யாஸம் பண்ணினாற்போலே, பலவிடங்களிலே சகல சாஸ்த்ரங்களையும் அவனைப்போலே வேறுபட அறிந்திருப்பானொருத்தன், நம்மைக்கேட்கிறுனித்தனை —— பரதத்வம்நாமே, பேதமேதர்சநம், உபாயமும் ப்ரபத்தியே, அந்திமஸ்ம்ருதியும் வேண்டா, சரீராவஸாநத்திலே மோக்ஷம், பெரியநம்பி திருவடிகளிலே யாஸ்ரயிப்பதென்று, இவ்வாறுவார்த்தையையும் பேரருளாளர் திருவுள்ளமாயருள ; நம்பியும் இவற்றைக்கேட்டுவந்து, வெடிவோரை இளையாழ்வாரையழைத்து, இளையாழ்வீர் ? பெருமாள் திருவுள்ளம் பற்றி யருளின வார்த்தைகளைக் கேளீர் என்று அவற்றை யருளிச்செய்து இவையோ உமக்குநினைவென்ன ; ஆமென்று இளையாழ்வார் போர ப்ரீதராய் நம்பி ஸ்ரீபாதத்திலே தண்டன்சமர்ப்பிக்க; நம்பியும், இவர் நினைவும் பெருமாள் திருவுள்ளமும் ஒன்ருயிருந்ததென்று மிகவும் உகந்தருளினர்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

——:o:——



ஸ்ரீ பெரியநம்பி.

( ரு )

ஸ்ரீபெரியநம்பிகள்ப்ரபாவம்.

———:o:———

அக்காலத்தில், கோயிலிலே ஆளவந்தார் ஸ்ரீபாதத்து முதலிகள் எல்லாரும் திரளாகவிருந்து, பெரியநம்பியுடனே இத்தர்சநத்துக்குக் கடவ ராரென்ன, பெரியநம்பியும் முதலிகளைக்குறித்து ஆளவந்தார் முன்பு இளை விட்டு விசேஷ கடாக்ஷம்பண்ணியருளினதும், திருவிரல்கள் நிமிர்ந்த வேற் றமும் உங்கள் திருவுள்ளங்களிலே நிலையிடவில்லையோ, ஸர்வதா ஆளவந் தார் அபிமாநம் பொய்யாகக்கூடாதென்ன; முதலிகளெல்லாருங்கூட சம்ம தித்து இன்னமும் இப்ரயத்நம் தேவரீர் எழுந்தருளி, இளையாழ்வாரை வி சேஷகடாக்ஷம் செய்தருளி, நம்தர்சநப்ரவர்த்தகராம்படி திருத்தியழைத் துக்கொண்டு வரவேணுமென்று பெரியநம்பிக்கு விண்ணப்பஞ்செய்ய; நம் பியும் அப்போதே குடும்பஸஹிதமாகப் புறப்பட்டு நம்பெருமாள் சந்நிதி யிற்சென்று சேவித்து விண்ணப்பஞ்செய்து அவரநுமதிகொண்டு த்வரித் துப் புறப்பட்டு, பெருமாள்கோயிலுக் கெழுந்தருளா நிற்கச்செய்தே, மது ராந்தகத் தேரிகாத்த பெருமாள்கோயிலிலே அங்கே அவஸரித்து எழுந்த ருளியிருந்தவளவிலே, இளையாழ்வாரும் தமக்குப்பேரருளாளர் திருக்கச்சி நம்பிமுகேந நியமித்தருளினபடியே பெரியநம்பி ஸ்ரீபாதத்திலே யாஸ்ரயிப் பதாகப் புறப்பட்டு, திருக்கச்சிநம்பியையும், தேவப்பெருமாளையும் சேவி த்து, அவர்கள் அநுமதிகொண்டு கோயிலுக்கெழுந்தருளாநிற்க, ஸ்ரீமதுராந் தகம் வழியாகையாலே இவரும் அங்கே எழுந்தருளி, ஏரிகாத்தபெருமாளை சேவிப்பதாக வெழுந்தருள, ஏரிகாத்த பெருமாள்கோயிலிலே பெரியநம்பி யெழுந்தருளியிருக்க, இளையாழ்வாரும் தூரத்திலே கண்டு, அத்யாஸ்சர்யப் பட்டு எண்ணினபலம் எதிரேவந்து வாய்த்தது, நம்பிநமக்கெதிரே அருளிச் செய்ய வந்தபடி கண்டாயே நெஞ்சே யென்று நிர்ப்பராநந்த பாஷ்பங்களை யுடையராய், பெரியநம்பிதிருவடிகளிலே ஹர்ஷ சம்ப்ரமத்துடனே தண் டன் சமர்ப்பித்து நிற்க, நம்பியும் தம் அபிலாஷை அதிசீக்ரமாய் எதிரே வந்து சித்திக்கக் கண்டு, ஆநந்த நிர்ப்பரராய் இளையாழ்வாரை வாரியெடுத் தணைத்துக்கொள்ள, இளையாழ்வாரும் அடியேனுக்கு இப்போதே தேவரீர் ஹிதோபதேசம் செய்தருளி ரக்ஷித்தருளவேணு மென்று விண்ணப்பஞ் செய்ய, நம்பியும் (உகூஅ) "கஷிஹஷிமிஙிந-ஹாஉ தத்ரு ஹெஸுவெரொ உஹாது- வியாத்ராஹ்ய வி-ரூஜொவிஷண-ஹுஸஹ்ய ஹெஸுஹ்யஉ-ஏஜ-ரூகி-வ-ஈ

ண்யகோடீதி விக்யாதம் விமாநம் புண்யவர்த்தநம்" (అస్తిహస్తిగిరిర్నామపత్ర శైలవరోమహాన్ - విధాత్రాభ్యర్చితో విష్ణుస్తస్య శైలస్య మూర్ధని - పుణ్యకోటీతివిఖ్యాతం విమానం పుణ్యవర్ధనం) என்று சொல்லப்படுகிற ஹஸ்திகிரியிலே புண்யகோடி விமாநமத்யத்திலே, ப்ரஹ்மாதி சகலசேதநராலும் சேவ்யமாநரான பேரருளாளர் சந்நிதியிலே செய்கிறோமென்று அருளிச்செய்ய; இளையாழ்வாரும் காலக்ஷேபம்பண்ணவொண்ணாமைக்கு ஆளவந்தார் பக்கல் கண்டது, அமையாதோ, பின்னின்னிலையில்லாத அடியேனுடைய இச்சரீரம் இருக்கிறபோதே க்ருபைபண்ணியருளவேணுமென்று விண்ணப்பஞ்செய்து திருவடிகளிலே விழுந்துகிடக்க; பெரியநம்பியும், முடிபிடித்தெடுத்து, இவருடைய ஆர்த்தியிருந்தபடியென்னென்று மிகவும் உகந்த திருவுள்ளத்தராய் இளையாழ்வாரைக் கையைப்பிடித்து அழைத்துக்கொண்டுபோய், ஏரிகாத்த பெருமாள்கோயில், திருமகிழடியிலே எழுந்தருளியிருந்து, (௨௯௯) "மந்த்ரஸம்ஸ்காரஸித்த்யர்த்தம் மந்த்ரதீக்ஷாவிதாநத: - சக்ரஸ்ய தாரணம் ப்ரோக்தம் மந்த்ரை: பஞ்சாயுதாநிவா" (మంత్రసంస్కారసిద్ధ్యర్థం మంత్రదీక్షావిధానతః - చక్రస్యధారణంప్రోక్తం మంత్రైః పంచాయుధానివా). (௩௦௦) "சக்ராதிதாரணம் பும்ஸாம் பரஸம்பந்தவேதநம் - பதிவ்ரதாநிமித்தம் ஹி வலயாதிவிபூஷணம்" (చక్రాదిధారణంపుంసాం పరసంబంధవేదనం - పతివ్రతానిమిత్తంహివలయాదివిభూషణం) என்று சொல்லுகிறபடியே திருவிலச்சினை ப்ரசாதித்து, (௩௦௧) "நிவேஶ்ய தக்ஷிணே பார்ஶ்வே விநீதாஞ்ஜலிஸம்யுதம் - மூர்த்நி ஹஸ்தம் விநிக்ஷிப்ய தக்ஷிணம் ஜ்ஞாநதக்ஷிணம் - ஸவ்யம் து ஹ்ருதி விந்யஸ்ய க்ருபயா வீக்ஷயேத்குரு: - ஸ்வாசார்யம் ஹ்ருதயே த்யாத்வா ஜப்த்வா குருபரம்பராம் - ஏவம் ப்ரபத்ய தேவேஶம் ஆசார்ய: க்ருபயா ஸ்வயம் - அத்யாபயேந்மந்த்ரரத்நம் ஸர்ஷிச்சந்தோதிதைவதம்" (నివేశ్యదక్షిణేపార్శ్వే వినీతాంజలిసంయుతం - మూర్ధ్నిహస్తంవినిక్షిప్య దక్షిణంజ్ఞానదక్షిణం - సవ్యంతుహృదివిన్యస్య కృపయావీక్షయేద్గురుః - స్వాచార్యంహృదయేధ్యాత్వా జప్త్వాగురుపరంపరాం - ఏవంప్రపద్యదేవేశ మాచార్యఃకృపయాస్వయం - అధ్యాపయేన్మంత్రరత్నం సర్షిచ్ఛందోధిదైవతం) என்று சொல்லுகிற க்ரமத்திலே, பெரியநம்பியும் ஸவிநயரான இளையாழ்வாரைத் தம்முடைய வலப்புறத்திலே வைத்து, தம் திருக்கைகளாலே இவர் சிரஸ்ஸை ஸ்பர்ஶித்துக்கொண்டு, சதாசார்யரான ஆளவந்தார் திருவடிகளை ஸ்மரித்துக்கொண்டு, குருபரம்பராபூர்வகமாக மந்த்ரரத்நமான த்வயத்தை சாங்கோபாங்கமாக இளையாழ்வாருடைய வலத்திருச்செவியிலே உபதேசித்தருளி,

பெருமாள், நாட்டுக்காக ஸ்ரீபரதாழ்வான் தலையிலே திருவடிநிலைகளை வைத்துக் காட்டுக்கெழுந்தருளினாற்போலே, ஆளவந்தாரும் உமக்காகத் தம்முடைய திருவடித்தாமரைகளை என்றலைமேலே வைத்து, திருநாட்டுக் கெழுந்தருளினாரென்றிருங்கிடீர் என்று பெரியநம்பி இளையாழ்வாருக் கருளிச்செய்தருளினார். ஆளவந்தாருக்குக் காணபூதரிறே பெரியநம்பி, இளையாழ்வார்க்கு நேரே ஆசார்யர் யமுனைத்துறைவரோயாம்; ஆகையாலேயிறே "எங்கட்கிறைவன் யமுனைத்துறைவனிணையடி யாங்கதிபெற்றுடையவிராமாநுசன்" என்று பிள்ளையமுதனார் அருளிச்செய்ததும்.

இளையாழ்வாரும், ப்ரமாணமேது, ப்ரமேயமேது, ப்ரமாதாக்களாரென்று, பெரியநம்பியைக் கேட்க, அவரும் "மாதவன்பேர்சொல்லுவதே யோகத்தின்சுருக்கு" என்கிறபடியே ப்ரமாணமும் த்வயமே, ப்ரமேயத்தால் ப்ரதிபாத்யனாய், ஸ்ரீஹஸ்திகிரியின்மேலே கையுந் திருவாழியுமாய் நிற்கிற பெருமாளே ப்ரமாதா, நீர்தாம் இந்தப்ரமாணத்திலே, ப்ரமேயத்தை யநுபவிக்க வாருமென்று அருளிச்செய்து, அதின்மற்றைநாள் புறப்பட்டு ஏரிகாத்த பெருமாளைத் திருவடி தொழுது, (க௦உ) "ஸாராஸாரவிவேகஜ்ஞாः" (ళారాసారవివేకజ్ఞః) என்னுமாபோலே தேவரீர் திருநாமத்துக்குத் தகுதியாக இத்தர்ஸநத்தையும் பிந்ததடாகமாகாதபடி செய்தருளிற்றே யென்று மங்களாசாஸநம் பண்ணியருளி, பெருமாள் கோயிலேற வெழுந்தருள, திருக்கச்சிநம்பியும் எதிரேவந்து பெரியநம்பியை சேவிக்க, அவரையுங் க்ருபைபண்ணி அவர்புருஷகாரமாக "உலகேத்துமாழியானத்தியூரா" னை பேரருளாளரையுஞ் சேவித்து நாதமுநிகள் உய்யக்கொண்டார்க்கு அருளிச்செய்தபடியை, உய்யக்கொண்டார் நியோகாத் மணற்கால்நம்பி ஆளவந்தார்க்கு பச்சையிட்டு உபதேசித்து கோயிலிலே கொண்டுபோய் பெரிய பெருமாளை ஸாக்ஷாத்கரித்து அநுபவித்தாற்போலே, பெரியநம்பியும் ஆளவந்தார் நியோகாத், பலகாலதட்டி யுபதேசித்து பேரருளாளப்பெருமாளை ஸாக்ஷாத்கரித்து அநுபவிப்பித்தருளினார்.

அநந்தரம், இளையாழ்வார் திருமாளிகையிலே யெழுந்தருள, அவர் திருமாளிகையில் மேல்பாதியிலே பெரியநம்பி குடும்பஸஹிதமாக எழுந்தருளியிருக்கத்தக்க இடம் ஸமர்ப்பித்து, தளிகைக்கு வேண்டும் பதார்த்தங்களும் ஸமர்ப்பிக்க; நம்பியும் அங்கே ஆறுமாஸம் எழுந்தருளியிருந்து இளையாழ்வாருக்கு த்ராவிடவேத ப்ரபந்தங்களையும், தர்ஸநவிசேஷ ரஹஸ்யங்களையும் ப்ரஸாதிக்க, இளையாழ்வாரும் ப்ரீதியுடனே "செவிக்கினிய செஞ்சொல் கேட்டு க்ருதார்த்தரா யிருக்குங் காலத்திலே, ஒருநாள் திருமஞ்சநமுறை

யிலே என்னெய்க்காப்புச் சாத்தவந்த ஸ்ரீவைஷ்ணவர் கூடத்து நலியா நின்றதென்றவாறே, இளையாழ்வாருந் தம்தேவிகளை யழைத்து, ஸ்ரீவைஷ்ண வர் விடாய்த்து இருக்கிறார், பர்யுஷிதாந்ந மில்லையோ வென்ன, தேவிக ளும் அல்பமாகிலுமில்லையென்ன. இவரும் தேவிகளை ஒருகார்யத்திலே ஏவி விட்டு உள்ளே புகுந்து சோதித்தருள, பாத்ரத்திலே பழைய ப்ரசாதங் கண்டு எடுத்து தேவியாரையழைத்து ஸ்ரீவைஷ்ணவர் இளைத்திருக்க இப் படிசெய்தாய்; "இடும்பையாலடர்ப்புண்டிடுமினோ துற்றென்றிரந்தவர்க்கில் லையேயென்று, நெடுஞ்சொலால் மறுத்தநீசை" இறே நீ யென்று கநக்கக் கோபித்துவிட்டார். பின்னையும் ஒருநாள் கிணற்றின்கரையிலே இளையாழ் வார் தேவிகளுக்கும், பெரியநம்பி தேவிகளுக்கும் ஒருதோண்டி வ்யாஜேந சண்டையானவளவிலே, இத்தைப்பெரியநம்பி கேட்டருளி, தம்முடையதே விகளை மிகவுங் கோபித்து, இளையாழ்வாருக்கும் அறிவியாதே தேவிகளையும் அழைத்துக்கொண்டு மீண்டு கோயிலுக்கெழுந்தருளினார். இளையாழ்வாரும் அநுஷ்டாநம்பண்ணி யெழுந்தருளி, பெரியநம்பியை சேவிக்கப்பெறாமல் திருமாளிகையில் வர்த்திக்கிறவர்களை பெரியநம்பி யெங்கே யென்று கேட் டருள, மீண்டு கோயிலுக் கெழுந்தருளினாரென்று அவர்கள் விண்ணப்பஞ் செய்ய; இவரும் அதுவென்ன; அவர் அருளிச்செய்யாமல் எழுந்தருளு கைக்கு ஹேது வென்னென்ன? ஒருதோண்டியடியாக மதநியாருக்கும் மதநி யாருக்கும் சண்டையானவாறே தம்தேவிகளைக் கோபித்து, பாகவதாபசாரத் துக்கிறாய்த்து அப்போதே கோயிலேற வெழுந்தருளினா ரென்றார்கள்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

---

( சா )

# ஸ்ரீ இளையாழ்வார்ப்ரபாவம்.

---

அத்தைக்கேட்டு இளையாழ்வாரும் திருவுள்ளம்கலங்கி, தேவிகளைப் பார்த்து அதிகுபிதராய் (கூ0கூ) "ஜோஷாணாரோகாஷ்ஷியஃ" (ஸ்ரீஸ்வா ஸாஹித்யாஃ) என்னும்படியே ஸ்பஷ்டமாக்கினாய். முன்பே திருக்கச்சி நம்பி விஷயமாகவும், ஸ்ரீவைஷ்ணவர் விஷயமாகவும் பாகவதாபசாரப்பட் டாய், இப்போதும் பெரியநம்பி தேவிகளுடனே பிணங்கி அஸஹ்யாபசா ரப்பட்டாய்; இப்படி செய்கிற நீ இப்போதே புறப்பட்டுப் போவென்று,

ததநுபந்தியான தநங்களையுங் கொடுத்துப்பயணமாக்கி, பிறந்தகமே போக விட்டு, இல்லறமில்லேல் துறவென்கிறபடியே அதிதி சத்கார யோக்யை யன்றிக்கே ப்ரதிகூலையான பார்யையை ஸ்வாஸநமாக த்யஜித்து, சந்யஸிக்கக் கடவேனென்கையாலே, இளையாழ்வாரும் நமக்கு இஸ்ஸம்ஸாரம் த்யாஜ்யமென்று அத்யவஸித்து (௱௪) "அநந்தஸரஸி ஸ்நாத்வா விமாநச்சாயயா ஸ்திதே - விமுக்த ஸர்வபாபேப்யோ விஷ்ணுலோகம் ஸ கச்சதி" (అనంత సరసిస్నాత్వా విమానచ్ఛాయయాస్థితే - విముక్తస్సర్వపాపేభ్యో విష్ణులోకం సగచ్ఛతి) என்னும் மாஹாத்ம்யமுடைய திருவநந்தஸரஸ்ஸுக்கெழுந்தருளி (௱௫) "ஸம்யக் ஸ்நாநாஹ்வயே தீர்த்தே விகாஹ்ய கதகில்பிஷ: - நிரஸ்தாரபோகாரோ வரதம் ஶரணம் கத:" (సమ్యక్ స్నానాహ్వయే తీర్థే విగాహ్య గతకల్బిషః- నరస్తీరభోగాశ్వరదం శరణంగతః) என்கிறபடியே திருவநந்த ஸரஸ்ஸிலே நீராடி, (௱௬) "யதோக்தகாரிணம் பக்தம் பகவந்தம் வா குருத்வேநாங்கீக்ருத்ய ஸந்ந்யாஸாஶ்ரமமாஶ்ரயிஷ்யாமி" (యథోక్తకారిణంభక్తంభగవంతంవా గురుత్వేనాంగీకృత్యసన్యాసాశ్రమమాశ్రయిష్యామి) என்கிறபடியே ஸந்யஸிக்க ஸங்கல்பித்துக் கொண்டு "தொழுதெழுதொண்டர்கள் தமக்குப்பிணியொழித்தமரர் பெருவிசும்பருளும்பேரருளாளர்" சந்நிதியிலே எழுந்தருளி ஸேவித்து "தாயேதந்தையென்றுந் தாரமேகிளைமக்களென்றும் நோயேபட்டொழிந்தேன்" என்கிறபடியே பகவத்பாகவதாசார்யாநுவர்த்தநத்துக்குவிலக்கடியான இஸ்ஸம்ஸாரபந்தம் வேண்டுவதில்லை, அடியேனுக்கு தேவரீர்திருவடித்தாமரைகளில் சேவையே வேண்டுவதாகையாலே, (௱௭) "த்ரிதண்டம் வைஷ்ணவம் லிங்கம் விப்ராணாம் முக்திஸாதநம் - நிர்வாணம் ஸர்வதர்மாணாமிதி வேதாநுஶாஸநம்" (త్రిదణ్డం వైష్ణవంలింగం విప్రాణాంముక్తిసాధనం - నిర్వాణంసర్వధర్మాణామితివేదానుశాసనం) என்று இப்படிசொல்லப்பட்ட த்ரிதண்டகாஷாயவஸ்த்ரங்களை தேவரீர் அடியேனுக்கு ப்ரஸாதித்தருளவேணுமென்று இளையாழ்வார் பேரருளாளரை ஆசார்யத்வேந அங்கீகரித்து விண்ணப்பஞ் செய்ய; தேவப்பெருமாளும் திருவுள்ளம் உகந்தருளி, (௱௮) "த்ரிதண்டமுபவீதம் ச வாஸ: கௌபீநவேஷ்டநம் - ஶிக்யம் கவசமித்யேதத் பிப்ருயாத்யாவதாயுஷம்" (త్రిదణ్డముపవీతంచవాసఃకౌపీనవేష్టనం - శిక్యంకవచమిత్యేతత్ బిభృయాద్యావదాయుషం) என்று சொல்லுகிறபடியே த்ரிதண்டகாஷாயாதிகளை நீருள்ளதனையுந் தரிக்கக்கடவீரென்று அர்ச்சகமுகேந நியமித்து ப்ரஸாதித்தருளி, இராமாநுஜமுநியென்று திருநாமஞ்சாத்தியருளி, நம் ராமாநுஜனை மடத்திலேவைத்து வாருமென்று திருக்கச்சிநம்பிக்கருளிச்செய்தருள, அவரும்

அப்படியே உபலாலித்துக் கொண்டுபோய், மடத்திலே வைத்து எழுந்தருளினார்.

பின்பு ராமாநுஜரும் ஆச்ரமதர்மங்களையும் குறைவற நடத்திக்கொண்டு, நமக்கு ஆளவந்தார் விசேஷகடாக்ஷம்பண்ணினதற்கு ஈடாக, விரோதிகளும் கழிந்து ஆநுகூல்யமும் கூடாநின்றதே; ஆளவந்தார் திருவுள்ளக்கருத்து நிறைவேறும்படிக்கு நமக்கொரு சஹாயம் உண்டாகவேணுமென்று விசாரமுண்டாய், தநநுரோதேந கோவிந்தபட்டரை நினைத்து, அவன் நமக்கு ஹிதப்ரவர்த்தகன், ஸர்வவிஷயவிரக்தன், சாஸ்த்ரவைதக்த்யமுள்ளவன், இனி அவனை நம்மோடொக்கச் சேர்ப்பாருண்டாகில் நல்லது. இப்போதவன் தேவதாந்தரபரனாயிராநின்றான், அவ்வுள்ளங்கைக்கொணர்ந்த இடத்தை சுருள்நாற்றமெழுப்பி (கூ0க) "ஸர்வகந்தஸ்ஸர்வரஸ:" (ஸர்வகந்தஸ்ஸர்வரஸ:) என்னுமவனுடைய ஸௌகந்த்யத்தைக்காட்டி மீட்கும் வீரகர் ஆரோவென்றுநினைவிட; விசேஷாத்மகுணங்களையுடையராய், வேதவேதாந்த விதக்ரேசரராய், வகுளாபரணப்ரபந்த முகுளாமோதிதஸித்தராய், " நிலதமூலகுக்காய் நின்ற திருவேங்கடத்தெம்பெருமானை " அநவரதபாவனைபண்ணி, பிரியாவடிமை செய்யாநின்றுள்ள தேசிகாக்ரேசரரான பெரிய திருமலைநம்பியே கடவரென்று நிச்சயித்து, ஒரு அநுகூலஸ்ரீவைஷ்ணவரை அவர் சந்நிதிக்குப் போகச்சொல்லி, தேவருடைய மருமகனான வட்டமணி கோவிந்தபட்டர் அடியேனுடன் ஸஹாத்யாயியாய் அநுகூலித்து இருந்தவன், துர்வாசநாதிசயத்தாலே அந்யபரனாய் காளஹஸ்தியாகிற கடுங்காட்டிலே நில்லாநின்றான்; தேவரீர் அடியேனுக்காக அவனிடத்தே நிர்ஹேதுகக்ருபைபண்ணி, திருவடிகளுக்கு அவனை ஆட்கொண்டருளவேணுமென்று விண்ணப்பஞ்செய்துவிட்டார்.

அநந்தரம் இவரிப்படி ஆச்ரமப்ராப்தி பண்ணியருளின செய்தியை கந்தாடை முதலியாண்டானும், ஹாரிதகுலதிலகரான திருமருமார்பனென்கிற திருநாமத்தையுடைய கூரத்தாழ்வானுங் கேட்டருளி, அதிப்ரீதியோடே பெருமாள் கோயிலுக்கெழுந்தருளி, ராமாநுஜனை சேவித்து, அடியோங்களுக்கு பஞ்சஸம்ஸ்காரங்களை ப்ரசாதித்தருளவேணுமென்று விண்ணப்பஞ்செய்ய, ராமாநுஜனும் திருவுள்ளம் உகந்தருளி, அவர்கள் ப்ரார்த்தித்தபடியேசெய்தருள, அவர்களும் பஞ்சஸம்ஸ்காரங்களையும் லபித்து க்ருதார்த்தர்களாய் (கூக0) "அதீத்யம்த்ரமாசார்யம் பூஜயேத்தத்ர தேஜஸ: - ஆசார்யாதீநவ்ருத்திஸ்யாவஜ்ஜீவம்ஸதாசுசி:" (అధీత్యమంత్రమాచార్యం పూజయేత్తత్ర తేజసః - ఆచార్యాధీనవృత్తిస్యాయావజ్జీవంసదాశుచిః) என்கிறபடியே ஸ்வா

சார்யரான ராமாநுஜனை யொருக்காலும் பிரியாமல் தத்கைங்கர்யைகரஸராய் சேவித்திருந்தார்கள்.

பின்பு யாதவப்ரகாசனுடைய மாதாவுக்குப் பலகாலும் பேரருளாளர் சேவைநடவாநிற்க, திருக்கச்சிநம்பி பார்வை நடவாநிற்க, ராமாநுஜனித்தே ப்ரேமசம்பாஷணம் நடவாநிற்க, அதுவே நிதாநமாக அவளுக்கும் ந் தர்ஶநத்திலே ஊற்றம்பிறந்து; இத்தர்ஶநத்திலே நம் யாதவனும் இறங்குலோவென்று நினைத்து, வையமாளிகைப்படியேறுநிற்க, நல்லது நல்லதுன்று கிம்வதந்தியுண்டாக, அதுகேட்டு சந்தோஷத்துடனே யாதவப்ரகான் பக்கல்சென்று இச்செய்தியைச் சொல்லி, ஸ்வபுத்ரனை யாதவப்ரகானக்குறித்து நீயும் ராமாநுஜனைப்போலே சிகாயஜ்ஞோபவீத பூர்வகமாக திதண்டத்தை தரியாயென்ன, யாதவப்ரகாசனும் ஸ்வாபிமாநத்தாலே ர்த்தஞ்சொல்லுகையொழிந்து, பாரமார்த்திகதயா ஸ்வாபிமதார்த்தத்தில் அருசிதோன்றா நிற்கையாலும், இளையாழ்வார் அந்நாள்களிலே ப்ரதியோகித்வேந சொன்ன அர்த்தங்கள் நெஞ்சிலே புண்பட்டு நிற்கையாலும், அவர் மாஹாத்ம்யங்களை ப்ரஹ்மரக்ஷஸ்ஸு சொல்லியிருக்கையாலும், சங்காயாத்ரையில் வ்யாதரூபேண வந்த ராமஸாக்ஷாத்கார சஹாயத்தாலும், மாத்ருவாக்யத்தாலும்சம்மதித்து, ஸ்வமாதாவுடனே; த்ரிதண்டதாரணம்பண்ணுமிடத்தில், நான் சிகாயஜ்ஞோபவீத த்யாகம்பண்ணுகையாலே அதுக்கு ப்ராயஶ்சித்தமாக பூப்ரதக்ஷிணம்பண்ணவேண்டியிருந்தது, அது வயோவ்ருத்தனை என்னால் செய்யக்கூடாது, இனி அசக்தனை நான் செய்யவடுப்பதன் என்று சொல்லிமுசித்துக்கிடக்க, அவ்விரவிலே பேரருளாளர்அவன் ஸ்வப்நத்திலே எழுந்தருளி, நம்மிராமாநுஜனையே யொரு ப்ரதக்ஷிணம் பண்ணி, அவர் தர, த்ரிதண்டகாஷாயாதிகளை தரித்து சந்யஸியாயென்ன, யாதவனும் அத்தை விஶ்வஸியாமல், திருக்கச்சிநம்பியுடனே நானொரு நினைவு நினைத்திராநின்றேன், அத்தைப்பேரருளாளர்க்குவிண்ணப்பஞ்செய்து அவர் திருவுள்ளமானபடியை எனக்கு அருளிச்செய்யவேணுமென்ன, நம்பியும் அன்றுராத்ரி பெருமாளைசேவித்துவிடைகொள்ளுகிறவளவிலே, யாதவப்ரகாசன் ஒரு நினைவு நினைத்திருந்தேனென்றான் என்று விண்ணப்பஞ்செய்ய, பெருமாளும்; அவள்தாய் இராமாநுஜனைப்போலே நீயும் த்ரிதண்டத்திலே சந்யஸியாயென்ன, தான் பூப்ரதக்ஷிணம் பண்ணவேணுமென்று முசித்துக்கிடந்தான், நான் நம்மிராமாநுஜனை யொரு ப்ரதக்ஷிணம் பண்ணி சந்யஸியாயென்று சொன்னோம். நாம் ஸ்வப்நமுகேந சொன்னவார்த்தையை விஶ்வஸியாமல், உம்மை யிடுவித்துக் கேட்கிறானித்தனை யென்று

அருளிச்செய்ய, நம்பியும் வெடிவோனை இச்செய்தியை யாதவப்ரகாசனுக் கருளிச்செய்ய, அவரும் விஸ்வஸித்து வந்து ராமாநுஜன் திருவடிகளிலே தண்டன் சமர்ப்பித்து, அடியேனுக்கு த்ரிதண்டதாரணம்பண்ணுவித்தருள வேணுமென்ன, இவரும் அவருடைய உசித நிர்வேதங்கண்டு, அதுசெய்யு மிடத்து ப்ராயஶ்சித்தாபேக்ஷையுண்டென்ன, அவரும் பகவதுக்திப்ரகா ரத்தைவிண்ணப்பஞ்செய்து, அவர்தன்னையே வலம்வந்து ஸவிநயனாய்நிற்க, அவ்வளவிலே ஆழ்வானும் ஆண்டானும் பகவதாநுகூல்யமும் இவருடைய நினைவும் இருந்தபடி யென்னென்று விஸ்மிதராய் (கஎக) "த்வேஷாத்வே ஜ்ஞாதய:" (ద్వేషాద్వేజ్ఞాతయః) என்கிறபடியே தேவர்க்குப் பண்ணுகின்ற த்வேஷந்தானே இவர்க்கு உஜ்ஜீவந ஹேதுவாய்த்தென்று சொல்லி ஆஶ்சர் யப்பட்டு (கஎஉ) "கஸ்மாதிஹ ப்ரஹ்மாஸ்வதம்" (అస్మాద్దిహబ్రహ్మాభవతు) என் று விண்ணப்பஞ்செய்ய, ராமாநுஜனும் போர வுகந்தருளி, சாஸ்த்ரோக்த ப்ரகாரேண ப்ராயஶ்சித்தபூர்வகமாக சௌளோபநயநாதிகளையும் பண்ணு வித்து, த்ரிதண்டகாஷாயாதிகளையும் ப்ரசாதித்து, ஸ்ரீகோவிந்தஜீயர் என்று திருநாமம் ப்ரசாதித்து, மிகவுங் க்ருபைபண்ணி யருளினர். இப்படி பஞ்ச ஸம்ஸ்காரயுக்தராக்கி, குருபரம்பரா பூர்வகமாக மந்த்ர ரத்நார்த்தத்தையும் ப்ரசாதித்தருளி, சாஸ்த்ரங்களிலே இதரேதரவசந வையர்த்த்யம்பிறவாதபடி யதிதர்மஸமுச்சயம் என்கிற ப்ரபந்தத்தைப்பண்ணுமென்ன, ஸ்ரீகோவிந்த ஜீயரும் (கஎங) "அதிகாரோ யதீநாம் ச ப்ரயோகோ முக்யகர்ம ச. அஹோராத்ரக்ரியாசாரோ லிங்கதர்மகதிஸ்திதி:- ப்ராயஶ்சித்தாநி ஸம்ஸ் கார இத்யேதாநி தஶபர்வக:" (అధికారో యతీనాంచ ప్రయోగో ముఖ్యకర్మచ- అహో రాత్రక్రియాచారో లింగధర్మగతిస్థితిః - ప్రాయశ్చిత్తాని సంస్కార ఇత్యేతాని దశపర్వకః) என்று ஏவம்ப்ரகாரேண சங்க்ரஹ ப்ரபந்தத்தைச் செய்து சந்நிதாநத்திலேவைத்து தண்டன் சமர்ப்பிக்க, ராமாநுஜனும் ஆத்யந்தமாக திருக்கண்சாத்தி சந்தோ ஷித்தருள, இவரும் ஆசார்யபரதந்த்ரராய் சிலகாலம் எழுந்தருளியிருந்து அசிரேண பரமபதத்தை ப்ராபித்தருளினர்.

அநந்தரம், ராமாநுஜனும் கூரத்தாழ்வானுக்கும் முதலியாண்டானுக் கும் மீமாம்ஸாசாஸ்த்ரயுக்ம ஶ்ரமம்பண்ணுவித்துக்கொண்டு இராநிற்க; இவ ருடைய ஆஶ்ரமப்ராப்திமுதலான இச்செய்திகளைக்கோயிலிலே ஆளவந்தார் ஸ்ரீபாதத்து முதலிகளெல்லாருங்கேட்டு, போரவுகந்து, தங்களிலே விசாரித் துக்கொண்டு, நம்பெருமாள் சந்நிதியிலே சென்று, இளையாழ்வாரை தேவரீர் சந்நிதியிலே நித்யவாசம்பண்ணும்படி இங்கே யழைப்பித்துக்கொண் டருள

வேணுமென்று விண்ணப்பஞ்செய்ய; பெரியபெருமாளும் பேரருளாளர்க்கு அப்போதே திருமுகம்போகவிட்டருள; பேரருளாளருங் கேட்டருளி, தந் தாம் அபிமாநத்தைப் புறம்போகவிடிலன்றோ? நாம் நம்மிராமாநுஜனை விடுவதென்று அருளிச்செய்துவிட; இச்செய்தியைப் பெரியநம்பிமுதலானமுதலிகள் எல்லாருங்கேட்டு இனிச்செய்யவடுப்பதென்னென்று தங்களிலே விசாரித்தருளி, தேவப்பெருமாள் பரமோதாரராயிருப்பர் பாட்டுக்குப்போரநல்லராயிருப்பரொன்று, ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையரைக்குறித்து, (௱௧௪) "வேகவத்யாஸ்தடே தீரே க்ஷேத்ரே ஸத்யவ்ரதாஹ்வயே - அஸ்தி காஞ்சீதி விக்யாதா புரீ புண்யவிவர்த்தநீ" (వేగవత్యాస్తటే తీరే క్షేత్రే సత్యవ్రతాఖ్యకే - అస్తి కాఞ్చీతి విఖ్యాతా పురీ పుణ్యవివర్ధనీ) என்றிப்படி புண்யவர்த்தகமாகச் சொல்லப்பட்ட காஞ்சீமஹாநகரியிலே தேவரீர் எழுந்தருளி, புண்யகோடிவிமாந மத்யஸ்த்தராய், அகிலர்க்கும் அகிலாபேக்ஷிதப்ரதராயிருக்கிற பேரருளாளரைப்பாடி யுகப்பித்து, நமக்கு ராமாநுஜனைத்தரவேணுமென்று கேட்டு வாங்கி யழைத்துக்கொண் டெழுந்தருளவேணுமென்று விண்ணப்பஞ்செய்தார்கள். அவரும் அப்பொழுதே புறப்பட்டு நம்பெருமாளுக்கு விண்ணப்பஞ்செய்து, பெருமாள் கோயிலைநோக்கி எழுந்தருளினார். இவர் இப்படியெழுந்தருளுகிற செய்தியைக்கேட்டு, ஸ்வஜநமானவரந்தரும் பெருமாளரையர் எதிரேபோய், தம் திருமாளிகையிலே எழுந்தருளவைத்துக்கொண்டு, சத்கரித்து அமுதுசெய்விக்க, இவரும் அதிப்ரீதராய்க்கொண்டு எழுந்தருளியிருக்க; அதின்மற்றைநாள் வெடிவோரை பேரருளாளர் வையமாளிகையிலே "கச்சிக்குவாய்த்தான்" என்கிற திருமண்டபத்திலே ஏறியருளி, அனைத்துக்கொத்திலுள்ள பரிகரமும் சேவித்திராநிற்க, திருக்கச்சிநம்பியும் திருவாலவட்டம்பரிமாற, அவரருகே ராமாநுஜனும் அவரருளிச்செய்த வரதராஜாஷ்டகத்தை அநுசந்தித்துக்கொண்டு சேவித்துநிற்கச்செய்தே; திருவரங்கப்பெருமாளரையர் எழுந்தருளின செய்தியைத்திருக்கச்சிநம்பிகேட்டருளிஎதிர்கொண்டுஅரையரைச்சேவிக்க,அவருங் க்ருபைபண்ணி அந்யோந்யம் குஶலப்ரஶ்நம் கேட்டிருக்கச்செய்தே, அரையரும் நம்பியுடனே பேரருளாளரைச்சேவிக்கவேணுமென்று விண்ணப்பஞ்செய்ய, நம்பியும் பெருமாளுடைய திருவோலக்கமே அழைத்துக்கொண்டுபோக, அரையரும் வரதராஜனைச்சேவித்து, (௱௧௫) "கதா புநஶ்ஶங்கரதாங்ககல்பக த்வஜாரவிந்தாங்குஶவஜ்ரலாஞ்சநம் - த்ரிவிக்ரம த்வச்சரணாம்புஜத்வயம் மதீய மூர்த்தாநமலங்கரிஷ்யதி" (కదా పునశ్శంఖరథాంగకల్పక ధ్వజారవిందాంకుశవజ్ర

లాంఛనం - త్రివిక్రమత్వచ్చరణాంబుజద్వయంమదీయమూర్ధానమలంకరిష్యతి) என்று அநு சந்தித்துக்கொண்டு தண்டன் சமர்ப்பித்து நிற்க, பெருமாளும் தீர்த்த ப்ர சாதங்களையும் ஸ்ரீசடகோபனையும் ப்ரசாதித்தருள, இவரும் "திருப்பொலி ந்தசேவடி யென்சென்னியின்மேல் பொறித்தாய்" என்று ப்ரீதராய்நிற்கிற வளவிலே, பெருமாளும் இவரை யருளப்பாடிட்டருள, திருவரங்கப்பெரு மாளரையரும் பக்திபுரஸ்ஸரமாக "என்னெஞ்சமேயான்" என்றுதொட ங்கி "உலகேத்துமாழியானத்தியூரான்" என்றும், "பிணியவிழ்தாமரை மொட்டலர்த்தும்பேரருளாளர்" என்றும், "கொழுந்தெழுதொண்டர்கள் தமக்குப்பிணியொழித்தமரர் பெருவிசும்பருளும் பேரருளாளனெம்பெருமா ன்" என்றும், இப்படி ஆழ்வார் திவ்யஸூக்தியான "பாலேய்தமிழர்", "பண் ணார்பாடலின்கவிகளை, தேவகானத்திலே இயலுமிசையுமாக நாடகத்துடனே பாட; "தென்னனுவென்னுமென்னம்மான்" என்கிறபடியேபேரருளாளரும்போ ரவுகந்தருளி, தாம் சாத்தியிருந்த திருமுத்தின்தாழ்வடம், திருப்பரிவட்டம், சத்ரசாமராதி மற்றுமுண்டான வரிசைகள் எல்லாம் ப்ரசாதித்தருள, இவ ரும், நாயிந்தே, அடியேனுக்கு இவையொன்றிலும் அபேக்ஷையில்லை, தேவ ரீர் ஆர்த்திதார்த்த பரிதான தீக்ஷிதராகையாலே அடியேன் ஆர்த்தித்ததைத் தந்தருளவேணுமென்று விண்ணப்பஞ்செய்து, பின்னையுங் கனக்கப்பாடியரு ளினார். அத்தைக்கேட்டருளி, பெருமாளும் அதிப்ரீதராயருளி, நீர் வேண்டி னத்தைத்தருகிறோம், அத்தைச் சொல்லிக்காணீரென்ன, அரையரும் ராமா நுஜனைக்காட்டி, இவரை அடியேனுக்குத் தந்தருளவேணுமென்று விண்ணப் பஞ்செய்ய, பெருமாளும் அப்போதே யறியப்பெற்றிலோமே, இவரையொ ழிய நீர் வேண்டினதெல்லாந்தருகிறோம் அத்தைக்கேளீரென்றருளிச்செய்ய, அரையரும் (கூசக) "ராமோத்விர்நாபிபாஷதே" (రామోద్విర్నాభిభా షతే) என்கிற தேவர் இரண்டுவார்த்தை யருளிச்செய்யலாமோவென்று விஜ் ஞாபிக்க, பெருமாளும் இன்றைப்புடன்தந்தோம் கொண்டுபோகலாகாதோ வென்று அருளிச்செய்ய, திருவரங்கப் பெருமாளரையரும் உடையவரைக் கையைப்பற்றிவாருமென்ன, உடையவரும் பேரருளாளர்க்குத் தண்டன் சமர்ப்பித்து, திருவரங்கப்பெருமாளரையருடனே கோயிலுக்கெழுந்தருளப் புறப்பட, பெருமாளும் இவர்க்கு விடைகொடுத்தருளினார். பின்பு உடைய வரும்; கூரத்தாழ்வானையும்முதலியாண்டானையும்பார்த்தருளி, மடமேபோய் நம்முடைய திருவாராதனமான பேரருளாளரையும், மற்றும் உண்டான சம் பந்தங்களையும் கொண்டுவாருங்கோள் என்று அருளிச்செய்து, மடம்புகுரா மல் கோயிலுக்கெழுந்தருளினார். அவர்களும் அப்படியே எழுந்தருளவைத்

துக்கொண்டு கூடினவளவிலே, திருக்கச்சிநம்பியும் அவர்களை வழிவிட்டு மீண்டு எழுந்தருளினார்.

உடையவரும் (நகள) "யஸ்மஞ்ஞாநநஸோயாதிநாகஸூஜாவ்ரு யோமதிம்" ([illegible]) என்று சொல்லுகிற பெருமையையுடையஸ்ரீரங்கதாமமாகிற திருவரங்கத் திருப்பதியைநோக்கிப் பயணகதியிலே எழுந்தருளி, வடவாற்றிலே நீராடி, கேசவாதி த்வாதசோர்த்வபுண்ட்ரங்களையுந் தரித்திருந்தவளவிலே, இவர் எழுந்தருளினசெய்தியை ஆளவந்தார் ஸ்ரீபாதத்தில் பெரியநம்பி முதலான முதலிகளும் ஜீயர்களும் ஏகாங்கிகளும் ஸ்ரீவைஷ்ணவர்களும் கேட்டருளி, பெருமாளுக்குவிண்ணப் பஞ்செய்ய, பெருமாளும் சேனைமுதலியாருக்கு அருளப்பாடிட்டருளி, நம்மிராமாநுஜனை எதிரேற்றிக்கொண்டு வாருமென்று திருவுள்ளமாயருள, சேனைமுதலியாரும் பெரியநம்பியுள்ளிட்ட முதலிகள் ஜீயர்கள் ஸ்ரீவைஷ்ணவர்களுடனே பெருமாள் பரிகரமான ஆனைத்துக்கொத்தில் அவர்களும் சேவிக்க, அகில ந்ருத்தகீத வாத்யத்துடன் முக்தராய்ப் போருமவர்களை நித்யசூரிகள்விரஜைக்கரையளவாகவந்து எதிர்கொள்ளுமாபோலே, திருக்காவேரி வடவாற்றின் கரையளவாக வந்தெதிர்கொள்ள; ராமாநுஜரும் சேனைமுதலியாரையும் பெரியநம்பி முதலானாரையும்சேவித்து, அவர்களைப் பின்சென்று கொண்டுபோய் "கொடியணிநெடுமதிட் கோபுரங்குறுகினர்" என்கிறபடியே திட்கொடிமதிளையும் தாமோதரன் றிருக்கோபுரத்தையுங் கிட்டி, சாஷ்டாங்கப்ரணாமம்பண்ணி, திருமாலை தந்த பெருமாள் திருவீதி முன்றாகப்புகுந்து, ப்ரதக்ஷிணமாக வெழுந்தருளி, த்ரிவிக்ரமன் றிருவீதியையும் ப்ரதக்ஷிணம்பண்ணி, எழுந்தருளிப்புகுந்து, பெரியபலிபீடத்தடியிலேசென்று, தண்டன்சமர்ப்பித்து, சேனாக்ரமத்திலே ஆளரியையுந் திருவடிதொழுது, ஸ்ரீரங்கநாயகியாரையுஞ் சேவித்து, ஸ்ரீசந்த்ரபுஷ்கரிணியிலே தீர்த்தஸ்வீகாரமும் பண்ணியருளி, ஸ்ரீகோபுரங்கள் நயினாரையுஞ் சேவித்துப்புகுந்து "கடைத்தலை யிருந்துவாழும் சோம்பர்" ஆன நம்மாழ்வார் முதலான ஆழ்வார்களையுஞ் சேவித்து, மற்றுஞ் சுற்றுள்ள எம்பெருமான்களையும் சேவித்து "அணியனார்செம்பொனாய வருவரையனையகோயில்" ஆகிற அணியரங்கந்திருமுற்றத்தேபுகுந்து, தண்டன்சமர்ப்பித்து, உள்ளே சென்று ப்ரதக்ஷிணமாக வெழுந்தருளி, ப்ரணவாகாரமான ஸ்ரீதிவ்யவிமானத்தையும் சேவித்து, சேனைமுதலியாரையுந் திருவடிதொழுது, அழகிய மணவாளன் திருமண்டபத்தேற எழுந்தருளினவளவிலே "வந்தவரெதிர்கொள்ளமாமணிமண்டபத்து" என்கிறபடியே முக்தனைப் போருமவனை

ஸ்ரீவைகுண்டநாதன் எதிர்கொள்ளுமாபோலே, நம்பெருமாள் திருக்கைத் தலத்திலே எழுந்தருளிப் புறப்பட்டு, அழகியமணவாளன் திருமண்டபத் தளவாக எழுந்தருளி எதிர்கொண்டு உள்ளேபுகுந்தருள ; உடையவரும் விழுவதெழுவது தொழுவதாக சேவித்து, திருப்பள்ளியறையிலே புகுந்து, "அரங்கந்தன்னிடை" "பாம்பணைப்பள்ளிகொள்ளும்" கடல்விளங்குகருமேனியம்மான்றன்னைக்கண்ணாரக்கண்டுகந்து, மணத்தூணேபற்றிநின்று, வாயார வாழ்த்தி ., ப்ரேமபரவசராய், அமலனாதிப்பிரானிற்படியே பாதாதிகேசாந்தமாக "கண்டகண்கள்மற் றொன்றினைக்காணாவே ., என்னும்படி பெரிய பெருமாளை யநுபவித்து, திருப்பல்லாண்டையும் அநுசந்தித்து, (ருகஅ) "நமோ நமோ வாங்மநஸாதிபூமயே - நமோ நமோ வாங்மநஸைகபூமயே - நமோ நமோ நந்தமஹாவிபூதயே - நமோ நமோ நந்ததயைகஸிந்தவே - நதர்மநிஷ்டோஸ்மி நசாத்மவேதீ நபக்திமாம்ஸ்த்வச்சரணாரவிந்தே - அகிஞ்சநோநந்யகதிஶ்ஶரண்ய த்வத்பாதமூலம் ஶரணம் ப்ரபத்யே," (నమోనమోవాఙ్మనసాతిభూమయే - నమోనమోవాఙ్మనసైకభూమయే - నమోనమోనన్త మహావిభూతయే - నమోనమోనన్తదయైకసిన్ధవే - నధర్మనిష్ఠోస్మి నచాత్మవేదీనభక్తిమాం స్త్వచ్చరణారవిన్దే - అకిఞ్చనోనన్యగతిశ్శరణ్యత్వత్పాదమూలంశరణంప్రపద్యే, ) என்றுதம் பரமாசார்யரான ஸ்ரீஆளவந்தார் திவ்யஸூக்தியையும் அநுசந்தித்து, சேவித்துநிற்க, பெரியபெருமாளும் ராமாநுஜனை மிகவும் க்ருபைபண்ணியருளி, தீர்த்தப்ரசாதங்களும் ப்ரசாதித்து, "நின்செம்மாபாதபற்புத்தலைசேர்த்து" என்கிறபடியே "திருக்கமலபாதமான" தேனேமலரும்தூயசுடரடிகளாலே, இவருடைய உத்தமாங்கத்தை யலங்கரிக்க ; இவருந் தாளிணைக்கீழ் வாழ்ச்சியைப்பெற்று, நிரதிசயாநந்த நிர்ப்பரராய் சேவித்துக்கொண்டுநின்றருள, பெரியபெருமாள் உடையவரைத் தம் தாமரைக்கண்களாலே நோக்கி, சோதி வாய்திறந்து, "பொங்கோதஞ்சூழ்ந்தபுவனியும்விண்ணுலகும்" என்கிறஉபய விபூதி யைஶ்வர்யத்தையும் உமக்கும் உம்முடையார்க்குந் தந்தோம், நம்முடையவீட்டில் கார்யத்தையெல்லாம் ஆராய்ந்துநடத்துமென்றுதிருவுள்ளமாயருள ; உடையவரும் தீர்த்தப்ரசாதமும், "சூடிக்களைந்த தண்டுழாய் விரைநாறு கண்ணித்திருமாலைப்ரசாதமும், "பொலிந்துநின்றபொன்னங்கழலான ஸ்ரீசடகோபனையும் "வானவர்நாட்டையும் நீ கண்டுகொள்" என்கிற உபயவிபூத்யைஶ்வர்யத்தையும் கரதலாமலகமாக ப்ரசாதிக்கப்பெற்று, பெரியநம்பி திருமுகமண்டலத்தைப் பார்த்தருளி, "பெரியார்க்காட்பட்டக்கால் பெறுதபயன்பெறுமாறு" என்று தேவரீர் திருவடிகள் சம்பந்தத்தையிட்டுப்

பெருமாள் இப்படி அடியேனை வாழ்வித்தருளினார் என்று விண்ணப்பஞ் செய்ய; பெரியநம்பியும் "கலியுங்கெடுங்கண்டுகொண்மின்" என்று ஆழ்வார் அருளிச்செய்த பவிஷ்ய தாத்தம் ப்ரஸித்தமாச்சுதென்று அருளிச் செய்து, பெருமாள் நியமித்தருளின கார்யம் செய்தருளலாகாதோவென்ன; உடையவரும், பெரியதிருமண்டபத்தேளல்லாருடனே எழுந்தருளியிருந்து, "எண்ணுதனகளெண்ணும்நன்முனிவர்" என்கிறபடியே, கோயிலில் உள்ள நிறைவுகுறைவெல்லாம் ஆராய்ந்தருளவேணுமென்று உடையவருக்கு எல்லாரும் அருளிச்செய்தார்கள். உடையவரும் அங்கே யெழுந்தருளியிருந்து கருவூலங்கள் எல்லாம் ஆராய்ந்து, அமுதுபடி, சாத்துப்படி, திருமாலை, திருவிளக்குகளெல்லாம் ஆராய்ந்து நடத்தியருளி, மற்றுந் திருவாராதநத்துக்கு வேண்டினவையெல்லாங் குறைவற நடத்தியருளி, கோயிலிலுள்ளத்துக் கொத்தில வர்களுடைய ஏற்றத்தாழ்வுகளும் ஆராய்ந்தருளி, திருமதிள்கள் முதலானவிடங்களில் திருப்பணிகளும் நடத்தியருளி, "வண்டினமுராலும், மயிலினமாலும், கொண்டல்மீதணவும், குயிலினங்கூவும், கடியார்பொழில்" களில் திருச்சண்பகந் தொடக்கமானதிவ்யமானபூமரங்களும், திருநந்தவநங்களும் ஆராய்ந்தருளி, மற்றுமுண்டான திருவிளையாட்டுச்சீமைகளும் எல்லாம் ஆராய்ந்துகொண்டு போருகிற வளவிலே; அகளங்கநாட்டாழ்வானையுஞ் சிஷ்யனாக்கிக் கொண்டருளி, கோயிலுக்கு மேற்காவலாக வைத்தருளி, "திங்களும்நாளும்விழாவறுத" என்கிறபடியே நித்யோத்ஸவ, பக்ஷோத்ஸவ, மாஸோத்ஸவ, ஸம்வத்ஸரோத்ஸவ, மஹோத்ஸவங்களெல்லாம் தாழ்வற நடத்திக்கொண்டு போருகிறகாலத்திலே.—

முன்பு திருமலைநம்பிசந்நிதிக்குப் போகவிட்டிருந்த ஸ்ரீவைஷ்ணவர் ஹர்ஷப்ரகர்ஷத்துடனே எழுந்தருளி உடையவர் திருவடிகளிலேசேவிக்க, ராமாநுஜனும் அவர்களுடைய முகவிகாஸங்கண்டு, கார்யசித்தியை நிஸ்சயித்து ப்ரீதியுடனே தத்வ்ருத்தாந்தத்தை விவரியுமென்ன; ஸ்ரீவைஷ்ணவரும்; தேவரீர் விடை ப்ரசாதித்தருளினபின்பு க்ரமத்திலேபோய், திருமலையேறி, திருமலைநம்பியைச்சேவித்து, தேவரீர் நியமநப்படியே விண்ணப்பஞ் செய்தேன், நம்பியுங் கேட்டருளி இது நாமே செய்யக்கடவதாயிருக்க, நம்மிராமாநுஜனும் "எண்ணம்புகுந்து தித்திக்குமமுதாக" ப் பெற்றதேயென்று, தேவர் ஆநுகூல்யத்துக்கு உகந்த திருவுள்ளத்தராய், தத்க்ஷணமே ஸ்ரீபாதத்துமுதலிகளுடன் அடியேனையுங் கூட்டிக்கொண்டு காளஹஸ்தி ப்ரதேசத்தில் அக்குளக்கரையில் ஒரு மரத்தடியிலே யெழுந்தருளி யிருக்க, அங்கே உள்ளங்கைக்கொணர்ந்த நயினாரும் ருத்ராபிஷேகார்த்தமாக குடம்

கொண்டு, ருத்ரபரமான பாட்டுக்களையுங் கதறிக்கொண்டுவரக்கண்டு, நம்பியும் "கொன்றைச்சடைமுடியானைக் குளிரநீராட்டினு லென்னுனக்குண்டாம்பயன்" என்று அருளிச்செய்ய, நயினுரும் இப்பாசுரங்கேட்டு நம்பியையும் ஸ்மயமாகமுகனுய் ஏறப் பாராநின்றுகொண்டு போனுன்; இவரும் அவன் செய்யுஞ் சேமத்தை யெண்ணித்தெளிவுற்ற சிந்தையராய், அவ்வளவிலே மீண்டு திருமலையிலேபோய் வ்யாக்யாநித் தெழுந்தருளி யிருந்தார். பின்பு ஒருநாள்; முன்புபோலே அக்குளக்கரையிலே வடவ்ருக்ஷச்சாயையிலே யெழுந்தருளியிருக்க, அங்கே நயினுரும் அபிஷேக ஜலாஹரணுர்த்தமாகக் குடமெடுத்துவருமதுகண்டு, நம்பியும் அப்போதொரு சிந்தைசெய்து "எம்மனஞ்சூழவருவானுய் உறங்குவான்போல் யோகுசெய்வான்றுனே யுணர்வைப்பெறவூர்ந்தவனுறங்குகிறுனே" என்று தம் பரமாசார்யர் திவ்யஸூக்தியிலே (௩௧௯) "ஸ்வாபாவிகாநவதிகாதிஶயேஶித்ருத்வம்" (స్వాభావికానవధికాతిశయేశిత్వం) என்கிற ஶ்லோகத்தை ஒருவோலைப்புறத்திலேஎழுதி அவன்வருகிறவழியிலே பொகடுவித்திருக்க; அவனும் அவ்வழியில்வந்து, ஓலையைக்கண்டெடுத்து வாசித்துக்கொண்டு கடக்கப்புகட்டு, ஜலத்தை யாஹரித்துக்கொண்டு மீண்டுபோகிறவன், முதலெறிந்தவிடத்தைத்தேடி எடுத்துக்கொண்டு, ஜலத்தையு மிறக்கி, மீண்டு குடமெடுத்துக்கொண்டு வருகிறவன், எங்களைக்கண்டு (௩௨0) "ஶ்லோகஶ்ஶோகமாகதஃ" (శ్లోకశ్శోకత్వమాగతః) என்று ஸ்ரீவால்மீகிபகவான் அர்த்தசிந்தனை பண்ணினுற்போலே இவனும் ஶ்லோகார்த்த பர்யாலோசனைபண்ணி நின்றுகொண்டு, கிட்டவந்துநின்று, உங்கள்கையில் நழுவினபொருள் இதுவோவென்ன, நம்பியும் வேறுசிலர் பொருள்நழுவுமொழிய நழுவும்பொருள் எங்களதல்லவென்ன, அவனும் அது கிடக்கிடீர், நீங்கள் எல்லாரும் ஓரிடத்திலே நடக்கிறதென்னென்ன, நம்பியும் மார்க்கம் கலக்கமற்றிருக்கையாலேயென்ன, அவனும் சேவலருக்கு மார்க்கங்கள் உண்டோவென்ன, இவரும் பொருள்கையுண்டாய்ச் செல்லுமவனுக்கு அடுப்ப திதுவன்றேவென்ன, அவனும் இப்போது நீங்கள் உற்றுணைவிடவந்தீர்களோவென்ன, இவரும் அதல்ல கறவைகள் சொள்ளவந்தோமென்ன, அநுஷ்டாதாக்களுக்கு பசுபாததூளி பவித்ரமன்றேவென்ன, இவரும் அது இடமறிந்து நேர்படில் நல்லதென்ன, அவனும் குறுக்குநெடுக்காகில்பேதமென்னென்ன, செவ்வையிருக்க திர்யக்காகையேபேதமென்ன, அவனும்இதுபுதுவார்த்தைக்கட்டுகளோவென்ன, இவரும்பழவார்த்தைக்கட்டுகளும் இப்படியேயென்ன, அவனும் இதிலே பூர்வவிசாரம்வேண்டாவோவென்ன, நம்பியும் பரத்வத்திலேகாண் விசாரமிருப்பதென்ன, நயி

னாரும் திருக்காணாய்நம்பியையும் ஏறப்பாராநின்றுகொண்டு யதாஸ்த்ராக மேபோம்போது தலைதுலுக்கும்படி யடைவுகெடக் காணலாம்படிபோனான். நம்பியும் அதுகண்டு (௩௨௧) "ப்ரஸாதமக்3நம் மச்சித்தம்" (ప్రసాదమగ్నమ్మచ్చిత్తం) என்னுமாபோலே நெஞ்சு முருகாநின்றதே. அவரோ இனி யாவரோ என்றநுசந்தித்து, சாத்யகோடியிலேயிட்டு முதலிகளுடன் சல்லாபித்துக்கொண்டு திருமலையே மீண்டெழுந்தருளினார். என்றவாறே உடையவரும் மிகவும் ஆநந்தித்து, கூரத்தாழ்வானையும் முதலியாண்டானையும் இருந்த முதலிகளையும் பார்த்தருளி, கேட்டீர்களோ கோவிந்தனுக்கு ஆளவந்தார் திவ்ய ஸூக்தி நெஞ்சிலுற்று அதற்கு வாங்மாத்ரத்தாலே வைதண்டிகச்சாயையைக் காட்ட, அதற்கு நம்பியும் சாயாமாத்ரத்தாலே ஸதுத்தரங்களை வாக்சாதுர்யங்களாலே ரசிக்க, கோவிந்தனும் சாஸ்த்ரவிதக்தனாகையாலே நம்பியுடைய ஸ்ரீஸூக்திவைசாரத்ய க்ரமத்திலே யீடுபட்டு திருத்தானானிறே; எங்ஙனேயென்னில (௩௨௨) "கூடஸ்தோக்ஷரமுச்யதே" (కూటస్థోక్షర ముచ్యతే) "அமரர்களாதிமுதல்வன்" (௩௨௩) "தேஹீஸந்தாநவர்த்தந:" (దేహీసన్తానవర్తనః) "நெறிவாசல்தானேயாய்நின்றான்," (௩௨௪) "கஸ்சிந்மாம் வேத்தி தத்த்வத:," (కశ్చిన్మాం వేత్తి తత్త్వతః) "யானேநீயென்னுடைமையும்நீயே," (௩௨௫) "ஜ்ஞாநேந ஹீந: பஸுபிஸ்ஸமாந:" (జ్ఞానేనహీనః పశుభిస్సమానః) "என்னினைந்துபோக்குவரிப்போது," (௩௨௬) "யேவாலலாடபலகேஷு ந சோர்த்த்வபுண்ட்ரா:" (యేవాలలాటఫలకేష నచోర్ధ్వపుణ్డ్రాః) "தவளப்பொடி கொண்டுநீறிட்டிடுமின்" (௩௨௭) "ஊர்த்த்வபுண்ட்ரம் த்விஜாதீநாம்" (ఊర్ధ్వపుండ్రం ద్విజాతీనాం) "நீறுசெவ்வேயிடக்காணில்," (௩௨௮) "வேதமூலப்ரமாணாத்" (వేదమూలప్రమాణాత్) "மிக்கவேதியர்' 'நால்வேதம்" (௩௨௯) "ஸதேவஸோம்யேதமக்ர ஆஸீத் - தர்மே ஸர்வம் ப்ரதிஷ்டிதம் - அவித்யயா ம்ருத்யும் தீர்த்வா வித்யயாம்ருதமஸ்நுதே - ப்ரணவோ தநுஸ்ஸரோ ஹ்யாத்மா ப்ரஹ்ம தல்லக்ஷ்யமுச்யதே - அப்ரமத்தேந போத்தவ்யம் ஸரவத் தந்மயோ பவேத் - நாராயணாத் ப்ரஹ்மா ஜாயதே நாராயணாத் ருத்ரோ ஜாயதே" (సదేవసోమ్యేదమగ్రఆసీత్ - ధర్మే సర్వం ప్రతిష్ఠితం - అవిద్యయా మృత్యుం తీర్త్వా విద్యయామృతమశ్నుతే - ప్రణవో ధనుశ్శరో హ్యాత్మా బ్రహ్మ తల్లక్ష్యముచ్యతే - అప్రమత్తేన బోద్ధవ్యం శరవత్ తన్మయో భవేత్ - నారాయణాత్ బ్రహ్మా జాయతే నారాయణాత్ రుద్రో జాయతే) என்றிப்படிப்பட்ட ஸ்ருதிஸ்ம்ருதிதிஹாஸபுராணாதிகளிலே ப்ரதிபாதிக்கிற அர்த்தங்களையெல்லாம் தத்காலத்திலே மநசானது அவகாஹிக்க, கோவிந்தனும் திரு

த்ரானும், டோலாயமானசித்தனுப்போகையாலும், இவரும் அவன் சாத்ய கோடியிலே யேறிட்டுத் திரும்பி யருளுகையாலும், நம்பிக்கவனுடன் ஓடின சாமர்த்ய மிருந்தபடி யென்னென்று விஸ்மிதராய் ஸ்ரீவைஷ்ணவனை யுபலாலித்தருளினபின்பு பின்னையென்னென்றுகேட்டருள, அவரும் (கூகூ0) "யம்யம்பஶ்யதிசக்ஷுஷா - ஸ்தாவராண்யபிமுச்யந்தே கிம்புநர்பாந்தவாஜநா:" (యంయంపశ్యతిచక్షుషా - స్థావరాణ్యపిముచ్యన్తే కింపునర్బాంధవాజనాః) என்று சொல்லுகிறபடியே தேவரீருடைய உபயவித சம்பந்தம் பழுதுபோமோ! மூன்றாம்கூறில் கார்யசித்தியைக் கேட்டருளவேணுமென்று விண்ணப்பஞ்செய்தார், எங்ஙனேயென்னில், திருமலைநம்பியும் திருமலைச்சிந்தாமணியையுந் திருவடிதொழுது புறப்பட்டு, காளஹஸ்திஎல்லைநிலத்தோப்பிலே யெழுந்தருளி யிருந்து, ஸ்ரீபாதத்து முதலிகளுக்குத்திருவாய்மொழி வ்யாக்யாநம் ப்ரசாதித்தருளாநிற்க, நயினாரும் புஷ்பாஹரணம் பண்ணி நின்றுகொண்டு ஒரு பாதிரிமரமேறியிருக்க, அவ்வளவிலே "திண்ணன் வீடு," என்கிற திருவாய்மொழிக்கு அர்த்தம் அருளிச்செய்யாநிற்க, நயினாரும் மூன்றுபாட்டளவும் பூப்பறிக்கை தவிர்ந்துகேட்டு, நாலாம்பாட்டிலே "எம்பெருமானுக்கல்லால் பூவும்பூசனையுந்தகுமே" என்றுவர, நயினாரும் அம்மரத்தில் நின்றும் திடுக்கெனக்குதித்து, கையில் அப்பூம்படலிகையையுஞ் சுழற்றி யெறிந்து, தரித்திருந்த ருத்ராக்ஷத்தையும் அலங்கலழியவாங்கி வீசிப்போகவிட்டு, தகாது தகாதென்று நம்பி திருவடிகளிலே அடைவுகெட வந்து விழுந்து கிடந்து (கூகூக) "அஜ்ஞாநாத்யதிவாஜ்ஞாநாத் அஶுபம் யத்க்ருதம் மயா க்ஷந்துமர்ஹஸி தத்ஸர்வம்" (అజ్ఞానాద్యదివాజ్ఞానాత్ అశుభం యత్కృతం మయా) என்றும் "நீசனேனிறையொன்றுமிலேன்" என்றும் சொல்லுகிறபடியே தம்வர்த்தமானத்தைச்சொல்லி அநிவிஷண்ணராகிறார், எங்ஙனேயென்னில், உபயவிபூதிநிர்வாஹத்துக்கும் முடிசூடினவ னிருக்க, விரிதலையாண்டியை விரும்பினேனேயென்றும், புதுக்கணிப்புடைய புண்டரீகாக்ஷனிருக்க, புகைக்கண்ணனைப்பூசித்தேனேயென்றும், கடல்மண்ணுண்ட கண்டனிருக்க, கறைக்கண்டனைக்காமித்தேனே யென்றும், கல்லெடுத்துக் கன்மாரிகாத்த கற்பகமிருக்க, கையார் கபாலியைக்கண்டு வணங்கினேனே யென்றும், திருவிருந்த மார்பனிருக்க, திருவில்லாத்தேவனைத் தொழுதேனே யென்றும், பீதகவாடைப்பிரானிருக்க, புலியுரியுடையானைப் பின்றொடர்ந்தேனே யென்றும், சதிரானகங்கையடியா னிருக்க, கழிவாய்ச்சுடுகாடுகாவலனைச்சுற்றி வலம்வந்தேனேயென்றும், பெருமலராகிற பெருந்துழாய்வாமிருக்க, பெருங்கையா

ற்குடமெடுத்துப்பேய்ச்சுரைக்கு நீர்வார்த்தேனே யென்றும், இப்படி பல வகையாலும் புலம்பி இவ்வாத்மாவை உஜ்ஜீவிப்பிக்கவேணுமென்று தண்டனிட்டுக்கொண்டு எழுந்திராமலிருக்க, நம்பியும் முதலிகள் முகம்பார்த்து, சுத்தியாக முண்டாயிருந்தது, ஆளவந்தார் க்ருபை பண்ணும்படிக்குக் குறை யில்லை யென்றருளிச்செய்து, இவரையும்மூடிப்பிடித்தெடுத்து, உடம்பைய தடவி, பலபடி சாந்த்வாதநம்பண்ணி (கூகஉ) "ஆவிவேறுவலகூ ஹ்ருநம்" (ஆபஸ்தம்பஸூத்ரம்) என்கிறபடியே குளிரநோக்கி விஸ்ரம்பகதைம் நடவாநிற்க ; இச்செய்தியை யடையக்கேட்டு, தந்ஸ்த்தாநத்தார் அனைவ ரும்வந்து, நம்பியுடனே; எங்கள் ஸ்த்தாநத்துக்குக்கடவரான இவரை நீங்கள் எங்ஙனே அம்மான் பொடியிடவடுக்குமோவென்ன ; நம்பியும் அம்மான் பொடிக்கிடுபட்ட இவரையே கேட்டுக்கொள்ளுங்கோள் ? எங்கள் அந்யாத்ருஶம் ; அசல்வழி வருகிறோமல்லோமென்ன ; அவர்களும் ; நயினாரோ வாருமென்றுகையைப்பிடிக்க, உதறி நம்கையைப்பிடிக்கக்கூடுமோ வென்று கருவூலத்தில் அத்திறவுகோல் இலச்சினை யோதிரம் எல்லாத்தையும்பொகட்டு, இவரும்; உங்களுக்கும் எனக்கும் பிணையில்லையென்று கைதட்டி முகந்திருப்பிநிற்க ; அவர்களும் நிராஶராய் நம்பியுடனே ; நாங்கள் இச்செய்திகளையெல்லாம் இன்றே கேட்டோம் ; நங்கள்பிரான் வழி வருவானே யென்று உங்களுடனே சண்டைக்கு நிற்பதாக எண்ணியிருந்தோம். எங்கள் காளஹஸ்தியுடையாரும் எங்கள் கணுவிலே (கூகூகூ) " ஶாஷ்ணவஸவாவ நாமெகளு யீயலெ ஜூாவிமெூாவிகஃ " (ஸாங்க்யகாரிகை ஸ்ரீ லக்ஷ்மீதந்த்ரம்) என்கிறபடியே வேதபாஹ்யரான பௌத்தாதிகளாலே வேதசாஸ்த்ரங்கள் ப்ரமுஷிதங்களாகா நிற்க, (கூகூச) "த்ரைகுண்யாஸிநாவ ஹ்வ ஹ்ரூம்விஷ்ணு நாஸகூிதாத்ரயீ" (ஸ்ரீஸந்த்யாஸிஸாஷ்டாஷ்வம் விஷ்ணுநாரஸிம்ஹாத்ரேய) என்று சொல்லுகிறபடியே நாஸ்திக நிரஸநார்த்தமாக த்ரிதண்டசந்யாஸியான தத்தாத்ரேயரைப் போலே, சேஷசேஷாசநாநந்த வைநதேயாம்ஶங்களாய், யமுனைத்துறைவர், இளையாழ்வார், கோவிந்தபட்டராகவும் இவர்கள் சேர்த்திக்கு சங்கசக்ராம்ஶங்கள் முதலியாண்டான் கூரத்தாழ்வானாகவும், மற்றுமுள்ள விஷ்ணுபாரிஷதங்களும் இப்படியே வந்தவதரித்தார்கள். இது நமக்கு ப்ரியமாகையாலே கோவிந்தபட்டருக்கு முன்பு காசிவாசாபேகைஷ யிருக்கையாலே அந்த புத்தியைத்தவிர்க்கைக்காக நாமே உள்ளங்கைக்கொணர்ந்தவ்யாஜமிட்டு அழைத்துவைத்துக்கொண்ட தொழிய மற்றில்லை, ஆகையால் அவர்கள் ஸ்வேச்சாசாரிகள் என்று சொன்னேனென்று மீண்டு போனார்கள்.

பின்பு நம்பியும் இவரைக்கூட்டிக்கொண்டு, திருப்ப[illegible]யறவெழுந்தருளி, தத்க்ஷணமேவபநாதிகளையுஞ்செய்வித்து, (௩௩௫) "ஸம்ஸ்காரா: பஞ்சகர்த்தவ்யா:" (సంస్కారాః పంచకర్తవ్యాః) என்று நெடுமாலருளி[illegible]மீபத்துக்குளக்கரையிலே பஞ்சசம்ஸ்காரங்களையும் ப்ரசாதித்தருளி, (௩)திருப்பல்லாண்டு முன்னாக ஆழ்வார்களுடைய திவ்யப்ரபந்தங்களையும் ஓதுவித்து, அர்த்தபஞ்சகஜ்ஞானத்தையும்உண்டாக்கி, விசேஷித்து க்ரு[illegible]பண்ணியருளினார். இருவரும் "தேவுமற்றறியாதே ஆசார்யபதைகநி[illegible]ராய் (௩௩௬) "அஹம்ஸர்வம்கரிஷ்யாமி" (అహంసర్వంకరిష్యామి) என்றிருக்குமவரைப்போலே "ஒழிவில்காலப்படியே, அவர்திருவடிகளிலே, சிந்தையாலும் சொல்லாலும் செய்கையாலும் சர்வவிதகைங்கர்யங்களும் செய்துகொண்டிராநின்றார். இந்நாள் சேவித்திருந்து விடைகொண்டேனென்று விண்ணப்பஞ்செய்ய ; உடையவரும் அந்த ஸ்ரீவைஷ்ணவரை மிகவும் க்ருபைசெய்தருளினார்.

பெரியநம்பி ஸ்ரீபாதத்திலேஆஶ்ரயித்தமுதலிகள் ; இளையாழ்வார், மலைகுனியநின்றபெருமாள், பிள்ளைதிருக்குலமுடையார், பட்டாரியரில் சடகோபதாசர் என்று நாலுமுதலிகள். அநந்தரம் ராமாநுஜனும் பெரிய நம்பி திருமாளிகைக் கெழுந்தருளி, அவர் திருவடிகளிலே தானுந் தடக்கையுங்கூப்பி தண்டன்சமர்ப்பித்து, ஆளவந்தார் ஸ்ரீபாதத்திலே சேவியாத இழவுதீர தேவரீர் திருவடிகளிலே ஆஶ்ரயிக்கப்பெற்றேன் ; தேவரீர் திருவுள்ளத்திலுண்டான அர்த்தவிசேஷங்களை அடியேனுக்கு ப்ரசாதித்தருளவேணு மென்று விண்ணப்பஞ் செய்ய ; நம்பியும் அப்படியே செய்கிறோம் என்று, (௩௩௭) "அஹோ த்வயஸ்ய மாஹாத்ம்யம் அஹோ வீர்யம் அஹோ பலம் - மந்த்ரரத்நம் ஶுபகரம் வேதஸாரம் ஸநாதநம் - ஸர்வபாபக்ஷயகரம் ஸர்வபுண்யவிவர்தநம் - ஸ்ரீகரம் மோக்ஷவஶ்யஞ்ச ஸத்யம் ஸம்ஸாரதாரணம்" (అహోద్వయస్యమాహాత్మ్యమహోవీర్యమహోబలం - మన్త్రరత్నంశుభకరం వేదసారంసనాతనం - సర్వపాపక్షయకరం సర్వపుణ్యవివర్ధనం - శ్రీకరంమోక్షవశ్యంచ సత్యంసంసారతారణం) என்கிறபடியே பாபஹரமுமாய், புண்யவர்த்தகமுமாய், சம்ஸாரபந்தத்தை யறுக்கவற்றாக மிகவும் ஶ்லாகிக்கப்பட்டு வேதசாரதமமாய், மாங்கல்யகர மந்த்ரரத்நமாகிற த்வயார்த்தத்தை ப்ரசாதித்தருளி, இன்னமும் சில அர்த்தவிசேஷங்களுண்டு, அவற்றை ஆளவந்தார் அபிமாநாந்தர்ப்பூதரான திருக்கோட்டியூர்நம்பி ஸ்ரீபாதத்திலேசென்று கேளுமென்றருளிச்செய்ய ; ராமாநுஜனும் அங்கேற வெழுந்

தருளி, திருக்கோட்டியூர் வாஸிகளான "மாற்றிலிசோரிட்டுத் தேசவார்த்தைபடைக்கும்" அவர்களை நம்பி திருமாளிகை எங்கேயென்று கேட்டருள, அவர்களும் அப்பாலே தோன்றுகிற கூறையென்று காட்ட; அவ்விடந்தொடங்கி நம்பி திருமாளிகையளவும், தண்டனிட்டுக்கொண்டு எழுந்தருள, அப்போது அவ்வூரில் "குற்றமின்றிக்குணம்பெருக்கிக்குருக்களுக்கநுகூல" ரான சத்துக்கள் நம்பிப்ரபாவம் அறிந்தார்கள்; உடையவரும் நம்பி ஸ்ரீபாதத்திலே சென்று சாஷ்டாங்கப்ரணாமம் பண்ணி, தேவரீர் அடியேனுக்கு ரஹஸ்யார்த்த விசேஷங்களையெல்லாம் ப்ரசாதித்தருள வேணுமென்று விண்ணப்பஞ்செய்ய; அவரும் இவருடைய அத்யவசாய பாஹுள்யம் அறியவேணுமென்று "ஆருக்கென்சொல்லுகேன்" என்று முகங்கொடாமல் எழுந்தருளி யிருக்க; மீண்டு கோயிலேற வெழுந்தருளினார்.

பின்பு நம்பியும்திருநாள்சேவிக்கவெழுந்தருளி, தம்மூரே திரும்பி எழுந்தருளுகிறவளவை நம்பெருமாள் அருளப்பாடிட்டு, திருமாலை திருப்பரிவட்டம், தீர்த்த சடகோபனும் ப்ரசாதித்து நம்மிராமாநுஜனுக்கு ரஹஸ்யார்த்தவிசேஷம் உபதேசியுமென்றுஅர்ச்சகமுகேந நியமித்தருள; நம்பியும் (௩௩௮) "நாஸம்வத்ஸரவாஸிநே ப்ரப்ரூயாத்" (నాసంవత్సరవాసినే ప్రబ్రూయాత్)என்றும்,(௩௩௯)"இதந்தே நாதபஸ்காய" (ఇదన్తే నాతపస్కాయ) என்றுதொடங்கி (௩௪0) "நசாஶுஶ்ரூஷவே வாச்யம்" (నచాశుశ్రూషవే వాచ్యం) என்று தேவரீர் நியமித்தருளித்தேயென்று விண்ணப்பஞ்செய்ய, பெருமாளும் அப்படியன்று (௩௪௧) "ஶரீரம்வஸுவிஜ்ஞாநம்" (శరీరంవసువిజ్ఞానం) என்றுதொடங்கிச்சொல்லப்பட்ட சிஷ்யலக்ஷணபூர்த்தியுள்ளது உடையவருக்குச்சொல்லக்குறையில்லை என்றருளிச்செய்ய,நம்பியும்உடையவரைக்குறித்து ஊரேற வாருமென்று அருளிச்செய்து எழுந்தருளினார். பின்னை ராமாநுஜனும் திருக்கோட்டியூர்நம்பிசந்நிதிக்குச்செல்ல, அவரும் இற்றைக்குப்போய்வாருமென்ன, இவரும் கோயிலேற மீண்டெழுந்தருளினார். இப்படி பலகாலும் பதினெட்டுப்ரகார மெழுந்தருளி ஸ்ரீபாதத்தில் சேவித்து நின்றவளவிலும் நம்பியும் இவருடைய த்ருடாத்யவசாய பரீக்ஷார்த்தமாக வொன்றும் அருளிச்செய்யாம லிருக்க, ராமாநுஜனும்; பெரிய ஆர்த்தியோடே மீண்டு, இணைமலர்க்கண்ணீர் ததும்பக் கோயிலேற வெழுந்தருளியிருந்தார். அவ்வளவிலே திருக்கோட்டியூர்நம்பி சிஷ்யரான ஒரு ஸ்ரீவைஷ்ணவர்வந்து நம்பெருமாளைச்சேவித்து, மீண்டு எழு

ந்தருளுகிறவர், உடையவர் ஸ்ரீபாதத்திலே சேவித்துநிற்க, அவருடனே தம்முடைய ஆர்த்தியெல்லாந்தோன்ற "பூந்துழாய்முடியார்க்குத்தகவல்ல, பொன்னாழிக்கையார்க்குத்தகவல்ல" என்று விண்ணப்பஞ்செய்து போக விட்டருள; அந்த ஸ்ரீவைஷ்ணவரும் நம்பிதிருவடிகளிலேசென்று தண்டனிட்டு இச்செய்தியை விண்ணப்பஞ்செய்ய; நம்பியும் இத்தனை ஆர்த்தி யுண்டாவதேயென்று உகந்தருளி, தண்டும் பவித்ரமுமாக தாம் ஒருவரோ வருவதென்று அவரையே மீண்டு ராமாநுஜன்பக்கல் போகவிட்டருள, ஸ்ரீ வைஷ்ணவரும் உடையவர் திருவடியேறச்சென்று தண்டனிட்டு நம்பி யருளிச்செய்ததை விண்ணப்பஞ்செய்ய, உடையவருங் கேட்டருளி, மிக வும் உகப்போடே அவரைதண்டனிட்டு, கூரத்தாழ்வானையும் முதலியாண் டானையுங் கூட்டிக்கொண்டு, அதி த்வரையோடே திருக்கோட்டியூரே சென்று, நம்பி திருவடிகளிலே தண்டன் சமர்ப்பித்துநிற்க, நம்பியும் உடை யவரைப்பார்த்து உம்மை யொருவரையுமன்றோ வரச்சொன்னோம், இவர் களைக் கொண்டுவருவானென்னென்று கேட்டருள; உடையவரும்; தேவ ரீர் தண்டும் பவித்ரமுமாகவன்றோ வரச்சொல்லி யருளிற்று, இவர்களைத் தண்டும் பவித்ரமுமென்றே கூட்டிக்கொண்டு வந்தேனென்று விண்ணப் பஞ்செய்ய; நம்பியும் தண்டுஆர் ? பவித்ரம்ஆர் ? என்றுகேட்டருள;உடை யவரும் முதலியாண்டானைக்காட்டி இவர் த்ரிதண்டம், கூரத்தாழ்வானைக் காட்டி இவர் பவித்ரம் என்று அருளிச்செய்ய; நம்பியும்; ஆகில் இவ்வர்த் தத்தை இவர்களுக்கொழிய மற்றொருவர்க்கும் சொல்லாதே கொள்ளும் என்று நியமித்தருளி, தம் பரமக்ருபையாலே (௩௪௨) "𑌪𑍍𑌰𑌣𑌵𑌾𑌦𑍍𑌯𑌂 𑌨𑌮𑍋𑌮𑌧𑍍𑌯𑌂𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌪𑌦𑌾𑌨𑍍𑌤𑌿𑌮𑌂 - 𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌮𑌷𑍍𑌟𑌾𑌕𑍍𑌷𑌰𑌂𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌕𑌰𑌂𑌸𑌦𑌾 - 𑌮𑍁𑌮𑍁𑌕𑍍𑌷𑍂𑌣𑌾𑌂𑌸𑌦𑌾𑌜𑌪𑍍𑌯𑌂 𑌭𑍁𑌕𑍍𑌤𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌫𑌲𑌪𑍍𑌰𑌦𑌂-𑌵𑍈𑌷𑍍𑌣𑌵𑌾𑌨𑌾𑌂𑌸𑌦𑌾𑌜𑌪𑍍𑌯𑌂 𑌭𑌕𑍍𑌤𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌧𑌨𑌂" (ప్రణవాద్యంనమోమధ్యం నారాయణపదాన్తిమం - మన్త్రమష్టాక్షరంవిద్యాత్ సర్వసిద్ధికరంసదా - ముముక్షూణాంసదాజప్యంభుక్తిముక్తిఫలప్రదం - వైష్ణవానాంసదాజప్యంభక్తిజ్ఞానప్రవర్ధనం) என்கிறபடியே எட்டுத்திருவக்ஷரமாய், பதத்ரயாத்மகமாய், ஜ்ஞாநபக்திவைராக்ய ஜநக மாகையாலே முமுக்ஷுக்களான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு நாத்தழும்பெழு ஜபாநுசந்தேயமான "நலந்தரும்சொல்" என்கிற பெரிய திருமந்த்ரார்த் தத்தை ப்ரசாதித்தருளினர். ராமாநுஜனும் க்ருதார்த்தராய், அதின்மற் றைநாள் அவ்வூரில் எம்பெருமானை தெற்காழ்வான் திருவோலக்கத்தி லே அநேகம் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அப்பரம ரஹஸ்யார்த்தத்தை யரு ளிச்செய்தருளினர்.

இச்செய்தியை நம்பி கேட்டருளி, உடையவரை அழைத்து, இந்தப் பரமரஹஸ்யார்த்தத்தை வேறொருவர்க்குஞ் சொல்லாதே யென்றன்றோ நாம் உமக்குச்சொன்னோம், இத்தை மறுத்து நீர் அநேகம் ஸ்ரீவைஷ்ணவர்களுக்குச் சொன்னீரென்று கேட்டோம் என்றுகேட்டருள; உடையவரும்; உள்ளது, தேவரீர் திருவடிகளை முன்னிட்டுக்கொண்டு சொன்னேனென்று விண்ணப்பஞ்செய்ய; நம்பியும், ஒருவர்க்குஞ் சொல்லவேண்டாவென்று நியமித்தன்றோ சொன்னோம், அத்தை மறுத்துச் சொன்ன உமக்குப் பலமேதென்று கேட்டருள, உடையவரும் ஆசார்யநியமநத்தை மறுத்த எனக்குநரகமேபலமென்று அருளிச்செய்ய, இத்தையறிந்திருந்தும் சொல்லுவானேனென்று கேட்டருள; ராமாநுஜனும், அடியேன் ஒருவனன்றோ நரகம் புகுவது, தேவரீர் திருவடிகளை முன்னிட்டுக்கொண்டு சொல்லுகையாலே இவ்வாத்மகோடிகளெல்லாம் தேவரீர் திருவடி சம்பந்தத்தாலே உஜ்ஜீவிப்பர்களென்று சொன்னேனென்று விண்ணப்பஞ்செய்ய, நம்பியும் இந்தப்பரஸம்ருத்தி நமக்குக்கூடிற்றில்லையென்று, இவர் பரஸம்ருத்திக்குப்போர உகந்தருளி, எம்பெருமானாரோ? வாருமென்று எடுத்தணைத்துக்கொண்டு, அவரோ நீரென்றருளிச்செய்து, இதுவரையில், இத்தர்சநம் பரமவைதிகசித்தாந்தமென்றிருந்தது, இன்றுமுதல்எம்பெருமானார் தர்சநம்என்னுங்கோளென்று எல்லார்க்கும் அருளிச்செய்து, அந்த உகப்பின் மிகுதியாலே, வாரீர் எம்பெருமானாரோ? இன்னமொரு சரமரஹஸ்யார்த்த விசேஷஞ் சொல்லுவதாக இராநின்றோம், இவ்வளவிலே நீர் த்ருப்தராய் இராநின்றீர், உம்முடைய அத்யவசாயத்தைச் சொல்லிக் காணீரென்ன; எம்பெருமானாரும் தேவரீர் அருளிச்செய்த அர்த்தத்துக்கு மேலே ஒரு அர்த்தம் உண்டென்றிருந்தேனாகில் அவிஶ்வாஸியாவேன்; கேளாதிருந்தேனாகில் அருளிச்செய்த அர்த்தம் நெஞ்சில் பட்டதில்லையாமென்று, இப்படி விண்ணப்பஞ் செய்யும் விரகறியாமல் ஶ்ரோதவ்யஸாபேக்ஷனாய் வ்யாகூலாந்தஃகரணனாய் இராநின்றேன் என்று விண்ணப்பஞ்செய்ய, நம்பியும்; இப்போது போய் ஏகாந்தமாய் நீர் ஒருவருமே வாருமென்று அருளிச்செய்ய, இவரும் கோயிலேற எழுந்தருளினார்.

பின்பு, எம்பெருமானார் ஒருவரோ நம்பி ஸ்ரீபாதத்தேறச்சென்று தண்டன் சமர்ப்பித்துநிற்க, நம்பியும் இவர் திருக்கையைப் பிடித்துக்கொண்டு போய், ஏகாந்தமாக மேல்தளத்திலே ஏறி, படிக்கதவை விழவிட்டெழுந்தருளியிருந்து, ஒருவர்க்குஞ்சொல்லாதபடி திருவடிகளைத்தொடுவித்து, சூளறவுகொண்டு, தம்முடைய நிர்ஹேதுக க்ருபையாலே (கூசங) ஸவஹ்ம—

ஸர்வகுஹ்யதமம் பூய: ச்ருணு மே பரமம் வச: - இஷ்டோऽஸி மே த்ருடமிதி ததோ வக்ஷ்யாமி தே ஹிதம்" (సర్వగుహ్యతమం భూయః శృణు మే పరమం వచః - ఇష్టోఽసి మే దృఢమితి తతో వక్ష్యామి తే హితం) என்று கீதாசார்யன் அருளிச்செய்தாற்போலே, நம்பியும்; ஸர்வகுஹ்யதமமாய் பரமரஹஸ்யமான சரமச்லோகத்தையும் அருளிச்செய்து, அத்தால் ப்ரதிபாதிக்கப்படுகிற இதரோபாய த்யாகபூர்வகமான ஸித்தோபாயவைலக்ஷண்யத்தையும் ப்ரகாசிதத்து, இந்தப் பரமரஹஸ்யார்த்தத்தை (௫-௪௪) "இதம் தே நாதபஸ்காய நாபக்தாய கதாசந - நசாசுச்ரூஷவே வாச்யம் நசமாம் யோऽப்யஸூயதி" (ఇదం తే నాతపస్కాయ నాభక్తాయ కదాచన - నచాశుశ్రూషవే వాచ్యం నచమాం యోఽభ్యసూయతి) என்று சொல்லுகிறபடியே பகவத்விமுகர் முதலான நாஸ்திகர் செவிபடாதபடி பேணிக்கொண்டுபோருமென்று நியமித்தருள; இவரும் அடியேன் அப்படிப்பட்டபேருக்குச்சொல்லக்கடவேனல்லன், பகவத்ப்ரவணரான கூரத்தாழ்வான் ஒருவர்க்கும்சொல்லாதிருக்கவொண்ணாதே என்று விண்ணப்பஞ்செய்ய, நம்பியும்; இவ்வர்த்தங்கேட்க அதிகாரமுண்டேயாகிலும் (௫-௪௫) " ஸம்வத்ஸரம் ததர்த்தம் வா மாஸத்ரயமதாபி வா - பரீக்ஷ்ய விவிதோபாயை: க்ருபயா நிஸ்ப்ருஹோ வதேத்" (సంవత్సరం తదర్ధం వా మాసత్రయమథాపి వా - పరీక్ష్య వివిధోపాయైః కృపయా నిస్పృహో వదేత్) என்கிறபடியே பஹுப்ரகாரத்தாலும் அவருடைய அத்யவசாயத்தை யறிந்து ஒருசம்வத்ஸரம் சுச்ரூஷைகொண்டு சொல்லுமென்று நியமித்தருளினார்.

எம்பெருமானாரும்; "மாயனன்றோதிய வாக்கதனைக் கற்று; யதார்த்த ஜ்ஞாநமுடையராய், அர்ஜுநன் ஷட்கத்ரயத்தாலும் எடுப்புஞ் சாய்ப்புமாய்ப் போந்து, இவ்வர்த்தங்கேட்டு தரித்தாற்போலன்றிக்கே " மெய்ப்பெருவார்த்தை விஷ்ணுசித்தர் கேட்டிருப்பார்." என்கிறபடியே நிர்ப்பரராய், நிர்ப்பரத்வாநுசந்தாநத்தாலே வந்த ப்ரீத்யுத்ருதியால் உண்டான ராஜகுலமாஹாத்ம்யத்தோடே புறப்பட்டுக் கோயிலிலே யெழுந்தருளினார்.

அநந்தரம் கூரத்தாழ்வானும்; எம்பெருமானார் ஸ்ரீபாதத்திலே தண்டனிட்டு நிற்க, அவரைப் பார்த்தருளி, ஆளவந்தார் நம்மை விசேஷகடாக்ஷம்பண்ணி பேரருளாளரை நோக்கி ப்ரபத்திபண்ணி யருளினது ஸபலமாம்படி நம்பி நம்மை வாழ்வித்தருளினார் கண்டோமேவென் றருளிச்செய்து, உடையவரும் ஆழ்வானைக்குறித்து; உமக்கு, முட்பட ஒருசம்வத்ஸரம் சுச்ரூஷைகொண்டு "அத்யவசாயபாஹுள்யத்தை யறிந்துசொல்லென்று நியமித்தருளினரென்ன; ஆழ்வானும்; ஒருசம்வத்ஸரம் இச்சரீரத்திற்கு நிலையுண்டோ! இல்லையோவென்று வ்யாகுலாந்த:கரணராய் விசாரித்தருளி பெற்ற

லல்லது தரியாத பேராசையாலே ஸம்வத்ஸர பரிசுச்ருஷாஸமம் ஆசார்யன் திருமாளிகைவாசலிலே மாஸோபவாசம் பண்ணவென்று சாஸ்த்ரம் உண்டாகையாலே அப்படிசெய்ய, உடையவரும் இரங்கி ப்ரசாதித்தருளினார்.

முதலியாண்டானும் எம்பெருமானார் திருவடிகளிலே தண்டன் சமர்ப்பித்து, அடியேனுக்கும் இவ்வர்த்தம் ப்ரசாதித்து அருளவேணுமென்று விண்ணப்பஞ்செய்ய; உடையவரும், ஆழ்வான் ஒருவனுக்குமே நம்பி ஸ்ரீபாதத்திலே விண்ணப்பஞ் செய்துகொண்டது, நீர் நம்பி ஸ்ரீபாதத் தேறப் போய்க் கேளுமென்று அருளிச்செய்ய; முதலியாண்டானும், திருக்கோட்டியூர் ஏறவெழுந்தருளி, நம்பி ஸ்ரீபாதத்திலே தண்டன் சமர்ப்பித்துக்கொண்டு ஆறுமாசம் நின்றவிடத்திலும் அவர் முகங்கொடாமலிருக்க, பின்பு ஆண்டானும் நம்பி திருவடிகளிலே சேவித்து நிற்க; அவரும் ராமாநுஜ பரிக்ருஹீதனைப்போலே யிருந்தாய் என்ன, அடியேன் தாஸரதி யென்ன, ஆகில் என்னென்று கேட்டருள; இவரும் சரமாஹஸ்யார்த்தம் அடியேனுக்கும் ப்ரசாதித் தருளவேணுமென்று விண்ணப்பஞ்செய்ய; நம்பியும் (கசகு) "𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌮𑌦𑍋 𑌧𑌨𑌮𑌦𑌸𑍍𑌤𑍃𑌤𑍀𑌯𑍋𑌽𑌭𑌿𑌜𑌨𑌾𑌨𑍍𑌮𑌦𑌃 - 𑌏𑌤𑍇 𑌮𑌦𑌾𑌵𑌲𑌿𑌪𑍍𑌤𑌾𑌨𑌾𑌮𑍍 𑌏𑌤 𑌏𑌵 𑌸𑌤𑌾𑌂 𑌦𑌮𑌾𑌃" (విద్యామదో ధనమద స్తృతీయోభిజనాన్మదః - ఏతేమదావలిప్తానామతఏవసతాందమః) என்கிற இம்மூன்று குறும்பும்போனால், எம்பெருமானார் தாமே க்ருபைபண்ணி ப்ரசாதித்தருளுவர், அஞ்சாதே போமென்று தம் திருவடித் தாமரைகளை இவர் உத்தமாங்கத்தை பூஷிக்கும்படி ப்ரசாதித்து விடைகொடுத்தருளினார். முதலியாண்டானும், சமதமாத்யாத்மகுணங்களை மிகவுமுடையராய், கோயிலுக்கெழுந்தருளி, உடையவர் ஸ்ரீபாதத்தில் தண்டன்சமர்ப்பித்து, தம்முடைய ஆர்த்தியெல்லாந் தோன்ற, நம்பி யருளிச்செய்தபடியை விண்ணப்பஞ்செய்து சவிநயராய் நிற்க, உடையவரும் தம் சந்நிதி முதலிகளைப்பார்த்தருளி, ஆண்டான் நம்பிசந்நிதியில் ஸ்வரூபசிக்ஷை பெற்றுவந்த வேஷமிருந்தபடி பாருங்கோள் என்று அருளிச்செய்து, மிகவும் உகப்போடே ஆண்டானுக்கும் சர்வகுஹ்யதமமான சரமச்லோகார்த்தத்தை உபதேசித்தருளி, அதி சந்துஷ்டராய் இப்போதன்றோ நமக்குத் தண்டும் பவித்ரமும் கைப்புகுந்ததென்று அருளிச்செய்தருளினார்.

அநந்தரம், சிலநாள்களுக்குப் பின்பு, திருக்கோட்டியூர்நம்பி, கோயிலுக்கெழுந்தருளி, நம்பெருமாளை சேவித்து, புறப்பட்டு, திருமாலையாண்டானையும் அழைத்துக்கொண்டு எம்பெருமானார் மடமே யெழுந்தருளினவரே, உடையவரும் நம்பி ஸ்ரீபாதத்திலே சேவித்துநிற்க, அவரைக் கடா

கூதித்து, நீர் திருமாலையாண்டான் பக்கலிலே திருவாய்மொழிக்கர்த்தம்கேளு மென்று உடையவரைத்திருமாலையாண்டான் திருக்கையிலே காட்டிக்கொடுத் தருளி, தாம் மீண்டு திருக்கோட்டியூரேற வெழுந்தருளினார்.

திருமாலையாண்டானும், நம்பி யருளிச்செய்தருளினாற்போலே திரு [illegible]தொடங்கி நடவாநிற்க, ஆளவந்தார் அருளிச்செய்தபடி ஆண் டான் [illegible]றித்தொழிய, பாட்டுக்கள்தோறும் சில அர்த்த விசேஷங்களை ப்ரதிபாதித்து உடையவர் அருளிச்செய்ய ; இது ஆளவந்தார் அருளிச்செய் யக் கேட்டறியோம் என்று ஆண்டான் அருளிச்செய்தருளி ; "அறியாக் காலத்துள்" என்கிறபாட்டுக்கு, அறிவுநடையாடாத தசையிலே சம்பந்த ஜ்ஞானத்தைப் பிறப்பித்து, பிறந்த ஜ்ஞானத்தை யழிக்கக்கடவதான தேஹ சம்பந்தத்தோடே பின்னையும் வைத்தாய் என்கிற இழவாலே அருளிச்செய் கிறார் என்று திருமாலையாண்டான் அருளிச்செய்ய, உடையவரும் கேட்ட ருளி, முன்னில் பாட்டுகளும், பின்னிற் பாட்டுகளும் பெரிய ப்ரீதியோடே நடவாநிற்க, நடுவே அப்ரீதிதோன்றச்சொல்லுவது சேராதாகையாலே இங் ஙனேயாமித்தனை:— "அறியாமாமாயத்தடியேனை - அறியாக்காலத்துள்ளே- அடிமைக்கணன்புசெய்வித்து வைத்தாயால்" என்று அருளிச்செய்கிறார் எ ன்று இத்தையும் ஒரு உபகாரஸ்ம்ருதிபரமாக்கி அருளிச்செய்தவாறே, இது விஶ்வாமித்ர ஸ்ருஷ்டி, ஆளவந்தார் அருளிச்செய்யக் கேட்டறியோமென்று திருவாய்மொழிக் கருளிச்செய்கை தவிர்ந்தார். இத்தைத் திருக்கோட்டியூர் நம்பி கேட்டருளி, கோயிலிலே திருமாலையாண்டான் பக்கல் எழுந்தருளி, திருவாய்மொழி நடக்கிறதோவென்று கேட்டருள, ஆண்டானும் அடியேன் ஆளவந்தார் பக்கல் கேட்ட அர்த்தமொழிய இவர் வேறே சில அர்த்தங்களை ஸ்வகல்பிதமாகச் சொல்லுகையாலே தவிர்ந்தேன் என்ன, நம்பியும் அவர் சொன்ன அர்த்தம் ஏதென்ன, ஆண்டானும்; "அறியாக்காலத்துள்ளே" என்கிறபாட்டுக்கு உபகாரஸ்ம்ருதியாகவேணுமென்கிறார் என்ன, அவ்வர்த் தமும் ஆளவந்தார் அருளிச்செய்ய நாம் கேட்டிருந்தோமென்று நம்பி அரு ளிச்செய்து, சாந்தீபன்பக்கலிலே க்ருஷ்ணன் வேதாத்யயநம் பண்ணினாற் போலேகாணும் உம்முடைய பக்கலிலே எம்பெருமானார் திருவாய்மொழி கேட்கிறதும், ஆளவந்தார் திருவுள்ளத்திலுள்ள அர்த்தமொழிய இவர்க்கு வேறே ப்ரகாசியாதுஎன்றிரும், இவர்க்கு நீர் அஜ்ஞாதஜ்ஞாபநம் பண்ணுகி றேமென்றிராதே கொள்ளுமென்று அருளிச்செய்து, நம்பி, திருமாலையாண் டானையும் பெரிய நம்பியையுங் கூட்டிக்கொண்டு எம்பெருமானார் மடமே யெழுந்தருளினார். உடையவரும் அதிப்ரீதியுடனே தாளுந் தடக்கையுங்

கூப்பி இவர்கள் திருவடிகளிலே சேவித்துநிற்க, திருவாய்மொழிவிட்ட தறுவாய்தொடங்கி நீரே பலகாலம் அநுவர்த்தித்தேயாகிலும் ப்ரபந்தத்தைத் நலைக்கட்டுமென்று ஆண்டானுக் கருளிச்செய்தார்கள். பின்னையுந் திருவாய்மொழிதொடங்கி நடவாநிற்கச்செய்தே, மீண்டும் ஒரு அர்த்த ப்ரஸ்தாபத்திலே ஆண்டான் ப்ரதிபாதித்த அர்த்தங்கேட்டு, ஆளவந்தார் இப்படி அருளிச்செய்யார் என்று உடையவர் விண்ணப்பஞ்செய்ய, ஆண்டானும் நீர் ஆளவந்தாரைக் கண்ணாலும் காணாதிருக்க, இப்படி யருளிச்செய்யார் என்கைக்கு நிதானம் ஏதென்று கேட்டருள, உடையவரும் நான் ஆளவந்தார்க்கு ஏகலவ்யனன்றோ வென்று விண்ணப்பஞ்செய்ய, ஆண்டானும், திருக்கோட்டியூர்நம்பி நமக்குரைத்தது தோற்றிற்று, இதுவும் ஒருதிருவவதாரம், ஆளவந்தார் பக்கல் கேளாத அர்த்தமெல்லாம் இங்கே கேட்டோம் என்று இவரைத் தண்டனிட் டருளினார். பின்பு எம்பெருமானார் திருவாய்மொழி சார்த்தி போர ப்ரீதராயிருக்க, அவரையும் பார்த்து, பெரியநம்பியும் ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையர் பக்கலிலே இன்னமொரு அர்த்தவிசேஷமுண்டு, அத்தை அவர்பக்கலிலேகேளுமென்று அருளிச்செய்தருள, உடையவரும், அது லபிக்கைக்காக அன்றுமுதல் ஆறுமாஸம் அவருக்கு உகப்பாகப்பாலமுதுகாய்ச்சி சமர்ப்பித்தும், திருவத்யயந காலங்களிலே அரையர் திருமேனிக்கு அநுரூபமாக மஞ்சட்காப்பு அரைத்து சமர்ப்பித்தும் அநுவர்த்தித்துப் போருங்காலத்திலே, ஒருநாள் மஞ்சட்காப்பரைத்து நீராடப் பண்ணுகிறகாலத்திலே, அவர் திருமேனிக்கு அநுகுணமல்லாமல் இருக்கிறபடியை அவர் திருமுகமண்டல விகாரத்திலே கண்டு, மஞ்சட்பாத்ரத்தைக் கடக்கவைத்து, வேறே பாங்காக மஞ்சட்காப்பரைத்துசார்த்தி நீராடப்பண்ணியருள, திருவரங்கப் பெருமாளரையரும் அத்தைக்கண்டு, மிகவுந் திருவுள்ளமுகந்தருளி, உடையவரைக்குறித்து, என்னுடைய ஸர்வஸ்வத்தையுங் கொள்ளைகொள்ளவோ நீர் இப்படி செய்தது [illegible] செய்து, வாரீர் எம்பெருமானாரே, உமக்கொரு சரமபுருஷார்த்த[illegible] கேளீரென்று, தேவுமற்றறியாத ஸ்ரீமதுரகவிகளைப்போலே நீரும் (கூசஎ) "மாதா பிதா ப்ராதா நிவாஸஸ் ஸரணம் ஸுஹ்ருத் கதிர் நாராயண: — ஏவ மாதா பிதா ஆசார்யஸ் ஸர்வம் ஏவ ... ஆசார்ய ஏவ பரம் ..." (ఆచార్య ఏవ పరం బ్రహ్మ ఆచార్య ఏవ పరం ధనం - ఆచార్య ఏవ పరం కామో ఆచార్య ఏవ పరాయణం - ఆచార్య ఏవ పరా విద్యా ఆచార్య ఏవ పరా గతిః - యస్మాత్ తదుపదేష్టాసౌ తస్మాద్ గురుతరో గురుః) என்றுசொல்லுகிறபடியே, தீமனங்கெடுத்தும், மருவித்தொழுமனமே தந்தும்,

அறியாதனவறிவித்த, ஆசார்யனே உபாயோபேயமென்று விஶ்வஸித்து, (ந-ச-அ) "ஆசார்ய்ஸ்ய ஹரேஸ்ஸாக்ஷாதேவ நஸம்ஶய:" (ஆசார்யஸ்ய ஹரேஸ்ஸாக்ஷாதேவ நஸம்ஶய:) என்றும், "பீதகவாடைப்பிரானார் பிரமகுருவாகிவந்து" என்றும் சொல்லுகிறபடியே, உறங்கும்பெருமாள்தானேயுலாவும் பெருமாளாய்வந்தார் என்றிருமென்று பஞ்சமோபாய நிஷ்டையான சரம பதார்த்த விசேஷத்தை ப்ரசாதித்தருளினார்.

பெரியநம்பி ஸ்ரீபாதத்திலே ஆஶ்ரயித்தபோதே, ஸ்வரூபசித்தி யுண்டாயிருக்க, இவர், பலர் ஸ்ரீபாதத்திலும் உபதேசங்கேட்கைக் கடியென், அவர்கள் தாமே மேல்விழுந்து அர்த்தங்களை உபதேசிக்கைக்கடியென், என்னில், ஒருராஜா ஸ்வகுமாரார்த்தமாக பலமந்த்ரிகளிடத்தே நிதிகளைவைத்து, குமாரன் ப்ரபுத்தனானவாறே கொடுக்கச்சொல்லிப் போமாபோலே, ஆளவந்தாரும் இவர்களிடங்களிலே ஓரோ அர்த்தவிசேஷங்களை உபதேசித்து வைக்கையாலே, ஆளவந்தார் ஸ்ரீபாதத்திலே சேவித்து அவ்வர்த்தங்களைப் பெறாத இழவுதீர, இவர்கள்பக்கல் இவ்வர்த்தங்களைப் பெற்று இழவுதீர்ந்தாரித்தனை. இனி இவ்வாசார்யர்களும் ஆளவந்தார் ஆமுதல்வனென்று கடாக்ஷித்து, இளையாழ்வாருக்கு, நாம் உங்களுக்குச் சொல்லும் பரமரஹஸ்யத்தைச் சொல்லுங்கோளென்று நியமித்தருளுகையாலும், சிஷ்யனாகிலுமாம், ஆசார்யனாகிலுமாம், விலக்ஷணசம்பந்தமே வேண்டுவதென்று மேல்விழுந்து உபதேசித்தார்கள். ஆகையாலே முன்புள்ள ஆசார்யர்கள் இவர்க்கு ஆசார்யர்களாய் வீறுபெற்றார்கள். பின்புள்ளவர்கள் இவர்க்கு சிஷ்யர்களாய் ஸ்வரூபம் பெற்றார்கள். ஒரு ஹாரத்தின் நடுவே மாணிக்கங் கிடந்து, அந்த ஹாரத்தை சோபிதமாக்குமாபோலே, இடையே ராமாநுஜமுநியாய் விளங்குகின்றாரிறே.

உடையவர், கத்யத்ரயமும் நித்யதிருவாராதநப்படியும் அருளிச்செய்து, பரப்ரஹ்மம் ஸ்ரீமந்நாராயணன் என்று அறுதியிட்டு, தர்ஶநப்ரவர்த்தநம் பண்ணிக்கொண்டு போருகிறகாலத்திலே, எம்பெருமானார் ஏழகம்மாதுகரம்பண்ணி அமுதுசெய்தருளுகிற காலத்திலே, ஸ்த்தாநத்துறையை நெருக்கிக்கொண்டுபோர, அவர்களிலே ஒருவர் இவர் மாதுகரம் பண்ணுகிறவிடத்திலேவிஷமிஶ்ராந்நத்தைப் ப்ரயோகிக்கும்படி நியமித்துவைக்க, அந்த க்ருஹஸ்த்தரும், ஸ்வஸ்த்ரீயை ப்ரேரிக்க, அவளுங்கூடாதென்ன, அவனும் நிர்ப்பந்திக்க, அவளும் விஷமிஶ்ராந்நத்தை மறித்து ஸமர்ப்பித்து தண்டனிட்டுப்போக, அவரும் இதென்னென்றுதிகைத்து, பாவமறிந்து, ஸகராந்நத்தை ஸாகரகாமிநியான திருக்காவேரியிலே கரைத்துவிட்டு உபவாசிதராயிருக்க,

இச்செய்தியை திருக்கோட்டியூர்நம்பி கேட்டருளி, கோயிலுக்கெழுந்தருளா நிற்கச்செய்தே, மத்யாந்ஹகாலத்திலேதிருக்காவேரியிலே எழுந்தருளாநிற்க, உடையவரும் முதலிகளுமாக வெழுந்தருளி, நம்பி ஸ்ரீபாதத்திலே தண்டனிட்டுக்கொண்டு கிடக்க, நம்பியும், அவரை யெழுந்திருக்கச் சொல்லாமலிருக்க, கிடாம்பியாச்சானும் இதென்ன சிஷ்யாசார்ய க்ரமந்தான் ? கருமுகை மாலையை வெய்யிலிலே போகடுவார்களோ என்று பரிந்தெடுக்க, நம்பியும், உம்மைக்காணும்தேடுகிறோம்,இன்றுமுதல் இவர்தளிகைக்குப்பண்ணி, ஏகமாத்ரமாக ப்ரசாதியுமென்று நியமித்தருளி, திருமேனிக்குப் பரிவர் நீர் என்று நியமித்தருளினார். கிடாம்பியாச்சானும் அப்படியே பண்ணிக்கொண்டெழுந்தருளியிருந்தார்.

பின்பு, யஜ்ஞமூர்த்தியென்று ஒரு ப்ராஹ்மணன், கங்காஸ்நாநத்துக்குப்போய், அங்கே ஸ்நாநம்பண்ணி, அங்குள்ள வித்வான்களையுந் தர்க்கித்து ஜயித்து, அங்கே மாயாவாத சந்யாஸத்தையும் பரிக்ரஹித்து, வித்யையாலும், சிஷ்யசம்பத்தாலும் மிகுத்தவனாயிராநிற்க, அவனும் அங்கே உடையவருடைய வைபவத்தைக்கேட்டு, நாம் அங்கேறப்போய் அவருடனே தர்க்கிக்கவேணுமென்று அநேக சாஸ்த்ரங்களையும் எழுதிக்கொண்டு, க்ரந்தங்களையும் சுமை சுமையாகக் கட்டி யெடுப்பித்துக் கொண்டு, தன் வித்யாகர்வமெல்லாந்தோற்ற, பெரியமதிப்புடனே, அதித்வரையிலே கோயிலேறவந்து உடையவரைப்பார்த்து, என்னுடன் தர்க்கிக்கவேணுமென்ன, இவரும் அப்படியே செய்கிறோம் நீ தோற்றால் என்செய்கிறாயென்ன, அவனும் நான் தோற்றேனாகில் உம்முடைய பாதரக்ஷையை சுமந்து, உம்முடைய பேரையுமிட்டுக்கொண்டு, உம்முடைய சித்தாந்தத்திலே புகுரக்கடவேனென்ன, உடையவரும், நாம் தோற்றோமாகில் க்ரந்த ஸந்யாஸம்பண்ணி, தோற்றேன் என்கிறேன் இத்தனையென்ன, அவனும் சம்மதித்து, இப்படி அந்யோந்யம் ப்ரதிஜ்ஞைபண்ணிக்கொண்டு, பதினெட்டுநாள் அவதியுமிட்டு நிஸ்சயித்து, இருவரும் ஒருவர்க்கொருவர் தோலாமல் மத்தகஜங்கள் பொருமாபோலே தர்க்கிக்க, இப்படி பதினேழுநாள் ஒருவர்க்கொருவர் தோலாமல் தர்க்கித்து, அவனை ஜயிக்கப்போகாதபடியாலே, பதினேழாநாள் அவனுடைய யுக்திப்ரபலமாக, இவரும் இதுக்குமேல் ஒன்றுந் தோன்றாதபடிநிற்க, அவ்வளவிலே அவனும் தன்வெற்றிதோற்றவெழுந்திருந்து,அற்றைக்கனுப்பிப்போக, ராமாநுஜரும், வ்யாகுலாந்தஃகரணராய், மடமே எழுந்தருளி, தம் திருவாராதநமான பேரருளாளரையுந் திருவடிவிளக்கி, அமுதுசெய்யப்பண்ணி, பெருமாளுடன் வெறுத்து, பெருமாளே இத்தனைகாலம் ஆழ்வார்தொடங்கி ஆள

வந்தார் அளவாக, ஓரான்வழியாய் சுப்ரதிஷ்ட்டிதமாய் வந்த இத்தர்ஶநம் அடியேனைத்தோற்றித் தோற்கக்கடவதோ, இந்நாள் தேவரீர் ஸ்வரூபரூப குணவிபூதிகளை சத்யமென்று ப்ரமாணத்தை நடத்திக்கொண்டு போந்தீர், இப்போது இவன் ஒரு ம்ருஷாவாதியைக் கொண்டுவந்து என்னுடைய காலத்திலே எல்லா ப்ரமாணங்களையும் அழித்துப்புகட்டு லீலைகொண்டாடத் திருவுள்ளமாகில் அப்படியே செய்தருளவென்று விண்ணப்பஞ் செய்து, தாமும் அமுதுசெய்யாமல் கண்வளர்ந்தருள, பேரருளாளரும் இவர் ஸ்வப்நத்திலேயெழுந்தருளி, இளையாழ்வீர் ? நீர்மூசிப்பானேன், உமக்கு, சமர்த்தனாயிருப்பா னொரு சிஷ்யனை யுண்டாக்கித் தந்தோங்காணும், உம்முடைய பரமாசார்யரான ஆளவந்தார் அருளிச்செய்த மாயாவாத கண்டநத்தைச் சொல்லி, அவனை ஜயியும் என்றருளிச்செய்தருள, உடையவரும் வெடிவோரை திருநாமோச்சாரணம் பண்ணி எழுந்திருந்து, திருக்கண்களை விழித்து இதொரு ஸ்வப்நமிருந்தபடி யென்னென்று மிகவுந்திருவுள்ளமுகந்து, ஸ்வப்நத்தில் அருளிச்செய்த யுக்தியை திருவுள்ளத்திலேகொண்டு எழுந்தருளியிருந்து, சந்தோஷத்துடன் நித்யகர்மாநுஷ்ட்டாநஞ் செய்தருளி, தந்திருவாராதநமான பேரருளாளரையுஞ் சேவித்துப் புறப்பட்டு, ப்ரசந்நகம்பீரராய்க்கொண்டு தர்க்ககோஷ்ட்டியிலே யெழுந்தருள, அவனும், உடையவர் எழுந்தருளுகிற காம்பீர்யத்தையும் சந்தோஷத்தையுங்கண்டு, திடுக்கென்று பாவஜ்ஞாந வித்வானாகையாலே, இவர் நேற்று எழுந்தருளும்போது இங்கு நின்றும் சோம்பிக்கொண்டுபோனார், இப்போது மத்தகஜம்போலே இங்கே வாராநின்றார், ஆகையாலே இது மாநுஷமன்று, அதிமாநுஷ சேஷ்டிதமாயிராநின்றதென்று நிஶ்சயித்து, சடக்கென எழுந்திருந்து எதிரே சென்று, உடையவர் திருவடிகளிலே சேவித்து, தேவர்க்குத் தோற்றேனென்று ஸ்ரீபாதரக்ஷைகளையும் எடுத்துக்கொண்டு, அடியேனை இரங்கி யருளவேணுமென்ன, உடையவரும், இதென்னென்று திகைத்து, தர்க்கிக்கலாகாதோவென்ன, அவனும் உடையவரைக்குறித்து, தேவர்க்குப் பெரியபெருமாள் ப்ரத்யக்ஷமானபின்பு, தேவரென்ன, பெரியபெருமாளென்ன, பேதமில்லையென்று அறிந்தேன், இனி அடியேன் தேவர் சந்நிதியில் வாய்திறந்து ஒருவார்த்தை சொல்ல ப்ராப்தியில்லையென்ன, உடையவரும் உகந்தருளி, ஆகிலும், நீர் சொன்ன மாயாவாத கண்டநத்திலும், ப்ரஹ்மம் நிர்க்குணமென்கையாலே அந்த ப்ரஹ்மத்திற்கு, சத்யத்வாதி குணயோகங்களைச் சொல்லுகிற வேதவாக்யங்கள் அப்ரமாணமாய்விடும், அவித்யாதிரோஹிதமானப்ரஹ்மத்திற்கு குணயோக முண்டாகையாலே ஸகுணஶ்ருதியில் விரோதம் இல்லையென்றீ

ாகில் அதுகூடாது, எங்ஙனேயென்னில் (௩௪௯) "𑌜𑍍𑌞𑌾𑌨𑌰𑍂𑌪𑌂 𑌪𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑌨𑍍𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑍍𑌯𑌂 𑌮𑍃𑌷𑌾𑌤𑍍𑌮𑌕𑌂 - 𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌚𑍇𑌤𑍍𑌤𑌿𑌰𑌸𑍍𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌤𑍍 𑌕𑌃 𑌪𑍍𑌰𑌭𑍁𑌸𑍍𑌤𑌨𑍍𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌨𑍇" (జ్ఞానరూపంపరంబ్రహ్మ తన్నివర్త్యంమృషాత్మకం- అజ్ఞానంచేత్తిరస్కుర్యాత్ కఃప్రభుస్తన్నివర్తనే) என்கிறபடியே ஜ்ஞாநரூபமாயிருக்குள்ள பரப்ரஹ்மத்தை அஜ்ஞாநரூபமான அவித்யை மறைத்ததாகில் அந்த அவித்யைக்கு நாசமில்லையாகையாலே அது நித்யமாய்விடும், அப்படியாகிலென்னென்னில், அவித்யை என்றும், ப்ரஹ்மம் என்றும் இரண்டுவஸ்து உண்டாகையாலே, அத்வைதமென்கிற மஹாகஜம் த்வைதமாகிற ஆழங்காலிலே அமிழ்ந்தது, இத்யாத் யுக்திகளை யருளிச்செய்ய, அவனும் இசைந்து, இவர்க்குத் தோற்று, ஏகதண்டத்தை முறித் தெறிந்துவிட்டு, எம்பெருமானார் திருவடிகளிலே சாஷ்டாங்க ப்ரணாமம் பண்ணிக்கொண்டுகிடக்க, எம்பெருமானாரும், தம் திருவடிமலர்களாலே அவன்முடியை சோபிதமாக்கி, எடுத்தணைத்துக்கொண்டு மிகவும் க்ருபைசெய்தருள, அவனும் அடியேனுக்கு த்ரிதண்டகாஷாயாதிகளை ப்ரசாதித்து அருளவேணுமென்று விண்ணப்பஞ்செய்ய, உடையவரும் அப்படியே செய்கிறோமென்று திருவுள்ளம்பற்றி, முன்பு சிகாயஜ்ஞோபவீத த்யாகம்பண்ணினதாகையாலே அதற்கு ப்ராயஶ்சித்தம்பண்ணவேணுமென்று (௩௫௦) "𑌹𑍀𑌨𑍋 𑌯𑌜𑍍𑌞𑍋𑌪𑌵𑍀𑌤𑍇𑌨 𑌯𑌦𑌿 𑌸𑍍𑌯𑌾𑌦𑍍𑌧𑍍𑌯𑌾𑌨𑌭𑌿𑌕𑍍𑌷𑍁𑌕𑌃 - 𑌤𑌸𑍍𑌯 𑌕𑍍𑌰𑌿𑌯𑌾 𑌨𑌿𑌷𑍍𑌫𑌲𑌾𑌸𑍍𑌸𑍍𑌯𑍁𑌃 𑌪𑍍𑌰𑌾𑌯𑌶𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑌂 𑌵𑌿𑌧𑍀𑌯𑌤𑍇 - 𑌗𑌾𑌯𑌤𑍍𑌰𑍀𑌸𑌹𑌿𑌤𑌾𑌯𑍈𑌵 𑌪𑍍𑌰𑌾𑌜𑌾𑌪𑌤𑍍𑌯𑌾𑌨𑍍 𑌸𑌮𑌾𑌚𑌰𑍇𑌤𑍍 - 𑌪𑍁𑌨𑌸𑍍𑌸𑌂𑌸𑍍𑌕𑌾𑌰𑌮𑌾𑌹𑍃𑌤𑍍𑌯 𑌧𑌾𑌰𑍍𑌯𑌂 𑌯𑌜𑍍𑌞𑍋𑌪𑌵𑍀𑌤𑌕𑌂" (హీనోయజ్ఞోపవీతేన యదిస్యాద్ధ్యానభిక్షుకః- తస్యక్రియానిష్ఫలాస్స్యుః ప్రాయశ్చిత్తంవిధీయతే - గాయత్రీసహితాయైవ ప్రాజాపత్యాన్ సమాచరేత్ - పునస్సంస్కారమాహృత్యధార్యంయజ్ఞోపవీతకం) என்கிறபடியே சாஸ்த்ரோக்த ப்ரக்ரியையாலே ப்ராயஶ்சித்தமும் பண்ணிவைத்து, சிகாயஜ்ஞோபவீதங்களையுந் தரிப்பித்து (௩௫௧) "𑌪𑍍𑌰𑌧𑌾𑌰𑍍𑌯𑌂 𑌤𑌾𑌪𑌸𑌂𑌸𑍍𑌕𑌾𑌰𑌂 𑌵𑍈𑌷𑍍𑌣𑌵𑌂 𑌮𑍁𑌨𑌿𑌭𑌿𑌸𑍍𑌸𑍍𑌮𑍃𑌤𑌂 - 𑌸𑌰𑍍𑌵𑌾𑌶𑍍𑌰𑌮𑍇𑌷𑍁 𑌵𑌸𑌤𑌾𑌂 𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌶𑍂𑌦𑍍𑌰𑌾𑌣𑌾𑌂 𑌦𑍍𑌵𑌿𑌜𑍋𑌤𑍍𑌤𑌮" (ప్రధార్యంతాపసంస్కారం వైష్ణవంమునిభిస్స్మృతం- సర్వాశ్రమేషువసతాం స్త్రీశూద్రాణాంద్విజోత్తమ) என்கிறபடியே த்ரிதண்டகாஷாயாதிகளை நீர் உள்ளதனையுந் தரியுமென்று ப்ரசாதித்தருள, அந்த உகப்பின் மிகுதியாலே, பேருளாளர் தமக்கு ஸ்வப்நமுகேந அருளிச்செய்தருளின உபகாரத்திற்கு இவர் தமக்கு ஜ்ஞாநபுத்ரராகையாலே அருளாளப்பெருமாளெம்பெருமானார் என்று திருநாமஞ்சார்த்தி யருளினார்.

அநந்தரம், அவரையும் அழைத்துக்கொண்டுபோய், நம்பெருமாளை யுஞ் சேவிக்கப்பண்ணி, தீர்த்தப்ரசாதமும், ஸ்ரீசடகோபனும் ப்ரசாதிப்பித்து, புறப்பட்டு மடமேபோய், தம்திருவாராதநமான பேரருளாளரை சேவிக்கப்பண்ணிவைத்து, இவர்காணும் உம்மை நம்பக்கல் சேர்த்தருளினவரென்று அருளிச்செய்து, அவரை திருவாராதநம்பண்ணி அமுதுசெய்வித்து, தாமும் அமுதுசெய்து, இவர்க்குத் தளிகை ப்ரசாதமும் ப்ரசாதித்தருள, அவரும் அமுதுசெய்து, ஸஹ்ருதயராய் வாழ்ந்துகொண் டிருக்குங்காலத்திலே, உடையவர் இவரைப்பார்த்து, வாரீர், அருளாளப்பெருமாளெம்பெருமானாரே, ஆழ்வார்கள் அருளிச்செய்த திவ்ய ப்ரபந்தங்களை ஓதீரென்று அருளிச்செய்து, திருப்பல்லாண்டு தொடங்கி நாலாயிரமும் ஓதுவித்து, வேண்டும் தத்வசிக்ஷைகளையும் ப்ரசாதித்தருளினார்.

அநந்தரம், உடையவர், ஆழ்வான் ஆண்டான் அருளாளப்பெருமாளெம்பெருமானாரையுங் க்ருபை பண்ணிக்கொண்டு, வித்வத்கோஷ்டியாக நடக்குங்காலத்திலே ஆசார்யர்களெல்லாரும் வந்து உடையவர் திருவடிகளிலேஆஶ்ரயிக்க, இத்தைக்கேட்டுஅநந்தாழ்வானும், எச்சானும், தொண்டனூர் நம்பியும், மருதூர்நம்பியும், உடையவர் திருவடிகளிலே ஆஶ்ரயிக்க வேணுமென்று எழுந்தருளினார்கள், அவர்களை, அருளாளப்பெருமாளெம்பெருமானார் ஸ்ரீபாதத்திலே ஆஶ்ரயிப்பித்தருளினார். அவரும் பீதராய், அவர்களைக்குறித்து, உடையவர் குருவியின்கழுத்திலேபனங்காயைக்கட்டினாற்போலே செய்தார். நீங்கள் எம்பெருமானார் திருவடிகளே தஞ்சமென்றிருங்கோளென்று அருளிச்செய்தருளினார்.

பின்பு, அமர்சுவையாயிரமான திருவாய்மொழிக்கு அர்த்தமருளிச்செய்துகொண்டு திவ்யகோஷ்டியாக எழுந்தருளி யிருக்கிறவளவிலே, "ஒழிவில்காலமெல்லாமுடனாய்மன்னி" என்கிற திருவாய்மொழிநடவாநிற்க "சிந்துபூமகிழுந்திருவேங்கடம்" என்கிறவிடத்திற்கு அர்த்த மருளிச்செய்கிறவர், முதலிகளை முகம்பார்த்தருளி, புஷ்பமண்டபமான பெரிய திருமலையிலே, திருவேங்கடமுடையானுக்கு உகப்பாகத்திருநந்தவநஞ்செய்து, திருமாலைசாத்துவார் உண்டோவென் றருளிச்செய்தருள, அவ்வளவிலே அநந்தாழ்வான் எழுந்திருந்து, அடியேன் விடைகொள்ளுகிறேனென்று விண்ணப்பஞ்செய்து தண்டன் சமர்ப்பித்து, திருமலைக்கெழுந்தருளி, திருவேங்கடமுடையானையுந் திருவடிதொழுது, திருநந்தவநஞ்செய்து, அத்திருநந்தவநத்திற்கு ராமாநுஜனென்று திருநாமம் சார்த்தி, திருமாலைகட்டி திருவேங்கடமுடையானுக்கு சமர்ப்பித்துக்கொண்டு எழுந்தருளி யிருக்கிறப

டியை, உடையவருங்கேட்டு உகந்தருளி, திருவாய்மொழிப்ரபந்தார்த்தத்தை தீவ்ரமாகச்சாத்தியருளினார். பின்பு, உடையவரும்நம்பெருமாளைச்சேவித்து, அடியேன் பேரருளாளரையும், திருவேங்கட முடையானையுந் திருவடிதொழுதுமீண்டுவிடைகொள்ளுகிறேனென்று விண்ணப்பஞ்செய்ய; போய், சடுக வருவதென்று திருவுள்ளமாயருள; உடையவரும், முதலிகளுடன் புறப்பட்டு, திருக்கோவலூராழ்வார்கள் ஸந்நிதிகளையுஞ்சேவித்து, பெருமாள்கோயிலேற வெழுந்தருளி, திருக்கச்சிநம்பி மடமேசென்று, (௱௨) "ஸ்ரீமத்காஞ்சீமுநிம் வந்தே கமலாபதிநந்தநம்-வரதாங்க்ரிஸதாஸங்க ரஸாயநபராயணம்" (శ్రీమత్కాంచీమునిం వన్దే కమలాపతినన్దనం-వరదాంఘ్రిసదాసఙ్గ రసాయనపరాయణం) என்று விண்ணப்பஞ் செய்துகொண்டு, நம்பி திருவடிகளிலே தண்டனுஞ் சமர்ப்பித்துக்கொண்டு நிற்க, அவருங் க்ருபைபண்ணியருள; அவருடனேகூட வெழுந்தருளி, அவர் புருஷகாரமாக ஸ்ரீகோபுரராஜனையுஞ்சேவித்து, ஆனைகாத்த பெருமாளையுஞ் சேவித்து, புகுந்து (௱௩) "மஹாவராஹம் தேவேசம் த்ருஷ்ட்வா மோரஸாதலாத், நித்யம் யத்ர பகவாநநந்த: பந்நகேச்வர:, தீர்த்தே தஸ்மிந் மஹாபுண்யே ஸித்தஸங்கநிஷேவிதே, ஸநாத்யாதாநி தீர்த்தாநி ஸர்வாணி முநிஸத்தமா" (మహావరాహం దేవేశం దృష్ట్వా మోరసాతలాత్. నిత్యయత్రభగవాననన్తః, పన్నగేశ్వరః, తీర్థేతస్మిన్మహాపుణ్యే సిద్ధసంఘనిషేవితే, సనాహ్యాతానితీర్థాని సర్వాణిమునిసత్తమా) என்று சொல்லப்பட்ட மஹாத்ம்யத்தையுடைய திருவநந்த ஸரஸ்ஸிலேநீராடி, கேசவாதி திருநாமங்களையுஞ் சாத்தியருளி "எயிற்றிடை வையமூற்று மேனத்துருவாயிடந்த ஞானப்பிரானையும்" சேவித்து, ப்ரதக்ஷிணமாக வெழுந்தருளி ஆழ்வார்களையுஞ் சேவித்து, ஸ்ரீபலிபீடத்தையுந் தண்டனிட்டு, ஜய விஜயர்களையும் சேவித்து, ப்ரதக்ஷிணமாக வெழுந்தருளி, திருவநந்தாழ்வானையுஞ் சேவித்து, திருப்புற்றுத்திருக்கழலடியிலேயும் தண்டனிட்டு, அதற்குக்கிழக்காகத் தம்மை விசேஷ கடாக்ஷம் செய்தருளின யமுனைத் துறைவர் திருமுற்றத்திலே (௱௪) "நமோ நமோ யாமுநாய யாமுநாய நமோ நம:" (నమోనమోయామునాయయామునాయ నమోనమః) என்று அநுசந்தித்து தண்டஞ் சமர்ப்பித்து, கரியமாணிக்கத் தெம்பெருமானையுந் திருவடிதொழுது, ஸ்ரீபுண்யகோடி விமாநத்தையுஞ் சேவித்து, திருமடப்பள்ளியையுஞ் சேவித்து, பேரருளாளன் பெருந்தேவியாரையுஞ் சேவித்து, உள்ளே புகுந்து, (௱௫) "ஆகாரத்ரயஸம்பந்நாம் அரவிந்தநிவாஸிநீம் அசேஷஜகதீசித்ரீம் வந்தே வரதவல்லபாம்" (ఆకారత్రయసంపన్నా మరవిన్దనివాసినీం, అశేషజగదీ

[illegible]) என்று அநுஸந்தித்து, தீர்த்த ப்ரசாதமும் ஸ்வீகரித்து, புறப்பட்டு, ப்ரதக்ஷிணமாக வெழுந்தருளி, திருவபிஷேக திருமண்டபத்திலே திருவாழியாழ்வானையுஞ் சேவித்து, பெரிய திருவடியையுஞ் சேவித்து, செண்டலமரத்தனையாளும் சேனைநாதன் கழல்வணங்கி, எழுந்தருளி, (௯௰௩) “ஸுமேரு கிரிராஜாய ஸ்ரீஹஸ்திகிரயே நம:” ([illegible]) என்று தண்டஞ்சமர்ப்பித்து, வையாளிகையிலேயேறி, சேனாக்ரமத்திலே நம்பியை முன்னிட்டுக்கொண்டு உள்ளே புகுந்து, “உலகேத்தும் மாழியானைத் [illegible] பேரருளாளனையுஞ் சேவித்துநின்று, திருப்பல்லாண்டையும், ஸ்ரீவரதராஜாஷ்டகத்தையும் அநுசந்தித்து, “தென்னத்தியூரர்கழலிணைக் கீழ்ப்பூண்டவன்பாளனாய்” நிற்க, திருக்கச்சிநம்பியும், இவர்க்குத் தீர்த்தப்ரசாதமும், “நாயாறுசடாடியான ஸ்ரீசடகோபனையும்ப்ரசாதிப்பித்தருள, ஸ்வீகரித்து க்ருதார்த்தராய்ப்புறப்பட்டு, திருக்கச்சிநம்பியுடனே அடியேன் பெரிய திருமலைக்கு விடைகொள்ளுகிறேனென்று விண்ணப்பஞ்செய்ய, அவரும் “சென்று வணங்குமினோ சேணுயர் வேங்கடத்தை” என்றருளிச்செய்து, விடைகொடுத்தருளினார்.

உடையவரும், அதிப்ரீதியோடே திருப்பதிக் கெழுந்தருளுமளவிலே, மார்க்கமத்ய “வழிதிகைத்தலமருகின்றேன்” என்கிறபடியே, வழிதப்பித் திகைத்து நிற்க, முதலிகளும் அங்கே ஒரு ஏற்றமிறைப்பானைக்கண்டு, திருமலைக்கு வழியெங்கேயென்று கேட்டளவில், அவனும் செவ்வையான நல்வழியைக் காட்ட, உடையவரும் இதொரு அமானவன் புருஷகாரமிருந்தபடியேயென்று அவனை தண்டனிட, முதலிகளும் இப்பரமாஸ்திகத்வத்தைக்கண்டு களித்து அவர்களும் தண்டனிட, இவரும் முன்னடந்து எழுந்தருளி, திருமலையாழ்வாரையும், திருத்தாழ்வரையிலே எழுந்தருளியிருக்கிற ஸ்ரீபராங்குசபரகால ப்ரப்ருதியான ஆழ்வார் பதின்மரையும் சேவித்து, திருப்பதியிலே எழுந்தருளியிருக்க, விட்டல் தேவனையுஞ் சிஷ்யனாக்கிக்கொண்டு, திருப்பதியிலே ஸ்வஶிஷ்யர்கள் முப்பது திருநாமத்துக்குக்குடியேற்றி, இளமண்டியத்தையும் கைப்பற்றாக விடுவித்து அங்கே எழுந்தருளியிருக்க; இச்செய்தியை அநந்தாழ்வான் தொடக்கமான ஸ்ரீவைஷ்ணவர்கள் கேட்டருளி, திருமலையினின்று மிறங்கிவந்து, எம்பெருமானாரைச்சேவித்து, தேவரீர் அப்பனைச்சேவிக்க எழுந்தருளவேணுமென்று விண்ணப்பஞ்செய்ய; உடையவரும் ஆழ்வார்கள் திருமலை மிதியாமலிருக்க, நாமேறக் கடவோ

என்றும், "கோற்றேன் பாய்ந்தொழுகும்குளிர்சோலை" என்றும் சொல்லுகிற மொய்த்த சோலைகளையும், சோலைக் கலங்காரமான "செண்பகமாய் நிற்கும் திரு வுடைய செண்பகஞ்சேரும் திருமகிழ் பாடலும், சுரபுன்னை, புன்னாக முதலான, மதுஸ்ரவ, குஸும ப்ரகர்ஷத்தையுடைய திருப்பூமரங்களையும், எழிலெலுமிச்சை, செவ்வந்தி, இருவாட்சி, மல்லிகை, முல்லைதொடக்கமான கொடிமலரழகையும், " மொய்பூந்தடந்தாழ்வரையும் " என்று சொல்லுகிற செந்தீமலரும், "சேமுர்சுனைகளில், மத்தப்ரமரநாதித மநோஹாரி செந்தாமரை ஸ்ரீயையும், திருவேங்கடத் தெண்ணீர்ச்சுனைகளில், "மீனாய்ப் பிறக்கும் விதியுடையாரையும்," கோனேரி வாழுங் குருகுசாகரு நாரை முதலான பக்ஷிசங்கங்களையும், வ்ருக்ஷசாகாரூடபிககூஜித காகளீநாதங்களையும், கொண்டலதிரத் தோகைவிரித்து நடமாடுகிற மயூரகேகாரவத்தையும், வண்டினங்கள் தென்றுதெனவென்றுபண்பாடுகிற பாடலையுங்கண்டு கேட்டு ஆநந்தித்து, நிலங்கோட்டிடைக்கொண்ட ஞானப்பிரானையுஞ் சேவித்து, "அவாவறச்சூழ்ந்தான் திருவாசலிலேதண்டனிட்டு," அடியாரும்வானவரும் அரம்பையரும் கடந்தியங்கும், குலசேகரன்படி முதலான திருப்படிகளையுங் கடந்து, உள்ளே புகுந்து, அத்தாணிப்புளியையுஞ் சேவித்து, ஸ்ரீபலிபீடத்தடியிலேதண்டனிட்டு, யமுனைத்துறைவர் என்கிற திருப்பூமண்டபத்தையும் சேவித்து, ப்ரதக்ஷிணமாக வெழுந்தருளி (௩௫௮) " யநுஷ்யாஸிதேபக்ஷே த்வாதஶ்யாமருணோதயே, ஆயாந்தி ஸர்வதீர்த்தாநி ஸ்வாமிபுஷ்கரிணீஜலே" (ధనుష్యానిసితేపక్షే ద్వాదశ్యామరుణోదయే, ఆయాన్తిసర్వతీర్థాని స్వామిపుష్కరిణీజలే) என்று சொல்லப்படுகிற மஹாத்ம்யத்தை யுடைத்தான, ஸ்வாமி புஷ்கரிணியிலே தீர்த்தஸ்வீகாரமுஞ் செய்து, செண்பகத் திருவாசலுக்குள்ளே புகுந்து தண்டஞ் சமர்ப்பித்து, திருமடப்பள்ளி, யாகசாலை, திருமாமணி மண்டபத்தையுஞ் சேவித்து, சேனை முதலியாரையுஞ் சேவித்து, வேங்கடத்தரியையுந் திருவடி தொழுது, உந்நத நிலயமென்னும், ஸ்ரீதிவ்ய விமாநத்தையுங் கண்ணாலே பருகுவாரைப்போலே அநுபவித்து, உள்ளே எழுந்தருளி, " திலதமுலகுக்காய் நின்ற " தண்ணார் வேங்கட விண்ணோர் வெற்பன் " ஆன, " எண்ணம் புகுந்து தித்திக்கும்" செந்தாமரைக் கண் செங்கனிவாய் " நாற்றோளமுதையும், "செங்கமலக் கழற்படியேயும்," "சீதக்கடலென்கிற திருமொழிப்படியேயும், மணிநூபுராதி கிரீடாந்தஸர்வ திவ்யாபரண, திவ்யமால்யாம்பர, திவ்யாங்கராக சோபிதமான அவ்வடிவழகை பாதாதி கேசாந்தமாக அநுபவித்து, " அலர்மேல்மங்கையுறைமார்பா," " புகலொன்றில்லா வடியேனுன்னடிக்கீ ழமர்ந்துபுகுந்தேன்" என்று பூவார்

கழல்களைக் கிட்டி, அடிக்கீழமர்ந்து புகுந்து, க்ருதாஞ்சலிபுடராய் அநுபவித்துநிற்க; இவர்க்குத் தீர்த்தப்ரசாதமும் ப்ரசாதிக்க, ஸ்வீகரித்து, க்ருதார்த்தரா யருளி, இது பூலோக வைகுண்டமா யிருந்ததென்று ஆஶ்சர்யப்பட்டு, திருமஞ்சனகாலமும் சேவித்தருளி; அழகப்பிரானாருடைய ஸ்ரீமஹா பலி திருநாளையுஞ் சேவித்தருளி, “விண்ணோர்வெற்பனையாலே,, “நிகரி லமரர் முனிக்கணங்கள்” என்றருளிச்செய்த நித்யஸூரிகளன்றோ இங்கு வர்த்திப்பார், நாம்இங்கே வர்த்திக்கவொண்ணாதென்று அப்போதே திருமலையினின்றும்இறங்கவேணுமென்று உத்யோகிக்க, பெரியதிருமலைநம்பியும் திவ்யதேசத்திலேமூன்றுநாள் இருக்கவேணுங்காணுமென்றருளிச்செய்தருள; உடையவரும் சம்மதித்து, மூன்றுநாளும் அமுதுசெய்யாமல், “அப்பொழுதைக்கப்பொழு தென்னாரா வமுதமான அப்பனை அநுபவித்து, அதுவே தாரகமாக எழுந்தருளியிருந்து, இப்படியே மூன்றுநாள் சென்றவாறே, நம்பியுடன் அப்பன் சந்நிதிக்குச்சென்று, திருப்பல்லாண்டை யநுசந்தித்து, ஆஸேவித்து நிற்க; அப்பனும் மிகவும் உகப்புடனே இவர்க்குத் தீர்த்த ப்ரசாதமும்ப்ரசாதித்து. தம் “பூவார்கழல்களை சிரோபூஷணமாக்கி.” இவ்வுடையவரைக்குறித்து; உமக்கும் உம்முடையார்க்கும், உபயவிபூதி யைஶ்வர்யமும் தந்தோமென்று தெற்குவீட்டிலே சொன்னோமென்று, திருப்பவளச் சோதி வாய்திறந்து அருளிச்செய்தருள, உடையவரும் மஹாப்ரசாதமென்றங்கீகரித்துநிற்க, அப்பனும் விடைகொடுத்தருள, நம்பியுடன் புறப்பட்டு அப்பொழுதே யிறங்கி யருளி, திருப்பதியிலே பெரியதிருமலைநம்பி திருமாளிகை யேறச்சென்று, அங்கே அமுதுசெய்து, அவர் சந்நிதியிலே இதிஹாஸஶ்ரேஷ்டமான ஸ்ரீராமாயணத்திற்கு அர்த்தங்கேட்டுக்கொண்டு ஒரு ஸம்வத்ஸரம் எழுந்தருளியிருக்குங்காலத்திலே; ஸ்ரீகோவிந்தப் பெருமாள் திருமலைநம்பி திருமாளிகையில் சர்வவிதகைங்கர்யங்களும் பண்ணியிருக்கும்படி கண்டு, உடையவர் ப்ரீதரா யிருக்கிறவளவிலே, ஒருநாள் நம்பிக்குத் திருப்படுக்கைபடுக்க முந்துறத்தாமதிலே கண்வளர்ந்துபார்க்க, இத்தை எம்பெருமானார் ஒருநாள்கண்டருளி, இதொருபரிமாற்றமிருந்த பொல்லாங்கென்னென்று அத்தைப் பெரியதிருமலைநம்பிக்கு விண்ணப்பஞ்செய்ய; நம்பியும் அவரையழைத்து, கோவிந்தப்பெருமாளே! நீர்நமக்குப் படுத்தபடுக்கையிலேபடுத்துக்கொண்டதொன்றுகேட்டோம்; இப்படி செய்யலாமோ? இதற்குப் பலமென்னென்று கேட்டருள; ஸ்ரீகோவிந்தப்பெருமாளும், நமக்கு நரகமேபலமென்ன, நம்பியும், இப்படி அறிந்திருந்துசெய்வானேனென்ன; இவரும், தேவர் திருமேனியில் ஒன்று உறுத்தல், ஊர்தல், கடித்தல் செய்யாமல் கண்வளர்ந்தருளப்பெற்றால்அடியேனுக்குநரகமேயமையுமென்றுவிண்ணப்பஞ்செய்ய;

றிக்கை உடையவர் கேட்டருளி, இதொருப்ரதிபத்தி விசேஷமிருந்தபடி என்னென்று உகந்தருளினார். ஒருநாள் நம்பியுடைய திருநந்தவநத்தை நோக்கிக்கொண்டு உடையவர் எழுந்தருளாநிற்க, ஓரிடத்திலே கோவிந்தப் பெருமாள் ஒரு பாம்பின்வாயிலே கையிட்டு மீளவும் நீராடிக் கைங்கர்யத்திலே போர; இதுகண்டு உடையவரும், கோவிந்தப் பெருமாளே, என்செய்யாநின்றீரென்று கேட்க; அவரும் பாம்புநாக்கை நீட்டிக்கொண்டு நோவுபடும்படி கண்டு அதன் நாக்கிலே முள்ளிருக்க வாங்கினேனென்று விண்ணப்பஞ்செய்ய, உடையவரும், இவருடைய பூததயையிருந்தபடி என்றென்று உகந்தருளினார்.

அநந்தரம், எம்பெருமானாரும், ஸ்ரீராமாயணம் சாத்தினவாறே, பெரிய திருமலைநம்பி ஸ்ரீபாதத்திலே தண்டஞ் சமர்ப்பித்து, அடியேன் திருவரங்கப் பெருநகரை நோக்கி விடை கொள்ளுகிறேனென்று விண்ணப்பஞ்செய்ய, நம்பியும் இத்தனைநாள மெழுந்தருளின உமக்கு நாம் ஒன்றும் தரப்பெற்றிலோமேயென்ன; இவரும் அப்படி நந்தருளத் திருவுள்ளமுண்டாகில், இவரை "சார்ந்த விருவல்வினைகளும் சரித்துமாயப்பற்றறுத்துத் தீர்ந்துதன்பால் மனம் வைக்கத் திருத்தி" என்கிறபடியே, இவருடைய துர்வாஸநாச்சேதநத்தைப் பண்ணி, "பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்குமழுக்குடம்பு மிந்நின்ற நீர்மையினியா முறாமை," என்னும்படி பண்ணியருளி "உடன்கூடுவ தென்றுகொலோ" என்றிருந்த அடியேன் நினைவைத்தலைக்கட்டி யருளித்தே, அடியேனுக்கு இந்த ஸ்ரீகோவிந்தப் பெருமாளைத் தந்தருள வேணுமென்று விண்ணப்பஞ்செய்ய; பெரிய திருமலைநம்பியும் அவரையழைத்து, வாரீர் கோவிந்தப் பெருமாளே! எம்பெருமானை நம்மைக் கண்டாற்போலே சேவித்திருமென்று உதகதாரா பூர்வகமாகக் கொடுத்தருளினார். அவரையுங்கூட்டிக்கொண்டு, உடையவர் நம்பிக்கு தண்டஞ் சமர்ப்பித்துப் புறப்பட்டு, "வண்டுவளங்கிளரும் நீள்சோலை வண்பூங்கடிகை"யிலே சென்று, கடிகாசலமேறி, "மிக்கார் வேதவிமலர் விழுங்குமக்காரக்கனியை" யுங்கண்டு களித்துச்சேவித்து, அங்கு நின்றும் புறப்பட்டு, திருப்புட்குழியிலே எழுந்தருளி, க்ருத்ரபுஷ்கரிணியிலே தீர்த்தம் ஸ்வீகரித்து, பெரிய உடையாரையுந் திருவடிதொழுது, சண்ட ப்ரசண்டர்களையும் சரணமடைந்து, உள்ளேபுகுந்து, மரகதவல்லியாரையும், திருவநந்தாழ்வானையுஞ் சேவித்து, மற்றுஞ் சேவாக்ரமந் தப்பாமல் சேவித்து, ப்ரதக்ஷிணமாக வெழுந்தருளிப் புகுந்து, சேனை முதலியாரையுந் திருவடி தொழுது "பொன்முடியம் போரேற்றையெம்மானை நாற்றடந்தோள் தன்முடிவொன்

றில்லாத கண்டுழாய் மாலையனை'' யும் சேவித்துநின்று, (சுலோகம்) ''ஸர்வாலங்கார ஸம்ஶோபித, நவ ஸ்ரஜ ... சாதார ஶங்கசக்ர கதாதர, பாமர பரஹ்ய ஹ்ருஷீகேஶ த்ரயீ ... ஜகந்நாயகாஞ்ஜ பாஹி நமோஸ்துதே'' (సర్వాలంకార సంశోభిత, నవ స్తుజ ... చాధార శంఖచక్రగదాధర, పామరపరహ్యహృషీకేశ ప్రయాణ ... దాన వారిజగన్నాథ శ్రీజగ పాహినమోస్తుతే) என்று அநுசந்தித்திருக்க, தீர்த்த ப்ரசாதமும் ப்ரசாதிக்கஸ்வீகரித்து தண்டனிட்டுப்புறப்பட்டு, ஸ்ரீவேங்கடமுதலான அங்கிருந்துள்ள திருப்பதிகளையுஞ் சேவித்துமீண்டு, திருக்கச்சிநம்பி சந்நிதியிலே எழுந்தருளினார்.

''அவனைவிட்டகன்றுயிர் ஆற்றகில்லா'' என்னுமாப்போலே. ஸ்ரீகோவிந்தப்பெருமாள் திருமேனியில் வைவர்ண்யம் பிறந்து, முகம்முறுவின இருப்பைக்கண்டு, உடையவரும், இவருக்கு அவ்வாயில் எண்ணமறிந்து, கோவிந்தப்பெருமாளே ! நம்பியைசேவித்து வாருமென்று இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்களையுங் கூட்டி யனுப்பி, திருக்கச்சிநம்பியுடன் பேரருளாளனைச் சேவித்திருந்தார். இவரும் திருப்பதியிலே எழுந்தருளி, நம்பி திருமாளிகை வாசலிலேநிற்க, அங்குள்ளார் அவரைக்கண்டு உள்ளேசென்று பெரியதிருமலைநம்பிக்கு விண்ணப்பஞ்செய்ய; நம்பியும், திருவுள்ளங்கலங்கி, பித்தனைப் போகச் சொல்லுங்கோளென்ன ; தேவிகளும், இத்தனைதூரம் இளைத்து வந்தவரை யழைத்து, சேவையும், ஸ்ரீபாததீர்த்தமும், தளிகை ப்ரசாதமும் ப்ரசாதிக்க வேண்டாவோவென்று விண்ணப்பஞ்செய்ய ; நம்பியும், விற்றபசுவுக்குப்புல்லிடுவாருண்டோ, நைஷ்டுர்யத்தையேப்ரகாஶிப்பித்து முகங்கொடாமல் தள்ளிவிட ; கோவிந்தப்பெருமாளும், அங்கு நிராசராய், திருவாசலிலேதண்டஞ்சமர்ப்பித்து. ஸ்ரீவைஷ்ணவர்களுடனே மீண்டு உடையவரைச் சேவித்துநிற்க ; ஸ்ரீவைஷ்ணவர்கள் இந்த வ்ருத்தாந்தத்தை விண்ணப்பஞ்செய்யக் கேட்டருளி, நம்பியுடைய ஸர்வஜ்ஞதையை ஶ்லாகித்து, கோவிந்தப்பெருமாளையும் பிற்காலியாதபடி, தம்ஸௌலப்ய ஸௌஶீல்யாதி குணங்களாலே ஆழங்கால் படுத்திக்கொண்டு, திருக்கச்சிநம்பிக்கு தண்டஞ்சமர்ப்பித்து நிற்க, பெருமாளும் சோதிவாய்திறந்து, நம்வடக்குமலைக்குப் போய் வந்தீரோவென்று வினவி யருளி, தீர்த்த ப்ரசாதமும் ஸ்ரீசடகோபனும் ப்ரசாதிக்க, ஸ்வீகரித்துப்புறப்பட்டு மடமேயெழுந்தருளி, ஸ்வாமிமானுந்தாய்ப் பூதரான முதலிகளையுங் க்ருபைபண்ணி எழுந்தருளி யிருந்தார்.

ஸ்ரீகோவிந்தப் பெருமாளுக்கு, எம்பெருமானார்கோஷ்டியில் அநுபவமும், அவர் விக்ரஹாநுபவமும், அவர் சல்லாபங்களும், அவர் திருவடிகளிலே கைங்கர்யங்களுமே காலக்ஷேபமாய், நித்ராலஸ்யங்களு மின்றிக்கே, ப்ரத்யஹம் நடவாநிற்க; ஒருநாள் உடையவரும், முதலிகளும் பெரிய திருவோலக்கமாக வெழுந்தருளியிருக்க; முதலிக ளெல்லோரும் கோவிந்தப்பெருமாளுடைய ஜ்ஞாநபக்தி வைராக்யங்களையும், ஸ்வாசார்யபக்தி நிஷ்டையையும் சொல்லித் தலைதுலுக்கிக்கொண்டாட, ஸ்ரீகோவிந்தப்பெருமாள், தாமும், அது வொக்கு மொக்குமென்று அவர்களைக் காட்டில் மிகவும் தம்மைத் தாமே, ஶ்லாகித்துக்கொள்ள; உடையவரும், அதுகண்டு இவரைக் குறித்து, எல்லாரும் உம்மைஶ்லாகித்தால் நீர் நைச்யாநுசந்தாநம் பண்ண வேண்டியிருக்க, அது செய்யாதே நீர் தாமே உம்மை ஸ்துதித்துக்கொள்ளாநின்றீர், இப்படி செய்யு மதுஸ்வரூபத்திற்குச் சேருமோவென் றருளிச்செய்ய; ஸ்ரீகோவிந்தப்பெருமாள், உடையவரைப்பார்த்து, அய்யோ! முதலிகாள்? அடியேனைக் கொண்டாடில், காளஹஸ்தியில் கையுங்குடமும் கழுத்தில் இலிங்கக்கொட்டை வடமுமாய்க்கொண்டு, எளிவரவுபட்டு நின்ற வந்நிலையைக் கொண்டாடு மத்தனையன்றோ? அடியேனுக் குள்ளது; இப்படி யான பின்பு "பீதகவாடைப் பிரானார் பிரமகுருவாகிவந்து" என்கிறபடியே, தேவரீர் இவ்வாத்மாவை எடுக்கைக்காகவே ஒருதிருவவதாரம் பண்ணிச் செய்தருளின க்ருஷிபரம்பரைகளை நம்முதலிகள் எல்லாரையும் போலன்றிக்கே நித்ய சம்சாரிகளிலும் கடைகெட்டுக் கிடந்த அடியேன் காலதத்வ முள்ளதனையும் "எனக்கினியார்நிகர் நீணிலத்தே" என்றும், "இனியாவர் நிகரகல் வானத்தே" என்றும், நெஞ்சமேநல்லைநல்லை" என்றும் சொல்லுகிறபடியே அடியேனை ஶ்லாகித்துக்கொள்ள ப்ராப்தி யுண்டாகையாலே, அடியோங்களெல்லோரும் தேவரீராலே இவ்வாத்மாவுக்குண்டான நன்மைகளை ஶ்லாகித்தால் தேவரீரைக் கொண்டாடிற்று மித்தனையென்று விண்ணப்பஞ்செய்ய, எம்பெருமானாரும், ஸ்ரீ கோவிந்தப்பெருமாளை நல்லீர் நல்லீரென்று போர உகந்தருளி, உம்முடைய அழகிய நெஞ்சாலே நம்மை யணைத்துக்கொள்ளீர், நமக்கும் உண்டாம்படி என்று வாரி யணைத் தெடுத்துக்கொண்டருளினார்.

ஒருநாள் எம்பெருமானார் அடியாள் வாசலிலே, காம்ய கர்மங்களையுமிழந்து, ஸ்ரீ கோவிந்தப் பெருமாள் நிற்கக்கண்டு, ஒரு ஸ்ரீ வைஷ்ணவர் உடையவர்கோஷ்டியிலே அத்தைவெளிப்படுத்த, உடையவரும், கோவிந்தப்

பெருமாளே ; நீர் அங்கே நிற்பானேனென்ன ; இவரும், தேவரீர் தாலாட்டு மதுராலாபமாய், இசையேறி செவிக்கினிய செஞ்சொல்லாயிருக்க, தேவரீர் குணானுபவமும் முன்னடிவளையக்கட்ட, போக்கடியற்று, நின்றேனென்று விண்ணப்பஞ்செய்ய; ஸ்ரீவைஷ்ணவரும், தாலாட்டு கடந்தது உள்ளதேன்னே; உடையவரும், இவர்ப்ராவண்யம் இருந்தபடியென்னென்று உகந்தருளினார்.

பின்பு, இவர்க்கு இருளும் ஏகாந்தமும் நிஷித்தமிக்கச், த்ரிவிதகரணத்தாலும் "இராமாநுசன்மிக்க சீலமல்லால் உள்ளாதென்னெஞ்சு" என்கிறபடியே, இராமாநுசன் மெய்யில் பிறங்கியசீரும் அவர் குணானுபவமுமே காலக்ஷேபமாகச்செல்லாநிற்க; ஸ்ரீகோவிந்தப்பெருமாள் திருத்தாயார்வந்து, கோவிந்தப்பெருமாளே உம்முடையதேவிகள் பக்வமானளென்ன ! இவரும் ஆகில், நீர், அம்மா? இருட்டும், தனியுமாயிருக்கும் அவசரம்பார்த்து அவளை வரக்காட்டுமென்ன; அவரும்பலநாள் அவகாசம்பார்த்து ஒருநாளும் அவகாசம்காணாதே, உடையவர்க்கு விண்ணப்பஞ்செய்ய; உடையவரும், இவரையழைத்து, கோவிந்தப்பெருமாளே ஒருருதுகாலத்திலே நம்மாலே. நீர்போமென்று அருளிச்செய்து போகவிட்டருள; கோவிந்தப்பெருமாளும் தேவிகளுக்கு இராமுட்ட அந்தர்யாமியை அநுபவித்து தத்துணைசெய்தடிகள்களைக் கிர்த்தித்தருளிப்போகவிட; இவர்திருத்தாயார் வெடிவோரைவந்து இக்ஙனிப்படி செய்யலாமோவென்ன ; இவரும் அந்தர்யாமிப்ரகாசித்திருக்க, அழிச்சாட்டங் கூடுமோவென்றருளினர். இச்செய்தியை இவருடன் அனுஷ்கியிருந்தமுதலிகள் எம்பெருமானருடனே விண்ணப்பஞ்செய்ய, ஸ்ரீகோவிந்தப்பெருமாளும் திருவடிகளிலே சேர்ந்துநின்றவளவிலே ; எம்பெருமானாரும், இராமுட்ட என்செய்தீரென்று மந்தஸ்மிதம்செய்து கேட்டருள ; கோவிந்தப்பெருமாளும், அந்தர்யாமிப்ரகாசிக்கையாலே இதுக்கவகாசம்கண்டிலேனென்று விண்ணப்பஞ்செய்தார், உடையவரும், வாரீர் கோவிந்தப் பெருமாளே, உமக்குவிஷயாந்தர விரக்திபிறந்தனையுண்டாகில் (௧௯௦) "அநாச்ரமீ ந திஷ்டேத்" (அநாச்ரமீ ந திஷ்டேத்) என்கிற சாஸ்த்ரவசனம் நீரறியீரோவென்ன ; இவரும், அப்படியே அடியேனுக்கு சந்யாஸாச்ரமம்ப்ரசாதித்தருள வேணுமென்று விண்ணப்பஞ்செய்ய ; உடையவரும் த்ரிதண்டகாஷாயாதிகளை ப்ரசாதித்து, தம்திருநாமத்தையே ப்ரசாதித்தருள; இவரும், ஸ்ரீபாதச் சாயாபந்நனாயிருக்கு மவனுக்குப் பொறுக்கும்படி ப்ரசாதித்தருளவேணுமென்று விண்ணப்பஞ்செய்து, திருவடிகளிலே தண்டனிட்டுக்கொண்டுகிடக்க ; உடையவரும், திருநாமத்தை ப்ரத்யாஹரித்து, ஆத்யந்தக்ருஹணம்பண்ணி எம்பாரென்று திருநாமஞ்சாத்தி முடிபிடித்தெடுத்து க்ருபை செய்தருளினர்.

அநந்தரம், தேசாந்தரத்தில் நின்றும் இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் கோயிலுக்கெழுந்தருளி திருவீதியிலேநின்று, அவர்கள் சிலரைப்பார்த்து, எம்பெருமானார் மடமேதென்றுகேட்க; அவர்களும் எந்தஎம்பெருமானார் மடமென்ன ? புதுக்க எழுந்தருளின ஸ்ரீவைஷ்ணவர்கள் நெஞ்சுநைந்து, நீங்கள் இரண்டுசொல்லுவானேன், நம்தர்சநத்துக்கு இரண்டு எம்பெருமானார் உண்டோவென்ன ; அவர்களும்உண்டு, அருளாளப்பெருமாளெம்பெருமானாரும் எழுந்தருளியிருக்கிறாராகையாலே சொன்னோமென்ன; நாங்கள் அவரைஅறியோம், உடையவர்மடத்தைக்கேட்டோமென்ன; ஆனால் ராமாநுசன்மடம் இதென்று அவர்கள்காட்ட, அந்த ஸ்ரீவைஷ்ணவர்களும் உடையவர் மடமேசென்று புக்கார்கள்.

இப்ரசங்கமெல்லாத்தையும் யாத்ருச்சிகமாக அருளாளப்பெருமாளெம்பெருமானார் கேட்டுக்கொண்டிருந்து, அய்யோ, நாம், உடையவரைப் பிரிந்து ஸ்தலாந்தரத்திலே யிருக்கையாலே லோகத்தார் நம்மையெம்பெருமானாருக்கு எதிர்த்தட்டாகச்சொன்னார்கள். ஆகையாலே நாம் அநர்த்தப்பட்டோம் என்று மஹாவ்யாகுலப்பட்டு, அப்போதே தம்முடைய மடத்தையும் இடித்துப் பிடுங்கிப்போட்டுவந்து, உடையவர் திருவடிகளைக் கட்டிக்கொண்டு, அநாதிகாலம், இவ்வாத்மா தேவரீர் திருவடிகளை யகன்று அநர்த்தப்பட்டுப்போந்ததுபோதாமல், இப்போதும் அகற்றிவிடத் திருவுள்ளமாய் விட்டதோஎன்று மிகவும்சோகிக்க; உடையவரும் இதற்குக்காரண மென்னென்ன; அவரும், இங்குப்பிறந்த வ்ருத்தாந்தத்தை விண்ணப்பஞ்செய்ய உடையவரும், அச்செய்திகளை அடையக்கேட்டு, ஆனால்இனிஉமக்குநாம்செய்யஅடுப்பதென்னென்ன; அருளாளப்பெருமாளெம்பெருமானாரும், அடியேனை இன்றுதொடங்கி நிழலும் அடித்தாறும்போலே, "நின்றாளிணைக்கீழ் வாழ்ச்சியான் சேரும்வகையருளாய்" என்கிறபடியே, தேவரீர்திருவடிகளின் கீழே வைத்துக்கொண்டு நித்யகைங்கர்யங் கொண்டருள வேணுமென்று விண்ணப்பஞ்செய்ய; உடையவரும், ஆனால் இனியிங்ஙனே வாருமென்று அவரைத்தம்சந்நிதியிலே அரைக்ஷணமும்பிரியாமல் வைத்துக்கொண்டு, அகிலார்த்தங்களையும் ப்ரசாதித்தருள, அவரும் க்ருதார்த்தராய் உடையவரையொழிய வேறொருதெய்வ மறியாதவராகையாலே, சகலவேதாந்த சாரார்த்தங்களைப்பெண்ணுக்கும் பேதைக்கும்சுலபமாகக்கற்று உஜ்ஜீவிக்கலாம்படி ஜ்ஞாநசாரம் ப்ரமேயசாரம் என்கிற திவ்யப்ரபந்தங்களையு மிட்டருளி, அதிலே ஸச்சிஷ்ய னென்பானுக்கு, சதாசார்யனே பரதேவதை, அவன்திருவடிகளிலே கைங்கர்யமே பரமப்ராப்யம், அவன்றான் பகவதவதார விசேஷமென்னுமத்தை மருளிச்செய்தருளினார்.

அநந்தரம், கூரத்தாழ்வானையும், முதலியாண்டானையும், அருளாளப்பெருமாளெம்பெருமானாரையும், இன்னமுள்ள முதலிகளையுங் கூட்டிக்கொண்டு எழுந்தருளியிருந்து "இலிங்கத்திட்ட புராணத்தீரும் சமணரும் சாக்கியரும்மலிந்து வாதுசெய்வீர்களும்" என்றருளிச்செய்து ; இடங்கொள் சமயத்தை யெல்லாமெடுத்துக்களைகைக்காகவும், தத்வமஸீத்யாதி வாக்ய ஜந்யஜ்ஞாநமே மோக்ஷ சாதநமென்றிருக்கிற குத்ருஷ்டிகளையும், ஜ்ஞாநகர்ம சமுச்சயமே மோக்ஷ சாதநமென்றிருக்கிற குத்ருஷ்டிகளையும், நிரசித்து, வேதகர்மாங்கமாய், வேதநத்யாநோபாஸநாதி சப்தவாச்யமாய், பக்திரூபாபந்நமான உபாஸநாத்மக ஜ்ஞாநமே வேதாந்த ப்ரதிபாத்யமான மோக்ஷசாதந மென்கைக்காகவும், நாம் வேதாந்தம் நடத்த வேணுமென்றருளிச்செய்ய; அப்படியே செய்தருளவென்று, முதலிகள் விண்ணப்பஞ்செய்ய. உடையவரும், ஆழ்வானைப்பார்த்து, நான்சொன்ன பாஷ்யவாக்யம் உம்திருவுள்ளத்திற்கு ஒத்திருந்தாலொழிய, நீர்திருவெழுத்துச்சாத்தவேண்டாமென்றுநியமித்தருள; ஆழ்வானும் அப்படியேதிருவெழுத்துச்சாத்திவருமளவில், ஆத்மாவுக்கு சேஷத்வவிதுரமான ஜ்ஞாத்ருத்வப்ரதி பாதித்து ஒருவாக்ய மருளிச்செய்தருள ; ஜீவாத்மாவுக்கு பகவச் சேஷத்வ விதுரமான ஜ்ஞாத்ருத்வத்தோடு தேஹாத்மாபிமாநத்தோடு ஒரு வாசியில்லாமையாலேஆழ்வானும் திருவெழுத்துச்சாத்தாமலிருக்க; உடையவரும், அத்தைநிருபித்துப்பாராமல், எழுதுமென்ன, இவரும் எழுதாதிருக்க; அதுகண்டு குபிதராய், ஆகில்நீயே பாஷ்யஞ்செய்யென்று, அருளிச்செய்கைதவிர்ந்து, உதைத்து, ஆழ்வானைப்போகவிட ; ஆழ்வானை, முதலிகள், ஆசார்யர்கோபித்துவிட்டாரோ, இப்போது நீர் என்னினைத் திருக்கிறீரென்றுகேட்க. ஆழ்வானும், உடைமைஉடையவன் இட்டவழக்காயிருக்கும்; அடியேனுக்கு இதில்அந்வயமில்லையென்றருளினார். பின்பு, உடையவரும், வாக்யார்த்தத்தை நன்றாக ஆலோசித்துக்கொண்டு, ஆழ்வானையழைத்து, சோபித்ததற்கு அநுதபித்து, பகவச் சேஷத்வத்தோடே கூடின ஜ்ஞாத்ருத்வம்ப்ரதிபாதித்து வாக்யமருளிச்செய்தருள. ஆழ்வானும் அதிசீக்ரமாகத்திருவெழுத்துச்சாத்த, இப்படி ஸ்ரீபாஷ்யம், வேதாந்ததீபம், வேதாந்தசாரம், வேதார்த்தசங்க்ரஹம், கீதாபாஷ்யம், இவற்றை யருளிச்செய்து, ஆளவந்தாருடைய ப்ரதமமான இழவைத் தீர்த்தருளினார்.

உடையவரை, முதலிகளெல்லாரும் தண்டனிட்டு, தேவரீர் இதரசமய நிராகரணபூர்வகமாக தர்ஸநஸ்தாபனம்பண்ணியருளித்து ; இனி நீதில்நன்னெறிகாட்டி தேசமெங்குந்திரிந்து, திக்விஜயம்பண்ணி அங்குள்ள திவ்ய

தேசங்களையும் சேவித்து எழுந்தருளவேணுமென்று விண்ணப்பஞ்செய்ய; உடையவரும், முதலிகளுமாக நம்பெருமாள் திருமுன்பேசென்று, தண்டஞ் சமர்ப்பித்து, இச்செய்தியைவிண்ணப்பஞ்செய்ய, பெருமாளும் அப்படியே செய்யீரென்று திருவுள்ளமாக; அங்குநின்றும்புறப்பட்டருளி, சோழமண்டலத்திலே யெழுந்தருளி, திருக்குடந்தை முதலான திருப்பதிகளையுஞ் சேவித்து, அங்குண்டான இதரசித்தாந்தவித்வான்களையுந்தர்க்கித்து ஜயித்து, அங்கிருந்து, தெற்கேபுறப்பட்டு "வளரிளம்பொழில் சூழ்மாலிருஞ்சோலை" முதலான திருப்பதிகளையுஞ் சேவித்து ; பாண்டிமண்டலத்தி லுண்டான பரவாதிவித்வான்களையுஞ் ஜயித்து, திருப்புல்லாணியையுஞ்சேவித்து, சேது தர்ஶனம்பண்ணி, திருநகரியேறச்சென்று, அங்கே நம்மாழ்வாரை, கண்ணிநுண்சிறுத்தாம்பை அநுசந்தித்துசேவித்துநிற்க; ஆழ்வாரும், மிகவும்க்ருபை பண்ணியருளி, தம்தீர்த்தப்ரசாதமும், ஸ்ரீசடகோபபதத்வயமானஸ்ரீமதுரகவிகளையும்ப்ரசாதிக்க; ராமாநுசனும் (௩௬௩) " வகுளதவளமாலாவக்ஷஸம் வேதபாஹ்யப்ரவாதச்சேதநம் பூஜநீயம், விபுலகுருகநாதம் காரிஸூநும் கவீசம் சரணமுபகதோஹம் சக்ரஹஸ்தாக்ரதஸ்தம் " (వకుళధవళమాలావక్షసం వేదబాహ్య ప్రవాదచ్ఛేదనం పూజనీయం, విపులకురుకనాథం కారిసూనుం కవీశం శరణముపగతో౽హం చక్రహస్తాగ్రతస్థం) என்று அநுசந்தித்து தண்டஞ்சமர்ப்பித்துப்புறப்பட்டு, திருப்புளியாழ்வாரையும், பொலிந்துநின்றபிரானையும், திருவடிதொழுது புறப்பட்டு, மற்றுஞ் சுற்றிலுண்டான திருப்பதிகளையுஞ்சேவித்து அங்குள்ள பாஹ்யகுத்ருஷ்டிகளையும் ஜயித்துப்புறப்பட்டு, திருக்குறுங்குடிக் கெழுந்தருளி, சோலைத்திருக்குறுங்குடி நம்பியை சேவித்து, தீர்த்தப்ரசாதமும்ஸ்வீகரித்து நிற்கிறவளவிலே, நம்பியும், அர்ச்சககமுகேந, நாம், ராமக்ருஷ்ணதிருபேணசன்மம்பலபலசெய்துவந்து பிறந்து சேதனரைத்திருத்தப் பார்த்தவிடத்தில், அவர்கள்ஆசுரப்ரக்ருதிகளாய் ஒருவரும் நம்மைவந்துசேர்ந்தார்களில்லை; நீர்இத்தனைபேரையும்எங்ஙனேதிருத்தினீரென்றுகேட்டருள; உடையவரும், தேவரீர்கேட்குங் க்ரமத்திலேகேட்டால், சொல்லுமடைவிலே சொல்லுகிறோமென்ன; குறுங்குடிநம்பியும், தம்திவ்யஸிம்ஹாசனத்தினின்றுமிறங்கியருளி, ரத்னகம்பளத்திலேயிருந்து, இவர்க்கொரு ஆசனத்தையிட்டுவைக்க ; அதிலேஸ்வாசார்யரான பெரியநம்பி எழுந்தருளியிருக்கிறாராக பாவித்துக்கொண்டு, தாம்நிலத்திலேயிருந்து, குறுங்குடிநம்பி திருச்செவியிலே ( ௩௬௨ ) " ஸர்வேஷாமேவ மந்த்ராணாம் மந்த்ரரத்நம் ஸுகாவஹம், ஸக்ருத் ஸ்மரணமாத்ரேண ததாதி பரமம் பதம்,

𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌰𑌤𑍍𑌨𑌂 𑌦𑍍𑌵𑌯𑌨𑍍𑌨𑍍𑌯𑌾𑌸𑌃 𑌪𑍍𑌰𑌪𑌤𑍍𑌤𑌿𑌶𑍍𑌶𑌰𑌣𑌾𑌗𑌤𑌿𑌃, 𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌾𑌯𑍇𑌤𑌿 𑌹𑌿𑌤𑌂 𑌸𑌰𑍍𑌵𑌫𑌲𑌪𑍍𑌰𑌦𑌂 ” (సర్వేషామేవమన్త్రాణాం మన్త్రరత్నంశుభావహం, సకృత్స్మరణమాత్రేణ దదాతిపరమంపదం, మన్త్రరత్నంద్వయన్న్యాస ప్రపత్తిశ్శరణాగతిః, లక్ష్మీనారాయణాయేతి హితంసర్వఫలప్రదం) என்கிற மஹாத்ம்யத்தையுடையத்வயத்தை அநுசந்தித்தருள ; நம்பியும்போரவுகந்து, ராமாநுஜனை யுடையோமென்றநுஸந்திச் செய்ய, உடையவரும் அவர்க்குஸ்ரீவைஷ்ணவ நம்பியென்று தாஸ்யநாமம் ப்ரசாதித்தருள ; நம்பியும், இவரை ப்ரஹ்மரதமேற்றி யுபலாளித்தருளினார். உடையவரும் நம்பியை ஸேவித்துநின்று (௩௬௩) “ 𑌅𑌪𑌚𑌾𑌰𑌾𑌨𑌿𑌮𑌾𑌨𑍍 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍 𑌕𑍍𑌷𑌮𑌸𑍍𑌵 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌤𑍍𑌤𑌮 ” (అపచారానిమాన్ సర్వాన్ క్షమస్వపురుషోత్తమ) என்றுவிண்ணப்பஞ்செய்து, அங்குநின்றும் புறப்பட்டு திருவண்பரிசாரத்தையும் திருவாட்டாற்றையும் திருவடிதொழுது, திருவநந்தபுரத்திலே யெழுந்தருளி, படமுடையரவில் பள்ளிபயின்ற பத்மநாபப்பெருமாளையும் த்வாரத்ரயத்தாலே பாதாதிகேசபர்யந்தமாக சேவித்தருளி, அங்குள்ள ப்ரதிவாதி வித்வான்களையும் ஜயித்து, ஸ்ரீராமாநுஜ மடத்தையும் உண்டாக்கி, புறப்பட்டு மலையாளதேசத்திலுண்டான திருப்பதிகளையுஞ்சேவித்து அத்தேசத்தில் அன்யசித்தாந்திகளையும் ஜயித்து, மேலைசமுத்ரக் கரைவழியாக உத்தரதேசத்தி லெழுந்தருளி, உத்தரமதுரை, சாளக்ராமாதி வைகுண்டஸ்த்தானத்வாரவதி, அயோத்யை, உத்தரபதரிகாஶ்ரமம், நைமிசாரண்யம், புஷ்கரமென்று சொல்லப்பட்ட திவ்யதேசங்களையும், மற்றுமுண்டானதிருவாய்ப்பாடிஸ்ரீகோவர்த்தநாதிஸ்ரீப்ருந்தாவனம் திருப்பதிகளெல்லாத்தையும் சேவித்துக்கொண்டு, அவ்விடங்களிலுள்ள குத்ருஷ்டிவித்வான்களையும்ஜயித்து, பட்டிமண்டபத்தைக்கிட்டி, சரஸ்வதிபண்டாரத்தேற வெழுந்தருளினவளவிலே, சரஸ்வதிதானே வாசலைத்திறந்து கொண்டுவந்து எதிரே புறப்பட்டு நின்றுஉடையவரைப்பார்த்து (௩௬௪) ‘‘ 𑌤𑌸𑍍𑌯 𑌯𑌥𑌾 𑌕𑌪𑍍𑌯𑌾𑌸𑌂 𑌪𑍁𑌣𑍍𑌡𑌰𑍀𑌕𑌮𑍇𑌵𑌮𑌕𑍍𑌷𑌿𑌣𑍀 ” (తస్యయథాకప్యాసం పుణ్డరీకమేవమక్షిణీ) என்கிற ஶ்ருதிக்குப்பொருள்சொல்லிக்காணீரென்ன ; இவரும், (௩௬௫) “ 𑌕𑌪𑌿𑌸𑍍𑌤𑍍𑌵𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌃 𑌕𑌂𑌪𑌿𑌬𑌤𑌿 𑌕𑌿𑌰𑌣𑍈𑌰𑌿𑌤𑍍𑌯𑌪𑌿 𑌕𑌪𑌿𑌰𑍍𑌗𑌭𑌸𑍍𑌤𑌿𑌸𑍍𑌤𑍍𑌵𑌾𑌮𑍍𑌨𑌾𑌤𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌕𑌪𑌿𑌰𑌮𑍁𑌨𑌾 𑌸𑌂𑌯𑌦𑌿𑌤𑌾𑌤𑌤𑍍. 𑌤𑌦𑍀𑌦𑌂 𑌕𑌪𑍍𑌯𑌾𑌸𑌂 𑌦𑌿𑌵𑌸𑌕𑌰𑌤𑍇𑌜𑍋𑌵𑌿𑌕𑌸𑌿𑌤𑌂 𑌸𑍁𑌪𑌦𑍍𑌮𑌂 𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌦𑍍𑌭𑌣𑌿𑌤 𑌭𑌗𑌵𑌚𑍍𑌚𑌕𑍍𑌷𑍁𑌰𑍁𑌪𑌮𑌾 ” (కపిస్త్వాదిత్యః కంపిబతికిరణైరిత్య పికపిర్గభస్తిత్వామ్నాతస్సకపిరమునా సంయదితాతత్. తదీదంకప్యాసం దివసకరతేజోవికసితం సుపద్మంశ్రీమత్వాద్భణిత భగవచ్చక్షురుపమా) என்று, கம் என்று ஜலமாய், கிரணங்களாலே அத்தைபானம்பண்ணுகையாலே, கபிசப்தவாச்யனை ஆதித்யனாலே, அல-

க்ஷேபணேயென்று விகாசனாசகமாய், அலர்த்தப்பட்ட தாமரைப்பூப்போலே யிருக்கும் பரமபுருஷன் திருக்கண்களென்று; கப்யாஸத்திற்குப் பொருளருளிச்செய்தருள; சாஸ்வதியுங்கேட்டு சந்துஷ்டையாய், இவர் இட்டருளின ஸ்ரீபாஷ்யக்ரந்தத்தையும் சிரசாவஹித்து, தன்கையை நீட்டி உடையவர் திருக்கையைப் பிடித்துக்கொண்டு, இது ப்ரக்ஷேபமன்று அந்தமாயிருந்ததென் றங்கீகரித்து, இவர்க்கு ஸ்ரீபாஷ்யகாரரென்று திருநாமஞ்சாத்தி, ஹயக்ரீவனையும் எழுந்தருளவைத்துக்கொடுத்து, மிகவும் உபலாலிக்க; ஸ்ரீபாஷ்யகாரரும், நீ நம்மை இத்தனை ஆதரிக்கைக்கு அடியென்னென்று கேட்டருள; அவளும், முன்பு இங்குவந்த சங்கரனை இச்ச்ருதிக்கர்த்தங்கேட்டவளவில், அவனும் குரங்கு ப்ருஷ்டம்போலே யிருக்குமென்று அபஹாஸ்யமான அர்த்தஞ்சொன்னான், நீர் என்கருத்தறிந்து யதார்த்தஞ் சொல்லுகையாலே நானாதரித்தேனென்றாள். இத்தை அத்தேசத்திலுள்ள ப்ரதிபக்ஷசித்தாந்திகள் கேட்டுவந்து, உடையவருடன் தர்க்கிக்க, அவர்களெல்லாரையும் ஜயித்தபடியை அத்தேசத்தில் ராஜா கேட்டு, இதொரு ஆச்சர்யமிருந்தபடி யென்றென்றுவந்து உடையவர் ஸ்ரீபாதத்திலே யாச்ரயிக்க, அவனையுங் க்ருபை செய்து எழுந்தருளியிருக்குமளவிலே, அங்குள்ள அருஹாளுக்களான வித்வான்கள் இவரை யபிசரிக்கத்தேட, உடையவருங் கேட்டருளி, இத்தைக் காணக்கடவோமென்று திருவுள்ளம் பற்றியிருக்க; அவ்வளவிலே வித்வான்கள் பித்தேறி, தங்களைத் தாங்களே மோதிக்கொண்டு பேய்களாயோடித் திரிய; இத்தைக்கண்டு ராஜாவும், உடையவரைத் தண்டனிட்டு, தேவரீரிப்படி செய்தருளலாமோவென்று வேண்டிக்கொண்டு அவர்களையும் ஸ்வஸ்த்தராம்படி பண்ணிவைத்து, அவர்களையும் திருவடிகளிலே ஆச்ரயிப்பித்து, தன் ஸர்வபரிகரத்துடன், ஒருகாதம் சேவித்துக்கொண்டுவந்து வழிவிட்டுமீண்டு போக; உடையவரும் வாரணாசிபுரம்வழியாக வெழுந்தருளி, கங்கையைக் கிட்டி, கங்கைகங்கையென்ன வாசகத்தாலே யெழுமையுங்கூடி யீண்டிய பாவமெல்லாம் இறைப்பொழுதளவினிற் கழுவிடும் பெருமையை யுடைய கங்கையில், "திருமால் கழலிணைக்கீழேகுளித்" தென்கிறபடியே நீராடிக் காபாலிஸ்பர்ச தோஷத்தையும் கழித்து, கேசவாதித்வாதசோர்த்வபுண்ட்ரங்களையுந் தரித்துக்கொண்டு, கண்டமென்னுங் கடிநகரிலெம்பெருமானையுங் கைதொழுது சழலிணைபணிந்து புறப்பட்டு, ஸ்ரீபுருஷோத்தமத்தேற வெழுந்தருளி ஸ்ரீஜகந்நாதனையுந் திருவடி தொழுது, அங்குள்ள ப்ரச்சன்ன பௌத்த வித்வான்களையும் ஜயித்து, ராமாநுஜமடமங்கே யுண்டாக்கி, அங்கிலும்புறப்பட்டு, ஸ்ரீகூர்மத்தேறவெழுந்தருளி கூர்மநாதனையுஞ் சேவித்து,

ஸிம்ஹாத்ரியேற வெழுந்தருளி, ஸிம்ஹகிரியப்பனையுஞ்சேவித்து, அவ்விடத்தில் அன்யஸமயங்களையுந் தர்க்கித்து ஜயித்து, அங்கிருந்தும் புறப்பட்டு, அஹோபளத்தைச்சென்று, அஹோபள நரஸிம்ஹனையுஞ் சேவித்துப் புறப்பட்டு, “தெழிகுரலருவித் திருவேங்கடமலையேறி, திருவேங்கட முடையானையுஞ் சேவித்துநிற்க, அவ்வளவிலே “தாழ்சடையும் நீண்முடியும் ஒண்மழுவும் சக்கரமும் சூழரவும் பொன்னாணும் தோன்றுமால்-சூழுந் திரண்டருவிபாயுந் திருமலைமேலெந்தைக் கிரண்டுருவு மொன்றாயிசைந்து” என்றாழ்வார் அனுபவித்த ஹரிஹராகாரமொத்த திருக்கையாலே, சைவர் இத்தைக் கேட்டு எங்கள் நயினாரென்று பிணங்கிவர, உடையவரும் அவர்களுடனே உங்கள் தம்பிரானுக் கஸாதாரண சின்னமான த்ரிசூலடமருகத்தையும், எங்கள் ஸ்வாமிக் கஸாதாரண சின்னமான திருவாழிதிருச்சங் காழ்வார்களையும் பண்ணி, திருவேங்கடமுடையான் திருமுன்னே வைத்தால், அவரெத்தையெடுத்து தரித்துக்கொண் டருள்கிறாரோ, அத்தையிட்டு அவர்ஸ்வரூப நிரூபணம் பண்ணக்கடவதென்று, அவ்வாயுதங்களை அவர் ஸந்நிதியிலே வைத்து, ஆருமில்லாதபடி, கர்ப்பக்ருஹத்தை சோதித்து திருக்காப்பைச் சேர்த்துக்கொண்டு புறப்பட்டுவந்து, ப்ராதக்காலமானவாறே திருக்காப்பை நீக்கிச் சேவித்தருளினவளவிலே, “கூராழி வெண்சங்கேந்தி த்ரிசூலடமருகத்தைக் காற்கடைக்கொண் டிருக்கக்கண்டு, ஆநந்தாச்ருக்கள் பனிப்பக் கொந்தளித்துக்கொண்டு அலைத்தடித்து சைவரை யடித்தோட்டிவைத்து, “பின்னை வேங்கடத் துச்சியில்கண்டு” என்கிறபடியே வர்ஷுகவலாஹகம் போலே, அகிலர்க்கும் அகிலபாபத்தையும்போக்கி அகிலாபேக்ஷித ப்ரதானா திருவேங்கடத்தெந்தையைத் திருவடிவணங்கி, அப்போதே திருமலையிறங்கி திருத்தாழ்வரையி லாழ்வார்களையுந் திருவடிதொழுது புறப்பட்டு, பெருமாள்கோயிலுக் கெழுந்தருளி, பேரருளாளனையுஞ் சேவித்து, புறப்பட்டு ஸ்ரீபெரும்பூதூர் திருநீர்மலைமுதலான கிழக்கில் திருப்பதிகளையுஞ்சேவித்து, மதுராந்தகத்தேற வெழுந்தருளி, ஏரிகாத்தபெருமாளையுஞ் சேவித்து, தம்மை பெரியநம்பி க்ருபைபண்ணியருளின திருமகிழடியை தண்டனிட்டு, திருவயிந்திரபுரத் தெய்வநாயகனையும் திருவடிவணங்கி, தொண்டமண்டலத்திலுண்டான மாயாவித்வான்களையும் ஜயித்துப் புறப்பட்டு, வீரநாராயணபுரத்தேசென்று, நாதமுனிமன்னனையுஞ் சேவித்து, நாதமுனிகள்யோகத்திலே யெழுந்தருளியிருந்த விடத்தையும் சேவித்து, இப்படி பூப்ரதக்ஷிணம் பண்ணி, மணங்கித்திருவணையாடி, திருவரங்கம் பெரியகோயிலிலே யெழுந்தருளி, பெரியபெருமாளை, அமலனாதி பிரானிற்படியே அடியைப்பிடித்து

முடியளவாக முடிவில்லதோரெழில் நீலமேனியையும் அநுபவித்து, அநு சந்தித்துக்கொண்டு, ஜயஸ்ரீயுடனிற்க, பெருமாளும்பவளவாய்முறுவல் ப்ரகாசிக்க உமக்கொருகுறைகளு மில்லையேயென்ன ; ஸ்ரீ பாஷ்யகாரரும் "திருமா லுருவோடவன் சின்னமே பிதற்றுநிற்பதோர் திருமால்தலைக் கொண்ட நங்கட்கெங்கேவரும் தீவினையே" என்கிறபடியே அங்கும் தேவரீரையே சிந்தித்தெங்குந்திரிந்துவந்த அடியேனுக்கும் ஒரு குறையுண்டோ வென்று விண்ணப்பஞ்செய்ய, பெருமாளும் உகந்து தீர்த்தப்ரசாதமும் ப்ரசாதிப்பிக்க ஸ்வீகரித்து புறப்பட்டு மடமேயெழுந்தருளி " அணியரங்கன் திருமுற்றத் தடியார்தங்கள் இன்பமிகுபெருங்குழுவுகண் டுகந்து அவர்களை க்ருபைபண்ணிக்கொண் டெழுந்தருளியிருந்தார்.

இப்படி உடையவரும், ஊரும் நாடும் உலகமும் தம்மைப்போலே யாக்கி வாழ்ந்தருள்கிறகாலத்திலே ; இவரை ஆஸ்ரயித்தமுதலிகளில், கூரத்தாழ்வான் சகலசாஸ்த்ர வித்தமராயிராநிற்க ; ஒருக்கால் வர்ஷாகாலத்திலே மத்யாந்ஹ காலமளவாக வர்ஷம்வர்ஷிக்க, ஸங்கவகாலந்தவறி மத்யாந்ஹகாலமானவாறே, உபாதானகாலந்தவற, அஹந்யஹநிஸிஷ்டா க்ரகண்ய ஜனக்ருஹங்களிலும் உபாதானம்பண்ணிவந்தே திருமேனியாத்ரை நடவாநிற்க ; அன்றைக்குத் திருமாளிகையிலே சஞ்சிதபதார்த்தம் ஒன்றும் இல்லாமையாலே, நீராடியெழுந்தருளி, திருவடிவிளக்கி, ஒருபலத்தை யமுது செய்யப்பண்ணி, தீர்த்தஸ்வீகாரம் பண்ணியிருந்து, சாயங்காலமானவாறே தத்காலீன கர்மத்தைச்செய்து, நம்பெருமாளைச் சேவித்துவந்து, திருவாய்மொழி அனுசந்தானமேதாரகமாகப் பட்டினியே கண்வளர்ந்தருள ; அவ்வளவிலே நம்பெருமாள் பெரியஅவசரம் அமுதுசெய்தருளி, திருச்சின்னம் பரிமாற, ஆண்டாள், காஹளநாதங்கேட்டு, உம்முடைய பத்தர்பட்டினியே யிருக்க, நீரென்ன குலாவிக்குலாவி அமுதுசெய்கிறீரென்ன ; அவ்வாக்யம் பெரியபெருமாள் திருச்செவியிலுற்று, திண்ணையிலே நித்ரைபண்ணியிருந்த உத்தமநம்பிகனவிலே பெருமாள் எழுந்தருளி, ஆழ்வான் இன்றைக்கு உபவசித்திருக்கிறார். நம்பீ; நம்மக்காரவடிசில் தளிகையை உபயசத்ரசாமரசகல வாத்ய ஸஹிதமாக சிரசாவஹித்துக்கொண்டுபோய்க் கொடுமென் றருளிச் செய்ய, உத்தமநம்பியும், ஸ்வப்னந்தெளிந்து கண்களை விழித்துப்பார்த்து, த்வரித்தெழுந்திருந்து, பெருமாளருளிச்செய்தபடியே, தாமே சிரஸாதளிகையை வஹித்துக்கொண்டு, அகிலவாத்யத்துடன் ஆழ்வான்திருமாளிகை

வாசலிலேசெல்ல ! ஆழ்வானும், பதறி யெழுந்திருந்து இதென்னென்று திகைத்து எதிரேசென்றவாறே, நம்பியும், நம்பெருமாள், உமக்கு அக்கார வடிசில் தளிகையை அனுப்பியருளினர். அங்கிகரியுமென்ன ! ஆழ்வானும் தளிகையை மஹாப்ரசாதமென்று சிரஸாவஹித்துக்கொண்டு அடியேனுக்கு அடியிலே சர்வாபீஷ்டமும் தந்தருளினர். இது ப்ரயத்தளிகையா யிருக்கு மென்று தமக்கும் ஆண்டாளுக்குமாக இரண்டுதிரளை அங்கிகரித்துசேஷத்தை விட்டருளி ! ஆண்டாளைப்பார்த்து, என்னினைத்தாய் நீயென்ன ! அவ ளும், அடியேன் ஒன்றும் நினைக்கவில்லை, அவசரம் அமுதுசெய்தருளி திருச்சின்னம்பணிமாறினவாறே உன்பக்தரிப்படி பட்டினியிருக்க நீ... குலாவி யமுதுசெய்கிறிரென்ற சிந்தனையென்று விண்ணப்பஞ்செய்ய! ஆண் டாளை, இப்படி சொல்லலாமோவென்று வெறுத்து, ப்ரசாதத்தை தாமும் ஸ்வீகரித்து அவளுக்கும் ப்ரசாதித்தருளினர், பட்டரும், சீராமப்பிள்ளை யும், அவதரிக்கைக்குஹேது இப்பிண்டங்களிறே.

## ( ஸ்ரீ பட்டர் அவதாரவைபவம். )

இப்படி நம்பெருமாள் அநுக்ரஹத்தாலே ஆழ்வானுக்கு ஒரு குமாரர், வைகாசியில் அநுராதத்தில் திருவவதரித்தருளினர். திருநாமம் சாத்துகைமுதலான உஜ்ஜீவனம்சத்துக்கு உடையவர் கடவரென்று, ஆழ் வான்தமக்கதில் அந்வயமற்றிருக்க, ஸூத்யாசௌசநி வ்ருத்தியானவுடனே, எம்பெருமானர் ஆழ்வான் திருமாளிகையேற வெழுந்தருளி, எம்பாரைப் பார்த்து ஆழ்வான் குமாரனை யெடுத்துக்கொண்டு வாருமென்ன, அவரும் உள்ளே ஆண்டாள் பக்கல்சென்று, குலக்கொழுந்தான குமாரனைத்தம்மார் விலே யணைத்துக்கொண்டு, த்ருஷ்டிதோஷாதிகள் அூகாதபடி பங்கனேதிரக் குழந்தைக்கு ரக்ஷணார்த்தமாக, த்வயாநு சந்தானத்துடனே மங்களா சாசனம்பண்ணிக் கொண்டுவந்து, எம்பெருமானர் தண்டாமரைக் கண்க ளாலே குளிரக்கடாக்ஷித் தருளும்படி திருக்கைத்தலத்தே பிடித்தருள ! உடையவரும்ஹர்ஷப்ரகர்ஷத்துடன் அநந்தாஸ்ருக்கள்பனிப்பக்கடாக்ஷிக்கு மளவில், சிசுவினுடைய பசுபசுவென்கிற தேஜோவிசேஷத்தையும் திருமுக வொளியையும் கண்டு, எம்பாரே ? த்வயம் பரிமளியாநின்றது, என்செய்தீ ரென்ன ! அவரும் காப்பாக, த்வயாநுசந்தானம்பண்ணிக்கொண்டு எடுத்துக் கொண்டு விடைகொண்டேனென்ன ! உடையவரும், கர்த்தவ்யாம்சத்துக்கு முற்பட்டீரோவென்று திருமேனிபேணுதலுக்கு உகந்தருளி, உஜ்ஜீவனம்சத் துக்கும் நீரேகடவீரென்று நியமித்தருளி, பசுங்குழந்தைக்குப் பஞ்சாயுதத்

திருவாபரணமும் திருக்கையாலே சாத்தியருளி, நாமகரணத்திலே எம்பார் திருக்கையாலே திருவிலச்சினையும் சாத்துவித்து ஸ்ரீபராசரபகவான் திருநாமமாக ஸ்ரீ பராசரபட்டரென்று திருநாமத்தையும் சாத்தியருளி, ஆளவந்தாருடைய இரண்டாமிழவையுந் தீர்த்தருளினார். (௯௬௬) "ஸுதோ ஸம்புரா தநேந வாராஸரி கூரகுலப்ரதீப:, கோவிந்த ஸிஷ்யஸ்து ஸ யாமுநார்ய மநோரதம் பூரிதவாந் த்விதீயம்" (పుత్రః కృత్వాంకుర స్తేనపరాశరః కూరకులప్రదీపః, గోవిన్దశిష్యస్సతు యామునార్యమనోరథం పూరితవాన్ ద్వితీయం) என்று லக்ஷ்மீகாவ்யத்திலே இவ்வர்த்தம் உத்தமநம்பியாலும் சொல்லப்பட்டதிறே.

அநந்தரம், எம்பார் திருத்தம்பியார் சிறிய கோவிந்தப்பெருமாளுக்கு ஒரு குமாரர் அவதரித்தருள, அத்தைக் கேட்டுஉகந்து, உடையவர், ஆளவந்தார் க்ருஷிபலிக்கப்பெற்றோமேயென்று, அவர் திருமாளிகையேற வெழுந்தருளி, அக்குமாரனையும் க்ருபையாலே கடாக்ஷித்தருளி, அக்குமாரருக்கு ஸ்ரீபராங்குச நம்பியென்று நம்மாழ்வார் திருநாமம்சாத்தியருளி, பரமாசார்யருடைய த்ருதியமான இழவையும் தீர்த்தருளினார். (௯௬௭) "கோவிந்தராஜாந்வய ஸோமஸிந்தோ: பராங்குஸோ யாமுநவைமநஸ்யம், அபாசகாரப்ரஸபம் த்விதீயம் விராஜதே புத்ரமணிப்ரதீப:" (గోవిన్దరాజాన్వయ సోమసిన్ధోః పరాఙ్కుశో యామునవైమనస్యం, అపాచకారప్రసభం ద్వితీయం విరాజతే పుత్రమణిప్రదీపః) என்றிதுவும் லக்ஷ்மீகாவ்யத்தில் சொல்லப்பட்டது. பின்பு பட்டரைப் பெருமாள், மந்த்ரசக்தீர்குடிப்பித்து, புத்ரஸ்வீகாரம் பண்ணியருளி, திருமணத் தூணருகே தொட்டிலிட்டு, நாச்சியார் சீராட்டிவளர்க்க, வளர்ந்தருள்கிறவர், பெருமாள் அமுதுசெய்வதற்கு முன்னே தவழ்ந்து சென்று, படைத்திருந்த தளிகையிலள்ளி அமுதுசெய்யும்படியாயிறே வளர்ந்தருளினது.

பட்டர் ஐந்து திருநக்ஷத்ரத்திலே, "நெடுமாற்கடிமை" அநுஸந்திக்கிற ஆழ்வானை, அய்யா, ஆழ்வார் சிறுமாமனிசரென்று சிறுமை பெருமையாகிற பரஸ்பர விருத்த தர்மத்வயமும்ஒருவஸ்துவில் கிடக்குமோ ? இரண்டையும் அருளிச்செய்வானென்னென்று கேட்க; ஆழ்வானும், நல்லீர்;கேட்டபடி யழகிது, நீர் அநுபநீதராகையாலே உமக்கிப்போது சாஸ்த்ரங்கொண்டு இசைவிக்க வொண்ணாதே, ப்ரத்யக்ஷத்திலே உமக்குக் காட்டுகிறோம் கேளீர், திருமேனி சிறுத்துஜ்ஞாநம் பெருத்திருக்கிற சிறியாச்சான் அருளாளப்பெருமா ளெம்பெருமானார்போல்வாரைக் காணும்சிறுமாமனிசர் என்கிறதென்று இசைவித்தருளிச்செய்தார்.

பட்டர் ஐந்து திருநக்ஷத்ரத்திலே, திருவீதியிலே புழுதியளைந்து விளையாடாநிற்க, ஒருவன் சர்வஜ்ஞபட்டன் வந்தானென்று அதிசம்ப்ரமத்துடன் காளமூதிவர ; இவரும், உடையவரும், ஆழ்வானும், ஆண்டானும், அருளாளப் பெருமாளெம்பெருமானாரும், எம்பார்முதலான பெரியோர்களிருக்குமிடத்திலே, இவனாரடா! சர்வஜ்ஞபட்டனென்று விருதூதி வருகிறானென்று, இரண்டுதிருக்கையிலும்கிடந்த புழுதியை அள்ளிக்கொண்டு, அவனைப் பார்த்து, நீ சர்வஜ்ஞனன்றோ ; இதெத்தனையென்று சொல்லென்ன. அவன், அதுக்கொன்றும் சொல்லமாட்டாதே லஜ்ஜித்து வாயடைத்துக்கவிழ்தலையிட்டு நிற்க ; பட்டர் அவனைப்பார்த்து, கெடுவாய், இதொருபிடிப்புழுதியென்றுசொல்லி சர்வஜ்ஞனென்று விருதூதித் திரியமாட்டாமல், அஜ்ஞனாய் விட்டாயே, இனி உன்னுடைய சர்வஜ்ஞனென்கிற விருதையும், சப்ரமத்தையும் புகடென்று,காளத்தையும் பறியுங்கோளென்கிற மழலைச்சொல்லை அவன்கேட்டு,இவர் ஆருடையபுத்ரரென்ன, ஆழ்வான் குமாரரென்று அங்குள்ளார்சொல்லக்கேட்டு,அவனும், பறப்பதன்குட்டி தவழுமோவென்று ஆச்சர்யப்பட்டு,பட்டரைத்தன்தண்டிகையிலே வைத்துக்கொண்டு ஆழ்வான் திருமாளிகை வாசலிலே சென்றவாறே ! பொன்னாச்சியார்கண்டு, இவர்செய்த சிறுச் சேவகத்தைக் கேட்டு, வாரியெடுத்துக்கொண்டு, த்வயாநுசந்தானத்தாலே ரக்ஷையிட்டு, தம்பரமல்லன வாண்மைகளைத் தனியேநின்று தான் செய்வரோ, எம்பெருமான் உன்னைப்பெற்ற வயிறுடையேன் இனியான் என்னசெய்வேன் என்று முன்றானையாலே யிவரைமுட்டாக்கிட்டு, உள்ளே கொண்டுபுகுந்து, கண்ணெச்சிலாக இவரைத்திருவீதியில் போகவிடுவார்களோவென்று வெறுத்து, ஆண்டாள் திருக்கையிலேகொடுத்து, ஸ்ரீபாத தீர்த்தத்தைத்தெளித்து, இவ்விபூதியில் இவர்நெடுநாள் தங்குமவரோஎன்று வயிறுபிடித்தருளினார்.

பட்டரும் உபநீதரானபின்பு, வேதாத்யயநம் பண்ணுவிக்க, இவர் மேதையிருக்கும்படி ஒருசந்தையிட்டுவர, அதன்மற்றைநாள் ஓதுகிறகடைக்கெழுந்தருளி மறித்துச்சந்தையிடப்புக்கவாறே, ஓதுகிறகடையில் நின்றும் போந்து, விளையாடிக்கொண்டு எழுந்தருளியிருக்க ; எல்லாரும் ஓதாநிற்க இவர்புறப்பட்டு வந்தாரென்று, ஆழ்வானும் ஆண்டாளுங்கேட்டு, அப்பரோ? எல்லாருமோதாநிற்க நீர் ஓதாமல் வருவானேனென்ன ; இவரும், அவர்கள் ஓதினவிடத்தையே ஓதாநின்றார்களென்ன ; ஆகில் நீர்நேற்றுசந்தையிட்ட ப்ரச்நத்தைச்சொல்லிக் காணீரென்ன, மறித்துச்சந்தையிட்டபடியே உச்சரித்துக்காட்டியருள ; ஆழ்வானும் ஆண்டாளும் பயப்பட்டு, இன்னம்

சிறிதுநாள் இவரை ஓதவிடவொண்ணாதென்று, தங்களிலே சங்கித்திருந்தார்கள். ஆழ்வானும் எம்பாரும், பட்டருக்கு ஆர்த்தசிக்ஷைகளுமெல்லாம் பண்ணிவைத்தார்கள்.

பெருமாள், ஒருக்கால் திருத்திரையை வளைத்துக்கொண்டு ஏகாந்தமாகவெழுந்தருளி யிருக்க, பட்டர்திருவடிதொழப்புக, பெருமாள் முனிந்து புறப்படவிட்டத் திருவுள்ளமாக ; அவ்வளவிலே, அவனை யழையுங்கோளென்று நம்பட்டருக்கு அருளப்பாடென்ன : உள்ளேபுகுந்து தண்டனிட்டுநின்றவளவிலே ; பெருமாளும், புறப்படவிட்டபோது என்னினைந்திருந்தாயென்ன, பெருமாளும் நாச்சிமார்களுமாக நினைத்திருந்தேனென்ன! முன்பு நம்மைநினைத்திருந்தபடி யெங்ஙனேயென்ன ; ஆழ்வானும் ஆண்டாளுமாக நினைத்திருப்பேனென்று விண்ணப்பஞ்செய்ய ; பெருமாளும், நம்மை, நம்மானை, முன்புபோலே நினைத்திரு மென்று திருவுள்ளமா யருளினார்.

ஆழ்வானும், பட்டருடைய விவாஹோசிதவய: பரிணாமங்கண்டு, உடையவருடனே, பிள்ளைக்கு விவாஹம் பண்ணிவைக்கும்படி யெங்ஙனே, நம் உறவுமுறையார் ப்ராக்ருதராயிராநின்றார்களென்று விண்ணப்பஞ்செய்ய; உடையவரும், பெரியநம்பி திருமேனிசம்பந்தத்திலே ஸ்ரீவைஷ்ணவ சந்தாநிகரிடத்திலே பட்டருக்குப் பெண்கொணர்ந்தால், இது ஸ்வசூத்ரசாகைகளுக்கும் ப்ராஹ்மண்யவைஷ்ணவத்திற்கும் பெரியசரணமென்று தட்டாகாதிறேயென்ன ; ஆழ்வானும் சம்மதித்து, ஆண்டாளுடன் ஆலோசித்து, உடையவரைமுன்னிட்டு அவர்களிடத்தே பெண்கேட்க ; ஸ்ரீவைஷ்ணவர்களும், பட்டருடைய ஆபிஜாத்யங்கண்டு கொடுக்கத்தேட, புதுசம்பந்தமென்று ஒருக்கால்இசையாதிருக்க; ஆண்டாள், ஒருநாள்ஆழ்வானைப்பார்த்து, பிள்ளைகள் பெருத்தார்கள், ஒருகார்யஞ்செய்விக்க வேண்டாவோவென்ன; ஆழ்வானும் ஈஶ்வரகுடும்பத்துக்கு என்னையிருந்து கரையச் சொல்லுகிறாயோவென் றருளிச்செய்தருளி, பெரியபெருமாளைத் திருவடிதொழுது, மடங்குகிறபோது, பிள்ளைகள் பெருத்தார்கள்; ஒருகார்யஞ்செய்யவேண்டாவோவென்று சொல்லுகிறார்களென்று விண்ணப்பஞ்செய்ய ; பெருமாளும், திருவுள்ளம்பற்றினீரோ; அதற்குக்கடவீர்நாமன்றோ; தகுதியாகச்செய்விக்கிறோம்; நீர்போமென்று திருவுள்ளமாயருளி, அவர்களுக்குக் கொடுக்கும்படி ஸ்வப்நங் காட்டியருள ; மற்றைநாள் தாங்களே கொடுக்கிறோமென்று வந்து சொல்லி, அக்கைச்சியையு மன்னியையும் பட்டருக்கு தாரவார்த்துக் கொடுத்துப் பெருபெருத்த கல்யாணஞ்செய்தருளினார்கள்.

( ஸ்ரீ இளையாழ்வார்வைபவம். )

உடையவர் சந்யஸித்தருளுகிறபோது, சரீரசம்பந்தத்தை விட்டு விடவேண்டுகிறதோவென்ன; நம்முதலியாண்டானையொழிய சந்யஸித்தோமென்றருளிச்செய்ய; இப்படி யருளிச்செய்யலாமோவென்று ஸ்ரீபாதத்தில் முதலிகள் கேட்க; இவரும், கையில்த்ரிதண்டத்தை விடிலன்றோ நம்முதலியாண்டானை விடுவதென்றருளினார். முதலியாண்டான் திருவாய்மொழி ஓதினபடி எம்பெருமானார் திருப்பள்ளிக்கட்டிலிலே ஏறியருளி, ஒருபாட்டு சந்தையிட்டவாறே, பரவசராய் அருளினார். இத்தைக்கண்டு எம்பெருமானாரும் (கூஅ) 'வேதவேத்யே பரே பும்ஸி ஜாதே தசரதாத்மஜே, வேத: ப்ராசேதஸாதாஸீத் ஸாக்ஷாத் ராமாயணாத்மநா" (వేదవేద్యే పరే పుంసి జాతే దశరథాత్మజే వేదః ప్రాచేతసాదాసీత్ సాక్షాద్రామాయణాత్మనా) என்னுமா போலேவே தங்களும் ஆழ்வார்முகேந திருவாய்மொழியாய் வந்தவதரித்ததொன்றன்றோ வென்றருளினார்.

பெருமாள் பெரியதிருநாள்கண்டருளி திருக்காவேரியிலே தீர்த்தம் ப்ரசாதிக்க எழுந்தருள்கிறபோது, எம்பெருமானார், முதலியாண்டான் திருக்கைத்தலம்பற்றி யெழுந்தருளி நீராடி மீண்டெழுந்தருளும்போது, பிள்ளையுறங்காவில்லி தாசர் திருக்கைத்தலம்பற்றி யெழுந்தருள, சேவித்திருந்த முதலிகள் இதுக்கடியென்னென்று விண்ணப்பஞ்செய்ய; உடையவரும், ஜன்மம் உயர்ந்திருக்கச்செய்தே தாழநில்லா நின்றோமே என்கிற அபிமானம் உண்டே அல்லாதார்க்கு, அக்கொற்றையும் இல்லாதவரிறேயிவரென்றருளினார்.

பெரியநம்பிதிருமகளார் அத்துழாய் புக்ககத்திலே வாழுங்காலத்திலே, ஒருநாள் தீர்த்தமாடத் துணைவரவேணுமென்று மாமியாரையபேக்ஷிக்க; அவளும், உன்சீதன வெள்ளாட்டியைக் கொண்டுபோவென்று கடுத்துச் சொல்ல; நம்பிபக்கலிலே, அய்யா! என்னையிப்படிசொன்னாளென்ன, நாம் அறியோம், உங்கள்ஜீயருக்குச்சொல்லென்ன; இவரும் அங்கேசென்று விண்ணப்பஞ்செய்ய; உடையவரும், அருகிருந்த முதலியாண்டானைப் பார்த்து, உமக்கிந்தாரும் சீதனவெள்ளாட்டியென்று கொடுத்து, போமென்ன; ஆண்டானும், கூடவெழுந்தருளி, நீராட்டப் பண்ணுவித்துக்கொண்டு வந்து, அவளுடைய பக்கத்திலேநின்று, தாஸவ்ருத்திகளைச்செய்யத்தொடங்கினார். அவளுடைய புக்ககத்தார் இதுவென்ன ஆண்டானென்ன, என்னைவரவிட்டஉடையவரைக் கேளுங்கோள், ஆசார்யர்சொன்னது செய்யவேணுமென்ன; அவர்

களும் நம்பி ஸ்ரீபாதத்தேறப்போய், நம்பி, மூதலியாண்டானை வரவிட்டு எங்களையிப்படி நசிப்பிக்க வேணுமோவென்ன; நாம் அறிந்தோமோ; உடையவரைக் கேளுங்கோளென்ன, அவர்களும் அங்கேசென்று விண்ணப்பஞ்செய்ய; உடையவரும் ஆண்டானை அத்துழாய்க்கு சீதனவடிமையாகத் தந்தோம், அங்குநிற்க உங்களுக்கு அநிஷ்டமாகில் இங்கிருந்து அடிமை செய்கிறுவென்று அழைப்பித்துக்கொண் டருளினர்.

பெரியநம்பிமாறநேர்நம்பியை ப்ரஹ்மமேதத்தாலே ஸம்ஸ்கரித்துப் பள்ளிபடுத்தருள, இதுகேட்டு, எம்பெருமானர்நம்பி ஸ்ரீபாதத்தேறச்சென்று தண்டஞ்சமர்ப்பித்து, ஜீயர் சம்சாரம் சிலுங்கடாதபடி அடியேன் ஒருவழியாலே வரம்புகட்ட, தேவரீர் ஒருவழியாலே பிரிக்கருள நின்றதேயென்று விண்ணப்பஞ்செய்ய; நம்பியும், வாரீர்உடையவரே; இக்ஷ்வாகுவம் சத்திலே அவதரித்து சாமான்யதர்மத்தை வெளியிட்டருளுகிற பெருமாளைக்காட்டில் நான்பெரியவனே; பெரிய உடையாரைக் காட்டில் இவர் தண்ணியரோ; சாமான்ய தர்ம நிஷ்டரான தர்ம புத்ரனைக்காட்டில் நான் பெரியவனே, ஸ்ரீவிதுரனைக்காட்டில் இவர்தண்ணியரோ; "பயிலுஞ்சுடரொளி" "நெடுமாற்கடிமை" கடலோசையோவென் றருளிச்செய்ய; உடையவரும் உகந்து சம்மதித்தருளி யிருக்கச்செய்தே; மாறநேர்நம்பி திருநாட்டுக் கெழுந்தருளும்போது பெரியபெருமாள் திருவடிகளிலே சரணமென்னுதல் ஆளவந்தார் திருவடிகளிலே சரணமென்னுதல் செய்யக்கண்டிலோம்; இதுவென்னென்று உடையவருடனே பெரியநம்பிஅருளிச்செய்தருள; உடையவரும் அவர்க்கப்போது ப்லோகத்வயானுசந்தானமாயிருந்ததாய்க கொள்ளீரென்று விண்ணப்பஞ் செய்ய; நம்பியும் அதுபெண்கண்டிட்ட பிச்சன்வார்த்தையன்றோவென் றருளிச்செய்தருள; உடையவரும், பெண்ணினுடைய நித்யயோகத்தைத் திருவுள்ளம்பற்று தொழுகிற தென்னென்று விண்ணப்பஞ்செய்தார்.

ஒருநாள் உடையவர் ஒரு ஊமையை யழைத்துக்கொண்டு உள்ளே எழுந்தருளியிருந்து, கதவையடைத்துக்கொண்டு, ஏகாந்தத்திலேஸம்ஜ்ஞையாலே தம்திருமேனியைத் தொட்டுக்காட்டியருள; அவனும் அதுவேதஞ்சமென்று புத்திபண்ணியிருக்க; இத்தைக் கதவுபுரையிலே ஆழ்வான் கண்டு, அய்யோ, கூரத்தாழ்வானாய்ப்பிறந்து பரக்கசாஸ்த்ரங்களைக் கற்றுக்கெட்டேன்; ஒன்றும் அறியாத ஊமையாய்ப்பிறந்தால் அடியேனுக்கும் உடையவர் இத்தையிரங்கியருளுவார் என்று மோஹித்தாரென்று ப்ரசித்தமிறே.

திருக்கோட்டியூர் நம்பி, தாம்திருக்கோட்டியூரிலே மேல்தளத்தின் மேலேபடிக்கதவைசிறவிட்டுக்கொண்டு,த்யானித்தெழுந்தருளியிருக்க; உடை

யவர் அங்கேற வெழுந்தருளி, நம்பியைக்குறித்து. த்யாகமேது, மந்த்ரமே தென்றுகேட்டருள; நம்பியும், த்யாகம், ஆளவந்தார்படைவீட்டிலே நீராடியரு ளும்போது அகமர்ஷணம்பண்ணி முழுகியிருந்தால், அவர் திருமுதுகிருக் கும்படி வல்லான்கடாரம் கவிழ்த்தாப்போலே யிருக்கும், அதுவே எனக்கு த்யாகம்; யமுனைத்துறைவர் என்கிறவிதுவே மந்த்ரமென்றருளிச்செய்தருளி னார். ஆகையாலே, ஆசார்யவிக்ரஹமே சதாத்யேயமென்றும், தந்நாமமேசதா ஜபமென்றும்உடையவர்க்குஉபதேசித்தாராய்த்து. (௧௬௯) ‘‘வோரமே-றுகவெ ஸா ஸஂம வொஸவ்யிராஹேயா ஸஹாவாயெ-ஞ்ஞாவஸஂஜரூஷா: ஸ்ராஸுஸவஹிவ ஸாஂமதிஂ’’ (బాలమూర్ఖజనాపంక్తి స్త్రీబరా స్తథా స్థావరాన్యస్యక్తిస్త్రీ ప్రాప్తు న్యాయ రాంతం) என்கிறபடியேபெண்ணும்பேதையும்எல்லாரும்சம்ஸாரதுக்கிர்ண ராம்படிசர்வரையும் இப்படி விசேஷகடாக்ஷஞ் செய்துகொண்டு. கூரத்தாழ் வான். முதலியாண்டான், அருளாளப் பெருமா ளெம்பெருமானார் முதலான முதலிகளுக்கும், ஸ்ரீபாஷ்யார்த்தம் ப்ரசாதியாநின்றுகொண்டு சுகமே வாழ்ந் தருள்கிறகாலத்திலே; சோழமண்டலத்திலே, ராஜ்யம்பண்ணிக்கொண்டிருக் கிற சோளராஜா தம்ஶைவ னாகையாலே, வேதவிருத்தமான கள்ளப்பொய் நூலென்கிற சைவாகமத்தையே மெய்நூலென்று, த்ருடதர ப்ரமாணமாக அத்யவசித்து, தானும்தன்புரோஹிதனுமாகக்கூடவிருந்து. தன்னுடையநாட் டிலுள்ளவித்வான்களை யெல்லாரையுந் திரட்டி, (௧௭௦) ‘‘ஶிவாத் பரதரநாஸ்தி’’ (శివాత్పరతరన్నాస్తి) என்று ஓலையிலெழுதிடச்சொல்லி தண்டிக்க; சிலர் அவனுடைய ஆஜ்ஞைக்கஞ்சி எழுதிட்டார்கள். சிலர், அபேக்ஷித மான அர்த்தக்ஷேத்ராதிகளை ஆசைப்பட்டு எழுதிட்டார்கள். இதைக் கண்டு, நாலூரான், அந்த ஆபாஸரிட்டத்தைச்சொல்லி, இவர்கள்இட்டத்தா லென்ன ப்ரயோஜனமுண்டு, ராமாநுஜன் கூரத்தாழ்வான் இட்டாலன்றோ இட்டதாமென்ன; சோளனும், அப்பொழுதே சில மனுஷ்யரைப்பார்த்து, ராமாநுஜனை அழைத்துக்கொண்டு வாருங்கோளென்று சொல்லிநுக்குவரக் காட் டினான். அந்த ராஜமனுஷ்யரும், உடையவருடைய மடத்து வாசலிலே வந்து, ராமாநுஜ னெங்கேயென்று கேட்க; இச்செய்தியை, உடையவருக்கு நீராட்டத் திருமஞ்சனம் உகந்து கொடுக்கிற கூரத்தாழ்வான் திருச்செவியிலே ஒரு ஸ்ரீ வைஷ்ணவர் வந்து ரஹஸ்யமாக விண்ணப்பஞ்செய்ய; ஆழ்வா னும், உடையவருடைய த்ரிதண்ட காஷயாதிகளையும் தரித்துக்கொண்டு, உ டையவருக்கும் விண்ணப்பஞ் செய்யாதே புறப்பட்டு, வந்த ராஜமனுஷ்ய ருடன் போகத்தேட; அவ்விசேஷங்கேட்டு, ஆழ்வானுடனே பெரியநம்பி யும் புறப்பட் டெழுந்தருள; இவர்களை அழைத்துக்கொண்டு போனார்கள்.

பின்பு உடையவரும் த்ரிதண்ட காஷாயாதிகளைங்கே தாருங்கோளென்ன; கூரத்தாழ்வான் தரித்துக்கொண்டு ராஜ மனுஷ்யருடனே எழுந்தருளினானென்று முதலியாண்டான்விண்ணப்பஞ்செய்ய; ஆகில் அவருடைய வெள்ளையைத் தாருங்கோளென்று வாங்கித் தாம் சாத்திக்கொண்டு, ஆழ்வானுக்கும், பெரியநம்பிக்கும், என்ன தீங்கு வரப்போகிறதோவென்று போரக்கலேசித்திராநிற்க; முதலியாண்டான் உள்ளிட்ட முதலிகளெல்லாரும்தேவரீர் இங்கிருக்கவொண்ணாதென்று விண்ணப்பஞ்செய்ய; உடையவரும், இனிச்செய்ய வடுப்பதென்னென்று வ்யாகுலந்த:கரணராய் விசாரித்தருளி, பெரிய பெருமாள் திருமுன்பேசென்று திருவடிகளிலேசரணம்புக்கு, "வெறுப்பொடுசமணர் மிண்டர்விதியில் சாக்கியர்கள் நின்பால் பொறுப்பரியனகள்பேசில்" என்றுதொடங்கி "தலையையாங்கேயறுப்பதேகருமங் கண்டாயரங்கமாநகருளானே" என்று பெருமாளை நோக்கி, ப்ரபத்திபண்ணி, இப்போதாழ்வார் அருளிச்செய்தபடி சடக்கென அவன் தலையை யறுக்கக்கூடாது, அவன் பரிகரவானாகையாலே முகாந்தரேணசெய்து வாராநின்றேன்; என்று விண்ணப்பஞ்செய்து, வெள்ளைசாத்தி, முதலிகளும் தாமுமாய் மேற்கே எழுந்தருளாநிற்க, பின்னையும் ராஜமனுஷ்யர் பின்தொடர, பின்னேஆள் த்வரித்து வருகிறதென்று முதலிகள் விண்ணப்பஞ்செய்ய; உடையவரும் வழியில் மணலையள்ளி "கொடுமைசெய்யுங் கூற்றமுமென் கோலாடிகுறுகப்பெறா, தடவரைத்தோள் சக்ரபாணி சார்ங்கவிற்சேவகனே" என்று இதையோதி அவர்கள் வருகிறவழியிலே யொழுக்கி வாருங்கோளென்ன; முதலிகளும் அப்படியே செய்ய; ராஜமனுஷ்யர் அந்தமணலை மிதித்து அப்பால் அடியிடப்போகாமலிருக்க; போகிறபார்ப்பார் மந்த்ரவாதம் பண்ணிப்போனார்களென்று மீண்டு போனார்கள். உடையவரும், முதலிகளுமாக "அரங்கத்துறையுமின்றுணைவனே" வழித்துணையாக வெழுந்தருளினார்கள்.

திருமலைநல்லான் சிஷ்யரான சிலவேட்டுமுதலிகள் புலம்பாவாநிற்க, அம்மலையடியிலே ஒரு ஸ்ரீவைஷ்ணவர் எம்பெருமானாரைத் தேடியெழுந்தருளாநிற்க; அவர்கள் இவரைத் திருநாமமே குறியாக நீரெங்கிருந்து எழுந்தருளுகிறீரென்றுகேட்க, கோயிலில்நின்றும் வருகிறேனென்ன; அவர்களும், எம்பெருமானார்க்கொருகுறைகளுமில்லையே, பெரியபெருமாள் திருச்செல்வத்திற்கு ஒருகுறைகளுமில்லையேயென்று கேட்க; இவரும், என்னபெரிய பெருமாள், என்னதிருச்செல்வம், எம்பெருமானார்சோள வ்யாஜேநவெண் பரிதாநம் தரித்தெழுந்தருளினார். இன்னவிடத்தேயெழுந்தருளினாரென்று தெரியாது என்று அருளிச்செய்ய; அவர்களும் அவ்வார்த்தைகேட்டு வ்யாகுலப்பட்டு புலம்பாவுகை தவிர்ந்து அன்றுமுதல் ஆறுநாள்பட்டினியேகிடந்

தார்கள். ஆறுநாள்ராத்ரி அம்மலையடியிலே, எம்பெருமானாரும் முதலிகளும்
மழையிலே நனைந்து, குளிரிலேயீடுபட்டுஇவர்கள்புனத்திலே நெருப்பொளி
கண்டு, உடையவரும், அங்கேறநம்மைக் கொண்டுபோங்கோளென்று அரு
ளிச்செய்ய, முதலிகளும் அங்கேற வெழுந்தருள்வித்துக் கொண்டுபோய் ;
வழியெங்கே பிள்ளைகாள் என்றுகேட்க ! அவர்களும், ப்ராஹ்மணர்குரலா
யிருந்தது. பெருவீடாயோடே ஒருகுரலாயிராநின்றதென்று ஓடிவந்து
வேலியைப்பிரித்து, இங்கேவாருங்கோளென்று அழைத்துக்கொண்டுபோய்,
சாத்துகைக்குத்திருபரிவட்டங்களும் கொடுத்து, சாத்தியிருந்த திருப்பரி
யட்டங்களையும் உலரவிட்டு, குளிர்போகக்காய்ச்சியொற்றி, எங்குநின்றும்
எழுந்தருளுகிறதென்று கேட்க ; இவர்களும், கோயிலில்நின்றும் வருகிறோ
மென்று அருளிச்செய்ய ; எம்பெருமானார் செய்கிறதென்னென்று கேட்க;
முதலிகளும், நீங்கள் எம்பெருமானை யறிந்தபடி யெங்ஙனேயென்ன ;
நாங்கள் நல்லான் அடிமைகள். எங்களுக்குஹிதம் ப்ரசாதிக்கும்போது நமக்
கெல்லாம் பரமாசார்யர் எம்பெருமானாராயிருக்கும். ஆசையாலே உடைய
வர் திருவடிகளே சரணமென்றிருங்கோளென்று நல்லான் அருளிச்செய்தா
ரென்று விண்ணப்பஞ்செய்தார்கள். முதலிகளும், ஆகில் இவரோ உடையவ
ரென்று காட்டினார்கள் ; அவர்களும் ஸ்ரீபாதத்தைக் கட்டிக்கொண்டு அழுது
வ்யாகுலப்பட்டு, திருவடிகளிலே விழுந்துசேவித்து, தேனும் தினையுமாகக்
கொண்டுவந்து சமர்ப்பித்து, இக்கதிரை வறுத்து இடித்து தேனிற்கலந்து
அமுதுசெய்தருள வேணுமென்று விண்ணப்பஞ்செய்ய ; முதலிகளும் அப்
படியே செய்து அமுதுசெய்தருளி, அற்றைக்குக்கண்வளர்ந் தருளினார்கள்.
மற்றைநாள் விடிவோரை வேட்டமுதலிகளில் ஒருவரையும் தம்ஸ்ரீபாதத்து
முதலிகளில் ஒருவரையுமாகக் கோயிலுக்குப்போகவிட,இவர்கள் உடையவ
ருடனே நாற்பத்தஞ்சு திருநாமம் எழுந்தருளினார்கள். அவ்வேடமுதலி
களும், இவர்களைமலைக்குமேற்கே அறுகாதவழி கொண்டுபோய், ஒருவேட
முதலியகத்தேவிட ; அவ்வேடமுதலி பகலெல்லாம் வேட்டைக்குப்போய்,
வந்து உள்ளேபுக்கவாறே, ப்ராஹ்மணர்பட்டினியே யிருக்க, நாம் உண்ண
லாகாதென்று, அருகாக ஒருக்ராமத்திலே கட்டளைவாரியென்பா னொருவன்
அகத்திலே இவர்களைக் கொண்டுபோய்விட்டு, வேண்டும் கட்டளைகளையும்
பண்ணி, இப்போதே அமுதுசெய்யப் பண்ணுவியுங்கோளென்று சொல்
லுங்கோளென்று ஆள்கொடுத்துப்போகவிட ; அவர்களும், அங்கேறஉடைய
வரையும், முதலிகளையுங் கூட்டிக்கொண்டுபோய், அவன் அகத்தேவிட்டு,
இவர்களை இப்போதேஅமுதுசெய்யப் பண்ணுவியுங்கோளென்று சொல்லி,
வேண்டுங் கட்டளைகளும் பண்ணுவித்து மீண்டுபோனார்கள்.

அவ்வகமுடையானுடைய பத்தியும், உங்களுக்கு அமுது செய்ய வேண்டாவோவென்று தண்டஞ்சமர்ப்பித்து விண்ணப்பஞ்செய்ய; முதலிகளும், வேண்டாவென்று அருளிச்செய்தார்கள். அவளும் உங்களுக்கு சந்தேஹிக்கவேண்டா அடியேனும் எம்பெருமானார் ஸ்ரீபாதத்தை யுடையேனென்றாள்; முதலிகளும், எம்பெருமானார் ஸ்ரீபாதத்தை யாஸ்ரயித்தபடியெங்ஙனேயென்றுகேட்க; அவளும், நாங்கள் இவ்விடம் வர்ஷமின்றியே யிருந்தவாறே அங்கேகோயிலிலே வந்திருந்தோம், அங்கே என்னகமுடையாரும் நானும் ஒருமச்சுமேலே யிருக்கையாயிருக்கும், அப்போதுஎம்பெருமானார் எழுதிருமாளிகையிலே மாதுகரம்பண்ணி அமுதுசெய்தருள்வர்; அவர் திருவீதியிலே எழுந்தருளும்போது, அகளங்கநாட்டாழ்வான் உள்ளிட்டமுதலிகள் எல்லோரும் இவர் திருவடிகளிலே சேவிக்கக்கண்டு இவர் மாதுகரத்திற்கு அந்தத்திருமாளிகையேற வெழுந்தருளினார்; அடியேனும், மச்சுமேல் நின்றும் இரங்கிவந்து இடைகழியில் தகைந்துநின்றேன். அவர் இதுஎன்னபெண்ணே என்று கேட்டருளினார், உம்மைராஜாக்களும் உட்பட்டமுதலிகளும் தண்டனிடாநின்றார்கள்; நீர்மாதுகரம்பண்ணுநின்றீர், இதற்கடியென்னென்றவாறே, உடையவரும், நாம் அவர்களுக்கு பகவத்விஷயத்தில் சிலநல்வார்த்தைசொல்லுகையாலே காணென்றருளிச் செய்தருளினார்; அந்தநல்வார்த்தையை அடியேனுக்கும் ப்ரசாதித்தருளலாகாதோவென்ன, அப்போதுஹிதம் அருளிச்செய்து எழுந்தருளினார்; பின்பு எங்கள் நாடு வர்ஷமுண்டாய், நாங்கள் எங்கள்நாட்டேறப் போகும்போது அவர் அருளிச்செய்த நல்வார்த்தையை மறந்தேன்; உடையவரை சேவிக்கப்பெற்றிலேனேயென்ற இழவோடே நினைத்திருக்க, அற்றைக்கும் அங்கேறவெழுந்தருளினார். அடியேனும் மச்சில்நின்றுமிறங்கிவந்துதண்டனிட்டுநின்று, நாங்களெங்கள்நாட்டேறப்போகாநின்றோம். தேவரீர் முன்பு அருளிச்செய்தநல்வார்த்தையைமறந்தேனென்ன, அப்போதுஉடையவரும்மீளவும் த்வயத்தை நெஞ்சிலே நிலைநிற்கும்படி குருபரம்பரா பூர்வகமாக உபதேசித்து, மீண்டு எழுந்தருளத்தேட, அடியேனுக்கு ஆத்மரக்ஷையாக ஏதேனும் ஒன்று தந்தருளவேணுமென்று விண்ணப்பஞ்செய்தேன்; அப்போது சாத்தியிருந்த ஸ்ரீபாதுகைகளை ப்ரசாதித்தருளினார். அடியோங்களும் அன்றேபோந்தோம், பின்னைசேவிக்கப் பெற்றிலோமென்றவாறே, உடையவரும் தம்திருவுள்ளத்திலேவிசாரித்தருளி, திருப்போனகம் சமைக்கவருளிச்செய்து, இவள்செய்யுமது பார்த்திருமென்று ஒரு ஸ்ரீவைஷ்ணவனைவைக்க, அந்த ஸ்ரீவைஷ்ணவரும் பார்த்திருக்க; அவளும், அடைவாகச்சமைத்து, முன்புஉடுத்த புடவையையும் அவிழ்த்து, சுத்தமான புடைவையும் உடுத்து, உள்ளேபுகுந்து,

எம்பெருமானார் திருவடிகளே சரணமென்று உச்சரித்து, அவர் ஸ்ரீபாதுகைகளை ஏறியருளப்பண்ணி, திருவடி விளக்கி, அமுதுசெய்யப்பண்ணி, புறப்பட்டு, முதலிகளுக்குத் தண்டஞ்சமர்ப்பித்து, ஸ்ரீபாதம் விளக்கி, அமுதுசெய்ய வேணுமென்று விண்ணப்பஞ்செய்ய; முன்பு பார்த்திருக்கச்சொன்ன ஸ்ரீவைஷ்ணவரை யழைத்து, இவள் செய்தபடியென்னென்று கேட்டருள, அவரும், இவள் திருப்போனகம் அடைவாகச் சமைத்து; முன்பு உடுத்த புடைவையையும் விடுத்து, சுத்தமான புடைவையையும் உடுத்து; திருப்போனகத்தை யெடுத்துக்கொண்டுபோய் உள்ளே புகுந்து, கதவையடைத்து, த்யானம் பண்ணியிருந்து அமுதுசெய்யப் பண்ணினாள். அதுகறுத்து நீண்டிருந்த தொன்று! எம்பெருமானாய் இருந்ததில்லையென்றவாறே; அவள் தன்னையே யழைத்து, நீயுள்ளே செய்ததென்னென்று கேட்டருள; அவளும், முன்பு அடியேனுக்குத் தஞ்சமாக ப்ரசாதித்தருளின ஸ்ரீபாதுகைகளைத் திருவடி விளக்கி அமுதுசெய்யப்பண்ணியாய்த்து, ப்ரசாதம் சூடுவது, இப்போதும் அப்படியே செய்தேனென்று விண்ணப்பஞ்செய்தாள்; ஆகில், அவை தன்னை யிங்கே கொண்டுவந்து காட்டென்ன; அவளுங் கொண்டுவந்து காட்ட; அவை அங்குத்தைக்கு "எதித்தலைநாதன் இராமாநுசன் றன்னிணையடி" களுக்கு ஒத்திருந்தது; ஆகில் இதுக்குள்ளே எம்பெருமானார் உண்டோவென்று பார்த்துக் காணென்ன; அவளும் திருவிளக்கை யேற்றிக்கொண்டுவந்து அடைவே பார்த்து, எம்பெருமானார் திருவடிகளைக்கண்டு அங்கே திகைத்து நின்று, இது எம்பெருமானார் திருவடிகளைப்போலே யிராநின்றது, காஷாய மில்லாமையாலே தெரிகிறதில்லை யென்றவாறே, நான்காணென் றருளிச் செய்ய; அவரும் திருவடிகளைப்பிடித்துக்கொண்டு அழப்புக்கவாறே, கண்ணைத் துடைத்து, எம்பெருமானார் அருளிச்செய்த வார்த்தை; ஒத்ததில்லையாகில் முதலிகள் அமுதுசெய்யார்கள், அத்தை என்செவியில் சொல்லிக் காணென்ன; அவளும் விண்ணப்பஞ்செய்ய; அந்த வார்த்தையும் ஒத்திருந்தது; ([illegible]) "[illegible]" ([illegible]) என்கிறபாவநத்வ போக்யத்வங்களையும் உடைத்தாயிருந்தது, இனி முதலிகள் "அமுதுசெய்யக் குறையில்லையென்றருளிச்செய்து, நமக்குமாத்திரம் கூடாது "ஒருபகவத் விக்ரஹம் அமுதுசெய்ய வில்லை யென்ன; அவளும், ஆகில், பாலும்பழமும் சர்க்கரையுங் கொண்டுவந்து சமர்ப்பிக்கிறேனென்று சமர்ப்பிக்க; இவரும் தம்முடைய எம்பெருமானுக்கு அமுதுசெய்யப் பண்ணி, தாமும் அமுதுசெய்தருளினார்; பின்பு முதலிகளும் அமுதுசெய்து கண்வளர்ந்தருள; அப்பெண்பிள்ளை முதலி

கள் தளிகை ப்ரசாதத்தையுங் கூட்டிக்கலந்து, மச்சிலேயிருக்கிற தன்பர்த்தாவையெழுப்பி, ப்ரசாதமிட்டு, ப்ரசாதப்படப்பண்ணி, தான் ப்ரசாதப்படாமலிருக்க ; அவனும், இதென்னென்றுகேட்க; அவளும், கோயிலில் நின்றும், எம்பெருமானாரும் முதலிகளும் எழுந்தருளி அமுதுசெய்யமாட்டோமென்று கண்வளர்ந்தருளினார்க ளென்றவாறே ; அவனும், நான் அதற்கென்னசெய்யவேணுமென்ன ; நீர் எம்பெருமானாரை யாச்ரயிக்கவாரீரோவென்ன, அவனும் இசைந்து ப்ரத்யயம்பண்ணிக்கொடுக்க ; அவளும் உடப்புடனே ப்ரசாதப்பட்டு நித்ரைபண்ணினாள். மற்றைநாள்பொழுது விடிந்தவாறே, எழுந்திருந்துவந்து, உடையவர்திருவடிகளிலே தண்டஞ்சமர்ப்பித்து, இற்றைக்கு எழுந்தருளியிருந்து இவனை க்ருபைசெய்தருள வேணுமென்று விண்ணப்பஞ்செய்ய ; எம்பெருமானாரும் அற்றைக்கு அங்கே அவசரித்தருளி, அவளுக்காக இவனுக்கும் ஸ்ரீதோபதேசம் பண்ணி, விசேஷகடாக்ஷம் செய்தருளி அங்கே நாலைந்து நாளெழுந்தருளியிருந்து, த்ரிதண்டகாஷாயாதிகளையும் சம்பாதித்து, தம்திருவாராதநமான பேரருளாளர் சந்நிதியில்வைத்து, தண்டஞ்சமர்ப்பித்து, முன்புபோலே அவற்றை உடையவர் தரித்தருளினார்.

மற்றைநாள்மேற்கே வஹ்நிபுஷ்கரிணியாகிற க்ராமத்தேற வெழுந்தருளி, அங்கே சிறிதுகாலம் எழுந்தருளியிருந்து, அங்குநின்றும் மிதுலாபுரி சாளக்ராமத்தேற வெழுந்தருள ; ஊரடைய ப்ரச்சந்ந விரோதிகளாகையாலே உடையவரை அநாதரித்திருக்க ; உடையவரும், முதலியாண்டானை யழைத்து, இவ்வூரார் நீர் முகக்குந்துறையிலே நீரும் ஸ்ரீபாதத்தைநீட்டிக்கொண்டு இருமென்று நியமித்தருள ; ஆண்டானும் அப்படியே செய்தருள ; அவ்வூரார் இவர்ஸ்ரீபாததீர்த்த வைபவத்தாலே, நிவ்ருத்த அஹங்காரராய், மற்றைநாளேதெளிந்து வந்து, உடையவர் திருவடிகளிலே யாச்ரயிக்க, அத்தீர்த்தப்ரபாவத்தையிட்டு இன்றுமுதல் இவ்வூர் ஸ்ரீசாளக்ராமமென் றருளிச்செய்தருளினார். அங்கேவடுகநம்பியை ஸ்வபாதச்சாயாபந்நராம்படி விசேஷகடாக்ஷம்செய்து, அவர்க்கு நம்தர்மஸார்த்தம் ப்ரசாதித்துக்கொண்டு, சிங்கர்கோயிலிலே சிறிதுநாளெழுந்தருளியிருந்து, விஷ்ணு வைஷ்ணவத் வேஷியானசோளன் க்ருமிகண்டனாய் நசிக்கும்படி ஆபிசரித்து மந்த்ரவாதம்பண்ணி, அங்குநின்றும்தொண்டனூரேறவெழுந்தருளினார். அங்கேஅத்தேசத்திற்கு அதிபதியானவிட்டல் தேவராயன்மகள்பிசாசாவிஷ்டையாயிருக்க; அவனும், மந்த்ரவாதிகள் பலரையுங்கொண்டுதீர்க்கத்தேடினவிடத்திலும் தீராதபடியாலே துக்கிதனா யிருக்க, தத்பக்தியும், நிர்வாணமாய்

ஓடித்திரிகிற பெண்ணைக்கண்டு, மிகவும்வ்யாகுலப்பட்டிருக்குமளவிலே; நம்பியும், உபாதாநார்த்தமாக ராஜக்ருஹத்தேற வெழுந்தருளினவர். துக்கிதையான ராஜபத்நியைக்கண்டு, து:கஹேதுவென்னென்றுகேட்டருள; அவளும் தத்காரணத்தைச் சொல்ல, தொண்டனூர்நம்பியும் கேட்டருளி, நம்மாசார்யர் எம்பெருமானார் எழுந்தருளினார், அவர்கடாக்ஷத்தால் இப்பேய் காடேறியோடுமென்று ப்ரஹ்மராக்ஷஸ்ஸின் கதையை ஸவிஸ்தாரமாக அவளுக்கு அருளிச்செய்ய; அவளுங்கேட்டு, ஆஶ்சர்யப்பட்டு, தன்பர்த்தாவுக் கறிவிக்க; அவனும், உடையவர், இப்பேயைவிடுவிக்கில், அவரே நமக்காசார்யர், அவர் திருவடிகளில் ஆஶ்ரயிக்கக்கடவேனென்ன; அவ்வளவில் அவன் ஸ்வகுருக்களுக்கு விருந்திடத்தேட, இவளும் தன்பர்த்தாவைக்குறித்து, நீர் அங்கஹீநனென்று, அவர்கள் இங்கே வாரார்கள் சொல்லாதே கொள்ளுமென்ன; அவனும், அவர்கள் வாராதிருப்பார்களோவென்று இவள்வார்த்தையை அதிக்ரமித்துச் சொல்ல; அவர்களும், முன்பு டில்லீஶ்வரனான துலுக்கன் இவனை ஆக்ரமித்துப் பிடித்துக்கொண்டுபோய், பட்டார்ஹனன்றிக்கேபோம்படி ஒரு அங்குஷ்டச்சேதம் பண்ணிவிடுகையால் விட்டல்தேவராயனென்று ப்ரசித்தமாகையாலே, ஹீநாங்கன் அகத்தே உண்ணவொண்ணாதென்று தவிர்ந்து விட்டார்கள், அதுகண்டு அவன் அவர்களிடத்தே அதிகுபிதனாய் அவர்களைத் திரஸ்கரித்திருக்குமளவிலே. அவனுடைய ஸ்த்ரீயும், அவனைக் குறித்து உடையவர் திருவடிகளில் ஆஶ்ரயித்து உஜ்ஜீவிக்கலாகாதோ; இவர்களால் என்ன ப்ரயோஜனம் உண்டென்ன, அவனும் இசைந்து, ஸ்வக்ருஹத்தேற வெழுந்தருளவேணுமென்று உடையவரை ப்ரார்த்திக்க, ராமாநுஜனும், நாம்ராஜதானியை மிதிக்கக்கடவோமல்லோம் என்று அருளிச்செய்ய, அவ்வளவிலே, தொண்டனூர்நம்பி முதலானமுதலிகள், இவனை விசேஷ கடாக்ஷம் செய்தருளினால் தர்ஶநத்திற்கு பஹூபகாரம் உண்டென்று பஹுசாவேண்டிக்கொள்ள, உடையவரும் ஸம்மதித்து, அவன் அகத்தேற வெழுந்தருளின வளவிலே; அவனும் அதிஸந்துஷ்டனாய், திருவடிகளிலே ஸாஷ்டாங்க ப்ரணாமம்பண்ணி ஸவிநயனாய்நிற்க; முதலிகளும், உடையவர் ஸ்ரீபாததீர்த்தத்தை அவன் புத்ரிக்கு ப்ரஸாதித்து, தத்தீர்த்தத்தாலே ப்ரோக்ஷிக்க; அவளுடையசித்த ப்ரமம்போய், தெளிந்துவந்து, சேலையும் உடுத்து, உடையவரை சேவிக்க; இத்தைவிட்டல் தேவராயன் கண்டு, அத்யாஶ்சர்யப்பட்டுத்தத்க்ஷணமே ஸ்ரீபாதத்திலே யாஶ்ரயிக்க, அவனையும் இரங்கியருளி, திருவடிகட்கு அந்தரங்கனும்படி கடாக்ஷித்தருளினார்.

இப்படி இவனையும் ஸ்வவைபவத்தாலே ஶிஷ்யனாக்கிக்கொண்டு, அவனுக்கு ஸ்ரீ விஷ்ணுவர்த்தநராயனென்று திருநாமம் ப்ரஸாதித்தருளி, அ

திசந்துஷ்டராயிருக்க ; அவ்வளவிலே, எங்கள் சிஷ்யனை நீர் இங்ஙனே மயக்கி சிஷ்யனாக்கிக் கொள்ளும்போது, எங்களை ஜயித்தன்றோ செய்யலாவதென்று, பன்னீராயிரம்பேர் சமணர் ஏககாலத்திலே வந்து தர்க்கிக்கத் தொடங்க ; உடையவரும், பின்னானுங் கஞ்சுகமவர்கள், இடியின் கையிலே அகப்பட்டாற்போலவும், கருடன் கைப்பாம்பின்வாயிலே யகப்பட்டாற்போலவும், ஆச்சரியமென்னே செய்யக் கடவோம், நம்மை வெளியிடாதிருக்கவொண்ணாதென்று பார்த்து, ஒரு திருமண்டபத்திலே, திரையை வளைத்துக்கொண்டு, உள்ளே யெழுந்தருளியிருந்து, ஸஹஸ்ரபணா மண்டலமுடைய திருவநந்தாழ்வானாய், ஒருத்தருக்கு ஒருத்தர் முகமாகப் ப்ரத்யுத்தரமருளிச்செய்து, அவர்களை வாய்மூடுவித்து ஜயித்துவிட ; அவர்களிலே சிலர் அதிவிஸ்மிதராய் வந்து திருவடிகளிலே ஆச்ரயிக்கத் தேட, அவர்களை அடிமைகொண்டு, ஸ்ரீவைஷ்ணவர்களாம்படி பண்ணி. விசேஷ கடாக்ஷஞ் செய்தருளி, தம் திவ்யசக்தியை ப்ரகடிப்பிக்க ; இத்தைக்கண்டுபோய் ராஜ்பாதிபனான ஸ்ரீவிஷ்ணுதேவ ராயனுக்குச் சொல்ல, அத்தைக்கேட்டு, விஷ்ணுவர்த்தனனும் அதிப்ரவணனாயிருக்க ; அங்குத்தையிலெம்பெருமானை, தொண்டனூர் நம்பி அபிமானித் திருக்கையாலே அவர்க்கு நம்பி தம்பிரானென்று திருநாமம்சாத்தியருளி, அங்கே வேதாந்த வ்யாக்யானஞ் செய்துகொண்டு சிங்கர் கோயிலிலே எழுந்தருளியிருக்குங்காலத்திலே ; திருக்கையில் திருமண் மாண்டு, சாத்துகைக்கு, திருமண் பெற்றிலோமே யென்று சிந்தித்துக்கொண்டு வளர்ந்தருள ; அன்று ராத்ரி, திருநாராயணப் பெருமாளும், அணித்தாக, யதுகிரியிலே, உம்முடையவரவு பார்த்துக்கொண்டு நில்லாநின்றோம், உன் திருவுள்ளம்போன்ற திருமண்ணும் இங்கேயுண்டு, சடக்கெனப் புறப்பட்டு வாரீரென்று ஸ்வப்நங் காட்டியருள ; விடிவாறே அதிப்ரீதராயெழுந்திருந்து, உடையவர், இத்தை முதலிகளுக் கருளிச்செய்து, ஸ்ரீவிஷ்ணுவர்த்தநராயனையும் அழைப்பித்து, தாம் ஸ்வப்நங் கண்டபடியை அருளிச்செய்ய ; அவனுங்கேட்டுப்ரலஹ்னைச் சம்மதித்து, காடு வெட்டுவித்துக்கொண்டு உடையவர் பின்னே சேவித்துக்கொண்டு செல்ல ; பஹுதாந்ய ஸம்வத்ஸரம் தைமாசத்திலே, எம்பெருமானாரும், செம்பொன் யதுகிரியேறி, வேதபுஷ்கரிணியிலேசென்று. (௱௭௨) "பரிதாநசிலாம் த்ருஷ்ட்வா ப்ரணம்யாத த்விஜோத்தமா:" (పరిధానశిలాం దృష్ట్వా ప్రణమ్యాద్విజోత్తమాః) என்கிறபடியே. பரிதான சிலையையும் சேவித்து. அங்கே நீராடி (௱௭௩) "வேதபுஷ்கரிணீதீரே விசாலே ச சிலாதலே, பரிதாநம் ஸமுத்ஸ்ருஜ்ய காஷாயம் பரமம் புமாந்" (వేదపుష్కరిణీతీరే విశాలే చ శిలాతలే, పరిధానం సముత్సృజ్య కాషాయం పరమః పుమాన్) என்கிற தத்

தாத்ரேயனைப்போலே தாமும் மீளவும் காஷாயந் தரித்தருளி, முன்னடந்து. திருநாராயணப் பெருமாள் எழுந்தருளியிருக்கிற விடந் தேடிக்காணாமல், பகவத் ப்ரபாவத்துக்குக் குறைவாக என்செய்தோமென்று, திருவுள்ளங் கலங்கி, கண்வளர்ந்தருள ; அவ்வளவிலே, திருநாராயணப் பெருமாள், இவர் கனவிலே எழுந்தருளி, கல்யாண ஸரஸ்ஸின்றென்மேலை மூலையின் செண்பகச் சோலைக்கருகே, திருமகிழுக்குத் தென்பார்ச்வத்திலே, வளர்ந்த பெரிய திருத்துழாயின் பெரியபுற்றுக்குள்ளே இராநின்றோம் ; திருமண்ணும், அந்தக் கல்யாண ஸரஸ்ஸுக்கு வடமேலை மூலையிலே (௩௭௪) ஸ்வேத த்வீபாத் ஸமாகத்ய சுத்தம் ம்ருத்த்ரவ்யமாஹ்ருதம், யாதவாத்ரௌ ப்ரதிஷ்டாப்ய தத்ர நிக்ஷிப்ய ஸந்ததம்" (శ్వేతద్వీపాత్సమాగత్య శుద్ధంమృద్ద్రవ్యమాహృతం, యాదవాద్రౌప్రతిష్ఠాప్య తత్రనిక్షిప్య సంతతం) என்கிறபடியே, பெரியதிருவடியாலே, ச்வேதத் வீபத்தினின்றுங் கொணர்ந்து, யதுகிரியிலே நிக்ஷேபிக்கப்பட்டு, மத்ப்ரபாவத்தாலே அக்ஷயமாகச் சேமிப்பித்திராநின்றது, நீர் க்லேசிப்பானேன், என்று நாம் உமக்கடையாளமாக, இவ்விடந்தொடங்கி நாம் இருக்கும் புற்றளவாக முறித்திட்ட திருத்துழாய்க் கொழுந்தே குறியாக வாரீரென்று, ப்ரத்யக்ஷ சமாகாரமாக ஸ்வப்நமுகேந அருளிச்செய்ய ; உடையவரும், உகந்து, உணர்ந்து, எழுந்திருந்து, முறித்திட்ட திருத்துழாய்க்கொழுந்தே குறியாக, கல்யாண ஸரஸ்தீரத்தேற வெழுந்தருளி திருமுகப்படியே செண்பகவன சமீபத்தில், கப்புங் கவருமாய்ப்பணைத்துக்கொழுந்துவிட்ட திருத்துழாய்மரத்தைக் கண்டு, களித்து, ஆநந்த கோஷத்துடனே பலகாலும் தண்டனிட்டு, அத்திருத்துழாய் மரத்தின் மண் காப்புநீக்கின வளவிலே (௩௭௫) "கமலிய தாமிரிஸ்ஸும் காஞ்சிஸிம்ஹாஸநஸ்தம்" (కమలియమిరిష్టం కాంచిసింహాసనస్థం) என்கிறபடியே, புற்றினுள்ளே பொற்கோயில் தோன்றியபின்பு, மற்றங்கினி தமர்ந்த மாயவனுடைய நீல சிகாமணி நிறந்தோன்ற, சகவர்ஷம் ஆயிரத்திற்கு மேல் பன்னிரண்டு சென்ற வர்த்தமான பஹுதான்யவர்ஷம், தைமாஸம், சுக்லபக்ஷ சதுர்த்தசியும் வியாழக்கிழமையுங்கூடின புனர்பூசநக்ஷத்ரத்திலே நாராயண னுருவங்கண்டு, நலம் மிகுத்து, கொந்தளித்து, எல்லாருங் குறைலக்கூத்தடித்து, மங்களசங்க ம்ருதங்க படஹாத்ய கிலவாத்ய ஜயசப்த கோஷம்பண்ணி, ராஜாவையும்அழைத்து, காட்டியருளி, பாலாலே திருமஞ்சநம் பண்ணி "பகற்கண்டே னாரணனைக்கண்டேன் கனவில் மிகக்கண்டேன் மீண்டவனை மெய்யேமிகக்கண்டேன்" என்கிறபடியே, திருநாராயணப்பெருமாளை, அடிக்கும், தலைக்கும் செவ்விதாகக்கண்ணாரக்கண்டு, அநுபவித்து, தம்திருக்கையாலே மூன்றுநாள் திருவாராதநஞ் செய்தருளி, 'மா

னடிபணிந் துய்ந்தவனென்று, பரமாசார்யரான, ஸ்ரீ பராங்குசர் தமக்கு,
தாம் அத்யந்தாபிமத ஶிஷ்யரானகையாலே பித்ருதநத்தைப் புத்ரன் விநியோ
கங் கொள்ளுமாப்போலேயும் 'தமிழ்மறைகளாயிரமு மீன்றமுதற்றாய் சட
கோபன் மொய்ம்பாலவளர்த்த இதத்தாயிராமாநுஜன்" ஆகையாலே ஐஶ்வர்
ய கைவல்யங்களாகிற க்ஷுத்ர புருஷார்த்தங்களை யிகழ்ந்து, காற்கடைக்கொ
ண்டு, திருநாராயணனருளே உபாயோபேயமென்று க்ஷ்கர்ஷிக்கிற "ஒருநா
யகத் திருவாய்மொழியை" திருநாரணர்க்கு சமர்ப்பித் தருளினார். பின்ப
கல்யாண ஸரஸ்ஸின் வடமேலைமூலையிலே தம் த்ரிதண்டத்தாலே கிற, பா
லாறுபோலே பொங்கிக் கிளம்புகிற திருமண் குவைகளைக் கண்டு, மண்டுகிற
ஆநந்தாதி சயத்தாலே, அத்திருமண்கொண்டு, பன்னிரண்டு திருநாமஞ் சா
த்தியருளி; த்ரிதண்டமண்டிதகர புண்டரீகராய் விளங்கி யருளி, காடுவெட்டி
ஊருங்கோயிலுஞ் சமைப்பித்து, திருநாராயணப் பெருமாளுக்கு ஸ்ரீ பாஞ்ச
ராத்ர ஸாத்விக ஸம்ஹிதையாலே ப்ரோக்ஷணைகி திருவாராதநங்களை ஸ்ரீ
ரங்கராஜபட்டர் திருக்கையாலே செய்வித்தருளி, திருநாரணர்க்கு நித்யோ
த்ஸவ, பக்ஷோத்ஸவ, மாஸோத்ஸவ, ஸம்வத்ஸரோத்ஸவங்க ளெல்லாம்நட
த்தியருளி, மஹோத்ஸவம் நடத்துகைக்கு உத்ஸவ பேர மில்லையேயென்று,
சிந்தா வ்யாகுலித சித்தராய்க்கண்வளர்ந்தருள; அப்போது இவர்ஸ்வப்நத்,
திலே திருநாரணர் எழுந்தருளி, நம்உத்ஸவபேரமான ராமப்ரியர், இப்போ
லீலை கொண்டாடி, டில்லியேற வெழுந்தருளி, துலுஷ்கராஜ க்ருஹத்திலே,
எழுந்தருளி யிருக்கிறார்; அங்கேறப்போய் எழுந்தருள் வித்துக்கொண்டு
வாரீரென்று திருவுள்ளமா யருள, உடையவரும் ப்ராதஃகாலமானவாறே எ
ழுந்திருந்து, ஸ்வப்நத்தை முதலிகளுடன் ஆலோசித்துக்கொண்டு, யயண
கதியிலே த்வரித்து, டில்லியேற வெழுந்தருளினவாறே; டில்லீபுரீந்த்ரரான
ராஜாவும், இவரைக்கண்டு ப்ரத்யுத்தாந ப்ரணாம பூர்வகமாக பஹு உபசா
ரத்துடன் எழுந்தருளின சார்யம் அருளிச்செய்யவேணுமென்று விண்ணப்
பஞ்செய்ய; உடையவரும், எங்கள் குலதெய்வமான ராமப்ரியர் இங்கே
யெழுந்தருளி யிருக்கிறார், அவரைத்தரவேணுமென்று அபேக்ஷிக்க; ராஜா
வும் அப்படியே செய்கிறோமென்று கொள்ளைகொண்டு சிறைவைத்த எம்
பெருமான் சிறைச்சாலையிலே சோதித்துக் கொள்ளீரென்று அப்பணையிட்டு
விட; இவரும் அங்கேறவெழுந்தருளி, சோதித்து, திருநாரணர்வடிவுக்கு ஒத்
திராமையாலேஇத்தேவர்கள் ஒருவருமன்றென்று, ராமப்ரியரை அவர்களில்
காணாமையாலே முசித்துக்கிடக்க, அன்றிரவில், ராமப்ரியர்; ஸ்வப்நத்திலே
யெழுந்தருளி, நீர் முசிப்பானேன், நாம், அவன்மகளாலே பூஜைகொண்டு

அவள் ஸஜ்ஜாக்ருஹத்திலே யிராநின்றாள், அங்கேயாரீர் கொண்டுபோம்படியாகவென்றருளிச்செய்ய, இச்செய்தியை உடையவரும் ராஜாவுக்கறிவிக்க, அவனும் இப்படி உம்முடைய பக்கல் வ்யாமுக்தராயிருப்பவர், தாமே வரக்கடவதென்ன; இவரும், அவரைக்கண்டு திருவடிதொழ லாகாதோவென்ன, அப்படியே யாகிறதென்று இவரை, அவனும், அவள்ஸஜ்ஜாக்ருஹத்தேற வெழுந்தருளுவித்துக் கொண்டுபோக; அங்கே ராமப்ரியரும், உடையவரைக்கண்டு, ஆஸ்ரிதவாத்ஸல்யந்தோற்ற, இட்ட சட்டையும், கட்டின சிறுசதங்கையும், இட்ட கஸ்தூரிநாமமும், முடித்தமைவண்ண நறுங்குஞ்சியும், "தன்முகத்துச்சுட்டி தூங்கத்தூங்க" நெறித்தகுழலையும், ஸஜ்ஜையிலும்வசனிலுங் குதித்து "தன்னியலோசை சலஞ்சலனென்றிட" என்கிறபடியே செம்பொற்சதங்கைகள் சல்சலவென்றொலிக்க, அகிலரும் காணும்படி ஓடிவந்துஉடையவர் திருமடியிலேயிருக்க; உடையவரும், ஆநந்தாஸ்ருக்கள் பனிப்ப, ஆநந்தைகார்ணவாந்தர்நிமக்நராய், புளகிதகிலாங்கராய், மார்பும் தோளும் பூரித்து, என்னுடைய செல்வப்பிள்ளையோவென்றெடுத்து அணைத்துக்கொண்டருளினார். அன்றுமுதல், ராமப்ரியர்க்குச்செல்வப்பிள்ளையென்று திருநாமமுண்டாய்த்து. இத்தைக்கண்டு ராஜாவும், அத்யாஸ்சர்யயுக்தனாய், அவர் திருவடிகளிலே விழுந்துசேவித்து, அநேகவிதமாக ஸத்கரித்து, பஹு-உபசார ஸஹிதமாக ஸம்பத்குமாரரை, எதிஸார்வபௌமர்க்கு எழுந்தருளுவித்துக் கொடுத்தனுப்பினான்.

உடையவரும், அங்குநின்றும்புறப்பட்டு, இவரையும் எழுந்தருளுவித்துக்கொண்டு, க்ரமித்துப்பயணகதியிலே, யாதவாத்ரிக்கெழுந்தருளி; ஸர்வரும், எதிராஜகுமாரரென்னும்படி விசேஷித்து, புத்ரவாத்ஸல்யம்பண்ணி ஆதியாதிக்கருளி; ப்ரோக்ஷணாதி ப்ரதிஷ்டாபுரஸ்ஸரமாக, திருநாரணருடனே சேர்த்து, திருநாரணப்பெருமாளுடைய திவ்யோத்ஸவ சர்த்தாவக்ரி; நித்ய, பக்ஷ, மாஸ, அயந, ஸம்வத்ஸரோத்ஸவாதி மஹோத்ஸவத் திருநாள்களும் நடத்தியருளி, தீர்த்தப்ரசாதமும் பெற்று, எதிராஜமடமும் கட்டிவைத்து, அன்பத்திருவர்கட்கு சன்யான ஊழிய கைங்கர்யத்தையும் கல்பித்தருளி, அந்...த்திருவர் ஸ்ரீவைஷ்ணவர்களென்று ஸமுதாயத்திருநாமமும்; ப்ரத்யேகமாக, தாஸ்யநாமமும் ப்ரசாதித்து; அங்கே அவர்களை ப்ரதிஷ்டிப்பித்து, குறைவறத்திருவாராதநமும் நடத்திக்கொண்டிருந்து, ஒருநாள்வரையிலே, ஸ்ரீபாஷ்யகாரர் தம்முடைய ஸ்ரீபாதத்திலுள்ள ஆசார்யர்களுடனேயும், ஜீயர்களுடனேயும், அன்பத்திருவர்களுடனேயும், சாத்தின சாத்தாதமுதலிகளுடனேயும், கொத்தையம்மைமார்களுடனேயும், திருமேனிக்காவல் திரு

வேளைக்காரர்களுடனேயும், பெருங்கூட்டத் திருவோலக்கமாக இராமாநுஜ னில் எழுந்தருளியிருந்து, திருநாராயணபுரமென்று அந்நகருக்குத் திரு நாமம்சாத்தியருளி, இத்திருநாராயணபுரத்திலே நித்யவாசம்பண்ணுமவர் களுக்கு, பெரியோர்க்கும் நமக்கும் உண்டான பரமபதமும்; ஆசார்யனைக் காட்டும் உண்டாமென் றருளிச்செய்தருளினார். ஆகையாலே இத்திருமலைக்கு க்ருதயுகத்திலே, ஸநத்குமாரர் ஸத்யலோகத்தில்நின்றும் ஆநந்தமய திவ்யவிமானத் தோடே எழுந்தருளுவித்துக் கொண்டுவந்து திருநாரணனை இங்கே ப்ரதிஷ் டிப்பிக்கையாலே, நாராயணாத்ரியென்றும்; த்ரேதாயுகத்திலே தத்தாத்ரேயர் நாலுவேதபுருஷர்களையும் சிஷ்யராக்கிக் கொண்டுவந்து வேதபுஷ்கரிணிக் கரையிலே ஸதாவேதாத்யயந நிரதராயிருக்கையாலே, வேதாத்ரியென்றும்; த்வாபரயுகத்திலே, நம்பிமூத்தபிரானும் ஸ்ரீக்ருஷ்ணனும் ஆராதிக்கப் படுகையாலே யாதவாத்ரியென்றும்; (௧௭௧) "[illegible] யதிராஜஜநுஷ் நாத்ரி, யதிமௌலீந்த்ர [illegible] நாம்நா [illegible]" ([illegible]) என்கையாலே, கலியுகத்திலே, எம்பெருமானார் எழுந்தருளி ஜீர்ணோத்தாரணம் பண்ணி அபிமானிக்கையாலே, எதிசைல மென்று ப்ரஸித்தமாய்த்து.

அநந்தரம், பத்மகிரியிலேசென்று, பௌத்த ஸமயங்களைவென்று, என்றுமென்பிள்ளைக்குத் தீமைகள் செய்வார்களுள்ளார்களேயென்று இப் படி அவர்களை ஸத்ரசாலைதன்னில் அழைப்பித்து நிஷ்ப்ரயாஸமாய் நிரஸித்து நிஷ்கண்டகமாக்கியருளி, ஸ்ரீபாஷ்யமும் வ்யாக்யாநிக்கக்கொண்டு திருநாரா யணப்பெருமாள் திருவடிகளிலே பன்னிரண்டு ஸம்வத்ஸரம் வாழ்ந்திருந் தருளினார்.

அக்காலத்திலே, ஒருஸ்ரீவைஷ்ணவர் கோயிலில்நின்று மெழுந்தருளி உடையவர் திருவடிகளிலே ஸேவித்திருக்க; இவரும், பெரியபெருமாளும், பெருந்திருச்செல்வமும் செய்கிறபடியென்னென்று கேட்டருள; அவரும், தேவரில்லாத குறையொன்றொழிய மற்றொருகுறைகளு மில்லையென்ன; இவரும், சோழன்பக்கல் எழுந்தருளின ஆழ்வானும், பெரியநம்பியும் செய்த படியென்னென்று கேட்டருள; ஸ்ரீவைஷ்ணவரும், கோயிலில்நின்றும் கூரத் தாழ்வானையும், பெரியநம்பியையும், ராஜமனுஷ்யர் அழைத்துக்கொண்டுபோய் சோழன்முன்னேவிட, அவனும் இவர்களைப்பார்த்து, (௧௭௨) "சிவாத் பரதரம் நாஸ்தி" ([illegible]) என்று ஓலையெழுதிடச்சொல்ல, கூரத் தாழ்வானும், பஹுப்ரமாணங்களைக் காட்டி ஸ்ருதிஸ்ம்ருதிஇதிஹாஸ புரா

யால், ப்ரபந்நனுக்கு அந்திமதேச நியதியில்லையென்றபடி, பின்பு சில ஸ்ரீவைஷ்ணவர்கள், பெரியநம்பியை, அங்கே ஸம்ஸ்கரித்து, பள்ளிபடுத்து, ஒரு கட்டணத்திலே ஆழ்வானை எழுந்தருள் வித்துக்கொண்டு, ராத்ரியிலே ஒருவரையுங்காணமல் கோயிலிலேவந்துபுகுந்தார்கள். கூரத்தாழ்வானும்,பெரியநம்பியைப்போலே அடியேனுக்கும் இச்சரீரம் போய்த் தில்லையேயென்று கொண்டு "ப்ரைமயோவரவணைமேல்பள்ளிகொண்ட முகில்வண்ணனே" என்று போர க்லேசித்தருளினார்என்றார்களென்று விண்ணப்பஞ்செய்ய ; உடையவரும், "கேட்பார்செவி சுடுவார்த்தைகேட்டு, ஐயோகண்ணபிரான் அறையோ" என்றுகோஷித்துக்கொண்டு, வேரற்றமரம்போலே விழுந்துகிடந்து அடித்து, திருமிடறுதழுதழுப்ப,அத்யந்தமவஸந்நராய்ப்போரக்லேசித்து, திருபுத்திர்த்து,கண்ணிர்கைகளாலேதுடைத்து க்லேசிக்கும்படிகண்டு,உருகி, அருகிருந்த முதலிகள் தேற்றத்தேறி, ஆழ்வானுனும் திருமேனியுடனிருக்கப்பெற்றோமேயென் றருளிச்செய்து ; பெரியநம்பிக்கு ஸ்ரீசூர்ணபரிபாலநமுஞ் செய்து, பெருக்கத் திருவத்யயநமும் நடத்தியருளி, ஆழ்வானுக்குத் திருக்கண்போச்சுதேயென்று, வ்யாகுலஹ்ருதயராய், மாறொன்றில்லாமாருதி சிறியாண்டானை,ஆழ்வானையுமாராய்ந்து ; அங்குள்ளவிசேஷமுமறிந்துவாருமென்று கோயிலுக்குப்போகவிட்டு ; பூர்வம்போலே வ்யாக்யாநித்துக்கொண் டெழுந்தருளி யிருந்தார்.

பெரியநம்பி திருநக்ஷத்ரம், மார்கழியில்கேட்டை. அவர்தனியன்,
(கஅஉ) "𑌕𑌮𑌲𑌾𑌪𑌤𑌿𑌕𑌲𑍍𑌯𑌾𑌣 𑌗𑍁𑌣𑌾𑌮𑍃𑌤𑌨𑌿𑌷𑍇𑌵𑌯𑌾, 𑌪𑍂𑌰𑍍𑌣𑌕𑌾𑌮𑌾𑌯 𑌸𑌤𑌤𑌂 𑌪𑍂𑌰𑍍𑌣𑌾𑌯 𑌮𑌹𑌤𑍇 𑌨𑌮𑌃; 𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑌾𑌮𑍁𑌨𑍇𑌯𑌾𑌦𑌧𑌿𑌗𑌤𑌨𑌿𑌗𑌮𑌾𑌨𑍍𑌤𑌾𑌰𑍍𑌥𑌜𑌾𑌤𑌃 [illegible] 𑌶𑍍𑌰𑍀 [illegible]" (కమలాపతికల్యాణ గుణామృతనిషేవయా, పూర్ణకామాయ సతతం పూర్ణాయ మహతే నమః, ఆచార్యాద్యామునేయాదధిగతనిగమాన్తార్థజాతః ప్రపత్తిన్స్తోపాద తుద్రహస్యాం ప్రియతి పతయేయశ్చ తద్రక్షణార్థం, చోళేంద్రద్రష్టాఞ్జ్యా న్త్యాస నసిసరవమాణ, శ్రీసవహేణదయత్నం పిదాంశారీరకీచాన్వ సహాతమన నైతమ్న హపూర్ణేమార్యం) திருக்கோட்டியூர் நம்பியை, அந்திய மதசையில் உன் திருவுள்ளத்திலே நினைத்திருக்கிற தினை லென்னென்று ஸ்ரீபாதத்தில் முதலிகள் கேட்க; நம்பியும், சக்ரவர்த்தித்திருமகன் திருவுள்ளத்தை ஒரு பக்ஷிபுண்படுத்தித்தென்றுசொல்லி நிர்ப்பரராய், ஆளவந்தாரைநினைத்துக்கொண்டுதிருநாட்

சிறியாண்டானைக்கண்டு, உடையவரைச்சேவித்தாற்போலே ஸந்துஷ்டராய், உடையவர்செய்த நன்றிறபடியென்னென்றுவினவியருள; இவ்வ்ருத்தாந்தவிசேஷமெல்லாம் ஸவிஸ்தாரமாக விவரித்துச்சொல்லக்கேட்டு ஆநந்தித்திருக்கிறவிடத்து; அவ்வளவிலே, ஆண்டானும் உடையவர் ஆசார்ய விஸ்லேஷாஸஹிஷ்ணுவாய், தேவரீர் திருக்கண்மலர் போச்சுதேயென்று மிகவும் ஆர்த்தராய் ஆராய்ந்து வாவென்றுவிட்டருளுமென்ன ; ஆழ்வானும், உலகங்களுக்கெல்லாம் ஓருயிரானதாம் சுகமேயிருக்கப்பெறில், இவ்விபத்து அடியேன் கண்ணழிவுமாத்ரமே கொண்டுபோகப் பெற்றதென்று ஹ்ருஷ்டராயிருக்கிறேனென்று விண்ணப்பஞ் செய்யுமென்றுவிட ; அவ்வளவிலே சோழனுக்குக் கழுத்திலேபுண்ணாய், புழுத்துப் புரண்டானென்றுகேட்டு, கங்கைகொண்ட சோழபுரத்தேற ஆண்டானும் சென்று, அச்செவிக்கினிய செஞ்சொல்வார்த்தையை நிஸ்சயித்துக்கொண்டு எழுந்தருளுகிறவருடனே அம்மங்கியம்மாளுமெழுந்தருள ; அவரையுங் கூட்டிக்கொண்டு த்வரித்தெழுந்தருளி; ஒருநாள் உடையவர் ஸ்ரீபாதந்தாங்குநம்பிகளுடன் அநுஷ்டாநார்த்தமாக, திருக்கல்யாண ஸரஸ்ஸின்கரையிலே எழுந்தருளி யிருக்கச்செய்தே, மாறனேரில்லா மாருதி சிறியாண்டானும், அம்மங்கியம்மாளும் கோயிலில் நின்றும் எழுந்தருளினவர்கள், உடையவர் திருவடிகளைத் தங்கள் ஆநந்தாஸ்ருக்கள்கொண்டு நனைத்து, தண்டஞ் சமர்ப்பித்து, ஆழ்வானுக்கும் பெரியநம்பிக்கும், அபராதம்பண்ணின சோழனுக்குக் கழுத்திலேபுண்ணாய்ப்புழுத்துப்புரண்டுபோனானென்று விண்ணப்பஞ்செய்ய; உடையவரும், கர்ணாம்ருதமான கட்டளையைக்கேட்டு, மார்புந்தோளும் பூரித்து, சந்தோஷாதிசயத்துடனே, இவர்களை வாரியெடுத்து அணைத்துக்கொண்டு, ஆநந்தாஸ்ருக்கள்கொண்டு அவர்களை வழியவார்த்து, இவ்வளவுதூரம் இவ்விசேஷங்கொண்டு எழுந்தருளின இவர்களுக்கு, சீக்கனைக் கொடுக்கலாவது த்ரவ்யமல்லதில்லையென்று நிஸ்சயித்து, மீளவும் த்ரவ்யத்தையே அவர்களுக்குப்பரிசிலாக இரங்கியருளி, தம்சந்நிதியில் முதலிகளைப்பார்த்து, இதுகல்யாண ஸரஸ்ஸு என்னுமது அன்வர்த்தசித்தமாய்க் கண்டோமே யென்றருளினார். முதலிகள் அனைவரும் அப்படியே யாமென்று அதைக்கொண்டாட, அவர்களையுங்கொண்டு ப்ரஹ்லாதவரதர் அழகியசிங்கர் திருமலையேறி, அழகியசிங்கரைத் திருவடி வணங்கிநின்று, முன்பு பகவத்பாகவத விஷயமென்றால் அஸஹ்யமாகவும் போந்த இரணியனை நிரஸித்தருளினாப்போலே, இப்போது பரத்வமான தேவரை இல்லையென்று ஸாதநாருபாரக பூதரான ப்ரஹ்லாதாழ்வானுக்கொப்பான கூரத்தாழ்வானுக்கும் பெரியநம்பிக்கும் அபராதம்பண்ணின இவனையும், க்ருமிகண்டனாக்கி நசிப்பித்தருளித்தேயென்று விண்ண

ப்பஞ்செய்து தீர்த்தப்ரசாத ஸ்வீகாரம்பெற்று விடைகொடுக்க, அப்போதே புறப்பட்டு உடையவரும் முதலிகளுமாகப் பெரியநம்பியோடே திருநாராயணப்பெருமாள் திருமுன்பேசென்று, திருவடிதொழுது, திருப்பல்லாண்டையநுசந்தித்து மங்களாசாஸநம்பண்ணி, நமோநாராயணாவென்று க்ருதாஞ்ஜலிபுடராய், திருவடிகளை நோக்கி நின்று, இனி அடியேன் கோயிலேறப்போய் வருகிறேனென்று விண்ணப்பஞ்செய்ய; திருநாராயணனும் நெடும்போது வாய்விடமாட்டாதே நிற்க; உடையவரும், நீருள்ளதனையும் இங்கேயிருமென்று அரங்கன் கோயிலிலே நியமித்தருளித்தே யென்ன; ஆகில் அப்படியே செய்யலாகாதோவென்று அர்ச்சகமுகேந திருவுள்ளமா யருள; எம்பெருமானாரும், புறப்பட்டருளி, அம்பத்திருவரைப் பார்த்து, திருநாரணனையும் செல்வப்பிள்ளையையும் மங்களா சாஸநத்துடனே, சதா தர்ஶநம் பண்ணிக் கொண்டு, காலை காலை திருப்பணி திருவாராதநமும் நடத்திக் கொண்டு சேவித்திருங்கோ ளென்று நியமித்தருள; அம்பத்திருவரும், ஸ்ரீபாதத்திலே விழுந்து சேவித்து, தேவர் திருவடிகளைப் பிரியில் தரிக்கமாட்டோமென்று ஆர்த்தராய் தலையிரங்கிட்டுநிற்க; உடையவரும், அப்போதொரு சிந்தைசெய்து, தம்விக்ரஹத்திற்குப் படியெடுத்தாப்போலே விளங்குகிற தம்முடைய அர்ச்சாவதாரரூப விக்ரஹத்தையும் அவதரிப்பித்து, அதிலே த்வஶக்தியும் ப்ரதிஷ்டிப்பித்துநின்று, அம்பத்திருவரை அழைத்து, இதோநாம் உங்களுக்காக இங்கேயிராநின்றோமென்று ஸ்வஶக்தி பரிபூர்ணமான அவ்விக்ரஹத்தை அவர்களுக்குத் திருவாராதநமாக இரங்கியருளி, அவர்களைக் குறித்து, செல்வப்பிள்ளை, கிணற்றின்கரையில் பிள்ளையாயிருக்கும் பேணிக்கொண்டு போருங்கோளென்று நியமித்தருளி; அவர்கள் கையிலே செல்வப்பிள்ளையை அடைக்கலம்காட்டிக் கொடுத்தருளி திருவிளக்கு திருமாலை அமுதுபடி சாத்துபடி முதலான உபசாரங்களெல்லாம், என்றும் நன்றாகப் பேணிச்செய்துகொண்டு, அயோக்யம் ஸஹ்ருதயராய், த்ரோஹபுத்தி யொருநாளும் நினையாதே, ஊழிய கைங்கர்யங்களையும் மறவாதே. பக்தி பூர்ணமாகப் பண்ணிப் போருங்கோ ளென்று, திருவடிகளைத் தொட்டுவித்துக் கொண்டு நியமித்தருளி, செல்வப்பிள்ளையைப்பிரியமாட்டாமல் திருவடிகளே புகந்து விழுந்து எழுந்து தொழுவாராய், திருவுள்ளமுருகி; திருக்கண்கள் துளிக்க, புரிந்து புரிந்து, திவ்யவிமாநத்தையும், திருப்பதியையும், திருச்சோலையெழில்களையும், திருமண் குழைகளையும் பார்த்து அஞ்ஜலித்து, மங்களாசாஸநம் பண்ணி, நின்றுகொண்டு, புத்ரவாத்ஸல்யம் பின்னேதள்ள; நம்பெருமாள்

பின்பு, நாட்டிலுள்ள ஸ்ரீவைஷ்ணவர்களெல்லாரும், உடையவர் ஸ்ரீபாதத்தேறச்சென்று தண்டன் சமர்ப்பித்து, பெரியநம்பி திருநாட்டுக் கெழுந்தருளினாரே. ஆழ்வானுக்கும் திருக்கண்மலர் போய்விட்டதேயென்று, து:காப்ரோதம்பண்ணித் தேவரீரைப் பெற்றோமேயென்று சொல்லி யெல்லாரும் ப்ரீதராய் எழுந்தருளி யிருந்தார்கள்.

அக்காலத்திலே திருச்சித்ரகூடம் அழிந்ததென்று, சிலர்வந்து உடையவர்க்கு விண்ணப்பஞ்செய்ய, அதுகேட்டு து:காகுலராய், சோகித்துத் திருமுத்துதிர்த்தருளி அங்குக்கையிலுத்ஸவபேரம் திருப்பதியிலேயெழுந்தருளிற்றென்று கேட்டருளி, அந்தவிடத்திலெல்லாம் ஆறும்படி திருப்பதிக்கெழுந்தருளி ஸ்ரீகோவிந்தராஜனையும், மூலபேரஸஹிதமாக அங்கே திருப்ரதிஷ்டையும்பண்ணிவைத்து, "தெய்வத்தில்லைச்சித்ரகூடத் தென்செல்வனை, மின்னி மழைதவழும் வேங்கடத்தெம்வித்தகனை" என்றதுவே பொய்மொழியொன்றில்லாத மெய்ம்மொழியாகையாலே இப்படிப் பலிப்பதேயென்று அருளிச்செய்து இழவுதீர்ந்தருளி, திருமலையேறி, திருவேங்கடமாமுடையையும், திருவடித்தொழுது, அப்போதேமீண்டு திருமலைநம்பி, திருத்தாழ்வரையில் ஆழ்வார்களையுஞ்சேவித்து, புறப்பட்டு, பெருமாள்கோயிலேறவெழுந்தருளிப் பேருளாளனையுந் திருவடித்தொழுது, மீண்டும் பயணகதியிலே கோயிலுக் கெழுந்தருளி புகுந்து நம்பெருமாளைச்சேவித்து, ஸ்வமடமே யெழுந்தருளி, ஸ்வாமிமார்க்கர்ப்பூகத்துக் கென்றனும், [illegible] போலே [illegible] பர்யார்த்தம் அருளிச்செய்யா நின்றுகொண்டு, ஆகமே யெழுந்தருளி யிருந்தார்.

அதின் மற்றைநாள். உடையவர், ஆழ்வானையழைத்து, பேருளாளர் அர்த்திதார்த்த பரிதானதீக்ஷிதரா யிருப்பார், நீர் அவரைக் கண்தந்தருள வேணுமென்று ஒரு ஸ்தோத்ரம் விண்ணப்பஞ்செய்யுமென் றருளிச்செய்தருள; ஆழ்வானும், அடியேனுக்கு இக்கண் வேண்டாவென்று விண்ணப்பஞ்செய்ய; எம்பெருமானாரும், அப்படியன்று சொல்லவேணுமென்று பல நாளும் நிர்ப்பந்தித் தருளிச்செய்தருள; ஆழ்வானும், கண்ணழியாமல் வரதராஜ ஸ்தவத்தை யருளிச்செய்ய உபக்ரமித்து, (க-அ) "ஸ்வஸ்திஹஸ்திகிரிமஸ்தஶேகர: ஸந்தநோது மயி ஸந்ததம் ஹரி: நிஸ்ஸமாப்யதிகமப்யதத்த யம் தேவமௌபநிஷதீ ஸரஸ்வதீ, நீலமேகநிபமஞ்ஜநபுஞ்ஜஶ்யாமகுந்தல [illegible]" (స్వస్తిహస్తిగిరిమస్తశేఖర స్సంతనోతు మయి సంతతం హరిః నిస్సమాభ్యధికమభ్యధత్త యం దేవమౌపనిషదీ సరస్వతీ, నీలమేఘనిభమంజనపుంజశ్యా మకుంత

సమనంతరమేవం తత్రాహ అబ్జపాణిఃపద్మాంబుజనేత్రం నేత్రసాధుఃరీకరిశ్యసదామే) என்று இஸ்லோகத்தாலே ஸாதர்மாம்பண்ணி, யோக்யமான அப்ராக்ருத திவ்ய நேத்ரம் அடியேனுக்குத் தந்தருள வேணுமென்று விஜ்ஞாபிக்க; அன்றிர வே, ஆழ்வானுக்கு, பேரருளாளரும், தந்தோமென்று ஸவப்நமுகேந அரு ளிச்செய்ய; ஆழ்வானும், ப்ரத்யூஷஃகாலத்திலே பெரிய ப்ரீதியோடே எழு ந்திருந்து, அநுஷ்டானத்தைச் செய்து வரதராஜ ஸ்தவத்தை நிறைவேற அருளிச்செய்து, உடையவர் ஸந்நிதிக்குச்சென்றுத் தண்டனிட்டு, தேவரீரிய மனப்படியே வரதராஜ ஸ்தவத்தை விண்ணப்பஞ் செய்தேனென்று வரதராஜ ஸ்தவத்தை முட்ட விண்ணப்பஞ்செய்து காட்ட; உடையவருங் கேட்டு உகந்தருளினவளவிலே, ஆழ்வானும், "பிணியொழித்தமரர் பெருவிசும்பரு ளும் பேரருளாளர்" ஆகையாலே அடியேன் கேட்டபடியே (௩-அக) "வைகுண்ட்ட நாதம் பரமேவ நித்ய நிரவத்ய விபூஷிதம் வஸ்த்ரவிபூஷணாதிகம் ஸஹிதேவம் வேஷ்டிதம் த்ருஷ்டவான்" (వైకుంఠేశ్వర నిత్య నిర్వత్య విభూషితం ఛత్రచామరసేవితం నేత్రగోచరః) என்று சொல்லப்படு கிற ஸ்ரீ வைகுண்டநாதனை ஸாதர்மாம் பண்ணுகிற அப்ராக்ருத திவ்ய சக்ஷுஸ்ஸை ப்ரஸாதித் தருளிற்றென்ன; உடையவரும், அங்ஙனன்று, அங்கேறப்போவோம் வாருமென்று ஆழ்வானைக் கையைப்பிடித்துக்கொண்டு பெருமாள்கோயிலேற வெழுந்தருளி, ஆழ்வான் அருளிச்செய்த வரதராஜ ஸ்தவத்தை, வரதராஜர் ஸந்நிதியிலே விண்ணப்பஞ்செய்து தலைக்கட்டுகிற போது, ஸர்வாங்கத்திலும் உடையவர் தாழ்க்க, ஸ்வதம், திருச்செவிசாத்தி, பேரருளாளரும் ப்ரஸந்நராய், உடையவர் வருவதற்கு முன்னே, ஆழ்வானு க்கு அபேக்ஷிதமென்னென்று கேட்டருள; ஆழ்வானும், உடையவர் திரு வுள்ளம் பற்றினதை வேண்டிக்கொள்ளாதே, நான் பெற்றபேறு, நாலூரா னும் பெறவேணுமென்று விண்ணப்பஞ்செய்ய; அப்படியே பெறக்கடவ னென்று, பெருமாளும் திருவாய் மலர்ந்தருளின வளவிலே, உடைய வர் கேட்டு, ஓடிவந்து, பதறி, திருவுள்ளமுசித்து, பெருமாளைக் குறித்து, ஸர்வஜ்ஞானதேவரீர் இப்போது என்னினைவைத் தலைக்கட்டிக்கிலிரோ; ஆ ழ்வான், நீ ஸ்வதந்த்ரனாய், என்னினைவைத் தலைக்கட்டாதே, அதிலம்பித்து, நான் வருவதற்கு முன்னே இப்படிச் செய்தாயேயென்று, இவரையும் வெறு த்து, இனியென்னென்று திகைத்துநிற்க; பேரருளாளப் பெருமாளும், நம் மையும், உம்மையுங்காணுமிடத்து உள்கண்ணாலே காணக்கடவதென்று, வர ப்ரதானம் பண்ணியருள; ஆழ்வானும், பெருமாளைத் தன் உள்கண்ணாலே கண்டு ஸேவித்து, சாத்தின திவ்யாபரணம், திவ்யவிக்ரஹாவயவாதிகளை,

இவையிவையென்று குறித்துக்காட்டியருளி, உடையவர் விக்ரஹத்தையும், சேவித்துக் காட்டியருள; இவரும், க்ருதார்த்தராய், ஆழ்வானுடன் மீண்டு கோயிலேறவெழுந்தருளி, பூர்வம்போலே வ்யாக்யானித்திருக்கச்செய்தே:—

நாச்சியார்திருமொழி வ்யாக்யானத்தில், "நாறுநறும்பொழில்" என்னும் பாட்டுப்ரஸ்துதமாக, ஆண்டாள் ப்ரார்த்தனையை நாம் தலைக்கட்டவேணு மென்று, அப்போதேபுறப்பட்டு, திருமாலிருஞ்சோலைக் கெழுந்தருளி, கோதை ப்ரார்த்தித்தபடியே, நூறுதடாநிறைந்தவெண்ணெய், நூறுதடாநிறைந்த அக்காரவடிசில், பரிவுடனே திருமாலிருஞ்சோலைநின்ற நம்பிக்கு, அமுது செய்வித்தருளி, ஸ்ரீவில்லிபுத்தூரேற வெழுந்தருளி, வடபெருங் கோயிலுடையானையும் சேவித்து, நாச்சியார் திருமாளிகைக்கெழுந்தருளி, ஆழ்வார் திருமகளாரை, அடிவணங்கிநிற்க; கோதையும், குலமுனியைக் குறித்து, தம்ப்ரார்த்தனை தலைக்கட்டினதற்கு மிகவுமுகந்து நங்கோயிலண்ணனென்று அர்ச்சகமுகேந திருநாமம் ப்ரசாதித்து, தீர்த்தப்ரசாதங்களும் ப்ரசாதித்து, விடைகொடுத்தருள; அங்கிருந்தும் புறப்பட்டு, திருநகரிக்கு எழுந்தருளி ஆழ்வாரையுஞ் சேவித்து, தீர்த்தப்ரசாதமும்பெற்று, மீண்டு பயணகதியிலே கோயிலுக்கெழுந்தருளி, ஸ்ரீபாதத் முதலிகளுக்கு, தர்சனார்த்தம் ப்ரசாதித்துக்கொண் டெழுந்தருளியிருந்தார்.

இப்படி எழுந்தருளியிருக்கிற ஸ்ரீபாஷ்யகாரருடைய ஸ்ரீபாதத்தி லாச்ரயித்த, முதலிகளுடைய திருமுடியடைவு யெங்ஙனே யென்னில்:—

௧. கூரத்தாழ்வான்
௨. மாடபூசையாழ்வான்
௩. செட்டலூர்சிறியாழ்வான்
௪. அநந்தாழ்வான்
௫. நடாதூராழ்வான்
௬. எங்களாழ்வான்
௭. அரண்புரத்தாழ்வான்
௮. அகலங்கநாட்டாழ்வான்
௯. நெய்யுண்டாழ்வான்
௧0. உக்கலாழ்வான்
௧௧. கோமடத்தாழ்வான்
௧௨. வேதாந்தியாழ்வான்
௧௩. நடுவிலாழ்வான்
௧௪. பிள்ளையாழ்வான்
௧௫. மிளகாழ்வான்
௧௬. காராஞ்சியாழ்வான்
௧௭. ஈயுண்ணியாழ்வான்
௧௮. கோயிலாழ்வான்
௧௯. திருக்கோவலூராழ்வான்
௨0. திருமோகூராழ்வான்

---

௨௧. முதலியாண்டான்
௨௨. பெரியாண்டான்
௨௩. சிறியாண்டான்
௨௪. அம்மங்கியாழ்வான்
௨௫. மாருதிப்பெரியாண்டான்
௨௬. மாறொன்றில்லாமாருதியாண்
௨௭. சோமாஜியாண்டான் [டான்

௨௮. கந்தாடையாண்டான்
௨௯. ஈஸ்வராண்டான்
௩0. ஈயுண்ணியாண்டான்
௩௧. பிள்ளையாண்டான்
௩௨. குரிஞ்சிபூர்சிரியாண்டான்
௩௩. ஆளவந்தாராண்டான்
௩௪. ஐயராண்டான்.

---

௩௫. கிடாம்பியாச்சான்
௩௬. சிரியாச்சான்
௩௭. கலியனார்சிரியாச்சான்
௩௮. கொங்கிலாச்சான்
௩௯. ஈச்சம்பாடியாச்சான்
௪0. என்னாச்சான்
௪௧. ஐயாபிள்ளையாச்சான்
௪௨. தூயப்பிள்ளையாச்சான்
௪௩. ஆச்சியாச்சான்.

---

௪௪. அருளாளப்பெருமாளெம்பெ
௪௫. தொண்டனூர்நம்பி [ருமானார்
௪௬. மருதூர்நம்பி
௪௭. மழலூர்நம்பி
௪௮. சொட்டைநம்பி
௪௯. குருவநம்பி
௫0. திருக்குருகுந்துடிநம்பி
௫௧. வங்கிபுரத்துநம்பி
௫௨. முடும்பைநம்பி
௫௩. ஸ்ரீபராங்குசநம்பி
௫௪. ஸ்ரீவில்லிபுத்தூர்நம்பி
௫௫. வடுகநம்பி
௫௬. திருக்குருகூர்நம்பி
௫௭. கோமாண்டூர்பிள்ளைநம்பி

---

௫௮. ஸ்ரீபராசரபட்டர்
௫௯. ஸ்ரீபராங்குசபட்டர் [பட்டர்
௬0. வரந்தரும் பெரியபெருமாள்
௬௧. அழகியமணவாளபட்டர்
௬௨. ஸ்ரீவேதவ்யாஸபட்டர்
௬௩. திருப்பள்ளிதேவராஜபட்டர்
௬௪. கோவிந்தபட்டர்
௬௫. திருவரங்கபட்டர்
௬௬. நம்பியாரில்ஸ்ரீரங்கராஜபட்டர்
[பட்டர்
௬௭. உள்ளூரில் பெரியபெருமாள்

---

௬௮. சட்டம்பிள்ளைஜீயர்
௬௯. ஈச்சம்பாடிஜீயர்.
௭0. ஸ்ரீகுலசேகரஜீயர்
௭௧. திருவெள்ளறைஜீயர்
௭௨. ஆட்கொண்டவல்லிஜீயர்
௭௩. திருமழிசைஜீயர்
௭௪. திருவாய்மொழிஜீயர்
௭௫. திருநாராயணபுரஜீயர்
௭௬. ஸ்ரீசாளக்ராமஜீயர்
௭௭. கோவிந்தஜீயர்
௭௮. திருமாலிருஞ்சோலைஜீயர்
௭௯. திருப்புட்குழிஜீயர்
௮0. திருக்குடந்தைஜீயர்
௮௧. திருமூஷ்டம்ஜீயர்
௮௨. திருநின்றவூர்ஜீயர்

---

௮௩. திருநாராயணபுரத்தரையர்
[ளரையர்
௮௪. பெருமாள்கோயில் பெருமா
[ளரையர்
௮௫. ராஜநாராயணப் பெருமாள

௮௬. திருவரங்கமாளிகையரையர்
௮௭. திருவாய்மொழியரையர்
௮௮. பிள்ளைதிருநறையூரரையர்
௮௯. திருக்குருங்குடியரையர்
௯0. திருநகரியரையர்
௯௧. திருக்கண்ணபுரத்தரையர்
௯௨. திருமாலிருஞ்சோலையரையர்
௯௩. திருவநந்தபுரத்தரையர்
௯௪. ராஜமஹேந்த்ரபுரத்தரையர்
௯௫. பிள்ளைவிழுப்புத்தூரரையர்
௯௬. திருவேங்கடத்தரையர்

---

௯௭. ஆட்கொண்டவம்மாள்
௯௮. அம்மங்கியம்மாள்
௯௯. முடும்பையம்மாள்
௧00. பரித்துக்கொல்லையம்மாள்
௧0௧. உக்கலம்மாள்
௧0௨. சொட்டையம்மாள்

---

௧0௩. ஆசூரிப்பெருமாள்
௧0௪. கிடாம்பிப்பெருமாள்
௧0௫. அம்மங்கிப்பெருமாள்
௧0௬. முனிப்பெருமாள்
௧0௭. பட்டிணிப்பெருமாள்

---

௧0௮. திருமலைநல்லான்

---

௧0௯. எம்பார்

---

௧௧0. கராஞ்சிசோமயாஜியர்
௧௧௧. பெரியகோயில்வள்ளலார்
௧௧௨. அலங்காரவேங்கடவர்
௧௧௩. திருக்குருகைப்பிரான்பிள்ளான்
௧௧௪. ஆர்க்காட்டுப்பெருமாள்
௧௧௫. ராமாநுஜம்பிள்ளான்
௧௧௬. திருக்கடீப்பிள்ளான்
௧௧௭. கோமடத்தையர்
௧௧௮. வைத்தமாநிதிசிறுஜீயர்
௧௧௯. பெருஜீயர்
௧௨0. அணியரங்கத்தமுதனார்
௧௨௧. திருவரங்கத்தமுதனார்
௧௨௨. கோமாண்டூரிளையவல்லி
௧௨௩. கருந்தேவர்

ஐம்பத்திருவர்.

௧௨௪. எம்பெருமானார் செல்வப்பிள்ளை
௧௨௫. ஸ்ரீகுலசேகரப்பெருமாள்
௧௨௬. பட்டர்பிரான்தாஸர்
௧௨௭. பகைவல்லிதாஸர்
௧௨௮. ஸ்ரீவில்லிபுத்தூர்தாஸர்
௧௨௯. ஸ்ரீநாராயணதாஸர்
௧௩0. ஸ்ரீகோவர்த்தனதாஸர்
௧௩௧. திருவழுதிவளநாடுதாஸர்
௧௩௨. ஸ்ரீராமாநுஜதாஸர்
௧௩௩. பிள்ளையுரங்காவல்லிதாஸர்
௧௩௪. வண்டர்
௧௩௫. சுண்டர்
௧௩௬. ராமாநுஜவேளைக்காரர்

நத்தத்து முதலிகள்.

௧௩௭. திருவரங்கதாஸர்
௧௩௮. திருமாலிருஞ்சோலைதாஸர்
௧௩௯. வானமாமலைதாஸர்

கோயில்முதலிகள்.

௧௪0. அழகியமணவாளதாஸர்
௧௪௧. திருவேங்கடதாஸர்
௧௪௨. பேரருளாளதாஸர்

திருமழிலைக்கூர்நத்தத்தில்
முதலிகள்.

௧௪௩. எதிவாசூடாமணிதாஸர்
௧௪௪. எதிராஜதாஸர்
௧௪௫. இளையாழ்வார்தாஸர்

பாண்டியநாட்டுமுதலிகள்.

௧௪௬. முதிவலங்காரதாஸர்
௧௪௭. ஸ்ரீசடகோபதாஸர்
௧௪௮. பிள்ளைதிருவாய்மொழிதாஸர்
௧௪௯. ஸ்தானத்தாரில் சோநாதப்ர
[ஹ்மராயர்
௧௫0. வீரசுந்தரப்ரஹ்மராயர்
௧௫௧. ஜகந்நாதப்ரஹ்மராயர்
௧௫௨. வீரராகவப்ரஹ்மராயர்
௧௫௩. பிள்ளைபுரக்கையுடையார்
௧௫௪. திருமஞ்சனமெடுக்கும் தூய
[முனிவேழம்
௧௫௫. ஸ்ரீபண்டாரங்காவல்திருவரங்
[கமாளிகையார்
௧௫௬. ஆண்டவர் அரியவர்

---

அம்மைமார்கள்.

௧௫௭. திருவநந்தபுரத்தம்மை
௧௫௮. திருவாட்டாத்தம்மை
௧௫௯. திருவண்பரிசாரத்தம்மை
௧௬0. மன்னனார்கோவில் போரேத்
௧௬௧. திருநாரையூரம்மை [தம்மை
௧௬௨. திருக்கண்ணபுரத்தம்மை
௧௬௩. திருப்பதிஸ்ரீகார்யஞ்செய்யு
௧௬௪. ஆண்டாளம்மை [மம்மை
௧௬௫. நாயகத்தேவியார்
௧௬௬. தூய்யபெருந்தேவியார்
௧௬௭. பெரியபெருந்தேவியார்
௧௬௮. சிறியபெருந்தேவியார்
௧௬௯. பெரும்பூதூர்திருவரங்கம்
௧௭0. திருக்குடந்தை தூய்யவாயிரம்
௧௭௧. கொங்கில்பிராட்டியார்
௧௭௨. அத்துழாயம்மை
௧௭௩. அம்மங்கியம்மை
௧௭௪. கூரத்தாண்டாள்
௧௭௫. தேவகப்பிராட்டியார்
௧௭௬. யதிராஜவல்லியார்
௧௭௭. பங்கயச்செல்வியார்
௧௭௮. பொன்னாச்சியார்
௧௭௯. இன்னிழவஞ்சியார்
௧௮0. சூடிக்கொடுத்தாள்
௧௮௧. திருப்பாவைபாடினாள்

---

எம்பெருமானார் திருவடிகளிலே ஆஸ்ரயித்த முதலிகள் எழுபத்து நாலாசார்யர்களாரென்னில்:—

௧. ஆளவந்தார் குமாரர் சொட்டை [நம்பி
அவர் குமாரர். என்னாச்சான்.
அவர் குமாரர். பிள்ளையப்பன். [ர்
௨. பெரியநம்பி குமாரர் புண்டரீக
௩. திருக்கோட்டியூர் நம்பி குமாரர்
[தெக்காழ்வான்
௪. திருமாலையாண்டான் குமாரர்
[சுந்தரத்தோளுடையார்
௫. பெரியதிருமலைநம்பி குமாரர்
[கந்தாடையாண்டான்
௬. கூரத்தாழ்வான் குமாரர் பட்டர்
சீராமப்பிள்ளை.
௭. முதலியாண்டான் குமாரர் கந்
[தாடையாண்டான்
௮. நடுவிலாழ்வான்

௯. கோமடத்தாழ்வான்
௧0. திருக்கோவலூராழ்வான்
௧௧. திருமோகூராழ்வான்
௧௨. பிள்ளைப்பிள்ளையாழ்வான்
௧௩. நடாதூராழ்வான்
௧௪. எங்களாழ்வான்
௧௫. அநந்தாழ்வான்
௧௬. மிளகாழ்வான்
௧௭. நெய்யுண்டாழ்வான்
௧௮. செட்டலூர்சிறியாழ்வான்
௧௯. வேதாந்தியாழ்வான்
௨0. கோயிலாழ்வான்
௨௧. உக்கலாழ்வான்
௨௨. அரணபுரத்தாழ்வான்
௨௩. எம்பார்
௨௪. கிடாம்பியாச்சான்
௨௫. கணியனூர்சிறியாச்சான்
௨௬. ஈச்சம்பாடியாச்சான்
௨௭. கொங்கிலாச்சான்
௨௮. ஈச்சம்பாடிஜீயர்
௨௯. திருமலைநல்லான்
௩0. சட்டம்பிள்ளைஜீயர்
௩௧. திருவெள்ளறைஜீயர்
௩௨. ஆட்கொண்டவல்லிஜீயர்
௩௩. திருநகரிப்பிள்ளை
௩௪. காரஞ்சிசோமயாஜியார்
௩௫. அலங்காரவேங்கடவர்
௩௬. நம்பிகருந்தேவர்
௩௭. சிறுப்பள்ளி தேவராஜபட்டர்
௩௮. பிள்ளையுறந்தையுடையார்
௩௯. திருக்குருகைப்பிரான்பிள்ளா[ன்
௪0. பெரியகோயில்வள்ளலார்
௪௧. ஆசூரிப்பெருமாள்
௪௨. திருக்கண்ணபுரத்தரசான்
௪௩. முனிப்பெருமாள்
௪௪. அம்மங்கிப்பெருமாள்
௪௫. மாருதியாண்டான்
௪௬. மாறொன்றில்லா மாருதியாண்[டான்
௪௭. ஸோமாஸியாண்டான்
௪௮. ஜீயராண்டான்
௪௯. ஈச்வராண்டான்
௫0. ஈயுண்ணிப் பிள்ளையாண்டான்
௫௧. பெரியாண்டான்
௫௨. சிறியாண்டான்
௫௩. குறிஞ்சிபுரம்சிறியாண்டான்
௫௪. அம்மங்கியாண்டான்
௫௫. ஆளவந்தாராண்டான்
௫௬. அருளாளப்பெருமாளெம்பெ[ருமானார்
௫௭. தொண்டனூர்நம்பி
௫௮. மருதூர்நம்பி
௫௯. மழுவூர்நம்பி
௬0. திருக்குறுங்குடிநம்பி
௬௧. குருவைநம்பி
௬௨. முடும்பைநம்பி
௬௩. வடுகநம்பி
௬௪. வங்கிபுரத்துநம்பி
௬௫. ஸ்ரீபராங்குசநம்பி
௬௬. அம்மங்கியம்மாள்
௬௭. பருத்திக்கொல்லையம்மாள்
௬௮. உக்கலம்மாள்
௬௯. சொட்டையம்மாள்
௭0. முடும்பையம்மாள்
௭௧. கோமாண்டூர்பிள்ளை
௭௨. கோமாண்டூரிளையவல்லி
௭௩. கிடாம்பிப்பெருமாள்
௭௪. ஆர்க்காட்டுப்பிள்ளான்.

(௬௩) "ஸம்ஸேவிதஸ்ஸம்யமிஸப்தசத்யா பீடைச்சதுஸ்ஸப்ததிபிஸ்ஸமேதை: அன்யைரனந்தைரபிஸத்துபக்தை: ஸ ராஜதே ரங்கயதிஸார்வபௌம:" (సంసేవితస్సంయమిసప్తశత్యా పీఠైశ్చతుస్సప్తతిభిస్సమేతైః, అన్యైరనంతైరభిసత్తుభక్తైః స రాజతే రంగయతిసార్వభౌమః) என்கிறபடியே, எழுநூறு உத்தமாச்ரமிகளாலும், எழுபத்துநாலு ஸிம்ஹாஸநஸ்தரான ஆசார்யபுருஷர்களாலும், அஸங்க்யாதரான சாத்தாத முதலிகளாலும், பன்னீராயிரம் ஏகாங்கிகளாலும், முன்னூறு கொத்தியம்மைமார்களாலும், எண்ணிறந்த ராஜாக்களாலும், இப்படி அகிலராலும்சேவ்யமானராய் இவ்வைச்வர்யத்துடனே (௬௪) "ஸ்ரீரங்கநாதோ ஜயது ஸ்ரீரங்கஸ்ரீச்ச வர்த்ததாம்" (శ్రీరంగనాథో జయతు శ్రీరంగశ్రీశ్చ వర్ధతామ్) என்று நம்பெருமாளை மங்களாசாஸநம்பண்ணிக்கொண்டு சேவித்திருந்தார்.

இப்படியிருக்கிற உடையவர் திருவடிகளிலே நித்ய கை-------பண்ணும் முதலிகள்:—கூரத்தாழ்வானும், முதலியாண்டானும், நடாதூராழ்வானும், பட்டவர்க்கமும், ஸ்ரீபாஷ்யத்திற்கு உசாத்துணையாயிருப்பார்கள். அருளாளப்பெருமாளெம்பெருமானார், ஜ்ஞாநஸாரம், ப்ரமேயஸாரம் என்கிற ப்ரபந்தங்களை யிட்டருளி, எழுதி உடையவர் ஸந்நிதியிலேவைத்து ஸேவித்துநிற்க, உடையவரும் ஆத்யந்தமாகத் திருக்கண்சாத்தியருளிஉகந்து, அன்றுமுதல் தம்முடைய திருவாராதநமான பேரருளாளனைத் திருவாராதநம் பண்ணிக்கொண்டிருமென்று நியமித்தருளினார்; அன்றுமுதல் திருவாராதநம் செய்தருள்வர். கிடாம்பிப்பெருமாளும், கிடாம்பியாச்சானும், திருமடப்பள்ளிக்குக் கடவராயிருப்பார்கள். வடுகநம்பி, எண்ணெய்க்காப்பு சாத்தியருள்வர். கோமடத்து சிறியாழ்வான் கலசப்பானையையும், ஸ்ரீபாதரக்ஷையையு மெடுப்பர். பிள்ளை யுறங்காவல்லிதாஸர், கருவூலம்நோக்குவர். அம்மங்கி பாலமுது காச்சுவர். உக்கலாழ்வான் ப்ரசாதகலமெடுப்பர். உக்கலம்மாள் திருவாலவட்டம் பணிமாறுவர். மாருதிப்பெரியாண்டான் திருக்கைச்சொம்புபிடிப்பர். மாறொன்றில்லா மாருதிச்சிறியாண்டான் மடத்திற்கு அமுதுபடி, கறியமுது, பாலமுது, நெய்யமுது முதலானவை நடத்திப்போருவர். தூயமுனி வேழம் திருமஞ்சநமெடுப்பர். திருவரங்க மாளிகையார் ஸ்ரீபண்டாரம்நோக்குவர். வண்டரும், சுண்டரும், கைக்காயிரம்பொன்னுக்கு ராஜசேவைபண்ணி மடத்திற்குத் திருக்கைவழக்காக்கி யருள்வர்கள்; ராமாநுஜவேளைக்காரர் திருமேனிக்காவலாய்ப் போருவர். அகளங்க நாட்டாழ்வான் ப்ரதிபக்ஷநிரஸநம் பண்ணிப்போருவர்.

## ஸ்ரீவடுகநம்பிவைபவம்.

இவர்களில் வடுகநம்பி, எம்பெருமானார் திருவடிகளே உபாயோபேயமென்று விஸ்வசித்து அவர் திருவடி நிலைகளையே திருவாராதனம் பண்ணிப் போருவர். ஒரு பயணத்திலே வடுகநம்பி, உடையவர் திருவாராதநத்தையும், தம்முடைய திருவாராதனத்தையும் சேர வெழுந்தருள வைத்துக் கொண்டுவர; உடையவருங்கண்டு, வடுகா யிதென்ன செய்தாய்? என்ன; இவரும், உங்கள் தேவரில் எங்கள் தேவருக்கு வந்தகுறையென்னென்று விண்ணப்பஞ்செய்தார். வடுகநம்பி உடையவருடன் பெருமாளை சேவிக்கப் போனாலும், உடையவர் விக்ரஹத்தையே சேவித்துக்கொண்டுபோருவர். இருநாளித்தைக்கண்டு எம்பெருமானார், பெரியபெருமாளுடைய திருக்கண்ணழகைப் பாராயென்ன; இவரும், பெருமாள் திருக்கண்ணழகையும் உடையவர் திருக்கண்ணழகையும் பார்த்து "என்னமுதினைக் கண்டகண்கள் மற்றொன்றினைக் காணாவே" என்ன; உடையவரும், இதொருவர் நுக்தபடி என்னென்று உகந்து, வடுகநம்பியை பூர்ணகடாக்ஷஞ் செய்தருளினார். வடுகநம்பி, எம்பெருமானார் அமுதுசெய்தருளின தளிகை ப்ரசாதம் ப்ரசாதிக்கால், இரண்டு திருக்கைகளாலும் ஏற்றுக்கொண்டு ப்ரசாதம் ஸ்வீகரம்பண்ணி, தம திருமுடியிலே திருக்கைகளைத் தடவிக்கொண்டு போருவர். இத்தைக்குருவர் உடையவர்கண்டு, கனக்ககோபித்து, வடுகா! கைகளைக்கழுவிக்கொள்ளென்ன, கழுவிக்கொண்டு, மற்றைநாள், நம்பெருமாள் அமுதுசெய் தருளின காலத்தில் உடையவருடன் சென்றவளவில், உடையவரும், தமக்கு ப்ரசாதித்த பெருமாள் ப்ரசாதத்தைத் தாமும் ஸ்வீகரித்தருளி, இவருக்கும், வடுகா! இதோவென்று ப்ரசாதிக்க, இரண்டுதிருக்கைகளாலு மேற்றுக்கொண்டு ப்ரசாதப்பட்டு, தம் திருவடிகளில், ஸ்ரீவைஷ்ணவர் திருக்கைவிளக்க ப்ரசாதிக்க, திருக்கை விளக்கிக்கொண்டார். உடையவர், இதுகண்டு, இதென்செய்தாய் வடுகா வென்ன, நேற்று அருளிச்செய்தபடி செய்தேனென்றார். இதுகேட்டு உடையவரும், உமக்குத் தோற்றோமென் றருளினார். வடுகநம்பி ஒருநாள் உடையவர்க்குப் பாங்காக பாலமுது காய்ச்சாநிற்க, பெருமாள் பெரியதிருநாளில் உடுத்து, முடித்து, பூண்டு புறப்பட்டருள, உடையவரும் பெருமாளை சேவிக்கப் புறப்பட்டு, வடுகா பெருமாளை சேவிக்கவாவென்ன; நம்பியும், உம்முடைய பெருமாளை சேவிக்கவந்தால், என்னுடைய பெருமாளுக்கு காயாநிற்கிற பாலமுது பொங்கிப்போம், வரக்கூடாதென்றருளினார். வடுகநம்பியகத்தே பூர்வசம்பந்திகளா யிருப்பார் சிலர்வந்து தங்கிப்போக, அகத்தையெல்லாம் சுற்றி சோதித்து பூசி தத்ஸ்ப்ருஷ்ட பாண்டங்களையுமுடைத்துப்

போகட்டு, இதற்கு ப்ராயச்சித்தம் என்னென்று விசாரித்து, முதலியாண்டான் புறக்கடையில் கழித்துக்கிடந்த பாண்டங்களைக் கொண்டுபோய் விநியோகங்கொண்டார். ஆகையால்ஆசார்யசம்பந்தமுள்ளார் எல்லைக்குள்பட்டதில் அபாவகத்வபுத்தியின்றியே வைஷ்ணவத்வபுத்தி பண்ணினபடி. வடுகநம்பி உடையவர் ஸ்ரீபாததீர்த்தமல்லது மற்றொருவர் ஸ்ரீபாததீர்த்தங் கொள்ளார். தீர்த்தமியதியும்அவர்க்கேயு மெதிரே. இப்படியேதீர்த்தநியதியையுடையராய், அவர் ஸ்ரீபாததீர்த்தத்தை ஸ்ரீஸாளக்ராமத்திலே தாம்சேர்த்து தநமாகச் செபித்து வைத்துப் பேணிக்கொண்டு, உடையவர் திருவடிநிலைகளையே திருவாராதனமாக வுடையராய், அவை தன்னையே அங்கே ப்ரதிஷ்டித்து நோக்கிக்கொண்டு போந்து, தம் சரமதசையிலும் தம் அந்தரங்கரான சரமாதிகாரிகளுக்கும் தஞ்சமாகக் காட்டிக்கொடுத்து, சித்தநமிது, வருந்தியும் பேணிக்கொண்டு போருங்கோளென்று அடைக்கலங்காட்டிக்கொடுத்தருளினார்.

## ஸ்ரீ அநந்தாழ்வான் வைபவம்.

பின்னையும், அநந்தாழ்வான் ராமாநுஜ புத்தேரி கட்டிவைக்கும்போது, மண்சுமவாநிற்க, பிள்ளைகளிலே யொருவர் சென்று கூடையை வாங்கப்புக, நான் அத்தைவிட இளைப்பன், நீ இத்தைத்தொடில் இளைப்புதீ யென்றருளிச்செய்ய; இளைப்பாகதென்று பிள்ளை பின்னையுங்கூடையை வாங்கப்புக; ஆகில், நான் ஜீவிக்கிற ஜீவனத்தை வாங்கவேணுமோ, நீயும் வேணுமாகில் ஒருகூடையை வாங்கிக்கொண்டு சுமக்கமாட்டாயோவென் றருளினார். பின்னையுமொருநாள் கர்ப்பவதியான தம் தேவிகள்மேலே மண்சுமந்தாநிற்க; இதுகண்டு திருவேங்கடமுடையான் ஒரு பிள்ளையாய் எதிரேவந்து வாங்கிக்கொண்டுபோக; தேவிகள் கடுக வருமதுகண்டு, இதுவென் கடுக வருகிறதென்ன; அவரும், ஒருபிள்ளை எதிரேசென்று கூடையை வாங்கிக்கொண்டு போகிறானென்று சொல்லக்கேட்டு, உடனேசென்று கண்டு, கைங்கர்ய விக்னகாரி, கூடையைத் தொடாதே கொள்ளென்று கொட்டெடுத் தடிக்கப்புக; திருவேங்கடச்செல்வன் ஓடிச்சென்று கோவிலிலே புகுந்தானென்பர்கள். அநந்தாழ்வான், திருநந்தவனத்திலே திருப்பளித்தா மெடாநிற்க, திருக்கையிலே போகிசந்தஷ்டமாக, பின்னையும் போய் நீராடி கைங்கர்யத்திலேபோர; ஸ்ரீபாதத்துக்குப் பரிவராயிருப்பார் விஷந்தீர்க்கப் பார்க்கவேண்டாவோவென்ன, அத்தை நிவர்த்திப்பித் தருளினார், பின்பு கோவிலேர வெழுந்தருளினவாறே, திருவேங்கடமுடையான் திருவாய்மலர்ந்து விஷந்தீர்க்க வேண்டாவென்று என்ன நினைத்துச்சொன்னீரென்று கேட்டருள, இவரும், கடியுண்டபாம்புவலிதாகில்திருக்கோனேரியிலே தீர்த்தமாடி திருவேங்

கடமுடையானைசேவிக்கிறேன்; கடித்தபாம்பு வழியாகவிரஜையிலேதீர்த்த மாடி ஸ்ரீவைகுண்டநாதனை சேவிக்கிறேனென் றிருந்தேனென்று விண்ணப் பஞ்செய்தார். அநந்தாழ்வான் கோஸலாப்பத்தியப் பெருந்திருநாறுகிறபோது, கட்டுத்திருப்போனகம் கட்டிக்கொண்டுபோய் ஆறுதுசெய்யப் புக்கவாறே, பட்டையடங்கலும் சிற்றெறும்பாய்க்கிடக்க, அத்தைக்கண்டு சிரித்தென்று "எம்பெருமான் திருமலைமேலே தேனுமாவேனே" என்று அவர்களிலே சில ராய்த் திவர்கள், இப்படியே கொண்டுபோய் திருமலையிலே வைத்து வாருங் கோளென்று அருளினார். அநந்தாழ்வான், திருமாலைசேர்க்கும் மண்டபத்தி லேயிருந்து திருமாலை கட்டாநிற்க, திருவேங்கடமுடையார் அருள்பாடிட, பேசாதேயிருந்து, திருமாலைகட்டி சேர்த்துக்கொண்டு வந்து நிற்கவாவே ; திருவேங்கடமுடையாரும், நாமழைக்க, அநந்தாழ்வான் நீர் வாராதிருந்த தென்னென்று திருவுள்ளமாக ; இவரும், தேவரீரைக் கொண்டு காரியமென், இளங்குருத்தொட்டு வெடியாநிற்க, வென்றார்; திருவேங்கடமுடையாரும், ஆகில், நாம் உம்மை யிங்குநின்றும் போகச்சொன்னோமாகில் செய்வதென் னென்று திருவுள்ளமாக ; இவரும், "பரன்சென்று சேர் திருவேங்கடம்" அன்றோ, தேவரீரன்றோ வந்தேறி; இவ்விடம் தேவரீரை யாஸ்ரயிக்கவந்தா ருதன்றோ, தேவரீர் ஒருநிறமை முற்பட்டுபரிக்கவோ ; இருவரும் திருமலையாழ் வாரை யாஸ்ரயித்தோ மித்தனையன்றோ வென்று விண்ணப்பஞ் செய்தார்.

## ஸ்ரீகூரத்தாழ்வான்வைபவம்.

இப்படிப்பட்ட வித்யாவைபவத்துடனே உடையவர் வாழ்ந்தருளுங் காலத்திலே, எம்பெருமானுருக்கு விண்ணப்பஞ்செய்யாதே ஆழ்வான், நம் பெருமாள் ஸந்நிதியிலே சென்றுசேவித்து நிற்க; பெருமாளும், ஆழ்வான், நீ யொன்று சொல்லுவான்போலே யிருந்தாயென்று திருவுள்ளமாயருள; இவ ரும், ஒருஸ்லோகத்தை விண்ணப்பஞ்செய்து உபந்யஸிக்க ; பெருமாளும், உமக்கு வேண்டினதெல்லாந் தருகிறோம், வேண்டிக்கொள்ளுமென்று உகப் பின்மிகுதியாலே திருவாய்மலர்ந்தருளிச்செய்ய ; ஆழ்வானும், நாயிந்தே, அடியேனுக்குப் பண்டேயெல்லாந் தந்தருளித்தேயென்ன ; பெருமாளும், அப்படியன்று இப்போதும் வேண்டிக்கொள்ளும், பெண்பிள்ளைகளானை, நம்மி ராமாநுசனையே தருகிறோமென்று திருவுள்ளமாக ; ஆழ்வானும், ஸ்வஸ்வரூ பவிரோதியான இஸ்ஸரீரத்தை விடுவித்து, ஸ்வஸ்வரூபத்தைத் தந்தருளவே ணுமென்று அபேக்ஷிக்க ; அத்தையொழியச் சொல்லென்றருள ; இவரும், "தாழ்வொன்றும் காமமேகாட்டுங்கடிது" என்கிறபடியே, அடியேன் அபேக்ஷி

தார்த்தத்தையே ப்ரஸாதிக்க வேணுமென்று விண்ணப்பஞ்செய்ய ; ஆகில், உமக்கும், உம்முடைய சம்பந்தமுடையார்க் கெல்லார்க்கும்பரமபதந்தந்தோ மென்றருளிச்செய்தருளி, திருப்பரிவட்டமும், தளிகை ப்ரசாதமும், பூந்த ண்டுழாய் மாலைத்தண்டுழாயும், திருக்கைச்சிறப்பும் ப்ரசாதித்துவிடைகொடு த்தருளினர். பின்பு, ஆழ்வான், அர்ச்சாதி மார்க்கத்திற்கு ப்ரதமாலங்காரம் போலே யிருக்கப்புறப்பட்டு, தம்திருமாளிகையிலும் புகுராதே, ஆழ்வார் திருமாளிகையிலே புறவீடு விட்டெழுந்தருளி யிருந்தார். உடையவரும் இத் தைக்கேட்டு, உடுத்தகாஷாயத்தைவாங்கி ஆகாசத்தேரவெறிந்து யேற்றுக் கொள்ள; ஸ்ரீபாதத்து முதலிகள் இதுவென்ஜிய்யாவென்றுகேழ்க்க ; உடைய வரும், நமக்காழ்வான் சம்பந்தமுண்டேல் பரமபதம்பெறலாமென் றருளிச் செய்தருளினர். ஆகையால் ஸதாசார்யஸம்பந்தியோடு ஸச்சிஷ்யஸம்பந்தியோடு வாசியில்லையிறே. உடையவரும், ஶோகாவிஷ்டராய், ஸ்ரீபாதத்து முதலிகளை யெல்லாரையுங் கூட்டிக்கொண்டு, ஆழ்வானிருந்த விடத்தேறச்சென்று, ஆழ் வான், நீரிப்படி செய்தருளலாமோவென்ன; ஆழ்வானும் பேசாதேயிருந்தார். உடையவரும், ஆழ்வான் உமக்கு முற்படவேண்டுமபிப்ராயமென், பேசாதிரு க்கிறதென்னென்றுகேட்டருள; ஆழ்வானும், பரமபதத்தில்நடக்கும் அடைவு கேட்டுக் கஞ்சியென்ன ; உடையவரும் அதுசொல்லிக் காணீரென்ன ; ஆழ் வானும், "முடியுடைவானவர் முறைமுறை யெதிர்கொள்ள" வென்று நித்ய ஸூரிகளுடன் முற்பட்டவர்கள்பிற்பட்டவர்களை யெதிர்கொள்ளவருவர்கள். அது, அடியேன் பிற்படில் அடைவுகேடாமென்ன ; உடையவ ரிதுகேட்டு (௩௯௨) "[illegible]" ([illegible]) என்றடை கெட்டிருக்கும் போகவிபூதியிலே நீர் அடைவுதேடுவதே, இதொருஶேஷத் மிருந்தபடி யென்னென்று போரவித்தராய் திருமுத்துதிர்த்து, உடைய இவர் கொடுகிற கிலேசையறிந்து, இவர்செவியிலே த்வயத்தை யருளி செய்ய ; முதலிகளும் இப்போதாக விதுவென்னென்ன ; நீங்களறிவீர்க ளோ, ராஜகுமாரனுக்கு கர்ப்பூர நிகரமில்லாதபோது நாக்குவரளுமா போலே இவர்க்குந் த்வயமில்லாதபோது நாக்குவரளுமென்றருளிச்செய்து ஆழ்வானையணைத்துக்கொண்டு விம்மல்புரம்பி, திருவுள்ளமுடைகுலைப்பட்டு ஆழ்வான், என்னுயிர்நிலையான உம்மையிழந்து எங்ஙனே தரிப்பேன், எ னையுமுடன்கொண்டுபோகத் திருவுள்ளம் பெற்றிலீர், நம்மை விட்டுப்போ உமக்குருசிப்பதே, (௩௯௩) "[illegible]" ([illegible]) யானபெருமாள்பக்கல் ஸங்கமற்று, பரமபத நிலயனானவ பக்கல்ஸங்கம் உம்மை இப்படிமுந்தாபண்ணுவதே, பரமபதநாதனும், அ

குள்ளநித்யஸூரிகளும் என்னபாக்யம்பண்ணிஞர்களோ; இங்குரங்குகிறபெருமாளும் இங்குள்ளநாங்களும் என்னபாபம் பண்ணிேஞமோ; உன்றிருவுள்ளங் கலங்கச்சொல்லி என்ன ப்ரயோஜனமுண்டு, உம்பேற்றுக்கு நாம் விலக்கடி யாகலாமோ, சுகமேநித்ய விபூதியேற வெழுந்தருளீ ரென்று ஆழ்வான்றிருமுதுகைத் தடவி அஞ்ஜலித்து விடைகொடுத்தருள; ஆழ்வானும், உடையவர் திருவடிகளிலே வேரற்றமரம்போலே விழுந்துகிடக்க; உடையவரும், இரண்டுதிருக்கைகளாலும் வாரியெடுக்க எழுந்திருந்து, உடையவர் திருவடிகளை தம்திருக்கண்களிலும், திருமார்பிலும் ஒத்திக்கொண்டு ஸ்வஸிரோபூஷண மாக்கிக்கொண்டு தீர்த்தங்கொள்ள, உடையவரும் திருக்கைகளாலேப்ரசாதிக்க, நிமையப்ரசாதப்பட்டு, (கூகூச) "𑌯𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌚𑍍𑌯𑍁𑌤 𑌪𑌦𑌾𑌮𑍍𑌬𑍁𑌜𑌯𑍁𑌗𑍍𑌮𑌰𑍁𑌕𑍍𑌮 𑌵𑍍𑌯𑌾𑌮𑍋𑌹𑌤𑌸𑍍𑌤𑌦𑌿𑌤𑌰𑌾𑌣𑌿 𑌤𑍃𑌣𑌾𑌯 𑌮𑍇𑌨𑍇, 𑌅𑌸𑍍𑌮𑌦𑍍𑌗𑍁𑌰𑍋𑌰𑍍𑌭𑌗𑌵𑌤𑍋𑌽𑌸𑍍𑌯 𑌦𑌯𑍈𑌕𑌸𑌿𑌨𑍍𑌧𑍋𑌃 𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌸𑍍𑌯 𑌚𑌰𑌣𑍌 𑌶𑌰𑌣𑌂 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑍇" (యోనిత్యమచ్యుత పదాంబుజయుగ్మరుక్మ వ్యామోహతస్తదితరాణితృణాయమేనే, అస్మద్గురోర్భగవతో౽స్యదయైకసిన్ధోః రామానుజస్యచరణౌ శరణంప్రపద్యే) என்று அனுசந்தியா நின்றுகொண்டு க்ருதாஞ்சலிபுடராய், இனி மட்டமே எழுந்தருள வேணுமென்று விண்ணப்பஞ்செய்து, வடவாற்றங்கரையளவாக உடையவர் பின்னேசெல்ல; இனி யாழ்வான், நில்லுமென்ன, தெண்டஞ்சமர்ப்பித்து மீண்டு ஆழ்வார் திருமாளிகைக்கு அருகிலிட்ட திருக்காவணத்தின்னடுவே எழுந்தருளியிருந்து; ஆண்டாளைப்பார்த்து என்னினைத்திருக்கிறுயென்ன; ஆண்டாளும், அடியேனுக்கு வேறொரு நினைவுண்டோ? தேவரீர்திருவுள்ளத்தைப் பின்செல்லுகையொழிய வென்றுதிருவடிகளிலே தெண்டனிட்டு அஞ்சலித்து நிர்க்க; ஆழ்வானும், பட்டரையும், சீராமப்பிள்ளையையும் அழைத்தருளி,பெருமாளும் நாச்சியாருமெழுந்தருளியிருக்க உங்களுக்கொருதாழ்வில்லை, நம்பெருமாள்பெற்று வளர்த்தாரொன்று அதுவே தஞ்சமென்றிராதே, எம்பெருமானர் திருவடிகளே தஞ்சமென்றிருங்கோள்; ஆண்டாள் சொன்னபடியே வர்த்தியுங்கோள், பாகவதவிஷயத்திலே த்ரிவிதகரணங்களாலும் அபராதம்பண்ணுதே அவர்களை யனுவர்த்தித்துக் கொண்டு போருங்கோளென்று அருளிச்செய்து, திருவடிகளிலே விழுந்துகிடக்கிற பட்டரையும் சீராமப்பிள்ளையும் எடுத்து, திருக்கையாலே கண்ணில் நீரைத்துடைத்து, நீங்கள் ப்ராக்ருதசம்பந்தத்தை நினைத்து க்லேஸித்தீர்களாகிலும், உடையவர் திருவடிகளில் ஸம்பந்தத்தை தூஷித்தவர்களாவுதிகோள்; ஆத்ம ஸம்பந்தத்தை நினைத்து க்லேஸித்தீர்கோளாகில் நம்முடைய ஒழிக்க ஒழியாத உறவை யறிந்திலீர்கோளாவுதிகோள் என்று

அவர்களை தேத்தி, கோயிலுக்கு நேரே பிள்ளைப்பிள்ளை யாழ்வான் மடியிலே திருமுடியையும், ஆண்டாள்மடியிலே திருவடிகளையும் வைத்து, உடையவர் திருவடிகளை த்யானித்துக்கொண்டு அன்றே திருநாட்டுக் கெழுந்தருளினார். உடையவர் இதுகேட்டு, அங்கேற வெழுந்தருளி, ஆழ்வான்குமாரரான பட்டரைப்பார்த்து, க்லேசியாதேயென் றருளிச்செய்தருளி, ஆழ்வானுக்கு சரம கைங்கர்யத்தைச் செய்யுமென்ன; பட்டரும் பெருமாள் பரிகரத்தையும், அங்குள்ள ஸ்ரீவைஷ்ணவர்களையுங்கூட்டிக்கொண்டு (௱௬௫) "ஸர்வகர்மாணி ஸந்த்யஜ்ய காயத்ர்யா வைஷ்ணவேந ச நாராயணாநுவாகேந ஸ்நாபயேத் தாம் ஸுத:" (సర్వకర్మాణిసంత్యజ్య గాయత్ర్యావైష్ణవేనచ నారాయణానువాకేన స్నాపయేత్తాంసుతః) என்கிறபடியே, ஆழ்வானை நீராட்டப்பண்ணி, கேசவாதி திருநாமங்களையுஞ் சாத்தி அலங்கரித்து, ஸ்ரீசூர்ணபரிபாலனமும்பண்ணி, எழுந்தருள வைத்துக்கொண்டுபோய் (௱௬௬) "கேசவார்ச்சித ஸர்வாங்கம் சரீரம் மங்களாவஹம் ஸத்யபாமாஹயேத்விப்ரோ ப்ரஹ்மமேதவிதிநா" (కేశవార్చితసర్వాంగం శరీరంమంగళావహం సత్యభామాహయేద్విప్రో బ్రహ్మమేధ విధినా) என்கையாலே, கேசவன்றமரானமுமுக்ஷுக்கள் திருமேனிவிட்டால், அத்திருமேனியை ப்ரஹ்மமேத ஸம்ஸ்காரமொழிய வேறொன்றில் ஸம்ஸ்கரிக்க வொண்ணா தென்கையாலும் (௱௬௭) "ப்ரஹ்மமேதவ்ரதம் ப்ரோக்தம் முநிபிர் ப்ரஹ்மதத்பரை: மஹாபாகவதாநாம் ஹி கர்த்தவ்ய மிதிஸூத்ரம்" (బ్రహ్మమేధవ్రతంప్రోక్తం మునిభిఃబ్రహ్మతత్పరైః మహాభాగవతానాంహి కర్తవ్యమితసూత్రం) என்று ஹாரீதஸ்ம்ருதியிலே சொல்லுகையாலும் மஹாபாகவதோத்தமரான கூரத்தாழ்வானை, பட்டர், ஸம்ஸ்கரித்து பள்ளி படுத்தருளினார். பின்பு, பத்து பன்னிரண்டுநாளும் செய்யுங்க்ருத்யங்களை, சாஸ்த்ரோக்த ப்ரகாரத்திலே செய்தருளி, பட்டர், உடையவரையும், முதலிகளையும், எழுந்தருள வைத்துக்கொண்டுபோய் (௱௬௮) "நாத: பரதரம் தீர்த்தம் வைஷ்ணவாங்க்ரிஜலாச்சுபம் தேஷாம் பாதோதகம் புண்யம் கங்காமபி புநாதிஹி" (నాతఃపరతరంతీర్థం వైష్ణవాంఘ్రిజలాచ్ఛుభం తేషాంపాదోదకంపుణ్యం గంగామపిపునాతిహి) என்னும்வைபவமுடைய பாகவத ஸ்ரீபாததீர்த்தத்தையும்பிடித்து ஸ்வீகரித்தருளி (௱௬௯) "ஸ்ரீபாதாத் த்விஜவரேப்யஸ்து ஸர்வஸம்பச்சுபாவஹம் ஸஹஸ்ரசாகாத்யயந ஜந்யபுண்யாதிகோத்தம:, ஸஹஸ்ராம் தேவி ஸேவேண த்ராயீ ப்ரஹ்மஸம்ஹிதா ஸஹஸ்ரதத்வாத் த்விஜவரேண ஸம்பாதிநாஸிநி" (శ్రీపాదాద్ద్విజవరైర్యశ్చ సర్వసంపచ్ఛుభావహం సహస్రశాఖా

వ్యయసంహార యద్వైవాదిశోత్తమః అశుభాం తేవిశేషేణ ద్రామిడీబ్రహ్మసంహితా అద్వైతవ్యా ద్విజవరై రాకాచాఘవినాశిని) என்றும், (௪௦௦) "வ்யாயாவாஹனக்ஷ்மயோகீந்த்ர: ப்ராசீனவ்யூஹஸம்ஹிதா கலெள த்வ்யாஜிஜ ஶ்ரேஷ்டை: ராகாத்ராகீத்தவாக்மஹா ஸ்ரீ:" (వృదావాదౌ కుయేచాంతే ద్రామిడీబ్రహ్మసంహితా అద్వైతవ్యాద్విజశ్రేష్ఠ రాకాగీతసహస్రకీ) என்று ப்ரஹ்மாண்ட புராணத்திலே சொல்லுகிறபடியே, திருவாய்மொழி ப்ரபந்தத்தையும் அநுஸந்தித்து, அநந்தரம் புஷ்பாஞ்ஜலி பண்ணு சாற்றியருளி, (௪௦௧) "யதா த்வஷ்டிரிஹ வை வைஷ்ணவா ஸஹாஸ்ரமவதார்த்தநாத் ததா தஸ்யாஷ்டதேவிஷ்ணு: ப்ரீயதே ஸ்துதநாதவி" (యథాయస్య మాచేకేశో మహాభాగవతార్చనాత్ తదానతుష్యతే విష్ణు ర్యదివత్ స్వార్చనాదపి) என்றுஞ்சொல்லுகையாலே, ஸ்ரீவைஷ்ணவர்களையும் அமுது செய்யப்பண்ணி, சாத்துவித்தருளினார்.

கூரத்தாழ்வான் திருநக்ஷத்ரம், தையில் ஹஸ்தம், அவர் தனியன், (௪௦௨) "ஸ்ரீவத்ஸ விஹ்ந மிஶ்ரேப்யோ நமவுக்திமதீமஹே யதுக்தயஸ்த்ரயீகண்டே யாந்திமங்களஸூத்ரதாம் ஸ்ரீமத்கூரகுலாதீஶம் ஸ்ரீவத்ஸாங்கமுபாஸ்மஹே அக்ர்யம் யதீந்த்ரஶிஷ்யாணாம் ஆத்யம் வேதாந்தவேதிநாம்" (శ్రీవత్సచిహ్నమిశ్రేభ్యో నమ ఉక్తిమధీమహే యదుక్తయ స్త్రయీకంఠే యాంతి మంగళసూత్రతాం శ్రీమత్కూర కులాధీశం శ్రీవత్సాంకముపాస్మహే అగ్ర్యం యతీంద్రశిష్యాణాం ఆద్యం వేదాంతవేదినాం)

அதன்மற்றைநாள், உடையவர், பட்டரை அழைத்துக்கொண்டு, நம்பெருமாளை சேவிக்கவெழுந்தருளி அழகியமணவாளன் திருமண்டபத்திலே தெண்டஞ்சமர்ப்பித்து, பட்டரை கையைப்பிடித்துகொண்டுபோய் பெரியபெருமாள் திருவடிகளிலே காட்டிக்கொடுக்க; பெருமாளும் மீளவும் பட்டரை மஞ்சள்நீர் குடிப்பித்து விசேஷித்து, புத்ரஸ்வீகாரம்பண்ணி யருளி அர்ச்சகமுகேன திருவாய்மலர்ந்தருளி ஆழ்வானையிழந்தோமேயென்று வ்யாகுலப்படாதே; நம்மை ஆழ்வானாக நினைத்திருமென்று அருளிச்செய்தருள; இத்தைக்கண்டு சந்தோஷித்து, உடையவரும், பெருமாளைக்குறித்து, தேவரீர், இவர்க்கு ஆயுஸ்ஸை ப்ரசாதித்தருள; அடியேன் வித்யையை அப்யஸிக்குறேனென்று விண்ணப்பஞ்செய்ய; பெருமாளும், வாய்திரவாதே தீர்த்தப்ரசாதமும் ப்ரசாதித்து விடைகொடுத்தருள; உடையவரும் பட்டரையழைத்துக்கொண்டு மீண்டு தம்மடமேயெழுந்தருளி, எம்பாரைப்பார்த்து, இவரை நம்தர்ஶன ப்ரவர்த்தகராம்படி ஶாஸ்த்ராப்யாஸம்பண்ணிவையுமென்று அவர்கையிலே காட்டிக்கொடுத்து, முதலிகளுக்கு பகவத்விஷய வைபவம் அருளிச்செய்யாநின்றுகொண்டு எழுந்தருளியிருந்தார்.

இப்படி யிருக்கிற உடையவர் ப்ரபாவத்தை பெரியபெருமாளும், திருவேங்கடமுடையானும், பேரருளாளரும், திருநாராயணப்பெருமாளும், அழகரும், திருக்குறுங்குடி நம்பியும், நம்மாழ்வாரும், நாதமுனிகளும், ஆளவந்தாரும், பெரியநம்பியும், திருக்கோட்டியூர் நம்பியும், திருமலைநம்பியும், திருமாலையாண்டானும், ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையரும், மற்றும் ஸ்ரீபாதத்தில் முதலிகளும், ப்ரஹ்மரக்ஷஸ்ஸும், ஊமையும் வெளியிட்டார்கள்.

பெரியபெருமாள் வெளியிட்டபடி யெங்ஙனே யென்னில்:—திருப்பவளச்சோதி வாய்திறந்து, உபயவிபூத்யைஸ்வர்யத்தையும், உமக்கும் உம்முடையார்க்குந் தந்தோமென் றருளிச்செய்கையாலும்:

அப்பன் வெளியிட்டபடி யெங்ஙனேயென்னில்:—உமக்கும் உம்முடையார்க்கும் உபயவிபூத்யை ஸ்வர்யத்தையும் தந்தோமேமென்று நம்தெற்கு வீட்டிலே சொன்னோமேயென்று திருப்பவளவாய்திறந்து அருளிச்செய்கையாலும்: உடையவர் திருமலைக்கெழுந்தருளும்போது, தும்பையூர்கொண்டியென்பாளொரு கோபாங்கனை, உயி (தயிர்) விக்ரயம் பண்ணித்தந்தவள், க்ரய த்ரவ்யார்த்தமாகவந்து, உடையவரையும், முதலிகளையும் சேவித்துநிற்க; அப்போது, உடையவர் அவளுக்குத் தளிகை ப்ரசாதம் ப்ரசாதிக்கச் சொல்லி கிடாம்பியாச்சானை நியமித்தருள; அவரும் அப்படியே செய்தருள; பின்பு கிடாம்பியாச்சான் ப்ரசாதித்த ஸ்ரீபாததீர்த்தம் தளிகை ப்ரசாதத்தாலே ஸம்யத்ஜ்ஞானோதயமுண்டாய் அடியேனுக்கு உயி மூல்யம் தரவேண்டாம் மோக்ஷம் தரவேணுமென்று ப்ரார்த்திக்க; அதற்குத்திருவேங்கடவனென்ன அவளும், அதற்கு தேவரீர் ஒருசிறுமுறி தரவேணுமென்ன; உடையவரும் உகந்து, தரப்பெற்று, திருமலையேறி, த்வரித்துவரக்கண்டு, திருவேங்கடவர் எதிரேசென்று, சிறுமுறியை வாசித்துக்கொண்டு திருநாடுதேந் தருளுகையாலும்:

பேரருளாளர் வெளியிட்டபடியெங்ஙனேயென்னில்:—அருளாளப்பெருமா ளெம்பெருமானாருடன் தர்க்கித்தபோது, உத்தரம்சொல்லமாட்டாமல் பேரருளாளற்கு விண்ணப்பஞ்செய்ய, அப்போது, இன்னபடி உத்தரம் சொல்லுமென்று செங்கனிவாய் முறுவல்தோன்ற வருளிச்செய்கையாலும்; யாதவப்ரகாசனுக்கு, ஸ்வப்னமுகேந நம் மிராமாநுஜனை யொருப்ரதக்ஷிணம் பண்ணி த்ரிதண்டத்தில் ஸன்யஸியாயென் றருளிச்செய்கையாலும்:

திருநாராயணப்பெருமாள் வெளியிட்டபடியெங்ஙனேயென்னில்:—தொண்டனூரிலே ஸ்வப்பனங்காட்டியருளி யழைத்துக்கொண்டுபோய், அவருக்கு ப்ரஸன்னராய் ப்ரகாஸிக்கையாலும்; என்னுடைய செல்வப்பிள்ளை

யன்றோவென்று எடுத்தணைக்கும்படி யதிராஜகுமாரரான ஸௌம்யஜாமாத் தாரும் :

அழகர்வெளியிட்டபடி யெங்ஙனேயென்னில் :—ஒருநாள் திருவோலக்கத்திலே, நம்மிராமாநுஜ னடியார்க்கருளப் பாடென்று திருவுள்ளமாயருள ; நாயிந்தேயென்று ஆசார்யர்களெல்லாரு மெழுந்தருளி திருவடிகளிலே சேவித்துநிற்க, பெரியநம்பிவழியில் சிலர்வாராமலிருக்க ; நம்பியும், அதுவேன், நீங்கள் நாமழைக்க வாராதிருப்பானேனென்றுகேட்டருள, அவர்களும், ராமாநுஜனடியார்க் கருளப்பாடென்று தேவரீர் திருவுள்ளமாயருளுகையாலே, அவரொங்களுக்கு சிஷ்யரென்று வாராதிருந்தோமென்று விண்ணப்பஞ்செய்ய; அழகரும் தஶரதவசுதேவாதிகள், நம்மைப்புத்ரப்ரதிபத்திபண்ணினாப்போலே யிருந்தது, நீங்கள் ராமாநுஜனை ஶிஷ்யப்ரதிபத்திபண்ணினது, என்றும், பின்பு ஒருநாள் கிடாம்பியாச்சானை யருளப்பாடிட்டு, ஒன்று சொல்லென்று திருவுள்ளமாயருள ; அவரும், (௬௦௩) "𑌅𑌪𑌰𑌾𑌧𑌸𑌹𑌸𑍍𑌰𑌭𑌾𑌜𑌨𑌂" (అపరాధసహస్రభాజనం) என்று தொடங்கி (௬௦௪) "𑌅𑌗𑌤𑌿𑌂" (అగతిం) என்று சொல்ல ; அழகரும், நம்மிராமாநுஜனை யுடையாராயிருந்தும், (௬௦௫) "𑌅𑌗𑌤𑌿𑌂" (అగతిం) என்றுசொல்லப் பெறுமென்று திருவுள்ளமா யருளுகையாலும் :

திருக்குறுங்குடிநம்பி வெளியிட்டபடி யெங்ஙனே யென்னில் :— உடையவரும் முதலிகளும், நம்பியைசேவிக்க வெழுந்தருளின வளவிலே, திருக்குறுங்குடி நம்பியும் திருவோலக்கமாக வெழுந்தருளியிருந்து, உடையவரை யருளப்பாடிட்டு (௬௦௬) "𑌬𑌹𑍂𑌨𑌿𑌮𑍇𑌵𑍍𑌯𑌤𑍀𑌤𑌾𑌨𑌿𑌜𑌨𑍍𑌮𑌾𑌨𑌿𑌤𑌵𑌚𑌾𑌰𑍍𑌜𑍁𑌨" (బహూని మేవ్యతీతానిజన్మానితవచార్జున) என்றுஎத்தனைஜந்மம்பிறந்தோமென்றுதெரியாது அஜ்ஜந்மங்களிலே ஒருவரும் நமக்ககப்படாமல் (௬௦௭) "𑌆𑌸𑍁𑌰𑍀𑌂𑌯𑍋𑌨𑌿𑌮𑌾𑌪𑌨𑍍𑌨𑌾 𑌮𑍂𑌢𑌾𑌜𑌨𑍍𑌮𑌨𑌿𑌜𑌨𑍍𑌮𑌨𑌿, 𑌮𑌾𑌮𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑍈𑌵𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌤𑌤𑍋𑌯𑌾𑌨𑍍𑌤𑍍𑌯𑌧𑌮𑌾𑌂𑌗𑌤𑌿𑌂" (ఆసురీంయోనిమాపన్నామూఢాజన్మనిజన్మనిమామప్రాప్యైవకౌన్తేయ తతోయాన్త్యధమాంగతిం) என்கிறபடியே; ஆஸுர ப்ரக்ருதிகளாய்ப் பிறந்த ஜந்மங்கள்தோறும் மூடராய் நம்மைவந்து கிட்டாதே ; அதமமானகதியை யடைந்தார்கள் ; உமக்கிவ்வாத்மாக்கள் எல்லாரும், ஆகப்படுகிற விரகை நமக்குச் சொல்லவேணுமென்று திருவுள்ளமாக ; உடையவரும், தேவரீர்கேட்கும் க்ரமமேகேட்கில் சொல்லுகிறேனென்ன; நம்பியும், தம்ஸிம்ஹாஸநத்தினின்றுமிறங்கி யருளி, நிலத்திலே யொருதிருக்கைத்தோளியிலே படுத்தி அதிலே யெழுந்தருளி யிருந்து, இவருக்கு ஒருரத்நகம்பளம் ஆஸநமாகவிட்டு, இனிச்சொல்லுமென்ன; உடையவரும் அவ்வாஸநத்திலே, பெரி

யநம்பி ஆளவந்தாரொழுந்தருளியிருக்கிறார்களாக பாவித்துக்கொண்டு, அவர் திருச்செவியிலே ஹிதத்தை விண்ணப்பஞ்செய்ய, அன்று தொடங்கி நம்பியும், நம்மிராமாநுஜ முடையோமென் றருளிச்செய்கையாலும் :

இனி நம்மாழ்வார் வெளியிட்டபடி யெங்ஙனேயென்னில் :—லோகத்தைத் திருத்துவதாக எம்பெருமானோடே மார்தட்டி "நின்னைவேழ்க்கையெழுவிப்பனே" என்று எதிர்தட்டிக் கொண்டவர்தாமே "ஏபாவம்பரமே" என்று க்லேசித்து, அகவிடத்தே ஆராய்ந்தது ; திருத்தலாவதேயென்று, ஈமுவரன்அவதரித்துத் திருத்தவொண்ணாதலோகத்தை நாமோ திருத்தக்கடவோமென்றுகைவாங்கி "யானுமென்னெஞ்சு மிசைந்தொழிந்தோம்" என்று தாமும் தம்திருவுள்ளமுமேயாய், த்ரிகாலஜ்ஞராகையாலே, "கலியுங்கெடுங்கண்டுகொண்மின்" என்று உடையவர் திருவவதாரத்தைக் குறித்து அருளிச்செய்கையாலும் :

ஸ்ரீமந்நாதமுநிகள் வெளியிட்டபடி யெங்ஙனேயென்னில் :—குளப்படியிலேதேங்கினால் குருவிகுடித்துப்போம், வீரநாராயணபுரத் தேரியிலே தேங்கினால் நாடுவிளையுமென் றருளிச்செய்தது. உடையவர் திருவவதாரத்தைக் குறித்தென்னு மிடம் :—பெரியபெருமாளாகிற பெருங்கடலிலே ஆழ்வாராகிற காளமேகம்படிந்து, தத்கல்யாணகுணம்ருதத்தைப் பருகி வந்து, நாதமுநிகளாகிற மஹாமேருவிலே வர்ஷித்து, உய்யக்கொண்டார் மணக்கால்நம்பியாகிற அருவிகளாலேயிறங்கி, ஆளவந்தாராகிற பேராற்றிலே கூடி, எம்பெருமானாராகிற பெரியஏரியிலேவந்துதேங்கி, நம்மாசார்யர்களாகிற மதகுகளாலே புறப்பட்டு, இச்சம்ஸாரமாகிற கழனிக்கேறிப்பாய்கிறதென் றருளிச்செய்தவிடத்திலும் ஒத்திருக்கையாலும் :

பெரியநம்பி வெளியிட்டபடி யெங்ஙனேயென்னில் :—அத்துழாயும் தாமுமாக வெழுந்தருளியிருக்கச் செய்தே ; உடையவரும் முதலிகளுமாக வெழுந்தருள ; பெரியநம்பி யெழுந்திருந்து தெண்டனிட ; இதுவென் உடையவர் உமக்கு சிஷ்யரன்றோ ? இப்படி செய்யலாமோவென்று, அத்துழாய் விண்ணப்பஞ்செய்ய ; நம்பியும், அத்தாளுக்குத்தக்க தலைகளை இதுவென்றும் : ஒருநாள் உடையவரும் முதலிகளுமாக நீராடி எழுந்தருளும்போது, பெரியநம்பிஎதிரேகண்டு தாளுந்தடக்கையுங்கூப்பித் தெண்டனிட, உடையவரும், அஞ்சலித்து க்ருபைசெய்தெழுந்தருள ; இத்தை முதலிகள் கண்டு, இதுவென் ! ஜிய்யாவென்ன ; உடையவரும், இப்போது அவரிஷ்டம் அநுவர்த்திக்கையன்றோ ? நமக்குள்ளதென்ன ; முதலிகளும் பெரியநம்பி சந்நிதியில் சென்று உடையவரை நீர் சாஷ்டாங்க ப்ரணாமம் பண்

னுகைக்கடி யென்னென்று கேட்க ; நம்பியும், ஆளவந்தாரும் முதலிகளுருமென் றிருந்தேனென்ன ; இவர்களும், அதுநிதானமன்றென்ன ; நம்பியும் ஆளவந்தாருக்குப்பின்பு அகிலார்த்த ஸ்திதிபூர்த்தியுள்ளவிவர்க்கே யாகையாலே சதாசார்ய சந்நிதியோடு ஸச்சிஷ்ய சந்நிதியோ டொருவாசியில்லாமையாலே சேவித்தேனென் றருளிச்செய்து, தம்குமாரர் புண்டரீகாக்ஷனையும் உடையவர் திருவடிகளிலே யாஸ்ரயிப்பிக்கையாலும் :

திருக்கோட்டியூர்நம்பி வெளியிட்டபடி யெங்ஙனே யென்னில் :— நாம் திருமந்த்ரார்த்தம் ப்ரசாதிக்கும்போது ஆருக்கும் சொல்லாதேகொள்ளுமென்று ஆஜ்ஞாபித்தருளிச்செய்ய ; இவரும், அத்தை நாலிகாசமாகத் தெற்காழ்வான் திருவோலக்கத்திலே சர்வர்க்கு மருளிச்செய்ய ; நம்பியுமித்தைக்கேட்டுக்குபிதராய், உடையவரையழைத்துவிட்டு, ஆசார்யாஜ்ஞாதிலங்கநத்தில் பலமேதென்ன ; உடையவரும், நரகமேபலமென்ன ; நம்பியும்; ஆகில்; அறிந்திருந்துசெய்வானேனென்ன ; இவரு மடியேனொருவனுமன்றோ நரகம்புகுவது ; தேவரீர் சம்பந்தத்தாலே இவ்வாத்மாக்களெல்லாம் உஜ்ஜீவிக்குமென்று சொன்னேனென்று விண்ணப்பஞ்செய்ய ; நம்பியும் ப்ராபரீதராய்எம்பெருமானாரோவாருமென்றுஎடுத்தணைத்துக்கொண்டு, இப்பரலம் ருத்தி நமக்கில்லையாய் விட்டதேயென்று, இது எம்பெருமானார் தர்சனமென்று சொல்லுங்கோளென்றுசொல்லி, அவரோ நீரென்றருளிச்செய்து, தம்குமாரர் தெற்காழ்வானையும் உடையவர் திருவடிகளிலே யாஸ்ரயிப்பிக்கையாலும் :

திருமலைநம்பி வெளியிட்டபடி யெங்ஙனே யென்னில் :—உடையவர் திருமலைக்கெழுந்தருளும்போது, திருப்பரிவட்டப்பாறை யளவாக எதிரே சென்று தீர்த்தப்ரசாதம் ப்ரசாதிக்க ; உடையவரும் ஸ்வீகரித்தருளி, நம்பியைப்பார்த்து, தேவரீ ரெழுந்தருளவேணுமோ ? வேறேயொரு சிறியவர்களில்லையோவென்ன ; நம்பியும், நாலுதிருவீதியிலு மாராய்ந்த விடத்திலும் என்னிலும் சிறியாரைக் கண்டிலேனென்கையாலும் : எம்பாரை உதகபூர்வகமாகக்கொடுக்கையாலும் : தம்குமாரர் இராமாநுஜனையும், பிள்ளைதிருமலைநம்பியையும் உடையவர் திருவடிகளிலே யாஸ்ரயிப்பிக்கையாலும் :

திருமாலையாண்டான் வெளியிட்டபடி யெங்ஙனேயென்னில் :—தம்பக்கல்இவர்திருவாய்மொழிக்கர்த்தங்கேளாநிற்க ; "அறியாக்காலத்துள்ளே" என்றபாட்டுக்கு இவர் உபகார ஸ்ம்ருதியாக விசேஷார்த்த மருளிச்செய்ய ; ஆண்டானும், இது விஸ்வாமித்ரஸ்ருஷ்டியென்று அருளிச்செய்கை தவிர்ந்திருக்க ; பின்பு திருக்கோட்டியூர் நம்பி எழுந்தருளி, ஆண்டானை

யழைத்து, சாந்தீபன்பக்கலிலே க்ருஷ்ணன் அத்யயநம்பண்ணினாப்போலே இவரும் உம்முடையபக்கல் திருவாய்மொழி கேட்கிறது. இவ்விரண்டர்த்தமும் ஆளவந்தா ரருளிச்செய்தார் காணுமென்ன; உடையவரும், பின்னையுமொரு அர்த்தப்ரஸ்தாவத்திலே ஆளவந்தாரிப்படி யருளிச்செய்தா ரென்ன; ஆண்டானும், நீர் ஆளவந்தாரைக்கண்ணாலும் காணாதிருக்க; இப்படியருளிச்செய்தாரென்கைக்கு ஹேதுவென்னென்ன; இவரும், நான் ஆளவந்தார்க்கு ஏகலவ்யனன்றோவென்ன; ஆண்டான்தெண்டனிட்டு, இதுவுமொருதிருவவதாரமோவென் றருளிச்செய்து, தம்குமாரர் சுந்தரத்தோளுடையானை உடையவர் திருவடிகளிலே யாஸ்ரயிப்பிக்கையாலும்:

திருவரங்கப் பெருமாளரையர் வெளியிட்டபடி யெங்ஙனே யென்னில்:—தம்பக்கல் உடையவர், ஆறுமாசம் சேவித்திருந்து, பரமகாக மஞ்சட்காப்பும் அரைத்துச் சாத்தி நீராடப் பண்ணுவித்தருள; திருவரங்கப்பெருமா ளரையரும் ப்ரீதராய், என்னுடைய ஸர்வஸ்வத்தையும் கொள்ளை கொள்ளவோ நீரிப்படிசெய்ததென்று அருளிச்செய்து, பஞ்சமோபாயநிஷ்டையை அருளிச்செய்து, தம்குமாரர் திருவாய்மொழி யரையரையும் உடையவர் திருவடிகளிலே யாஸ்ரயிப்பிக்கையாலும்:

வடுகநம்பி ஆசார்யபதமென்று தனியேயொருபதம், அது உள்ளது எம்பெருமானார்க்கே; ஆகையாலே எல்லார்க்கும் எம்பெருமானார்திருவடிகளொழிய வேறுஉபாயோபேயமில்லை; அவர்திருவடிகளே தஞ்சமென்றிருங்கோளென் றருளிச்செய்தருள்வர்.

கணியனூர் சிறியாச்சான் ஸசேலஸ்நாந பூர்வகமாக ஆர்த்தியோடே உபஸந்நராய் இவ்வாஜ்ஞையிட்டு எம்பெருமானார் திருவடிகளொழிய வேறு தஞ்சமில்லையென் றருளினார்.

அருளாளப்பெருமா ளெம்பெருமானார்; தம்திருவடிகளிலே யாஸ்ரயித்த, எச்சான், அநந்தாழ்வான், தொண்டனூர் நம்பி, மருதூர்நம்பி இவர்களுக்கு ஹிதோபதேசம்பண்ணி, உடையவர் குருவியின் கழுத்திலே குண்டுக்கல்லைக் கட்டினாப்போலே செய்தருளினார்; நீங்கள் எம்பெருமானார் திருவடிகளே தஞ்சமென் றிருங்கோளென் றருளிச் செய்தருளினார்.

பிள்ளைப்பிள்ளை யாழ்வான், ஆழ்வான் திருவடிகளிலே யாஸ்ரயித்தவளவில், ஆழ்வான், ஆசார்ய தக்ஷிணையாக த்ரிவிதகரணங்களையும் பரிஹரித்துக்கொண்டு பாகவதர்களிடத்தே அநுகூல்யைகரஸராய்ப் போருமென் றருளிச்செய்ய, அவரும் இது பரிஹரித்து முடியாதென்று பயப்பட்டு முசித்துக்கிடக்க, ஆழ்வான் இவரையழைத்து, எதிரிகூடக்குத்தும்ராஜதண்டமும்

வருமாகையாலே, காயிகாபராதம் பண்ணக்கூடாது (சு0அ) "யத்³ப்⁴ரூவிவஸீ கர்த்தும் ஜக³தே³கநகர்மணா பராபவாத³ஸம்ஸ்பர்ஸோ மாஸ்தாம் தீர்த்த வாரய" (యద్భ్రూవివశీకర్తుం జగదేకనకర్మణా పరాపవాదసంస్పర్శో మాస్తాం తీర్థవారయ) என்கிறபடி பராபவாதஞ் சொல்லுகிற வாக்கு ஒன்றையும் பரிஹரித்துக்கொள்ளுமென் றருளிச்செய்து, இனி மநஸ்ஸாலே நினைத்திராகில் இது எம்பெருமான் திருவுள்ளத்தே படாதபடி எம்பெருமானார் திருவடிகளே தஞ்சமென் றிருமென் றருளிச்செய்தருளினார்.

மிளகாழ்வான், முதலியாண்டானை என்னோடுதர்க்கிக்கவாருமென்ன, முதலியாண்டானும், நீர் தோற்றீராகில் செய்வதென்னென்ன ; மிளகாழ்வானும், நான் தோற்றேனாகில் உம்மை என்றோளிலே சுமந்துகொண்டு போகிறேனென்ன ; அநந்தரம், உபயரும் தர்க்கிக்க, மிளகாழ்வான் தோற்று, முதலியாண்டானை ஸ்ரீபாதம் தாங்கிக்கொண்டு சற்றிடம்போய், இனி யடியேனை இரங்கி யருளவேணுமென்று விண்ணப்பஞ்செய்ய ; ஆண்டானும், உடையவர் திருவடிகளிலே காட்டிக்கொடுத்து ஆஸ்ரயிப்பித்தருளி, எம்பெருமானார் திருவடிகளே தஞ்சமென் றிருமென் றருளிச்செய் தருளினார்.

எம்பார், பட்டரைப்பார்த்து, நம்பெருமாள் நம்மை புத்ரஸ்வீகாரம் பண்ணியருளினார். ஆழ்வானுடைய பிள்ளை, அகிலசாஸ்த்ரங்களையும் அதிகரித்தோம் என்கிறமேன்மையை நினைத்து இறுமாந்திராதே எம்பெருமானார் திருவடிகளே தஞ்சமென் றிருமென் றருளிச்செய் தருளினார்.

பட்டர்நஞ்சீயரைப்பார்த்து,வேதாந்தியென்கிற பேரையுடையோம், நம்முடைய பக்கல் ஆஸ்ரயித்தோம், நமக்கு பஹு த்ரவ்யத்தை ஆசார்ய தக்ஷிணையாகத் தந்தோம், திருவாய்மொழிக்கு நூறு நிர்வஹித்து சதாபிஷேகம் பண்ணினோமென் றிறுமாந்திராதே எம்பெருமானார் திருவடிகளே தஞ்சமென் றிருமென் றருளிச்செய் தருளினார்.

நஞ்சீயர், நம்பிள்ளையைப்பார்த்து, லோகாசார்ய ரென்கிற பேரையுடையோம், திருவாய்மொழிக்குப் பொருள் சொல்லவல்லோம் என்றிறுமாந்திராதேஎம்பெருமானார்திருவடிகளேதஞ்சமென்றிருமென்றருளிச் செய்தருளினார்.

நம்பிள்ளை, சிவிக்கைப்பிள்ளையைத்திருக்கையைப் பிடித்துக்கொண்டெழுந்தருளாநிற்க,ஒருஸ்ரீவைஷ்ணவர்நம்பிள்ளைதிருமாளிகைத்திருவிடைக்கழியிலே கண்வளராநிற்க, சிவிக்கைப்பிள்ளை அவரைக் காலே முட்டுமென்ன ; நம்பிள்ளையும், "மயர்வறமதிநலமருளப்பெற்ற ஆழ்வார் திருத்தாளென் றருளிச்செய்ய; நீ ரோகாலென்பீர் என்று அவர் கையைவிட்டருள, அ

வரும் சிஷிக்கையிலே போயிருந்து, பின்பு சோகார்த்தராய், இரண்டாற்றுக் குநடுவே நின்று, கவணிலே [illegible] விட்டருளிந்து. இனி அடியேனுக்கு [illegible] விண்ணப்பஞ் செய்துவரக் காட்டியருள, [illegible] , மற்றொரு குறையுமில்லை எம்பெருமானார் திருவடிகளே தஞ்சம் [illegible] றருளிச்செய்து போக விட்டனைத்து க்ருபைசெய்தருளினார்

திருக்குருகைப்பிரான் பிள்ளான், திருப்புத்தூரிலே எழுந்தருளியிருக்கச்செய்தே, சோமாசியாண்டான் தம ஸ்ரீபாதத்திலே மூன்றுரு ஸ்ரீபாஷ்யம் வாசித்தருளி, பிள்ளான் மீண்டெழுந்தருளும்போது, சோமாசியாண்டான் அநுவர்த்தித்து, அடியேனிருக்கிற தேசமிதுவாயிருந்தது; அடியேனுக்குத் தஞ்சமாயிருப்பதொன்றருளிச்செய்ய வேணுமென்ன; பிள்ளானும், ஆண்டானைக்குறித்து, நீர் பாட்ட ப்ரபாகர மீமாம்சை இவையித்தனைக்கும் பொருள் சொல்லவல்ல கர்த்தா, ஸ்ரீபாஷ்ய ப்ரவர்த்தகரென்று மேன்மையாயிராதே, எம்பெருமானார் திருவடிகளே சரணமென்றிருமென்றருளினார்.

கோமடத்துப்பிள்ளான், தம் ஸ்ரீபாதத்தில், காக்கையாடி யாச்சான் பிள்ளை மூன்றுரு ஸ்ரீபாஷ்யம் வாசிக்க, அவரும் மிகவும் மேன்மையையுடையரா யிருக்குமதுகண்டு, இவர்க்குஇம்மூகத்தாலேஅபசாரம்வருமென்றஞ்சி, எம்பெருமானார் திருவடிகளே தஞ்சமென்றிருமென்றருளிச்செய்தருளினார்.

எங்களாழ்வான், காக்கையாடியாச்சான் பிள்ளையைப்பார்த்து, உம்மைப்பெருமாள் முனிந்தருளினபோது என் னினைத்திரென்று கேட்டருள; அவரும், எம்பெருமானார் திருவடிகளே தஞ்சமென்றிருந்தேனென்றுவிண்ணப்பஞ்செய்தார்.

நடாதூரம்மாள் ஸ்ரீபாதத்திலே பத்துப் பன்னிரண்டு திருநாமம் ஸ்ரீபாஷ்யம் வாசிக்கிறபோது, அம்மாள், அவர்களுக்கு ஸ்ரீபாஷ்யத்தை உபந்யஸித்துக் காட்டியருள, அவர்களும் பக்த்யுபாயமாயிருந்ததென்ன, பின்பு, அவரும் ப்ரபத்யுபாயத்தை யருளிச்செய்து காட்டியருள, பக்தியிலும் ப்ரபத்தி தான் அரிதாயிருந்ததென்றவர்கள் விண்ணப்பஞ் செய்ய, ஆகில்; எம்பெருமானார் திருவடிகளே தஞ்சமென்று விச்வஸித்து உஜ்ஜீவியுங்கோளென்றருளினார்.

நடுவிலாழ்வான், திருநாராயணபுரத்திலேயிருந்து ஸ்ரீபாஷ்யம் வாசிப்பிக்கிற காலத்திலே,வங்கிபுரத்தாய்ச்சி, சொட்டையம்மாள் உள்ளிட்டார் ஸ்ரீபாஷ்யத்தைக்கேட்டு அது அரிதாயிருந்ததென்ன, ஆகில் இதை அரு

ளிச் செய்தருளின எம்பெருமானார் திருவடிகளே தஞ்சமென் றிருங்கோளென் றருளினார்.

ஸ்ரீ வேதவ்யாஸபட்டர், திருநாராயணபுரத்தே, எம்பெருமானார் திருமுன்பே கோஷ்டிபண்ணி, ஸ்ரீ பாஷ்யத்தை உபந்யஸிக்க, இது கங்காப்ரவாஹமாயிருந்தது, எங்களால் அவகாஹிக்கவொண்ணாதாயிருக்கிறதென்று ஐம்பத்திருவர் விண்ணப்பஞ்செய்ய; பட்டரும், ஆகில்; உங்கள் குலதெய்வமான எம்பெருமானார் திருவடிகளே தஞ்சமென்று உஜ்ஜீவியுங்கோளென் றருளினார்.

நடுவில் திருவீதிப்பிள்ளை, வெள்ளைக்குலத்தானை காத்த ஸிங்கர் முன்னே கோஷ்டிபண்ணி ஸ்ரீபாஷ்யம் உபன்யஸிக்க, தன்சிஷ்யரான இளையவழகியார் எழுந்திருந்து, இது கங்காப்ரவாஹமாயிருந்தது. என்னால் அவகாஹிக்கப்போகாதென்று விண்ணப்பஞ்செய்ய, ஆகில்; எம்பெருமானார்திருவடிகளே சரணமென் றிருமென் றருளிச்செய் தருளினார்.

வங்கிநம்பி; எம்பெருமானார் திருவடிகளே சரணம், நம்பெருமாள் திருவடிகளே சரணம் என்று இரண்டையும்சேர அநுஸந்திக்கும் ஆழ்வானையும், ஆண்டானையும் இருகரையரென்பர். வங்கநம்பி, எம்பெருமானார் திருவடிகளே ஶரணமென்னுமாப்போலேயும்; பட்டர் அழகியமணவாளப்பெருமாள் திருவடிகளே ஶரணமென்னுமாப்போலேயும், அநந்தாழ்வான், திருவேங்கடமுடையான் திருவடிகளே ஶரணமென்னுமாப்போலேயும், திருக்கச்சிநம்பி, பேரருளாளர் திருவடிகளே ஶரணமென்னுமாப்போலேயும், எம்பெருமானார், செல்வப்பிள்ளை திருவடிகளே ஶரணமென்னுமாப்போலேயும் ஒருவர்க்கு மிசைந்திராது.

ப்ரஹ்மரக்ஷஸ்ஸு வெளியிட்டபடி எங்ஙனேயென்னில்:—யாதவப்ரகாசனுக்கு உடையவரைக்காட்டி இவர் நித்யஸூரிகளில் தலைவரென்றுசொல்லுகையாலும்.

ஊமை வெளியிட்டபடி எங்ஙனேயென்னில்:—பெருமாள் கோயிலிலே பாகவதஜந்மத்தில்பிறந்தா னொருபிள்ளை ஐந்தாறு வயஸ்ஸளவாக ஊமையாயிருந்து, பின்பு, இரண்டுசம்வத்ஸரம் காணாதிருக்க, பின்பெல்லாருங்காணவந்து வார்த்தைசொல்ல வல்லனாகை, இவ் வாஶ்சர்யத்தைக்கண்டு எல்லாருந் திரளாகவிருந்து ஊமையைப்பார்த்து, நீ இத்தனைநாளும் எங்கேறப்போனாயென்று கேட்க, அவனும் நான் க்ஷீராப்திக்குப் போனேனென்ன; அங்குவிஶேஷமென்னென்றுகேட்க, ஸ்ரீ சேநாபதியாழ்வான் உடையவராய்வந் தவதரித்தருளினாரென்ற பெருவிசேஷம்என்ற வநந்தரம் அவனைக் கண்டதில்லையென்று ஸ்ரீசேநாபதி ஜீயரருளிச் செய்கையாலும்:

இப்படி இவர்களெல்லாரும் ப்ரகாசிப்பிக்கும்போது, நாதமுனிகள் தொடக்கமான ஆசார்யர்களிற் காட்டில் இவர்க்கு ப்ராதாந்யங்கொள்ளும்படி எங்ஙனேயென்னில்; பகவதவதாரங்கள் எல்லா மொத்திருக்கச்செய்தே, ஸ்ரீராமக்ருஷ்ணத் யவதாரங்களுக்கு ப்ராதாந்ய முண்டானாப்போலேயும்; ருஷிகளெல்லாரையும் வைத்துக்கொண்டு, வ்யாஸ, பராஶர, ஶுக, ஶௌநக, நாரதாதிகளுக்கு ப்ராதாந்ய முண்டாகிறுப்போலேயும், திவ்யதேசங்களெல்லாம் ஒத்திருக்கச்செய்தேயும், கோயில், திருமலை, பெருமாள்கோயில், திருநாராயணபுரங்களுக்கு ப்ராதாந்யமுண்டாகிறுப்போலேயும்; ஆசார்யர்களெல்லாரிலும் வைத்துக்கொண்டு உடையவருக்கு ப்ராதாந்யங்கொள்ளத் தட்டில்லையிறே.

ஸ்ரீராமாவதாரத்திற்கு ப்ராதாந்ய மெத்தாலேயென்னில்; பெருமாள், அபயப்ரதாந மருளிச்செய்தும்; குஹப்பெருமாளுடன் சீரணிந்த தோழமைகொண்டும்; பெரிய உடையாரை ப்ரஹ்மமேதத்தாலே ஸம்ஸ்கரித்துப் பள்ளிபடுத்தியும், ஸ்ரீஶபரிகையாலே ஸம்யக் போஜநஞ்செய்தும், திருவடியுடன் "உண்பனுமென்ற வொண்பொரு" ளென்னும்படி ஸஹபோஜநம் பண்ணிப்போருகையாலும்.

ஸ்ரீக்ருஷ்ணனுக்கு ப்ராதாந்ய மெத்தாலேயென்னில்:—கீதோபநிஷத்தை வெளியிட்டு சரமஶ்லோகமருளிச்செய்கையாலும், பீஷ்மத்ரோணாதிக்ருஹங்களைவிட்டு, ஸ்ரீவிதுரர் திருமாளிகையிலே (௪௦௬) "ஶுசீநி மஹ்ணவன்தி" (ஶுசீநி ஶ்ரவணீயாநி) என்கிறபாவநத்வ போக்யத்வங்களையுடைத்தா யிருந்ததென்று அமுதுசெய்து (௪௧௦) "த்விஷதந்நந ஹோக்தவ்யம்" (த்விஷதந்நம் ந போக்தவ்யம்) என்று முறைகூறுகிற சோற்றை நிராகரித்து இதுன்தனையே சத்ருகோஷ்ட்டியிலும் ப்ரசித்த மாக்குகையாலும்:

கோயிலுக்கு ப்ராதாந்ய மெத்தாலேயென்னில்: — திருப்பாணாழ்வாரோடுகலந்து பரிமாறுகையாலும்:

திருமலைக்கு ப்ராதாந்யமெத்தாலேயென்னில்:—குறும்பறுத்தநம்பிக்கும், தொண்டமான் சக்ரவர்த்திக்கும் வார்த்தை யருளிச்செய்து கலந்து பரிமாறுகையாலும்:

பெருமாள்கோயிலுக்கு ப்ராதாந்ய மெத்தாலேயென்னில் :— திருக்கச்சிநம்பியோடு ஸ்மித பூர்வாநுபாஷணம்பண்ணி மிகவுங்கலந்து பரிமாறுகையாலும்.

திருநாராயணபுரத்திற்கு ப்ராதாந்ய மெத்தாலேயென்னில்;- ஸச்சரித தநயன்பக்கல் ஆதராதிசயத்தாலே தந் நிவேதி தாந்நத்தை ஸம்யக்போஜநம்பண்ணி அவனை வாழ்விக்கையாலும், எதிராஜ புத்ரரான ஸௌஶீல்யத்தாலும்.

ஸ்ரீவேதவ்யாஸபகவான், வேதங்களைவிஸ்தரித்து, அதில் கர்மகாண்டத்தைவிட்டு, ப்ரஹ்மபாதத்திலே புருஷஸூக்த, சாந்தோக்ய, வாஜஸநேய கதைத்திரிய ச்வேதாச்வதர, மஹோபநிஷ தாதிகளிலும், ததுபப்ரஹ்மணங்களான, புராணேதிஹாஸாதிகளிலும், ஸத்யம் ஸத்யமென்றுதொடங்கி நதை வம்சேப்யாத்பரமென்று ஸத்யபுரஸ்ஸரமாக பரத்வநிர்ணயம் பண்ணுகையாலும் ப்ராதாந்யம்.

ஸ்ரீபராசர ப்ரஹ்மரிஷி, (உகக) "புராணேஷு வைஷ்ணவம்" (పురాణేషు వైష్ణవం) என்னும்படியான ஸ்ரீவிஷ்ணுபுராண ரத்நத்திலே, சிதசிதீச்வர தத்வங்களை விசதமாகப்ரதிபாதித்த உதாரனென்று ஆளவந்தார் நமஸ்கரித்தருளுகையாலே ப்ராதாந்யம் :

ஸ்ரீசுக ப்ரஹ்மரிஷி, பரீக்ஷித்துராஜாவுக்கு ஸ்ரீபாகவதத்திலே தத்வநிர்ணயத்தைப்பண்ணி, சுகோமுக்த: என்னும்படியான வைபவத்தையுடையராகையாலே ப்ராதாந்யம் :

ஸ்ரீசௌநகபகவான், ஸ்ரீவிஷ்ணு தர்மத்திலே பலவிடங்களிலும் தத்வ நிர்ணயம்பண்ணுகையாலே ப்ராதாந்யம் :

ஸ்ரீநாரதபகவான் (உகஉ) "புஜயுகமபி சிஹ்நைரங்கிதம் யஸ்ய விஷ்ணோ: பரமபுருஷநாம்நா கீர்த்தநம் யஸ்ய வாசி, ருஜுதரமபி புண்ட்ரம் மஸ்தகே யஸ்ய கண்டே ஸரஸிஜமணிமாலா யஸ்ய தஸ்யாஸ்மி தாஸ:," (భుజయుగమపి చిహ్నైరంకితం యస్య విష్ణోః పరమపురుషనామ్నా కీర్తనం యస్య వాచి, ఋజుతరమపి పుండ్రం మస్తకే యస్య కంఠే సరసిజమణిమాలా యస్య తస్యాస్మి దాసః) என்னிப்படிப்பட்ட ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு தாஸனென்று சொல்லுகையாலே, பெரியாழ்வாரும், "சேமமுடைநாரதனார்" என்னும்படியான வைபவத்தினால் வந்த ப்ராதாந்யம் :

ஆழ்வார்களில், நம்மாழ்வாருக்கு ப்ராதாந்ய மெத்தாலே யென்னில் :—சஹஸ்ரசாகையான நான்குவேதத்தினுடையபொருளையும், நான்கு ப்ரபந்தமுகத்தாலே சர்வாதிகார மாக்குகையாலும், நாதமுனிகளுக்கு ப்ரஸன்னராய் அருளிச்செயல் நாலாயிரத்தையும் ப்ரசாதித்து, மற்றுமுண்டான தர்சந தாத்பர்யங்களெல்லாம் அருளிச்செய்து தர்சநத்தை நிலைநிறுத்துகையாலும், "பயிலுஞ்சுடரொளி," "நெடுமாற்கடிமை" முதலானவிடங்களில் வர்ணத்யுத்கர்ஷங்களை நிராகரித்து, வேதப்ரமாண முக்யதாத்பர்யமான ஸ்ரீவைஷ்ணவலக்ஷண மெல்லாருக்கும்தெரியும்படி அருளிச்செய்கையாலும் :

உடையவர், கீழ்ச்சொன்னவர்களைப்போலன்றிக்கே, பெரு
ளிச்செய்த அபயப்ரதாநத்தை விசதமாக்குகையாலும்; கீதாசார்ய
ளிச்செய்த சரமஶ்லோகார்த்தத்தை ப்ரகாசிப்பிக்கையாலும்; ருஷி
மான ப்ரமாணங்களுக்கு அர்த்தமருளிச்செய்கையாலும்; மற்றை ஆழ்
ளருளிச்செய்த திவ்யப்ரபந்தங்களையும், அங்கோபாங்கமாகவுடைய திரு
மொழி ப்ரபந்தத்தை அர்த்தவத்தாக விசதமாக ப்ரகாசிப்பிக்கையால
நாதமுனிக ளருளிச்செய்த திவ்ய ப்ரபந்தங்களையும், ஆளவந்தா ரருளி
செய்த திவ்ய ப்ரபந்தங்களையுங்கொண்டு ஸூத்ரவாக்யங்க ளொருங்கவிட்டு
ஸ்ரீபாஷ்யம், கத்யத்ரயம் முதலான ப்ரபந்தங்களையும் அருளிச்செய்து.
லகுமதிஸங்கத்தையும்நிராகரித்து, ஸ்வமதஸ்தாபநம்பண்ணி, எமபெ
னார் தர்ஶனமென்னும்படி பண்ணுகையாலே, இவரெல்லாரிலும் ப்ரதாந
மிறே. இனி ஶிஷ்யர்களான கூரத்தாழ்வான், முதலியாண்டான் தொடக்க
மானவர்களில் ப்ரதாநரொன்று மிடஞ்சொல்லவேண்டாவிறே.—ஆக ப்ரா
தாந்யஞ் சொல்லித்தாய்த்து.

இனிப்ரபாவ மேதென்னில்:—

(௪௧௩) "𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑌵𑌾𑌨𑍍 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋 𑌵𑍇𑌦 𑌪𑌾𑌪𑌿𑌷𑍍𑌠𑌃 𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌬𑌨𑍍𑌧𑍁𑌶𑍍𑌚 𑌪𑍁𑌣𑍍𑌡𑌰𑍀𑌕𑌶𑍍𑌚 𑌪𑍁𑌣𑍍𑌯𑌕𑍃𑌤𑍍 𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑌵𑌤𑍍𑌤𑌯𑌾 𑌮𑍁𑌕𑍍𑌤𑍌 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌵𑌾𑌨𑍍 𑌭𑌵𑍇𑌤𑍍" (ఆచార్యవాన్ పురుషో వేద పాపిష్ఠః క్షత్రబంధుశ్చ పుండరీకశ్చ పుణ్యకృత్ ఆచార్యవత్తయా ముక్తౌ తస్మాదాచార్యవాన్ భవేత్) என்றும்; (௪௧௪) "𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑌸𑍍𑌸 𑌹𑌰𑌿𑌸𑍍𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌚𑍍𑌚𑌰𑌰𑍂𑌪𑍀 𑌨 𑌸𑌂𑌶𑌯𑌃" (ఆచార్యస్సహరిస్సాక్షా చ్చరరూపీ నసంశయః) என்றும்; (௪௧௫) "𑌆𑌚𑌿𑌨𑍋𑌤𑌿 𑌹𑌿 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑌾𑌨𑌾𑌚𑌾𑌰𑍇 𑌸𑍍𑌥𑌾𑌪𑌯𑌤𑍍𑌯𑌪𑌿 𑌸𑍍𑌵𑌯𑌮𑌾𑌚𑌰𑌤𑍇 𑌯𑌸𑍍𑌤𑍁 𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑌸𑍍𑌸𑍋𑌭𑌿𑌧𑍀𑌯𑌤𑍇" (ఆచినోతిహిశాస్త్రార్థా నాచారేస్థాపయత్యపి స్వయమాచరతేయస్తు ఆచార్యస్సోభిధీయతే) என்றும்; (௪௧௬) "𑌗𑍁𑌶𑌬𑍍𑌦𑌸𑍍𑌤𑍍𑌵𑌨𑍍𑌧𑌕𑌾𑌰𑌸𑍍𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌰𑍁𑌶𑌬𑍍𑌦𑌸𑍍𑌤𑌨𑍍𑌨𑌿𑌰𑍋𑌧𑌕𑌃 𑌅𑌨𑍍𑌧𑌕𑌾𑌰𑌨𑌿𑌰𑍋𑌧𑌿𑌤𑍍𑌵𑌾𑌦𑍍𑌗𑍁𑌰𑍁𑌰𑌿𑌤𑍍𑌯𑌭𑌿𑌧𑍀𑌯𑌤𑍇" (గుశబ్దస్త్వంధకారస్స్యాత్ రుశబ్దస్తన్నిరోధకః అంధకారనిరోధిత్వాద్గురురిత్యభిధీయతే) என்றும்; (௪௧௭) "𑌗𑍁𑌰𑍁𑌰𑍇𑌵 𑌪𑌰𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌗𑍁𑌰𑍁𑌰𑍇𑌵 𑌪𑌰𑌾𑌗𑌤𑌿𑌃 𑌗𑍁𑌰𑍁𑌰𑍇𑌵 𑌪𑌰𑌾𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌗𑍁𑌰𑍁𑌰𑍇𑌵 𑌪𑌰𑌂𑌧𑌨𑌂 𑌗𑍁𑌰𑍁𑌰𑍇𑌵 𑌪𑌰𑌃𑌕𑌾𑌮𑍋 𑌗𑍁𑌰𑍁𑌰𑍇𑌵 𑌪𑌰𑌾𑌯𑌣𑌂 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌤𑌦𑍁𑌪𑌦𑍇𑌷𑍍𑌟𑌾𑌸𑍌 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌗𑍁𑌰𑍁𑌤𑌰𑍋 𑌗𑍁𑌰𑍁𑌃" (గురురేవపరంబ్రహ్మ గురురేవపరాగతిః గురురేవపరావిద్యా గురురేవపరంధనం గురురేవపరఃకామో గురురేవపరాయణం యస్మాత్తదుపదేష్టాసౌ తస్మాద్గురుతరోగురుః) என்றும் "பீதகவாடைப் பிரா

வார், அவ்னைச்வாகிவந்து" என்றும், "தேனார்கமலத் திருமாமகள்கொழுநன் யாழ்வார், அவனன்றும், ஈஸ்வரன் தானாகச்சொல்லப்பட்ட ஆசார்யனே ஶிஷ்

இனி கஅ) "[illegible]" கில், திவ்யதேசாதி [illegible]) என்றும், திருநாடு, திருப்பாற்கடல் நனே யென்றெட்டுத் திருப்பதிகளும், "அன்னையாயத்தனாய்" என்னும்படி யென்னும்வ விதோத்தாரக பந்துவும், "மாடும்மனையும் தேடும்பொருளும் திருப்பிடமெல்லாம்" ஆசார்யனே யாகக்கடவன்.

வடிகஜ ஆழ்வான்,ஆண்டான்,அருளாளப்பெருமா ளெம்பெருமானார்,தொட வன் ஆக இவ் வருகுண்டான ஆசார்யர்கள் ஸ்ரீபராசரபட்டர் முதலானார், தந் தாம் ஶிஷ்யர்களுக்கு, எம்பெருமானார் திருவடிகளே சரணமென்றிருங்கோ ளென்கைக்கு ஹேது வென்னென்னில்:—ஸ்வாசார்ய ப்ரீதி நிபந்தநமாக வும்; மாற னடிபணிந் துய்ந்தவனென்றும் சொல்லுகையாலே, ஆழ்வார்க் கும் உடையவர்க்கும் நடுவுள்ள வாசார்யர்கள், நம்மாழ்வாருக்குக் கரணபூத ராகையாலே இவர்க்கு நேரே ஆசார்யர் திருக்குருகூர் நம்பி யாகையாலும்; "கலியுங்கெடும்," என்றவர் இவ ரவதாரத்தைக்குறித்து அருளிச்செய்கை யாலே ஆழ்வாருக்கு நேரே ஶிஷ்யர் உடையவராகக்கடவது. ஆழ்வாராலே ப்ரவர்த்திதமான தர்ஶனத்தை நிலைநிறுத்தி, அவர் வைபவத்தை (உகக) "[illegible]" ([illegible]) என்று ப்ரகா சிப்பிக்கையாலே.

பெரியநம்பி முதலான பூர்வாசார்யகள் இவர்க்கு ஆசார்யர்களாய் வீ டுபெற்றார்கள்; ஆழ்வான் முதலான பரமாசார்யர்கள் இவர்க்கு ஶிஷ்யராய் பேறுபெற்றார்கள். ஆகையாலே சர்வாசார்ய பூர்த்தியுள்ளது உடையவர்க் கேயாகையாலே அருளிச்செய் தருளினார்களிறே.

ஆளவந்தாரும் இவ்வர்த்தத்தை அநுஷ்டித்துக் காட்டி யருளினார், எங்ஙனேயென்னில:—மணக்கால்நம்பி, உய்யக்கொண்டார், இவர்கள் உகப் பை பின்சென்று (உஉ0) "[illegible]" ([illegible]) என்றும், (உஉக) "[illegible]" ([illegible]) என்று இங்குமங்கும் ஆசார்யன் திருவடிகளே சரணமென்றும், ஆசார்யவிஷயத்தில் க்ருதஜ்ஞதை யாவதாத்மபாவியென்றருளினார். ஆகையாலே, ஸ்வரூபோஜ்ஜீ வநத்திற்கு ஆசார்யனே தஞ்சமென்று பற்றுதலொழிய வேறே இவ்வாத்மா வுக்கு உஜ்ஜீவிக்க விரகில்லையிறே. இவ்வர்த்தத்தை யநுஷ்டித் தாராரென் னில் ஸ்ரீ மதுரகவி ப்ரப்ருதி ஸஜ்ஜனங்களிறே.

உடையவர், புழுவின் வ்யாஜேன மேற்கே எழுந்தருளினபோது, உடையவர் பண்ணியதாக சிஷ்யர் அங்கு விரித்த கட்டளை கேட்டு, ஆசார்யர்களெல்லாரும் ஆஶ்சர்யப்பட, உடையவரும், என் பரமாசார்யரான ஆளவந்தார் வார்த்தைகொண்டு சொன்னேனிது, ஆளவந்தார் கோஷ்டியிலே ஒருநாளாகிலும் சேவிக்கப்பெற்றேனாகில் பரமபதத்திற்கும் இங்கும், சுருளும்படியும் கட்டிவிட்டேனே வென்றருளிச் செய்தாரிறே எம்பெருமானார்.

உடையவர், அபய ப்ரதானம் அருளிச்செய்யாநிற்க, பிள்ளை உறங்காவில்லிதாசர், கோஷ்டியிலும் எழுந்திருந்துநிற்க, இதுவென்பிள்ளாயென்று உடையவர் கேட்டருள; (சஉஉ) "ஸரித்யக்தாமயாலங்கா மித்ராணிச தநாநிச ஹவத்கதம்மே ராஜ்யஞ்ச ஜீவிதஞ்ச ஸுகாநிச" (𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑌾𑌮𑌯𑌾𑌲𑌙𑍍𑌕𑌾 𑌮𑌿𑌤𑍍𑌰𑌾𑌣𑌿𑌚𑌧𑌨𑌾𑌨𑌿𑌚 𑌭𑌵𑌦𑍍𑌗𑌤𑌂𑌮𑍇𑌰𑌾𑌜𑍍𑌯𑌂 𑌚𑌜𑍀𑌵𑌿𑌤𑌂𑌚𑌸𑍁𑌖𑌾𑌨𑌿𑌚) என்றும் (சஉ௩) "த்யக்த்வா புத்ராம்ஶ்ச தாராம்ஶ்ச ராகவம் ஶரணம் கத:" (𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍍𑌵𑌾𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌂𑌶𑍍𑌚𑌦𑌾𑌰𑌾𑌂𑌶𑍍𑌚 𑌰𑌾𑌘𑌵𑌂𑌶𑌰𑌣𑌂𑌗𑌤𑌃) என்றும், பகவத் ஸமாஶ்ரயணத்திற்கு விலக்கடியானவைகளை யடையவிட்டு, பெருமாள் திருவடிகளே தஞ்சமென்று வந்து (சஉச) "கஸ்த ஏவ வ்யதிஷ்டத:" (𑌖𑌸𑍍𑌥𑌏𑌵𑌵𑍍𑌯𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌃) என்று நிலத்திலே கால்பாவாதே, ககநஸ்தனாய், நிராலம்பனாய் நின்ற விபீஷணாழ்வானையு மகப்பட, வத்யதாமென்று கல்லுந்தடியுங்கொண்ட ராமகோஷ்டிக்கு அடியேன், யசு, பத்நியாதிகளோடு கூடினவன் ஆளாகப் புகுகிறேனே வென்றார். உடையவரும், கேளாய்பிள்ளாய் அஞ்சாதே கொள்ளும், நான்பெற்றேனாகில் நீர்பெறுகிறீர்; பெரியநம்பிபெற்றாராகில் அடியேன்பெறுகிறேன்; ஆளவந்தார்பெற்றாராகில் பெரியநம்பிபெறுகிறார்; மற்றுமுள்ளார் பெற்றார்களாகில், இவர்களும் பெறுகிறார்கள். நம்சடகோபர் அவாவற்று வீடுபெற்றேனென்று, தம்வாக்காலே அருளிச்செய்கையாலே அவர்பெற்றது சித்தம்; ஆனபின் நமக்கும் சித்தமென்றிரும். எல்லார்க்கும் நாய்ச்சியார்புருஷகார முண்டாம்போது அச்சம் வேண்டாம். ஆகையிறே நித்யயோகம் ஆனபின்பு நித்யசம்சாரிகளும் எம்பெருமானும், ஒருசங்கிலித்துவக்கிலே காணுமிருப்பது; ஆகையால்நம்முடைய ஒழுக்குக்கூட்டம் நம்மைவிட்டகலாதென்றிரீர். கமுகுண்ணில் வாழையும் உண்ணுமென்றிரும். ஸ்ரீவிபீஷணாழ்வானோடு வந்த நால்வரையும் அருளப்பாடிட்டபோது தனித்தருளப்பாடிட்டதில்லையே; தகையென்றபோதும் தனித்து தகையென்றதில்லை; ஆனபின்பு நான்பெற்றேனாகில் நீர்பெறுகிறீர், அஞ்சாதே சுகமேயிருமென்றருளிச்செய்தருளினார். "எத்தியிருப்பாரைவெல்லுமே மற்றவரைச் சாத்தியிருப்பார் தவம்," எத்தியிருந்தார் ஸ்ரீபரதாழ்வான், அவரைச்சாத்தி யிருந்தார் ஸ்ரீசத்ருக்நாழ்வான். எத்தியிருந்தார் ஸ்ரீநம்மாழ்

வார், அவரைச் சாத்தியிருந்தார் ஸ்ரீமதுரகவிகள். ஏத்தியிருந்தார் ஸ்ரீபெரியாழ்வார், அவரைச்சாத்தியிருந்தார்நாய்ச்சியார்.

இனி ஸ்வாசார்ய பரமாசார்யர்களைப் பற்றுமவ்வளவே ஸ்வரூபமாகில், திவ்யதேசங்களைக்கைவிட்டானாகாதோ வென்னில்? கைவிடான், அதெங்ஙனே யென்னில்:— "இருப்பிடம் வைகுந்தம் வேங்கடம் மாலிருஞ்சோலை யென்னும் பொருப்பிடம் மாயனுக்கென்பர்நல்லோர் அவைதம்மொடும்வந் திருப்பிடம்மாயனிராமாநுசன்மனத்து" என்கையாலேஎம்பெருமானார்திருவடிகளைத்தொழவே, திவ்யதேசங்களெல்லாம் திருவடிதொழு தானாகக்கடவன்; உடையவரை ஆராதித்து அமுதுசெய்யப் பண்ணவே, எல்லா திவ்ய தேசங்களில் எம்பெருமான்களையும் ஆராதித்து அமுதுசெய்யப்பண்ணினானாகக்கடவன்.

"நின்றவண்கீர்த்தி" என்கிற பாட்டிலும், "பேறொன்று மற்றில்லை" என்கிறபாட்டிலும், கர்மமுபாயமன்று, ஜ்ஞாநமுபாயமன்று, பக்த்யுபாயமன்று, ப்ரபத்யுபாயமன்று, எம்பெருமானார் திருவடிகளே உபாயோபேயமென்கையாலே எம்பெருமானாரைப் பற்றுகையே ப்ரபத்தி, ராமாநுஜனென்கிற சதுரக்ஷரியே திருமந்த்ரம், அவர் திருவடிகளிலே பண்ணும் கைங்கர்யமே பரமபுருஷார்த்தம், இதுவேஸித்தார்த்தமான ஸித்தாந்தமென்று நடாதூரம்மாள் அருளிச்செய்தருள்வர்.

கூரத்தாழ்வான் (சஉ௬) "ராமாநுஜஜ்யேஷ்டா சதுராசதுரக்ஷரீ" (రామానుజజ్యేష్ఠా చతురాచతురక్షరీ) என்று நாராயண, ராமாநுஜ, என்கிறதிருமந்த்ரங்களுக்கு வாசி பந்த மோக்ஷங்க ளிரண்டுக்கும் பொதுவாகையும், மோக்ஷைக ஹேதுவாகையும், ஆகிறவாசிதோன்ற (சஉகூ) "சதுராசதுரக்ஷரீ" (చతురాచతురక్షరీ) என்றாரிறே.

"கையிற்கனி" என்கிறபாட்டிலே, ஈஶ்வரனைக்கரதலாமலகமாகக்காட்டித்தந்தாலும், உன்விக்ரஹாநுபவமே பரம ப்ராப்யமென்றும், "ராமாநுசனைத் தொழும்பெரியோர் எழுந்திரைத்தாடுமிட மடியேனுக்கிருப்பிடம்" என்றும், ராமாநுசனைத்தொழும் பெரியோர் நித்யவாசம் பண்ணுமிடமே அடியேனுக்கு ப்ராப்யபூமி யென்றும்; "உன்றொண்டர்கட்கே யன்புற்றிருக்கும்படி யென்னையாக்கியங் காட்படுத்தே" என்றும், ராமாநுசனே உன்னடியார் திறத்திலாற்றம் மாறாதபக்தியை யுண்டாக்கி அவர்களுக்கே யென்னையாட்படுத்து" என்று உடையவர் திருமுக மண்டலத்தைப் பார்த்து விண்ணப்பஞ்செய்ய, இசைந்தெழுந்தருளி யிருந்தாரிறே இவ்வர்த்த நிர்ணயத்திற்கு த்ருடதர முக்ய ப்ரமாண மென்று நமக்கெல்லார்க்கும் புத்தியண்

போ⁴ஜவிகாஸாய பாபத்⁴வாந்தக்ஷயாயச ஸ்ரீமாநாவிரபூ⁴த் பூ⁴மௌ ராமாநுஜதிவாகர: '' (పుణ్యాంభోజవికాసాయ పాపధ్వాంతక్షయాయచ శ్రీమానావిరభూత్ (భూమౌ రామానుజదివాకరః) என்னும்படி அவதரித்தருளின, ஸ்ரீ பெரும்பூதூர் ஸ்தலத்திலே சர்வகாலத்திலும், சர்வசேதநர்க்கும் ஸேவ்யமாம்படி தேவரீருடைய ஒரு அர்ச்சாவிக்ரஹமேறி யருளப்பண்ணவேணுமென்று விண்ணப்பஞ்செய்ய ; ஸ்வாமியும், அப்படியே செய்யுமென்று அநுமதி பண்ணியருள ; அப்போதே, ஆண்டானும், அநுகூலனான சில்பியை அழைப்பித்து, அப்போதையிலபார்த்யமாயிருக்கிறவார்த்தக விக்ரஹாகாரத்தை சேவிக்கப்பண்ண, (சுகூசு) ''ஊர்த்⁴வபுண்ட்³ரைர்த்³வாத³ஶபி⁴ர்யுதம் விலஸிதம் த³க்ஷே த்ரித³ண்டோ³ஜ்ஜ்வலம் ஸ்தி²தம் காஷாயேண ஶிகோ²பவீத ருசிரம் தோ³ர்மூலசக்ராம்பு³ஜம் ஆஸீநம் ஜலஜாஸநே ச துலஸீபத்³மாக்ஷமாலாஞ்சிதம் யுக்தஞ்சாஞ்ஜலிமுத்³ரயா ரவிநிப⁴ம் ஸ்ரீபா⁴ஷ்யகாரம் ப⁴ஜே'' (పుండ్రై ర్ద్వాదశభిర్యుతం విలసితం దక్షే స్త్రిదండోజ్జ్వల స్థితం కాషాయేణశిఖోపవీత రుచిరం దోర్మూలచక్రాంబుజం ఆసీనం జలజాసనేచ తులసీపద్మాక్షమాలాంచితం యుక్తంచాంజలిముద్రయా రవినిభం శ్రీభాష్యకారం భజే) என்கிறபடியே சேவிக்கப்பண்ண, அவனும், '' ஆதியஞ்சோதியுருவை யங்கு வைத்திங்குப்பிறந்த '' என்கிறபடியே அர்ச்சா விக்ரஹமாக வெழுந்தருளப் பண்ணி வைத்து, ஸந்நிதியிலே கொண்டுவந்து வைக்க ; திருக்கண்சார்த்தி யுகந்தருளி, திருக்கைஸ்பர்ஶமும், அந்த விக்ரஹத்திலே தம்முடைய ஸர்வ சக்தியும் ப்ரகாசிக்கும்படி காடாலிங்கநம் பண்ணி, புஷ்யமாஸத்தில், குரு புஷ்யத்திலே ப்ரதிஷ்ட்டிப்பியுமென்று திருமுகமெழுதித் திருக்குறித்து அனுப்பி யருள ; ஆண்டானும், அப்படியே திருவடிகளிலே சேவித்து, அந்த விக்ரஹத்தை யெழுந்தருளவைத்துக் கொண்டு வந்து, மூல விக்ரஹத்தையும் எழியருளப் பண்ணிவைத்து, திருமுகப்படியே திருப்ரதிஷ்ட்டையும்செய்வித்தருளினார்.

இங்கே ப்ரதிஷ்ட்டிப்பிக்கிறஅற்றைத் திவஸத்திலே திருமேனியிலே மிகவும்தளர்த்தியாய், பலஹாநியுண்டாக; ராமாநுஜனும், இதேதென்று பராமர்ஶித்து, ஆண்டானுக்கு எழுதிக்கொடுத்த திவஸமேதென்று கேட்டருள· அந்ததிவஸம்அன்று தானாயிருக்க, விஸ்மயப்பட்டருளி, ஆண்டானுக்கு, சீக்ரம் வருவதென்று திருமுகம் போகவிட்டருள ; அவரும் திருமுகத்தை சிரஸாவஹித்து, அப்படியே மீண்டெழுந்தருளி, திருவடிகளை சேவித்துக் கொண்டிருந்தார்.

அநந்தரம், அங்குத்தைக்கு அத்யந்தம் அந்தரங்கரான ஆண்டான் முதலான முதலிகளெல்லாரும், பழுத்திருக்கிற தேமாவை கிளித்திரள்கள் கொத்துக்கொண்டிருக்குமாப்போலே தத்துல்யமான விவர்களும், விமலசரமவிக்ரஹத்தை 'கையிற்கனி' இத்யாதிப்படியே, மெய்யில்பிறங்கியசீரைப் பழுக்கசேவித்துக்கொண்டு 'அடையார்கமலத் தலர்மகள்கேள்வன் கையாழியென்னும், படையோடு நாந்தகமும் படர்தண்டும் ஒண்சார்ங்க வில்லும், புடையார்புரிசங்கமு மிந்தப்பூதலங்காப்பதற்கென், றிடையே யிராமாநுஜமுனியாயின விந்நிலத்தே' என்றும், (௪௨௭) "ஶேஷோ வா ஸைந்யநாதோ வா ஶ்ரீபதிர்வேதி ஸாத்த்விகை: விதர்க்யாய மஹாப்ராஜ்ஞைர்யதிராஜாய" (శేషోవా సైన్యనాథోవా శ్రీపతిర్వేతి సాత్త్వికైః వితర్క్యాయ మహాప్రాజ్ఞై ర్యతిరాజాయ) என்றும், (௪௨௮) "ஶமிதோதயஶங்கராதிகர்வஸ்ஸ்வபலாதுத்த்ருதயாதவப்ரகாஶ: அவரோபிதவாந் ஶ்ருதேரபார்த்தாந் நநுராமாவரஜஸ்ஸ ஏஷ பூய:" (శమితోదయశంకరాదిగర్వస్స్వ బలాదుద్ధృతయాదవ ప్రకాశః అవరోపితవాన్ శ్రుతేర పార్థాన్ ననురామావరజస్సఏష భూయః) என்றும்; (௪௨௯) "தத்ரோதஞ்சதி மந்தபே கடிதவரகீர்த்யேஸ்தரஸ்ஸைவ ஸ: பூர்வம் ராவணகம்ஸமுக்யதநுஜாந் ராமாநுஜாக்யாம் ஹதாந் மத்வா கங்கரயாதவாந் விமுகதோ பூயோவதீர்ணாந் புவம் தத்வ்யங்காய க்ருதோதயஸ்ததுசிதாம் ராமாநுஜாக்யாம் வஹந்" (తత్రోదంచతిమందపే ఘటితవరకీర్త్యే స్తరస్సైవసః పూర్వం రావణకంసముఖ్యదనుజాన్ రామానుజాఖ్యాం హతాన్ మత్వాకంకరయాదవా విముఖతో భూయోవతీర్ణాన్ భువంతద్వ్యంగాయకృతోదయస్తదుచితాం రామానుజాఖ్యాంవహన్) என்றும், (௪௩௦) "வ்யாஸோ வா பகவாந் பராஶரமுநி: ஶ்ரீஶௌநகோ வா தராஸாக்ஷாந்நாரத ஏவ வா ஸுரரிபுர்வாகீஶ்வரோ வா ஸ்வயம் லோகேஶ: புருஷோத்தம: பணிபதிஶ்ஶேஷோऽபி ஜகத்யேஷ நேத்யாக்யாதும் ஜகதாம் ஹிதாய ஸமபூத்ராமாநுஜார்யோ முநி:" (వ్యాసోవా భగవాన్ పరాశరమునిః శ్రీశౌనకోవా ధరాసాక్షాన్నారదఏవవాశరరిపుర్వాగీశ్వరోవాస్వయం లోకేశఃపురుషోత్తమః ఫణిపతిశ్శేషోపిజగచ్ఛేపి నేత్యాఖ్యాతుం జగతాంహితాయసమభూద్రామానుజార్యోమునిః) என்றும், சொல்லுகிறபடியே அநேகாவதார விஶேஷமென்று தரித்துக்கொண்டிருந்தார்கள்.

இத்தால் ஏவம் விதமாஹாத்ம்ய யுக்தரான இவருடைய வைபவமும், (௪௩௧) "சரிதம் ரகுநாதஸ்ய ஶதகோடிப்ரவிஸ்தரம்" (చరితం రఘునాథస్య శతకోటిప్రవిస్తరం) என்கிற சக்ரவர்த்தி திருமகன் வைபவம்போலே அவாங்மநஸகோசரமிறே. ஸாகரத்தைக்கைநீச்சாலே கடந்து அக்கரையேறிலும், உததியைச் சிறுங்கிச்சாலும், உடையவர் வைபவம் அடையச்சொல்லப்போகாதிறே. யதாமதிய தாஶ்ருதமாகச் சொன்ன இத்தனை பஹுஶ்ருதராய் புத்திமான்களாயுமுடையவர்கள் விஶதமாகக் கொள்ளக் கடவதிறே.

இப்படி அவதாரவிஶேஷமான இவருக்கு (சசஉ) "ஶரச்சதம் வ்யதீயாய ஸவிம்ஶமதிகம் ப்ரபோ:" (శరచ్ఛతం వ్యతీయాయ సవింశమధికం ప్రభోః) என்கிற கணக்கிலே நூற்றிருபத்தஞ்சில் நூற்றிருபது திருநக்ஷத்ரம் பூர்ணமாய்த்து, "வைய மன்னி வீற்றிருந்து விண்ணுமாள்வர் மண்ணூடே" என்னும்படியான இவர் தம்முடைய அவதாரரஹஸ்யஜ்ஞாநத்தாலும், தம்முடைய விக்ரஹஸேவையாலும், தத்ப்ரதக்ஷிண நமஸ்காராதிகளாலும், சதுரக்ஷரியாய் சதுரமான தம்முடைய திருநாமவைபவத்தாலும், தத்திவ்ய மங்களவிக்ரஹ த்யாநத்தாலும், ததேகநிஷ்டையாலும், தத்கைங்கர்யைகபரதையாலும், பாஷ்யாம்ருத ப்ரதாநாதிகளாலும், மந்த்ர ரத்ந ப்ரதாநாதிகளாலும், ததர்த்த ப்ரதிபாதநத்தாலும், ஸ்வபாதுகா ப்ரதாநத்தாலும், தத்பாததீர்த்த ஸ்வீகாரத்தாலும், ஸ்வபாவமநான ப்ரஸாதஸ்வீகாரத்தாலும், பாதஸ்பர்ஶபவித்ரதையாலும், ஸஞ்சாரபூதமான பாதஸஞ்சாரத்தாலும், ஸ்வபாவ நகரஸ்பர்ஶத்தாலும், அப்படியேயான கடாக்ஷ விசேஷத்தாலும், பஞ்ச ஸம்ஸ்காராதிகளால் உண்டான ஸம்பந்த விசேஷத்தாலும், (சசந) "புநந்தி புவநம் யஸ்ய பாதாஶ்ரிதபதாஶ்ரிதா: கடாக்ஷாதிபிரேவாத்ர" (పునంతి భువనం యస్య పాదాశ్రితపదాశ్రితాః కటాక్షాదిభిరేవాత్ర) என்று, ததீயஸம்பந்தத்தாலும்; (சசச) "பாலமூகஜடாந்தாஶ்ச பங்கவோ பதிராஸ்ததா ஸதாசார்யேண ஸந்த்ருஷ்டா: ப்ராப்நுவந்தி பராம் கதிம்" (బాలమూకజడాంధాశ్చ పంగవో బధిరాస్తథా సదాచార్యేణ సందృష్టాః ప్రాప్నువంతి పరాం గతిం) என்றும், (சசரு) "ஸாக்ஷாந்நாராயணோ தேவ: க்ருத்வா மர்த்யமயீம் தநும் மக்நாநுத்தரதே லோகாந் காருண்யாச்சாஸ்த்ரபாணிநா" (సాక్షాన్నారాయణో దేవః కృత్వా మర్త్యమయీం తనుం మగ్నానుద్ధరతే లోకాన్ కారుణ్యాచ్ఛాస్త్రపాణినా) என்றும், (சசகா) "அந்வயாதபி சைகஸ்ய ஸம்யக்ஜ்ஞாநஸ்தாத்மநோ ஹரௌ ஸர்வ ஏவ ப்ரமுச்யேரந் நரா: பூர்வே பரே ததா" (అన్వయాదపి చైకస్య సమ్యజ్జ్ఞానస్థాత్మనో హరౌ సర్వ ఏవ ప్రముచ్యేరన్ నరాః పూర్వే పరే తథా) என்றும், (சசஎ) "பஶுர்மநுஷ்ய: பக்ஷீ வா யே ச வைஷ்ணவஸம்ஶ்ரயா: தேநைவ தே ப்ரயாஸ்யந்தி தத்விஷ்ணோ: பரமம் பதம்" (పశుర్మనుష్యః పక్షీ వా యే చ వైష్ణవసంశ్రయాః తేనైవ తే ప్రయాస్యంతి తద్విష్ణోః పరమం పదం) என்று சொல்லுகிறபடியே ஏதேனுமாயுள்ள தொரு ஸ்வஸம்பந்த விஶேஷத்தாலே ஜ்ஞாநாஜ்ஞாநவிபாகமற ஜகத்தையெல்லாம் உஜ்ஜீவிப்பித்தும், இனிமேலும், ஸ்வஸம்பந்திகளாயுள்ளவர்களை "ஆரியர்காள் கூறுமென்று" நியமித்தும், இப்படி அவதார கார்யம் தலைக்கட்டி னிவறே:—

அங்கே, அயர்வறுமமரர்களோடே கூடி அடிமைசெய்யத் திருவுள்ளமாய், ஆராதகாதலையுடைய வாழ்வார். "சேணுயர்வானத்திருக்கும் தேவபிரானை" "அயர்வறு மமரர்களதிபதியாய்" "பாம்பணைமேலார்க்கு, பலபலவேயாபரணம்" என்னும்படி, பன்மணிபூணாத்தையு முடையாராய், 'உடையார்ந்த வாடையன்' இத்யாதிப்படியே, நடையாவுடைத் திருநாரணனாய், ஆர

களையும், அதற்குமேலே. (சருக) "திவ்யாமலகோமலாவலோகநேந விஶ்வமாஹ்லாதயந்தம்" (దివ్యామలకోమలావలోకనేన విశ్వమాహ్లాదయంతం) என்று தொடங்கி வானுடமரும் குளிர்விழிகளாலே குளிர நோக்கும்படியையும், "பன்னிலாமுத்தம் தவழ்கதிர் முறுவல்செய்து" சோதிவாய்திறந்து, திவ்யலீலாபாங்காம்ருதங்களாலே அகிலஜனங்களையும் ஆநந்திப்பித்து, களிர்ப்பிக்கும்படியையும், (சருஎ) "ஸ்வமனந்த நாராயணம் த்யாநயோகேந த்ருஷ்ட்வா" (భగవంతం నారాయణం ధ్యానయోగేన దృష్ట్వా) என்றுப்ராப்யபக்தி யோகரீதியாலே "பகந் கண்டேன் நாரணனைக்கண்டேன்" என்று காணும்படியையும், (சருஅ) "நித்யதாஸ்யம் யதாவஸ்திதமநுஸந்தாய" (నిత్యదాస్యంయథావస్థితమనుసంధాయ) என்று அடியேனடைந்தேன் முதல் முன்னமே, என்கிற ஸ்வாபாவிக ஸம்பந்தத்தை யநுசந்திக்கும் படியையும். (சருகூ) "த்வத்பாதபங்கஜம் கதா நு ஸாக்ஷாத்கரவாணி சக்ஷுஷா" (త్వత్పాదపంకజం కదా ను సాక్షాత్కరవాణి చక్షుషా) என்றும், "மாண்குறள்கோலப் பிரான்மலர்த்தாமரைப் பாதங்களைக் காண்பதென்றுகொலோ" என்றும், "பைகொள்பாம்பேறியுறை பரனே உன்னைமெய்கொள்ளக்காண விரும்புமென் கண்கள்," என்று சக்ஷுஸ்ஸுக்களாலே ப்ரத்யக்ஷ ஸாக்ஷாத்காரம் பண்ணும்படியை யபேக்ஷித்தும், (சகூ0) "கதாஹம் பகவத்பாதாம்புஜத்வயம் ஶிரஸா ஸங்க்ரஹீஷ்யாமி" (కదాహం భగవత్పాదాంబుజద్వయం శిరసా సంగ్రహీష్యామి) என்று "திருவல்லவாழ் நகருணின்ற பிரானடி நீறடியோங்கொண்டு சூடுவதென்றுகொலோ," என்றும், "உலகுபடைத்துண்டவெந்தையறைகழல்சுடர்ப்பூந்தாமரைசூடுதற்கவாவர்," என்கிறபடியே, பாதாரவிந்தங்களை ஶிரோபூஷணமாக தரிக்கும்படியை காங்க்ஷித்தும், (சகூக) "கதாஹம் பகவத் பாதாம்புஜத்வயபரிசர்யாஶயா" (కదాహం భగవత్పాదాంబుజద్వయపరిచర్యాశయా) என்று தொடங்கி, (சகூஉ) "தத் பாதௌ பரிசரிஷ்யாமி" (తత్పాదౌ పరిచరిష్యామి) என்னுமளவாக, பாதமடைவதன் பாசத்தாலே, மற்றை வன்பாசங்கள் முற்றவிடும்படியையும், திருவடிக்கீழ் குற்றேவல் செய்யும்படியையும், (சகூங) "கதாஹம் பகவாந் ஸ்வகீயயாதிஶீதளயாவலோக்ய" (కదాహం భగవాన్ స్వకీయయాతిశీతళయావలోక్య) என்றுதொடங்கி, மேலெல்லாத்தாலும் பக்கம்நோக்கறியாதே அமலங்களாக விழிக்கும்படியையும், முகப்பேகூவிப்பணிகொள்ளும்படியையும், திருவடிக்கீழ்க்குற்றேவல் செய்யப்பெரியகாதலையுடையராய், அத்தாலே 'அடியேனடைந்தேன்' என்னும்படி, மாநஸமாகக்கிட்டி (சகூச) "உபஸராதேவ" (ఉపసరాదేవ) என்னும்படி, அப்பேரோலக்கத்தை தூரக்கண்டு சேவிக்கும்படியையும், 'அணிவதரவணைமேல் பூம்பாவையாகம் புணருமவனாய்' 'இமையோர்கள் குழாங்தொழுவதும் சூழ்வதும்செய் தொல்லைமாலை' கண்ணாலே காணும்படியையும், 'உற்றேனுகந்துபணிசெய் துனபாதம்பெற்றேனீதேயின்னும் வேண்டுவதெந்தாய்' என்றும், மீளவும் மநோரதங்களைப் பண்ணுகின்றுகொண்டு

வாசலிலேவானவர் அநுமதியுடனே உள்ளே புகும்படியையும், ‘அடைந்தேனுன்திருவடியை’ என்றவனைக்கிட்டிநமோநாராயணாய வென்றுவழுவிலாவடிமையை அர்த்தித்து தத்வஸித்திக்கு ‘அடியேனுடை யாவியடைக்கலம்’ என்று, ஆத்மாவை நிவேதிக்க, அவனும் குளிர்விழிகளாலே கடாக்ஷிக்க, எதுவே தென்பணியென்றுகேட்டு எல்லாவடிமைகளுஞ் செய்யவொருப்பட்டு, கைகளாலாரத் தொழுது “இரங்கிநீர்தொழுது” என்னும்படி ப்ரஹ்வாஞ்ஜலிபுடராய் அநுபவியா நின்றுகொண்டு, அத்யந்த ப்ரீதனாய் ப்ரீதிப்ரகர்ஷத்தாலே, கோவை வாய்துடிப்ப மழைக்கண்ணொடு நிற்கும்படியையும், (௬௫) “ ததோஹமவதா ” (తతో౽హమవతా) என்றுதொடங்கி, (௬௬) “அம்ருதஸாகராந்தர்நிமக்நஸர்வாவயவஸ்ஸுகமாஸீத” (అమృతసాగరాంతర్నిమగ్నసర్వావయవస్సుఖమాసీత) என்று மீளவும் தாமரைக்கண்களாலே “அவலோகநதாநம்” பண்ணும்படியையும்; சோதிச்வாய் முகுளம் அவலோகியாய், அலராதிருந்தது; இப்போதுஸவிலாஸஸ்மிதத்தாலே அலர்ந்து, ஆநையைநமென்று ஆளிட்டழையாதே, தானேவாவென்றழைத்து, துயரறு சுடரடியென்னும் பாதபங்கயமே, தலைக்கணியா என்னும்படியான “கமலமன்ன குரைகழல்களைத் தலைசேர்த்துத் தன்றாளிணைக்கீழ் சேர்த்து,” என்னும்படி, பாதோபதாநம்போலே சேர்த்தருளவேணும், அந்தமாயன் கொல்மலரடிக்கீழ்ச் சுழிப்பட்டோடும் சுடர்ச்சோதி வெள்ளமான அமுத வெள்ளத்தின் பத்திருவெள்ளத்திலே “அவாவறச்சூழ்ந்தாய்” என்னும்படி, அதிலே அவகாஹித்து, இங்கேசோகாபிகர்ஸிதமான தாபத்ரயங்கள்போலன்றிக்கே, அங்கே நிரதிசயசுகத்தை யநுபவிக்கவேணுமென்று, ஸ்ரீவைகுண்டகத்யத்திலே அர்த்தியா நின்றுகொண்டு, பரமபக்தி தலையெடுத்து, பெரிய அபிநிவேசத்துடனே, பெரியபெருமாள் சந்நிதியிலே எழுந்தருளி, பெரியபிராட்டியாரை புருஷகாரமாக முன்னிட்டுக்கொண்டு, பெரியகத்யமான, சரணாகதிகத்யத்தை பெரியவாற்றாமையாலே திருவுள்ளத்திலே படும்படி விண்ணப்பஞ்செய்து, சரணம்புக்கு; அநந்தரம், ஸ்ரீரங்க கத்யத்தையும் விண்ணப்பஞ்செய்து, அத்தலையிலுண்டான ஸர்வ ஶக்தித்வாதி கல்யாண குணங்களையும், தம்முடைய அஜ்ஞாநாஶக்தி முதலான அஸத்குணங்களையும், ஆவிஷ்கரித்து. ஆகிஞ்சந்யத்தையு மறிவியா நின்றுகொண்டு சரணம்புக்கு அத்யார்த்தராய் நிற்க; பெரியபெருமாளும், இவர் அபிப்ராயம் அறிந்து, உமக்கு வேண்டுவ தென்னென்றுவினவியருள; அடியேனைக் காலக்கழிவுசெய்யாமல் கடுகென, அங்கீகரித்தருள வேணுமென்ன; அதற்குப்பெரியபெருமாளும்நீர் ஒருக்ஷண மிருக்கையாவது, ஸம்ஸாரம் மறுவவிடாமல், திரிந்தும் அறப்பதறினீரோ, என்ன; உடையவரும், தேறேல் என்னை யுன்பொன்னடி சேர்த்தொல்லை வேறேபோ வெஞ்ஞான்றும் விடாதொழிய வேணுமென்ன; (௬௭) “ வதனேஹ்ருஹிஸம்வேஷ்டிதௌ ” (చక్షుర్భిస్సంస్పృశ్య) என்று, நாள்கடலாகத்தம்பிக்கிட்ட தாகாமல் (௬௮) “ஸத்ராஹம் ஜீவிதாவதி” (సత్రాహం జీవితావధి)

என்கிறபடியே, (சகூக) பெரியபெருமாளும்உகந்து, "[illegible]" ([illegible]) என்றவிவர்க்கு இன்றைக்கேழாநாள் அப்படியே செய்கிறோமென்ன, இவரும் "நம்முடையவாழ்வுவாய்க்கின்றவா" என்றுஹர்ஷத்துடனிருக்க; பெருமாளும், உடையவருக்கு, அருகிப்பரிவட்டம், திருமாலைகள், ப்ரசாதம் ஸ்ரீசடகோபன் முதலானவரிசைகளும், ப்ரசாதித்துவானவர் நாட்டையும்நீ கண்டுகொள்ளென்று விடைகொடுத்தருள; இவரும், மஹாப்ரசாதமென்று, ஸார்வபௌமரானராஜாக்கள்பக்கலில்நின்றும் நாடுபெற்றவர்கள், பெரியப்ரீதியோடே ராஜபவநத்தில்நின்றும்புறப்படுமாப்போலே, "பொங்கோதம்சூழ்ந்தபுவனியும் விண்ணுலகுமங்காதுஞ் சோராமே ஆள்கின்ற வெம்பெருமான் செங்கோலுடைய திருவரங்கச்செல்வ" னரான, ஸ்ரீரங்கராஜர்பக்கல் நின்றும், திருநாடாகிற மஹாராஜ்யத்தைப் பெற்று, அந்தராஜகுல மாஹாத்ம்யத்தாலேவந்த ப்ரீத்யுத்க திதோன்ற, ஸ்ரீரங்கராஜ தாநியிலும் புறப்பட்டு, மடமே எழுந்தருளி, அனைத்துக் கொத்திலுண்டானவர்களையும், சித்தமகிழ்ச்சியுடனனுப்பியருளி, சிஷ்யவர்க்கங்களா யுள்ளவர்களெல்லார்க்கும், ஒருக்காலும் அருளிச்செய்யாத பரம ரஹஸ்யங்களையெல்லாம், மூன்றுநாளாக, ப்ரசாதித்தருளி, இவ்வர்த்தங்களையெல்லாம் நீங்களும்விஸ்வஸித்து, உங்களைப் பற்றினார்க்கும் பரம்பரையாய் உபதேஸித்துப் போருங்கோளென் றருளிச்செய்ய; இத்தைக்கேட்டு முதலிகளும், ஸாஸங்காராயிருக்க; உடையவரும், இனி வெள்ளக் கேடாக வொண்ணாதென்று எல்லாரையும் அழைத்தருளி, இற்றைக்கு நாலாநாள், பெரியபெருமாள் திருவடிக ளேறப் போகிறோமென் றருளிச்செய்ய; எல்லாருமித்தைக்கேட்டு, கடல்கலங்கினாப்போலேகலங்கி, வேரற்றமரம்போலேவிழ; அவர்களைத்தேற்றி, என்னுடைய விஸ்லேஷத்தில், ஆத்மத்யாகம் பண்ணினாருண்டாகில் என்னோடன்வய மில்லையென் றருளிச்செய்து, அவர்களை தரிக்கப்பண்ணினார்.

அநந்தரம், (சஎ0) "[illegible]" ([illegible]) என்கிறபடி, தாமும், ஆழ்வான் வழியே பின்சென்று, (சஎக) "[illegible] ஸ்ரீ[illegible]ராமாநுஜ:" ([illegible] పరమస్థే

మశిష్టాగ్రగణ్యో హరాధీశే నిగమశిఖరవ్యాక్రియాం పటత్వం శిష్యస్తాంహాన్ శ్రుతిగురుముఖే రంగి కార్యేణ సాకం విన్యస్యోచ్చైః పరముఖ మధారోధుమప్యచద్యతీంద్రః కాసారాదిమదివ్యసూరి కృతిసత్ సోపానబంధాన్ ద్వయం శ్రీమంత్రోభయపార్శ్వ దండఘటితాం శ్రీభాష్యకీలస్థిరాం స్రేణిన్తిఖిలోజనశ్చ పరమవ్యోమ స్థలీప్రాపికాం స్వస్యాచార్యనియూపితాధ్వనరి ప్రాప్యారురోహేత్ సదా ఇత్యాశాస్యసకలం తాతకముఖ్య శ్రీదివ్యసూర్యాక్తృతిరాచార్యస్య చ తత్ ప్రబంధసేవహైస్సాకం ప్రతిష్ఠాప్యసః శ్రీరంగాదిమధా మసుస్వయమభూచ్ఛ్రీ దివ్యసూరిప్రజైస్సాకం తత్ పరమం పదం జిగమిషుః శ్రీమాన్ సరామానుజః) என்கிறபடியே, இங்குசெய்யவேண்டின கார்யங்களெல்லாஞ்செய்து தலைக்கட்டி, க்ருதக்ருத்யராய், நாலாநாள் அங்கே திருஞெடேறவெழுந்தருளத்திருவுள்ளமாயிருக்க; அவ்வளவிலேபெரியபெருமாளைத் திருவாராதனம்பண்ணிப்போரும், ஸ்ரீரங்கராஜபட்டர், பெரியபெருமாள்பட்டர் முதலானோர், பெரியபெருமாள் உடுத்துக்களைந்த நீலவாடைகுட்டிக்களைந்த திவ்யமால்யப்படி, சாத்துப்படிகள் அவர்ப்ரசாதம்துடக்கமானப்ரசாத விசேஷங்களையும், போரத்தளிகையிலே யெடுப்பித்துக் கொண்டு ஸர்வவாத்ய கோஷத்துடன்கொண்டுவந்து ப்ரசாதித்தவத்தைசிரஸா தரித்து ஸேவித்து, ஸ்வீகரித்த வநந்தரம், அவர்களுக்கு உகப்பான பஞ்சராத்ரஸம்ஹிதைகளில்; ஜ்ஞாநகாண்டங்களை அநுஸந்தித்து சேவித்துக்கொண்டிருக்க; அவ்வளவிலே, ஆட்கொண்டவில்லிஜீயர்யதிவரஜீயர்உள்ளிட்டஎழுநூறுஜீயர்களும், ப்ரஹ்மவல்லி, ப்ருகுவல்லி, நாராயணுநுவாகம்முதலான உபநிஷத்துகளை ஓத; பட்டர், கந்தாடை முதலியாண்டான், நடாதூராழ்வான் உள்ளிட்ட முதலிகளும், தத்தத்பரிசர்யா ஸாதநங்களை தரித்துக்கொண்டு, பரிவுடன், பரிவ்ருதராய் சேவித்துக்கொண்டு, ஸ்ரீபாஷ்யத்தில் அர்ச்சிராதிபாதத்தை அநுஸந்தியா நிற்க; அவ்வளவில், அவர்களில், பட்டர் விசேஷித்து இதிஹாஸ புராணங்களை சேவிக்க; மற்றுமுண்டான உபவீததாரிகளான ஸ்ரீவைஷ்ணவர்கள் ஒன்பதினாயிரம்பேரும், தத்பாவரான ஸ்ரீவைஷ்ணவர்கள் பன்னீராயிரம்பேரும், அருளிச்செயல் மூவாயிரமும் முன்னடிபின்னடியாக சேவிக்க; திருவரங்கப்பெருமாளரையர் பரிகரமான திருவாய்மொழியரையர் ஆப்பான் திருவழுந்தூரரையர், திருநறையூரரையர், அழகியமணவாள ரரையர், முதலான எழுநூறு திருவாய்மொழி விண்ணப்பஞ்செய்யும் தம்பிரான்மார்களும் பண்ணிசைதாளத்துடன் திருவாய்மொழிபாட; திருவரங்கத்தமுதனார், பெய்யில்வள்ளலார் துடக்கமானவர்கள்உடையவர் நூற்றந்தாதிசேவிக்க; எம்பார் பிள்ளான் உள்ளிட்டவர்கள் தத்திகப்ரீதிஹேதுவான ஸ்தோத்ர கத்யங்களைசேவிக்க; வடுகநம்பியும், ராமாநுஜதாஸரானகோமடத்துச் சிறியாழ்வானும் உடையவர்ப்ரபத்தியை அநுஸந்தித்துகொண்டுதிருவடிக்கருகேயிருக்க; தாமும் ஏவம்விதமான ஆர்யகோஷத்தைக்கேட்டு ஹ்ருஷ்டராய், வைகுண்ட நிர்யாணநிரதராய், அதற்குப்ரயாண பாதேயமான த்வயத்தை யாவ்ருத்தி பண்ணுகிற்கிறவர், தடஸ்த்தனாக்கடாக்ஷித்தருளி தாம்ருஸ்த்தமானகூடஸ்த்த

ஸ்ரீஸூக்தியையும், ஸ்ரீபாஷ்யத்தையும் க்ஷேமமான நிக்ஷேபமாக ஸ்தாபிக்கும்படி ஆஜ்ஞாபித்தருளினர்.

அநந்தரம், ஒருவன்ப்ரபந்நனானால் அவனுடைய ஆத்மயாத்ரை ஈஸ்வராதீனமாகையாலே, அதற்குக் குறையவேண்டாம்; குறைந்தானாகில் ஆத்மஸமர்ப்பணம்பொய்யாமித்தனை. இனி இவனுடையதேஹயாத்ரை கர்மாதீனமாகையாலே, அதற்குக்குறையவேண்டாம்; குறைந்தானாகில் நாஸ்திகனாமித்தனை. ஆகையாலே உபயயாத்ரையிலும் இவனுக்கன்வய மில்லையென்றருளிச்செய்ய; முதலிகளும் ஆகில் எங்களுக்கு இருக்குநாளைக்கு காலக்ஷேபமிருக்கும்படி யெங்ஙனேயென்ன! உடையவரும், உபாயாம்ஸத்தில் அந்வயியாதே ப்ராப்யமான பகவத்பாகவத கைங்கர்யத்திலே அந்வயியுங்கோள்.

ஸ்ரீபாஷ்யத்தை வர்த்திப்பித்து, நடத்திக்கொண்டுபோரும் படி நடாதூராழ்வானைக்கடாக்ஷித்து; அவர்க்கு, (௪௭௨) "ஸத்பூர்வ காலஸம்பதி ஶிஷ்யவர்கா நநந்யலப்யைரபி சிஹ்நைஃ ஶ்ரீபாஷ்யஸிம்ஹாஸநமாத்மகீயம் யஸ்மை ச தத்தம் யதிஶேகரேண" (సత్పూర్వకాలాసంపదిశిష్యవర్గానవన్యల బ్యైరపి చిహ్నైః శ్రీభాష్యసింహాసనమాత్మకీయం యస్మైశ్చదత్తంయతిశేఖరేణ) என்னும்,

படி, ஸ்ரீபாஷ்யஸிம்ஹாஸநத்தைப்ரஸாதித்து; அநந்தரம்,முந்தறப்ரஸாதித்த வேதாந்தாசார்யபதத்திற்குமேல் (௪௭௩) "கிந்து ப்ரவ்ருத்திபலதாரிதவிஷ்ணுமாயம் மத்வம்ஶ்யராஜகுலம்" (కింతుప్రవృత్తిబలతారితవిష్ణుమాయం మద్వంశ్యరాజకులం) என்னும்படியானராஜகுலமாஹாத்ம்யத்தையுடையராகையாலேப்ரபத்யர்த்த ப்ரதிபாதகமாய், ப்ரமாணசரமமான ஸ்ரீஸூக்தி ஸிம்ஹாஸநத்தையும் அந்த பெரியபரிஷத்திலே,பெரியபட்டர்க்கிட்டருளி; கந்தாடைமுதலியாண்டானைக் கடாக்ஷித்து ப்ரமாத்ருசரமமான, தம்முடைய சரமவிக்ரஹகைங்கர்யத்தைக் கல்பித்தருளி; திருக்குருகைப்பிரான்பிள்ளான்முதலானமுதலிகளைப்பார்த்து பட்டருக்கு க்கீழ்மையாயிருங்கோளென் றருளிச்செய்து; ஸ்தாநஸமயத்தில் உண்டானவர்களையழைத்தருளி, அபராதக்ஷாபணம்பண்ணிக்கொண்டுவேண்டிக்கொள்ள; அவர்களும் தேவரீருக்கொரு அபராதமுண்டோ! உலகங்களுக்கெல்லாம் ஓருயிரான தேவரீரை யிழந்து எங்ஙனே தரிப்போமென்று, கண்பனிசோர தலையிறக்கிட்டு நிற்க; உடையவரும், 'அன்போடு தென்றிசை நோக்கிப் பள்ளிகொள்ளு மணியரங்கன்' இருக்க, உங்களுக்கொரு தாழ்வில்லை; பெரியபெருமாள் ஸ்ரீகார்யம் ஆராயுமிடத்து பட்டரைமுன்னிட்டு ஆராய்ந்து போருங்கோள்; ஸ்ரீவைஷ்ணவர்களை ஆரவணைத்துக்கொண்டுபோருங்கோளென்றுகற்பித்தருளி, அவர்களை பட்டர்திருக்கையிலே காட்டிக்கொடுத்தருளி; பட்டரைப்பார்த்தருளி, உமக்குத்தந்தையும் தாயுமாவாராய், ப்ரமேயசரமமான பெரியபெருமாள் திருவாராதநத்தைப்பெருக்கநடத்திக்கொண்டு நம்முடைய தர்ஶநத்தையும் நன்றாய் பராமர்சித்து நடத்திக் கொண்டு போருமென்று நியமித்தருளினர்.

அநந்தரம், சமூஹத்திலுண்டான ஸ்ரீவைஷ்ணவர்களையும் பார்த்தருளி, ப்ரபந்நாதிகாரிகளுக்கு முன்னடிபார்த்து வர்த்திக்கவேண்டுவன, மூன்றுவிஷய முண்டு, அவையாவன:—(க) அநுகூலரொன்றும் (உ) ப்ரதிகூலரொன்றும், (௩) அநுபயரொன்றும், த்ரிவிதமாயிருக்கும்.

இதில் (க) அநுகூலராவார், ஸ்ரீவைஷ்ணவர்கள்.
(உ) ப்ரதிகூலராவார், பகவத்வேஷிகள்.
(௩) அநுபயராவார், ஸம்ஸாரிகள்.

இதில், அநுகூலரைக்கண்டால், சந்தநகுஸும தாம்பூலாதிகளைக் கண்டாற்போலவும், நிலாத்தென்றல்களைக்கண்டாற்போலவும், அபிமத விஷயத்தைக்கண்டாற்போலவும், உகந்துபோரக்கடவன்.

ப்ரதிகூலரைக் கண்டால், சர்ப்பாக்நிகளைக் கண்டாற்போலவும், வெருவி வர்த்திக்கக்கடவன்.

அநுபயரைக் கண்டால், காஷ்ட்ட லோஷ்ட்டாதிகளைக் கண்டாற் போலே, த்ருணீகரித்து வர்த்திக்கக்கடவன். அவர்கள் அநுகூலித்தார்களாகில், ஆத்மஜ்ஞாநத்தையுபதேசிக்கவும். அநுகூலியார்களாகில், அய்யோவென்று, க்ருபைபண்ணிப்போரவும்.

இப்படிசெய்ய ஒட்டாது அர்த்தகாமப்ராவண்யம் - அர்த்தகாமமடியாக ஸ்ரீவைஷ்ணவர்களை அநாதரிக்குமாகில், சார்வபௌமனை ராஜாவின்புத்ரனை, ராஜசந்நிதியிலே, பரிபவிப்பித்தால், ராஜாவெறுக்குமா போலே எம்பெருமான்திருவுள்ளம் வெறுக்கும். அர்த்தகாமமடியாக ப்ரதிகூலரை ஆதரிக்குமாகில், சார்வபௌமனைராஜாவின் மஹிஷி, க்ஷுத்ரஜந்துக்கள்பக்கல் மடிப்பிச்சை புக்கால், ராஜாவுக்கவத்யமாகையாலே ராஜா வெறுத்திருக்குமாபோலே, எம்பெருமானிவனை வெறுத்திருக்கும். அர்த்தகாமமடியாக அநுபயரையாதரிக்குமாகில், ரத்நத்திற்கும் பலகரைக்கும், வாசியறியாதாப்போலே, பிறந்தஜ்ஞாநம்கார்யகரமாய்த்தில்லையென்று, எம்பெருமானிவனை அநாதரிக்கும்என்றருளிச்செய்தருளினார்.

பின்பு நம்பெருமாள் சந்நிதிக்குப் பட்டரைக்கூட்டிக் கொண்டு, பெருமாளை சேவித்து, பட்டருக்கு முன்னாக தீர்த்த ப்ரசாதங்களையும் ப்ரசாதிப்பித்து, தாமும் தீர்த்தப்ரசாதஸ்வீகாரஞ்செய்து; முதலிகளைக் குறித்து, முன்னுக்கு தர்ஶநப்ரவர்த்தகர் இவரொன்று பட்டரைக்காட்டியருளி; வாரீர் பட்டரே, மேல்நாட்டிலே வேதாந்தியென்றொரு பெரிய வித்வான் இருக்கிறானென்று கேட்டோம், நீர் அங்கேறப்போய் அவனை நம்தர்ஶநப்ரவர்த்தகராம்படி திருத்துமென்றருளிச்செய்து, பட்டரையுங் கூட்டிக்கொண்டு, மடமேயெழுந்தருளி, ஸ்ரீபாதத்துமுதலிகள்எல்லாரை

யும் அழைத்து, நம்முடைய விஶ்லேஷத்தில், அவிவேகம் பண்ணீர்கோளாகில், நம்மாணையென் றுஜ்ஞாபித்து; பெரியநம்பி, ஸ்ரீயாளவந்தார் ஸ்ரீபாதமே அமையும், நம்மோடு சம்பந்தமில்லை, நித்ய ஸூரிகள் திரளிலும் புகுரப்பெறுதே எழுப்புதிகோள்; அதுவுமன்றியே, நம்சடகோபர் திருவுள்ளத்தை, மறுத்தவர்களாய் அதஃபதிகளாகக்கடவர்களென்றும் அருளிச்செய்து, எல்லார் கையாலும் தம் திருவடிகளைத் தொடுவித்து, ஶுளறவுகொண்டு, முதலிகளைத்தீர்த்தங்கொண்டு அமுதுசெய்யப்பண்ணி; பிள்ளைப்பிள்ளையாழ்வான், உக்கலாழ்வான், கோமடத்தாழ்வான், செட்டலூர் சிறியாழ்வான், வேதாந்தியாழ்வான் முதலானவர்களை, முதலியாண்டான்றிருக்கையிலே காட்டிக்கொடுத்தருளியும்; எச்சான், அநந்தாழ்வான், தொண்டனூர்நம்பி, மருதூர்நம்பி, முதலானவர்களை, அருளாளப்பெருமாளெம்பெருமானர் திருக்கையிலே காட்டிக் கொடுத்தருளியும்; பட்டர், கணியனூர் சிறியாச்சான், சட்டம்பள்ளிஜீயர், பெரியாண்டான், சிறியாண்டான் முதலியவர்களை, எம்பார்திருக்கையிலே காட்டிக்கொடுத்தருளியும்; கிடாம்பியாச்சான், கிடாம்பிப்பெருமாள், எங்களாழ்வான், நடாதூராழ்வான் முதலானவர்களை, திருக்குருகைப்பிரான் பிள்ளான் திருக்கையிலே காட்டிக் கொடுத்தருளியும்; மாருதிப் பெரியாண்டான், மாறென்றில்லா மாருதியாண்டான், அரணைபுரத்தாழ்வான், ஆசூரிப்பெருமாள், அம்மங்கிப்பெருமாள் முதலானவர்களை, நடுவிலாழ்வான்றிருக்கையிலே காட்டிக்கொடுத்தருளி; பின்பு பட்டரைப்பார்த்தருளி, கூரம், கந்தாடையில், ஆழ்வானையும், ஆண்டானையும்போலே கூரகுல திலகரானநீரும் வாதூலகுலதிலகரான கந்தாடையாண்டானும், நாமடியாகவுண்டான ஸௌப்ராத்ரத்தையுடையராய், (சஎச) "𑌮𑌚𑍍𑌚𑌿𑌤𑍍𑌤𑌾 𑌮𑌦𑍍𑌗𑌤𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌃" (మచ్చిత్తా మద్గతప్రాణాః), (சஎரு) "𑌬𑍋𑌧𑌯𑌨𑍍𑌤𑌃 𑌪𑌰𑌸𑍍𑌪𑌰𑌂" (బోధయంతః పరస్పరం) என்னும்படியா யிருங்கோளென்றருளிச்செய்து ஸ்ரீவைஷ்ணவர்களையும்பார்த்து (சஎசு) "𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌾𑌜𑍍𑌯𑌂 𑌭𑌾𑌷𑍍𑌯𑌂 𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌵𑌚𑌨𑌮𑌶𑌕𑍍𑌤𑍌 𑌶𑌠𑌰𑌿𑌪𑍋𑌰𑍍𑌗𑌿𑌰𑌾𑌂 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌵𑌾𑌸𑌃 𑌪𑍍𑌰𑌭𑍁𑌪𑌰𑌿𑌚𑌿𑌤𑌸𑍍𑌥𑌾𑌨𑌨𑌿𑌵𑌹𑍇 - 𑌪𑍍𑌰𑌭𑍋𑌃 𑌕𑍈𑌙𑍍𑌕𑌰𑍍𑌯𑍇 𑌵𑌾 𑌪𑍍𑌰𑌪𑌦𑌨𑌮𑌨𑍋𑌰𑌰𑍍𑌥𑌮𑌨𑌨𑌂 𑌪𑍍𑌰𑌪𑌨𑍍𑌨𑌾𑌨𑌾𑌂 𑌵𑌾 𑌮𑍇 𑌭𑌵𑌤𑍁 𑌪𑌰𑌿𑌚𑌰𑍍𑌯𑌾𑌪𑌰𑌿𑌚𑌯𑌃" (పరిత్యాజ్యాభాష్యంతత్ప్రవచనమశక్తౌ శఠరిపోర్గిరాంశ్రద్ధావాసః ప్రభుపరిచితస్థాననివహే । ప్రభోఃకైంకర్యే వా ప్రపదనమనోరర్థమననం ప్రపన్నానాం వా మే భవతుపరిచర్యాపరిచయః.) (சஎஎ) "𑌗𑌚𑍍𑌛𑌨𑍍 𑌪𑌰𑌂𑌪𑌦𑌮𑍁𑌵𑌾𑌚 𑌵𑌚𑌾𑌂𑌸𑌿 𑌯𑌾𑌨𑌿 𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌾𑌰𑍍𑌯 𑌇𑌹 𑌤𑍇𑌷𑍁 𑌚𑌤𑍁𑌰𑍍𑌥𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌂 - 𑌶𑍍𑌰𑍀𑌯𑌾𑌦𑌵𑌾𑌦𑍍𑌰𑌿𑌵𑌸𑌤𑌿𑌂 𑌸𑌤𑌤𑌂 𑌭𑌜𑌨𑍍𑌤𑌸𑍍 𑌸𑌨𑍍𑌤𑍋 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌮𑌮 𑌸𑌨𑍍𑌤𑌤𑌿𑌮𑍂𑌲𑌨𑌾𑌥𑌾𑌃" (గచ్ఛన్ పరంపదముపాచ వచాంసియాని రామానుజార్య ఇహ తేషుచతుర్థ సిద్ధాం శ్రీయాదవాద్రి వసతింసతతంభజన్త స్సంతోభవంతి మమసన్తతిమూలనాథాః.) என்கிற

படியே, இருக்கும் நாள்பண்ணலாம் கைங்கர்யம் ஆறுண்டு, அதாவது:— (க) ஸ்ரீபாஷ்யத்தைவாசித்தும், வாசிப்பித்தும் போருங்கோள்; அதற்கு யோக்யதை யில்லாவிடில், (உ) அருளிச்செயலை ஓதியும்; ஓதுவைத்தும் போருங்கோள்: அதற்கும் யோக்யதை யில்லாவிடில், (ந) உகந்தருளின நிலங்களிலே அமுதுபடி, சாத்துப்படி முதலானவற்றை யுண்டாக்கி நடத்திக்கொண்டுபோருங்கோள்; அதற்கும்யோக்யதையில்லையாகில் (ச) திருநாராயணபுரத்திலே ஒருகுடில்கட்டிக்கொண்டிருங்கோள்: அதற்கும் யோக்யதையில்லையாகில், (ரு) த்வயத்தை அர்த்தாநுசந்தாநம் பண்ணிப் போருங்கோள்; அதற்கும் யோக்யதையில்லையாகில்; (சா) என்னுடையவனென்று அபிமாநிப்பான் யாவனொரு பரமபாகவதன் அவனுடைய அபிமாநத்திலே ஒதுங்கிப்போருங்கோளென்றும்; இவற்றின் ப்ரியப்ரியதர ப்ரிய தமங்கள் இன்னதென்றும்; ப்ராப்திப்ரதிபந்தகமான பகவத்பாகவத ஆசார்யவிஷயங்களில், * அபசாரத்தை வருந்தியும் பரிஹரித்துப் போருங்கோளென்றும்; இவைமுதலானவைகளாயுள்ள அநேக ஹிதங்களை ப்ரசாதித்து, அவைகளை யுபசம்ஹரித்தருளினார்.

(ஸ்ரீ இளையாழ்வார் பரமபதத்திற்கெழுந்தருளும் ப.

அநந்தரம் சகலமங்களவாத்யங்களும் ஆரவாரிக்க, அநேகதிவ்ய ப்ரபந்தாநு சந்தாநத்வநி யெங்கும் பூரிதமாக, அலங்கார திருமஞ்சநங் கண்டருளி, திரு ஒற்றுடைசாற்றி, சுத்தாசமநபூர்வகமாக நித்யாநுஷ்ட்டாநங்கள் நடத்தியருளுகையில், அசக்திபாராமல் அர்க்யத்தையும் உத்திஷ்டமாநராய் நின்றேசெய்தருளி, தச்சேஷத்தையும் தலைக்கட்டியருளி, திருத்வாதசநாமங்களையும் தரித்தருளி, திருமணிவடம், திருப்பவித்ரம்

☞ இதுவும் உடையவர் தம்மந்திமதசையில் ப்ரசாதித்தருளிய ரஹஸ்யார்த்த விசேஷங்கள். இது, ஆறுயிரப்படியிலடங்கிய விஷயமன்றிக்கே, இக்ரந்தத்திற்கு மேலிட்டதென்றுணர்க.

※ இது சகலவேதங்களிலும், சகல ஶாஸ்த்ரங்களிலும், சகலமான ஆழ்வார் திவ்யப்ரபந்தங்களிலும், சகலாசார்ய பாசுரங்களிலும், பார்த்தவிடத்தில், ஒரு அதிகாரிக்குத்வயமொழிய மந்த்ரமில்லை, மிதுநமொழிய வஸ்துவில்லை, கைங்கர்யமொழியப் புருஷார்த்தமில்லை, ஆசார்யாபிமாநமொழிய மோக்ஷாபாயமில்லை, பாகவதாபசாரமொழிய மோக்ஷவிரோதமில்லை.

பாகவதாபசாரந்தான்-பஹு—விதம்; அதில்ப்ரதாநமான அபசாரங்கள் பன்னிரண்டு, அவை யெவையெனில் :— (க.) ஜந்மநிரூபணம், (உ.) சரீரநிரூபணம், (ந.) பாகநிரூபணம், (ச.) ஆஶ்ரமநிரூபணம், (ரு.) அவயவநிரூபணம், (சா.) ஆலஸ்யநிரூபணம், (எ.) வாஸநிரூபணம், (அ.) பந்துநிரூபணம்; (கூ.) ப்ரகாசநிரூபணம், (க0.) ப்ரகாரநிரூபணம், (கக) வர்த்தநநிரூபணம், (கஉ.) தோஷநிரூபணம்.

திருமாலைப்ரசாதம் பரிவட்டப்ரசாதங்கள் முதலானவற்றையும் சாத்தி யருளி, தீர்த்தங்களும் ஸ்வீகரித்து, குருபரம்பரா பூர்வகமாக ரஹஸ்ய த்ரயத்தையும் ஸார்த்தமாக அநுசந்தித்து, பெரியபெருமாள்திருவடிகளை யுத்தேசித்துத் தண்டஞ்சமர்ப்பித்து, முதலிகளையும் அநுவர்த்தித்து அநுமதிகொண்டு, ஸ்ரீயாளவந்தார்திவ்யமங்களவிக்ரஹத்தை த்யாகித்துக்கொண்டு பத்மாஸநஸ்த்தராய் எழுந்தருளியிருந்து, பரவாசுதேவரிடத்திலே

---

இதில் (க) ஜன்மநிரூபணமாகிறது :— "ஶூத்ரம் வா பகவத்பக்தம் நிஷாதம் ஶ்வபசம் ததா । வீக்ஷதே ஜாதிஸாமாந்யாத் ஸ யாதி நரகம் நர:" (శూద్రం వా భగవద్భక్తం నిషాదం శ్వపచం తథా । వీక్షతే జాతిసామాన్యాత్ స యాతి నరకం నరః) என்றும், "ந ஶூத்ரா பகவத்பக்தா விப்ரா பாகவதா: ஸ்ம்ருதா: । ஸர்வவர்ணேஷு தே ஶூத்ரா யே ஹ்யபக்தா ஜநார்தநே" (నశూద్రాభగవద్భక్తావిప్రాః భాగవతాస్స్మృతాః సర్వవర్ణేషు తేశూద్రా యేహ్యభక్తాజనార్దనే) என்றும், ய: பஶ்யதி ஶுபாசாரம் வைஷ்ணவம் கதகல்மஷம் । யஸ்மிந் கஸ்மிந் குலே ஜாதம் ப்ரணமேத்தண்டவத்புவி" (యః పశ్యతి శుభాచారం వైష్ణవం గతకల్మషం । యస్మిన్ కస్మిన్ కులే జాతం ప్రణమేద్దండవద్భువి) என்றும், "கிமப்யத்ராபிஜாயந்தே யோகிந: ஸர்வயோநிஷு । ப்ரத்யக்ஷிதாத்மநாதாநாம் நைஷாம் சிந்த்யம் குலாதிகம்" (కిమప్యత్రాభిజాయంతే యోగినస్సర్వయోనిషు । ప్రత్యక్షితాత్మనాథానాం నైషాంచింత్యంకులాదికం) என்றித்யாதி ப்ரமாணங்களில் சொல்லப்பட்டிருக்கையாலேதான் ஸ்ரீவைஷ்ணவர்களை ஜந்மநிரூபணம்பண்ணுகை யபசாரம்.

(உ.) ஶரீரநிரூபணமாவது: — புருஷஶரீரமென்றும், ஸ்த்ரீஶரீரமென்றும், திருவநந்தாழ்வானைப் பாம்புஶரீரமென்றும், ஸ்ரீ கருடாழ்வானையும், ஜடாயுமஹாராஜாவையும் பக்ஷிஶரீரமென்றும், ஸ்ரீ கஜேந்த்ராழ்வானையும், திருவடியையும், சுக்ரீவமஹாராஜாவையும் ம்ருகங்களென்றும், ப்ரஹ்லாதாழ்வானையும், ஸ்ரீவிபீஷணாழ்வானையும், மஹாபலியையும் இவர்கள்முதலான பகவத்தாசர்களை ராக்ஷஸர்களென்றும், தேவ திர்யக் மநுஷ்ய ஸ்த்தாவரரூபங்களான சதுர்விதரூபங்களில், பகவத்பக்தர் யாதொருஶரீரம் பரிக்ரஹித்திருந்தாலும், இன்னஶரீரமென்று ஶரீரநிரூபணஞ்செய்கை யபசாரம்.

(ங.) பாக நிரூபணமாகிறது: — ஷட்பாவ விகாரமாய் பால்ய யௌவந வ்ருத்தாதி வயோநிரூபணம்செய்கை யபசாரம்.

(ச.) ஆஶ்ரமநிரூபணமாகிறது: — "ப்ரஹ்மசாரீ க்ருஹஸ்தோ வா வாநப்ரஸ்தோ யதி:" (బ్రహ్మచారీగృహస్థోవావానప్రస్థయతి) இத்யாதிகளில், ஸ்ரீவைஷ்ணவர்களை இன்ன ஆஶ்ரமத்திலவர்களென்று ஆஶ்ரமநிரூபணஞ் செய்கை யபசாரம்.

(ரு.) அவயவநிரூபணமாகிறது: — திருமேனியிலேயாதல் அவயவங்களிலே யாதல், வைஷ்ணவர்களுக்கொரு தோஷமுண்டாகிலும்,

ரமபக்திநடந்து செல்ல; அநந்தரம் பரமயோகி கம்யவிஷயத்தில் யோ
த்திலே பரமயோகியுமாய் பரயயோகியுமானதம்மை தத்விஷயத்தில்
நியோகித்து; பின்பு (சஎஅ) "[illegible]" (పద్మనేత్రేస్యమీల
నమ్) என்கிறபடியே திருக்கண்களைச்சும்புளித்தருளி பரவஶகாத்ரராய்,
ம்பார் திருமடியிலே திருமுடியும் வடுகநம்பிதிருமடியிலே திருவடி
ளுமாகக் கண்வளர்ந்தருளி (சஎகூ) "[illegible]"
(మాఘశుద్ధదశమ్యాంతు మధ్యాహ్నే మందవాసరే। యోగిరాజస్య భోగీశభావం స్వేభసమధ్యగాత్)

---

அவர்கள் ஜ்ஞாநமே ஸர்வாவயவபூர்த்தியென்று பாராமலிருக்கை
பசாரம்.

(கு.) ஆலஸ்ய நிரூபண மாகிறது:—ப்ரபந்நனவன் தன்னு
டைய திருமேனி ஶோஷித்து ஹேயமாயிருக்குமிடத்தில் குத்ஸியாமல்
அவர் விக்ரஹமே போக்யமாகப்பாராதிருத்தலபசாரம்.

(எ.) வாச நிரூபண மாவது:—கோயில் திருமலை பெருமாள்
கோயில் நின்றும் எழுந்தருளின ஸ்ரீவைஷ்ணவர்களை ஆதரிப்பார்கள்;
இப்படியே, ஒருகுப்பத்திலிருந்து எழுந்தருளின ஸ்ரீவைஷ்ணவரை அவ
ரிருந்த ஸ்த்தலம் திவ்யதேசம் என்று உத்தேஶ்யப்ரபத்தி செய்யாதிரு
க்கையபசாரம்.

(அ.) பந்து நிரூபணமாவது:—தன்னுடைய ப்ரக்ருதிபந்துக்
களிலே ஒரு ஸ்ரீவைஷ்ணவனுண்டாகில் தன்னுடைய ஸ்வாமியென்று
உத்தேஶ்யப்ரபத்திசெய்யாதிருக்கையபசாரம்.

(கூ.) ப்ரகாச நிரூபணமாவது:—ஆசார்யனுகிலும், ஸிம்ஹாஸ
நத்திலவர்களையும் பூஜ்யரானவர்களையும் ப்ரசித்தமாக ஆசார்யகைங்கர்ய
தாஸ்யக்ருத்யம்பண்ணுமவர்களையும் உபாயஶூந்யராய்ஓதுங்கிவர்த்திக்கு
மவர்களையும், ஏகப்ரகாரத்தில் ரக்ஷகரொன்று பாராதிருத்தல்அபசாரம்.

(கய.) ப்ரகார நிரூபணமாவது:—திருநந்தவநம் செய்கிற ப்ர
பந்நரையும், திருமுற்றம் விளக்குகிற பரபந்நரையும், சாத்துப்படி
திருமாலை திருவிளக்கிடுகிற ப்ரபந்நரையும் மற்றுமித்யாதிபரிசாரங்கள்
செய்கிறப்ரபந்நரையும், பார்வைக்கொன்றும் செய்யமாட்டாதே வெறு
மனே யிருக்கும்ப்ரபந்நரையும், ஏகப்ரகாரத்திலே உத்தெஶ்யரொன்று
பாராதிருக்கையபசாரம்.

(கக.) வர்த்தந நிரூபணமாவது:—ஸ்ரீவைஷ்ணவர்கள திரு
மேனியாத்ரையாக வர்த்திக்கையில், பாங்காயிருந்தாலும், இவ்வகையில்
இருக்கிறார்களென்று நினைக்கை யபசாரம்.

என்னும்படியான திவஸத்திலே தம்முடைய பூர்வாவதாரமான ஆயிரம் சுடர்வா யரவணையோடே நம்பிமூத்தபிரானைப்போலே எம்பெருமானாரான இவரும் கூடியருளினார்.

இவ்வ்ருத்தாந்தத்தைப்பின்பும் "அன்பருடன்களித்த பெரும்பூதூரெதிராஜன் இன்பமுடனுமிசைந்து ஒருநூற்றிருபதாண் டிங்கிருந்ததற்பின், அன்பினலாழ்வானுண்டா னலக்குமவர்க்கடியாமுடி புனைந்து மன்பதையை வாழ்வித் தாரங்கம் வைகும்" எனவாழ்வித்தருளி, "ஆராமஞ்சூழரங்கர்தம்மை அலர்மாமகளையடி யிறைஞ்சித்தாரீர் சரணந்தனை

---

(௧௨) தோஷநிரூபணமாவது:— ஸ்ரீவைஷ்ணவர்கள் திருமேனி போகமான ப்ரவ்ருத்தி "ஸாக்ஷாத்பாரதீ புத்ர்யா த்ரௌபதீ ச பதிவ்ரதா - தத்வ்யாதா: பாண்டவா தந்யா: ப்ரஸந்நோ புருஷோத்தம:" (సాక్షా భారతీపుత్ర్యా ద్రౌపదీ చ పతివ్రతా। తద్వ్యాధాః పాండవా ధన్యాః ప్రసన్నో పురుషోత్తమః) என்று த்ரிவிதகரணங்களிலும், விசேஷ ஜ்ஞானமொன்றும், அநுஷ்ட்டாதாவென்றும், இத்யாதிதோஷங்களைநிரூபிக்கையபசாரம்.

இப்படி, தான் ஸ்ரீவைஷ்ணவர்கள் தோஷங்களைப்பார்க்கக்கடவனல்லன். கண்ணாலே பார்த்து மநசாலேநினைத்து வாக்காலேசொல்லி அம்மாரீசனைகநகம்ருகத்தைக் கொண்டுவரச்சொல்லிபகவானையனுப்பினது அபசாரம்.

அதென்னென்னில் :—

கந்தர்ப்பகோடிலாவண்யமாய், பஞ்சோபநிஷன்மயமாய் ஹாவுஹாவு என்று திவ்யமங்கள விக்ரஹாநுபவம் பண்ணி; சப்தாதிவிஷயப்ராவண்யத்தில் ஒருஸ்வர்ணபாஸ ம்ருகத்தையபேக்ஷித்துப் பெருமாளைவிட்டபோதே, பரமபாகவதரான இளையபெருமாளைப் பருஷவாக்யங்கள் சொன்ன போதே ராக்ஷசன்கையில் சிறைபோகவேண்டித்து. வாசகத்தில் செய்தவபசாரத்திற்கு ப்ராயஶ்சித்தமில்லை. ஆகையாலே "நக்ஷத்ராதிகதாசந" (నక్షత్రాదికదాచన) என்று பன்னிரண்டு, இவைதான் பகுமுகமாகவந்தேறும்.

இவ்வபசாரங்களைத்தான்பண்ணுகையும், தனக்குத் தேஶ்யனை ஆசார்யன் பண்ணிலும், "அவர்நியமாதி க்ரமம் ரஹஸ்யபோதையில்', என்கிறபடியே, ஏகாந்தத்திலே நியமித்து தவிர்ப்பியா தொழிகையும். பரதந்த்ரரானவர்கள் பண்ணுமிடத்தில்முதுகிலே யடித்துவிலக்காதொழிகையும்: ஸ்ரீவைஷ்ணவர்கள் அந்யோந்யம் அபராதம்பண்ணுமிடத்தில், அவர்கள் ஸ்ரீபாதத்தைக்கட்டிக்கொண்டுப்ராணாந்தமானவளவும் நியமித்துத்தவிர்ப்பியாதொழிகையும் : அவர்கள் தவிராதவளவில், தான் பக

யென்னத்தந்தோமெனிலு மெதிராஜன்பாரோபரவும் பாகவதர்பிரிவால் பரிவில்படர்கூரச் சீரார்திருநாட்டைத்திருந்தச்சேடனிவனும் சேர்ந்தானல்" என்றும், இவரவதாரத்தில் (சஅய) "தீர்க்கஷா" (தீர்க்கஷா) என்றும் இவராந்த்யமதசையில் (சஅக) "ஶமோஹநஷ்டஃ" (ஶமோஹநஷ்டஃ) என்கிறவாக்யமும் இப்படிவருவதே என்று அகிலரும் ஆஶ்சர்யப்பட்டார்கள்.

இப்படிச் சொல்லப் படுமதான வைபவத்தையுடைய இவரும் (சஅஉ) "யயாவாமஹோரஹ்யவாநிஷ்க்ருதஃ" (யயாவாமஹோரஹ்யவாநிஷ்க்ருதஃ) என்றும், (சஅங) "யாவஜ்ஜீவாபிமாத்ராணி ஜீர்ணாம்கவதிஹோமஃ"

---

வத்விஷயத்தில்சரணம் புகுராதொழிகையும்: ஸ்ரீவைஷ்ணவர்கள்ஏகாந்தத்திலே பண்ணினஅபசாரங்களைப்ரகாசமாக்குகையும்: அபசாரக்ஷாபணம் பண்ணினவர்களை, பரகவதாபசாரம் பண்ணினார்களென்று நினைத்திருக்கையும்.

இவ்வபசாரங்களுக்கெல்லாம் அடி அவஶ்யம் பரிஹாரநியமங்களான பன்னிரண்டும் அறியவேணும், அவையாவன (க) ஆஹாரநியமம், (உ) அநாஹாரநியமம், (ங) அங்கநியமம், (ச) போஜனநியமம், (ரு) ஸ்நாநநியமம், (சு) ஸ்வரூபநியமம், (எ) உபாயநியமம், (அ) உபேயநியமம், (கூ) வாஸநியமம், (ய) போகநியமம், (யக) ஆசாரநியமம், (கஉ) ஸம்ஸர்க்கநியமம்.

(க) ஆஹாரநியமமாகையாவது :—பாகவதாந்நமே புஜிக்கை. "ஸஜ்ஜநைரவிமஜ்ஜவ்யம் யத்ராஹாமவதாஷிதாஃ யாமெஞ்ஞாமவதவ்யாந்நஜஹாமெஜலம்விபெஞ" (ஸஜ்ஜநைரவிமஜ்ஜவ்யம் யத்ராஹாமவதாஷிதாஃ । யாமெஞ்ஞாமவதவ்யாந்நஜஹாமெஜலம்விபெஞ.)

(உ) அநாஹார நியமமாகையாவது :— பாகவதாலயங்களிலும், திருநந்தவநங்களிலும், ஸ்வாசார்யன் ஸம்ஸரிக்கும் ஸ்த்தலங்களிலும், மற்றும் விலக்ஷணஸ்த்தலங்களிலும் செய்யாதேமற்றைவிடத்திலே ஸம்ஸரிக்கையும்.

(ங) அங்கநியமமாகையாவது:—ப்ராக்ருதரிடத்தில் தன்னைக்கீழ்ப்படுத்தி ஆர்ஜ்ஜியாதே, அமுதுபடி சாத்துப்படி ஸ்ரீகாரியம்முதலானவற்றுக்கு அர்ஹமான த்ரவ்யங்களுக்குக் கர்த்தனையார்ஜ்ஜியாதே, அநுகூலரைநெருக்கி ஆர்ஜஜியாதே, ஸ்வக்ஷேத்ரத்தில் ஸ்வசரீரத்தில் க்ருஷிபண்ணியாதல், அநுகூலருடைய ஸ்நேஹத்தில் வந்தத்ரவ்யமாதல் மாதூகர மூஷ்டியினலே ஆர்ஜஜித்தத்ரவயத்தை பகவத்பாகவதவிஷயத்தில் ஸமர்ப்பித்தல்.

(யாவஜ்ஜீவமிமாந்யங்கானி ஜீர்ணாந்யஸ்மந்நிமித்தத:) என்றும் சொல்லுகிறபடியே "ஜீர்ணமிவவஸ்த்ரம் ஸுகேநேமாம் ப்ரக்ருதிம் ஸ்தூலஸூக்ஷ்மரூபாம் விஸ்ருஜ்ய" (ஜீர்ணமிவவஸ்த்ரம்ஸுகேநேமாம் ப்ரக்ருதிம்ஸ்தூலஸூக்ஷ்மரூபாம்விஸ்ருஜ்ய.) "என்று சுகமாகவேதிருமேனியையுபேக்ஷியோடேவிட; அநந்தரம், கந்தாடையாண்டான், அருளாளப்பெருமாளெம்பெருமானார், எம்பார், வடுகநம்பி முதலான முதலிகளெல்லாரும், வேரற்ற மரம்போலே, கோஷித்துக்

---

(ச) போஜநநியம மாகையாவது :—ப்ரசாதப்ரதிபத்தி பண்ணும போது ப்ரசாதஸ்வீகாரமன்று, வ்ருத்திமாத்ரமன்றும், தேஹதாரண மாத்ரமன்று, புருஷார்த்தமென்றிருக்கை.

(ரு) ஸ்நாந நியமமாகையாவது :— பாபவிமோசநமென்றுதல் ப்ரயோஜநாந்தர நினைவாதல், புண்கழுகிறேமென்றுதல் அதிகாரி ஸம்பந்துக்குடலாகையாதல், சரீரமாலிந்யத்துக் காகையாதல் அன்றிக்கே, பர்த்ருபோகத்திற்குப் பதிவ்ரதை ஸ்நாநம்பண்ணுமாபோலே, பகவத் பாகவத சமாராதனம்செய்கைக்காக ஸ்நாநம்பண்ணுகை.

(சு) ஸ்வரூபநியமமாகையாவது.—ததீயசேஷமாயிருக்கை.

(எ) உபாயநியமமாகையாவது:—அநந்யஸாதநனாயிருக்கை.

(அ) உபேயநியமமாகையாவது:—அநந்யப்ரயோஜநனாயிருக்கை.

(கூ) வாசநியமமாகையாவது :— அநந்யப்ரயோஜநனான மஹா பாகவதனுடைய திருமாளிகையில, கடைத்தலையிலொதுங்கிவர்த்திக்கை.

(ய) போகநியமமாகையாவது:—அவர்களுடையஸேவையே யெல்லாபோகங்களுமென்றிருக்கை.

(யக) ஆசார நியமமாகையாவது :— அர்த்த காமாபிமாநங்கள் ஹேதுவாக ஸ்ரீவைஷ்ணவர்கள் திருவுள்ளத்திலும், ஆசார்யன்றிருவுள்ளத்திலும் கலக்கம்பிறவாமலே ப்ரவர்த்திக்கை.

(யஉ) ஸம்ஸர்க்கநியமமாகையாவது:— ஸாத்வீகாங்கீகாரமுள்ள தேசத்தில் வசித்திருக்கை.

இந்நியமங்கள் உண்டாம்போது, இவ்வபசாரங்களொன்றும், புகுராதென்றருளிச்செய்தருளினார்.

பிராட்டிஒருகையும், ப்ரபத்தியுபதேசம்பண்ணின ஆசார்யன் ஒருகையுமாக, ப்ராப்யஸ்த்தலத்தேறப் பிடித்துகொண்டுபோகிலும் இவ்வபசாரங்கள் ப்ரதிபந்தகமாய்விடும்.

உடையவர், அந்த்யமதசையில் தம்மடியார்பலரும் அஞ்சாமல் வாழ்ந்திருக்கும்படிசிந்தைசெய்து, நல்லஹிதங்களைச்செப்பியருளினபடி.

கொண்டு விழுந்துகிடந்து துடித்து, திருமிடறுதழுதழுப்ப, திருமூக்கு வேர்ப்பிடிக்க, அவசராய்க்கிடந்து, இட்டகால் இட்டகைகளாய்ச் சிந்தித்துத்திகைத்து, இணைமலர்க் கண்ணீர்ததும்பி, தாராவர்ஷமாகத் திருமுத்துதிர்த்து ப்ரலாபிக்க; அவ்வளவிலே, பெரிய பெருமாளும், நம் உடையவரை யிழந்தோமேயென்று திருவுள்ளம்நொந்து நமக்குச் செவ்வாய் வக்ரமாய்த்ததுஎன்று சுருளமுதும் அமுதுசெய்யாமல், நாய்ச்சிமாருடனே புறப்பட்டருள; அவ்வளவில், பராங்குசபரகாலன் முதலான ஆழ்வார்கள் பதின்மர்களும் சேவித்துச்செல்ல; ஆயிரக்கால் திருமண்டபத்திலே எழுந்தருளியிருந்து, திருமுசத்தின்பணி, காளாஞ்சி, திரு வெண்சாமரம் திரு வாலவட்டம், திருவெண் கொற்றக்கொடை, வெண்முத்தின் கலசம், திருமேல்கட்டு, முத்துத்தாமம் தொடக்கமானவையும்; உடுத்துக்களைந்த பீதகவாடை, சூடிக்களைந்த தொடுத்த துழாய்மலர், எண்ணெய்சுண்ணமெல்லாம் பொற்றளிகையிலே கொண்டு போம்படி, உத்தம நம்பிக்கு விடைகொடுத்தருள; நம்பியும், அப்படியேதரித்துக்கொண்டு. பெருமாள்பரிகரம்அனைத்துக்கொத்தோடும், சகலவாத்யத்துடனே,மடத்துவாசலிலேசெல்ல; அதுகண்டு,முதலிகளெல்லாரும் தேறிநின்று, இனிச்செய்யவேண்டுங் க்ருத்யத்தைச்செய்யவேண்டுமென்று, எம்பெருமானாருடையவிமலசரமவிக்ரஹத்தை, தூய்தாகநீராட்டப்பண்ணுவித்து, அலங்கரித்து, கேசவாதி த்வாதசோர்த்வ புண்ட்ரங்களையும் சார்த்தி; பெருமாள்சார்த்திக்களைந்து வரவிட்டபெருமாளரையில் பீதகவண்ணவாடையுங் கொண்டுதிருமுடியிலே சார்த்தி, அவன்மாரணிந்த வநமாலையும் சார்த்தி அலங்கரித்து, உடையவர்திருவடிகளை, தம் கண்ணிலும், மார்பிலும்நெஞ்சிலும் ஒத்திக்கொண்டு, ஆசார்யவிஸ்லேஷாஸஹிஷ்ணுக்களாய், "அய்யோ கண்ணபிரானறையோ முறையோ வரவணைமேல் பள்ளிகொண்டமுகில்வண்ணனே"என்றுகையெடுத்து,போரப்பெருமிடறுசெய்து, கூப்பிட்டு, மூர்ச்சித்துக்கிடக்க; அருகிருந்தமுதலிகள் வந்து, எடுத்துத்தேற்ற தேறிநின்று; உடையவர், சாத்திக்களைந்து தச்சேஷமாயிருந்துள்ள எண்ணை, சுண்ணம், திருமண், ஸ்ரீசூர்ணம் எல்லாம்ப்ரசாதப்பட்டு, தீர்த்தங்கொண்டு, திருக்குருகைப்பிரான்பிள்ளான் திருக்கையாலே, ஆளவந்தாரைப்போலே, உடையவர்க்கு ப்ரஹ்மமேதத்தாலே ஸம்ஸ்கரித்து, ப்ரணவாகாரமாய், பீடயாநமான திவ்யவிமாநத்திலே யேறியருளப்பண்ணி, பேரி, சங்க, ம்ருதங்க, பணவதூர்யம்முதலானவாத்யங்கள்எங்குமுழங்க, பெருமாள் பரிகரமடைய, சத்ர சாமர தாலவ்ருந்தாதிகளை தரித்துசேவிக்க; அவ்வளவில், ஆட்கொண்ட வில்லிஜீயர்யதிவராஜீயர் உள்ளிட்டஎழுநூறுஜீயாளும்ப்ரஹ்மவல்லிப்ருகுவல்லிநாராயணநுவாகம் முதலான உபநிஷத்துகளோதை; பட்டர் கந்தாடை

யாண்டான்நடாதூராழ்வான் உள்ளிட்ட எழுபத்துநாலுமுதலிகளும் தத்பரிசர்யாஸாதநங்களை தரித்துக் கொண்டு பரிவுடன் பரிவ்ருதராய் சேவித்துக்கொண்டுவர; மற்றுமுண்டான ஸ்ரீவைஷ்ணவர்கள் ஒன்பதினாயிரம்பேரும்தத்பாவரான ஸ்ரீவைஷ்ணவர்கள் பன்னீராயிரம்பேரும் அருளிச்செயல்மூவாயிரமும்முன்னடிபின்னடியாகச்சேவிக்க;திருவரங்கப்பெருமாளரையர்பரிகரமான திருவாய்மொழியரையர்ஆப்பான்திருவழுந்தூரரையர் திருநறையூரரையர் அழகியமணவாளரையர் முதலான எழுநூறு திருவாய்மொழிவிண்ணப்பஞ்செய்யும் தம்பிரான்மார் பண்ணிசைத்தாளத்துடன்திருவாய்மொழிபாட;திருவரங்கத்தமுதனார்பெரியகோயில் வள்ளலார் தொடக்கமானவர்கள் உடையவர் நூற்றந்தாதிசேவிக்க; எம்பார்பிள்ளான்உள்ளிட்டவர்கள் ததநுகப்ரீதி ஹேதுவான ஸ்தோத்ர கத்யங்களைஸேவிக்க; வடுகநம்பியும்ராமாநுஜதாஸரான கோமடத்துச்சிறியாழ்வானும் உடையவர்ப்ரபத்தியை அநுசந்தித்துக்கொண்டுவர; திருவீதியெங்கும்கோடித்துபொரியும்புஷ்பமும்சிதற,நடைபாவாடையிட, கரும்பும்குடமும் ஏந்த, திருப்பதியில்சுமங்கலிகள்மங்கலதீபமேந்திமுன்னே செல்ல,இருபக்கமும்சாமரம்இரட்டிக்க,வெள்ளைவட்டமிட,தர்ஶநத்தில் எம்பெருமானார் திருநாட்டுக்கெழுந்தருளினார் என்று ஒற்றைத்திருச்சின்னம் பணிமாற, திருவீதிகள்தோறும் எழுந்தருள்வித்துக்கொண்டுவர, பெரியபெருமாளும் அந்தத்திருமேனியை அபிமதவிஷயத்தில் அழுக்குகக்குமாப்போலே தேஹசபலராய், "மங்கவொட்டு" என்னும்படிஇவர் விக்ரஹத்தை ஆதரித்துப்புறம்பேகொண்டு போகவொட்டாமல் அந்தஃபுரமஹிஷிகளை தத்பரிசரத்திலே ஆராமத்திலே அட்டிக்குவைக்குமாபோலேயும் நிதியைஉள்ளே யிட்டு வைக்குமாபோலேயும் லக்ஷ்மீகூல்யராம்படியான லக்ஷ்மங்களையுடையராய், விலக்ஷணமான நிதிபோலே "ராமாநுஜனென்றன் மாநிதி" "ராமாநுஜனென்றன் சேமவைப்பு" என்னும்படியான இவர்திருமேனியையும்ஆழ்வார்திருமேனியைஆவரணத்துக்குள்ளே பள்ளிப்படுத்தாற்போலே ஆவரணத்துள்ளில்உட்கோப்பிலே அந்தரங்கமாக கௌந்தேயனை அர்ஜ்ஜுநனைப்போலே அந்தரங்கரான கந்தாடையாண்டான் திருமுடிகாத்து நோக்க, ததநுகுணமாகத் திருப்பள்ளி படுப்பித்தருளி பரிபாலித்தருளினார். இப்படி நிதியைநிக்ஷேபித்தவநந்தரம்பெருமாளும்நாய்ச்சிமாருடனேகூடத்திருமஞ்சநங்கண்டருளி, திருமுத்துதிர்த்து,திருமுகம்கன்றி, சுருளமுதும் அமுதுசெய்யாமல் அலைப்புப்படவிடத்திருவுள்ளமாய், கந்தாடையாண்டான்பட்டர்முதலானோரைப்பார்த்து, நம்முடைய அவப்ருதோத்ஸவம் கொண்டாடுமாப்போலே நம்முடையவர்க்கும் அவப்ருதோத்ஸவங் கொண்டாடுங்கோள் என்று

திருவுள்ளம்பற்றி, சேர்த்தியிலேயேறியருளி, உடையவர்க்குஅக்காரவடிசில்களிகையனுப்பியருளினார்.

அநந்தரம், கந்தாடையாண்டான் தொடக்கமான அனைவரும்புத்ரர் சிஷ்யர் செய்யுங்கார்யங்களை யெல்லாஞ்செய்துகொண்டு, அவப்ருதஸ்நாநமாக எல்லாரும் நீராடியருளி, தத்விஸ்லேஷாஸஹராய் பரிதபித்துக்கொண்டிருக்க; பின்பு ஆண்டான் நம்பெருமாள் அநுமதியுடனே எம்பெருமானை எல்லாரும்சேவித்து உஜ்ஜீவிக்கும்படி மீளவும் அவ்விடத்திலே ஆவிர்ப்பவித்தாற்போலேயிருக்க அர்ச்சாவதாரமாக ஏறியருளப்பண்ணி, ப்ரதிஷ்டிப்பித்தருளினார். (சஅ௫) "ஸ்வாவதார ஸ்தலேசாபூத் ஸ்ரீரங்கேச யதீச்வர: - யஸ்யதேதம் ஸுஜாவாஸம் ராமாநுஜ குரும் பஜே" (స్వావతారస్థలేచాభూత్ శ్రీరంగేచ యతీశ్వరః యస్య దేతం సుజా వాసం రామానుజగురుం భజే.) என்றார்கள்.

அநந்தரம் சாஸ்த்ரார்த்தமான கைங்கர்யங்களையும், ஆப்தரான தாங்கள் ஸமாப்தமாக நடத்தி, பட்டரும்கந்தாடையாண்டானும்மிகவும் ஸௌப்ராத்ரத்தையுடையராய் உடையவர்காலத்தில் அர்த்தவிசேஷங்களையும் ஒருவர்க்கொருவர் உசாவிக்கொண்டு ராமக்ருஷ்ணாதிகளுடைய புநர்வஸ்வாதி திருநக்ஷத்ரங்களோ பாதியும் ஆழ்வார்களுடைய ஸ்ரவணாதிதிருநக்ஷத்ரங்களோபாதியும் இவருடைய சித்திரையில் செய்ய திருவாதிரையும் மற்றும் மாசந்தோறும் வருவதான அந்தத்திருநக்ஷத்ரத்தையும் மஹோத்ஸவமாக நடத்திக்கொண்டுபோருகிறதாங்கள்; ஸம்ஸாரஸ்த்தித்யருசி நிவேதநமும் ததநுகுணமான பகவதுக்தாந்திகத்தின் நிஸ்சயமும் குருபரம்பராஹாரநாயகரத்நமான இவர்க்கேயுள்ள தொன்றிறேயென்றுதத்காலோசிதமானவைபவத்தையநுஸந்தித்து, மற்றும் வாசாமகோசரமான தத்வைபவங்களையும் ப்ரகாசிப்பித்துக் கொண்டு, கிடாம்பியாச்சான் தொடக்கமானவரோடேபாடாற்றிக்கொண்டு, இருந்தார்கள்.

அநந்தரம், திருவேங்கடநாட்டில்நின்றும் அநந்தாழ்வான்ஸ்ரீகுஹதாஸர்முதலான முதலிகளையுங் கூட்டிக்கொண்டு அநந்தாம்ஸமான இவர் அவதாரஸமாதியை ஆராய்ந்தறியும்படிஎழுந்தருளி, திருக்காவேரிஅருகே பரந்திருக்கிற தத்ஸூசகங்களைக் கண்டு எழுந்தருளினபடி யறிந்துசோகாவிஷ்டராய்; அநந்தரம்பட்டரையும் ஆண்டானையுங்கண்டு ஆஸ்வாஸித்து, உடனே ஊரேற மீண்டெழுந்தருளினார்.

அநந்தரம், அப்படியே கீழைத்திக்கில்சோழவளநாடுதிருக்கண்ணபுரம் முதலானதிருப்பதிகளிலும் எச்சான் முதலானவர்களும் தெற்குத்திக்கான பாண்டிநாட்டுத் திருக்கோட்டியூர்நம்பி குமாரரான யாமுனாசார்யார் சொக்கத்தேவர்; திருமாலையாண்டான்குமாரரானசுந்தரத்தோ

ளுடையார் முதலானாரும்; மேல்நாட்டிலும் சோமாசியாண்டான் மருதூர் நம்பி தொண்டனூர்நம்பி முதலானாரும்; மற்றும் அங்கே எம்பெருமானாராலே திருத்தப்பட்ட திருநாராயணபுரம் முதலானஸ்த்தலங்களில் ஸ்ரீவைஷ்ணவர்களும்; மற்றுமுண்டானதேசாந்தரஸ்த்தரெல்லாரும் திரண்டு பெருங்கூட்டமாகக் கோயிலிலேவந்து, எம்பெருமானாருடைய விஸ்லேஷத்தாலே மிகவும்க்லேஸித்து, அநந்தரம்பட்டரைசேவித்து, தங்கள்வ்யஸனமெல்லாந்தீர்ந்து, பட்டரை இஷ்டதேவதையான எம்பெருமானாரைக் கண்டு தந்தாமுக்கு வேண்டும் இஷ்டார்த்தங்களையும்கேட்டுக்கொண்டு தல்லாபத்தாலே (௪௮௬) "श्रीपराशरभट्टार्य चरणौ संश्रयामहे - यद्व्यक्ति रङ्गे रङ्गेश गोष्ठ्यां ब्राह्मी प्रवृत्तयः." (శ్రీపరాశరభట్టార్య చరణౌ సంశ్రయేమహి । యద్వ్యక్తి రంగేరంగేశ గోష్ఠ్యాం బ్రాహ్మీ ప్రవృత్తయః) (௪௮௭) "प्रमाणनखनिर्भिन्न वादिमत्तेभमस्तकः - राजते निगमान् गर्जन् श्रीपराशरकेसरी" (ప్రమాణనఖనిర్భిన్న వాదిమత్తేభమస్తకః । రాజతే నిగమాన్ గర్జన్ శ్రీపరాశరకేసరీ) (௪௮௮) "श्रीपराशरभट्टार्यं भूयो भूयो नमाम्यहम् - यदात्मा नास्त्ययं रङ्गि भजेशारेश पुत्रताम्" (శ్రీపరాశరభట్టార్యం భూయోభూయో నమామ్యహం । యదాత్మా నాస్త్యయం రంగిభజేశారేశపుత్రతాం) (௪௮௯) "श्रीपराशरभट्टार्यः श्रीरङ्गेशपुरोहितः - श्रीवत्साङ्कसुतः श्रीमान् श्रेयसे मेऽस्तु भूयसे" (శ్రీపరాశరభట్టార్యః శ్రీరంగేశపురోహితః । శ్రీవత్సాంకసుతశ్రీమాన్ శ్రేయసేమేస్తుభూయసే) ஏவமாதி ஸூக்திகளையும் தத்விஷயத்திலே அநுஸந்தித்துக்கொண்டு ததநுஜ்ஞையோடே தந்தாமூர்களிலே சேர்ந்தார்கள்.

ஜ்ஞாநாநுஷ்டாநமாசரித்துள்ள பரமாசார்யரான ஆளவந்தார்க்கேயுள்ள தொன்றிறே.

ஸம்ஸார ஸ்த்தித்யருசிநிவேதநமும் தததநுகுணமானபகவதுக்தாந்திமதினநிஸ்சயமும் சரமகாலத்தளவும் ஸ்வாபிமாநாந்தர்ப்பூதரான வர்களுக்கு உபகாராநுகுணமாக வ்ருத்திவிசேஷோபதேசமும் பரிஹரணீய வ்ருத்திவிசேஷோபதேசமும் சரமகாலத்தில் ஸ்வாபிமதசரமாதிகாரிஸ்பர்ஸவிசேஷமும் திருமுடியைப்பற்றி பூர்வாசார்யர்கள்விளங்க திருவடிகளைப்பற்றி அபராசார்யர்கள் விளங்கபூர்வாபராசார்யரூபஹாரநாயகரத்நமான உடையவர்க்கேயுள்ளதொன்றிறே. இத்தால்ஸ்ரீராமக்ருஷ்ண சரிதங்கள்போலே ஸ்ரீராமாநுஜாசார்யசரிதமும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸதாநுஸந்தேயமென்றதாய்த்து.

எம்பெருமானார் திருநக்ஷத்ரம் சித்திரையில் திருவாதிரை.

அவர்தனியன் ப்ரஸித்தமிறே "யோநித்யமச்யுத" இத்யாதி.

ப்ராப்யதேசத்திலும் ஆசார்யவிசேஷத்வ முறைதவற வொண்ணாதென்று சொன்னத்வனையும் சரமதசையிலும் ப்ராணப்ரயாண பாதேயமாக ஸ்வாசார்யன்தானே த்வயத்தைவிடாய்கெட உபதேசிக்கப் பெற்றதன்னேற்றமும் பகவதபிமாநஸ்த்தலத்திலும் ததியாபிமாநஸ்த்தலமே சரமதேசமாகப்பெற்ற தன்னேற்றமும் சரமாதிகாரபாக விசேஷமும் ஆழ்வான்பக்கலிலே அநுஷ்ட்டாநசேஷமாகக் கண்டதிறே.

ஸ்ரீஎம்பெருமானார் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

(உடையவர் ஸ்ரீபாதத்து முதலிகளின் திருநக்ஷத்ரவைபவப்ரகரணம்)

—:0:—

முதலியாண்டான் திருநக்ஷத்ரம் சித்திரையில் - புநர்வசு, அவர் தனியன், (௪௬௦) "பாதுகே யதிராஜஸ்ய கதயந்தி யதாக்யயா - தஸ்ய தாஶரதே: பாதௌ ஶிரஸா தாரயாம்யஹம்" (పాదుకే యతిరాజస్య కథయంతి యదాఖ్యయా। తస్య దాశరథేః పాదౌ శిరసా ధారయామ్యహం) (௪௬௧) "அஜஹத்பாகிநேயத்வம் பாதுகாத்வம் த்ரிதண்டதாம் - ஸம்ப்ராப்தோ யதிராஜஸ்ய குணைஸ்தத்ப்ரீதிஹேதுபி:" (అజహద్భాగినేయత్వం పాదుకాత్వం త్రిదండతాం। సంప్రాప్తో యతిరాజస్య గుణై స్తత్ ప్రీతిహేతుభిః) (௪௬௨) "ஸ்ரீவைஷ்ணவாநாம் தாஸத்வம் ஸ்வாமித்வம் ப்ரபுதாஸ்வயம் - வாதூலகுலதௌரேயம் வந்தே தாஶரதிம் குரும்" (శ్రీవైష్ణవానాందాసత్వం స్వామిత్వం ప్రభుతాస్వయం। వాధూలకులధౌరేయం వందే దాశరథిం గురుమ్.)

திருக்குருகைப்பிரான் பிள்ளான் தனியன், (௪௬௩) "ய: பர்யாப்தகல: க்யாதோ யதிராஜாப்திசந்த்ரமா: - குஶலம் திஶதாந்மே ஸ குருகேஶ்வரதேஶிக:" (యఃపర్యాప్తకలఃఖ్యాతో యతిరాజాబ్ధిచంద్రమాః। కుశలం దిశతాన్మే సకురుకేశ్వరదేశికః) (௪௬௪) "விக்யாதோ யதிஸார்வபௌமஜலதேஶ் சந்த்ரோபமத்வேந ய: - ஸ்ரீபாஷ்யே ச யதந்வயாஸ்ஸுவிதிதா ஸ்ரீவிஷ்ணுசித்தாதய: - வ்யாக்யாம் பாஷ்யக்ருதாஜ்ஞயோபநிஷதாம் ஸத்ராமிடீநாம் வ்யதாத் - த்வம் தத்குருகேஶ்வரம் குருவரம் காருண்யபூர்ணம் பஜே" (విఖ్యాతో యతిసార్వభౌమజలధేశ్చంద్రోపమత్వేన యః। శ్రీభాష్యే చ యదన్వయాస్సువిదితా శ్రీవిష్ణుచిత్తాదయః। వ్యాఖ్యాం భాష్య కృదాజ్ఞయోపనిషదాం సద్రామిడీనాం వ్యధాత్త్వం తత్కురుకేశ్వరం గురువరం కారుణ్యపూర్ణం భజే.)

கிடாம்பியாச்சான் தனியன், (௪௯௫) "𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌪𑌦𑌾𑌮𑍍𑌭𑍋𑌜𑌯𑍁𑌗𑌳𑍀𑌯𑌸𑍍𑌯𑌧𑍀𑌮𑌤𑌃 - 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌞𑍍𑌚𑌪𑍍𑌰𑌾𑌪𑌕𑌂𑌵𑌨𑍍𑌦𑍇𑌪𑍍𑌰𑌣𑌤𑌾𑌰𑍍𑌤𑌿𑌹𑌰𑌂𑌗𑍁𑌰𑍁𑌂" (రామానుజపదాంభోజ యుగళీయస్యధీమతః । ప్రాప్యచప్రాపికావన్దే ప్రణతార్తిహరంగురుం) (௪௯௬) "𑌆𑌸𑍍𑌤𑌿𑌕𑌾𑌗𑍍𑌰𑍇𑌸𑌰𑌂𑌵𑌨𑍍𑌦𑍇 𑌪𑌰𑌿𑌵𑍍𑌰𑌾𑌡𑍍𑌗𑍁𑌰𑍁𑌪𑌾𑌚𑌕𑌂 - 𑌯𑌾𑌚𑌿𑌤𑌂𑌕𑍁𑌰𑍁𑌕𑍇𑌶𑍇𑌨 𑌪𑍍𑌰𑌣𑌤𑌾𑌰𑍍𑌤𑌿𑌹𑌰𑌂𑌗𑍁𑌰𑍁𑌂" (ఆస్తికాగ్రేసరంవన్దే పరివ్రాడ్గురుపాచకం । యాచితంకురుకేశేన ప్రణతార్తిహరంగురుం) (௪௯௭) "𑌶𑍍𑌰𑍀𑌭𑌾𑌷𑍍𑌯𑌂𑌦𑌰𑍍𑌶𑌯𑌿𑌤𑍍𑌵𑌾 𑌯𑌤𑌿𑌪𑌤𑌿𑌰𑌚𑌿𑌤𑌂𑌶𑌾𑌰𑌦𑌾𑌯𑍈𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑍇𑌨 𑌤𑍍𑌵𑌾𑌶𑍍𑌰𑍀𑌵𑍇𑌙𑍍𑌕𑌟𑍇𑌶𑌂𑌪𑌥𑌿𑌪𑌰𑌮𑌪𑌦𑌂𑌦𑌤𑍍𑌤𑌵𑌾𑌨𑍍𑌗𑍋𑌪𑌿𑌕𑌾𑌨𑍍𑌮𑍈 - 𑌆𑌖𑍍𑌯𑌾𑌂𑌵𑍇𑌦𑍋𑌕𑍍𑌤𑌮𑍂𑌂𑌗𑍋𑌦𑌯𑌨 𑌇𑌤𑌿𑌦𑌧𑌦𑍍𑌭𑌾𑌷𑍍𑌯𑌕𑌾𑌰𑍇𑌣𑌦𑌤𑍍𑌤𑌾𑌂 - 𑌆𑌤𑍍𑌰𑍇𑌯𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌰𑌨𑍁𑌦𑌿𑌨𑌂𑌸𑌾𑌦𑌰𑌂𑌤𑌨𑍍𑌨𑌮𑌾𑌮𑌿" (శ్రీభాష్యందర్శయిత్వాయతిపతిరచితంశారదాయైనివృత్తేనత్వాశ్రీవెంకటేశంపథిపరమపదందత్తవాన్గోపికాన్మై ఆఖ్యాంవేదోక్తమూంగోదయన ఇతిదధద్భాష్యకారేణదత్తాం । ఆత్రేయాచార్యవిష్ణోః రనుదినం సాదరంతన్నమామి.)

எங்களாழ்வான் தனியன், (௪௯௮) "𑌶𑍍𑌰𑍀𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌚𑌿𑌤𑍍𑌤𑌚𑌰𑌣𑌾𑌮𑍍𑌬𑍁𑌜𑌸𑌂𑌶𑍍𑌰𑌯𑌾𑌯 𑌚𑍇𑌤𑍋𑌮𑌮𑌸𑍍𑌪𑍃𑌹𑌯𑌤𑍇 𑌕𑌿𑌮𑌤𑌃𑌪𑌰𑍇𑌣 - 𑌨𑍋𑌚𑍇𑌨𑍍𑌮𑌮𑌾𑌪𑌿 𑌯𑌤𑌿𑌶𑍇𑌖𑌰𑌭𑌾𑌰𑌤𑍀𑌨𑌾𑌂 𑌭𑌾𑌵𑌃𑌕𑌥𑌂𑌭𑌵𑌿𑌤𑍁𑌮𑌰𑍍𑌹𑌤𑌿𑌵𑌾𑌗𑍍𑌵𑌿𑌧𑍇𑌯𑌃" (శ్రీవిష్ణుచిత్త చరణాంబుజసంశ్రయాయ చేతోమమస్పృహయతే కిమతఃపరేణ । నోచేన్మమాపియతిశేఖరభారతీనాం భావఃకథంభవితుమర్హతివాగ్విధేయః.)

நடாதூராழ்வான் தனியன், (௪௯௯) "𑌯𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌪𑌦𑌂 𑌯𑌤𑌿𑌵𑌰𑌸𑍍𑌯𑌮𑍁𑌖𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌣𑍇𑌤𑍁𑌂 - 𑌨𑌿𑌷𑍍𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑍂𑌹𑌮𑌪𑌿𑌵𑌨𑌿𑌦𑌰𑍍𑌶𑌨𑌿𑌗𑌮𑌾𑌨𑍍𑌤𑌭𑌾𑌷𑍍𑌯𑌂 - 𑌤𑌸𑍍𑌯𑍈𑌵𑌤𑌂𑌭𑌗𑌵𑌤𑌃𑌪𑍍𑌰𑌿𑌯𑌭𑌾𑌗𑌿𑌨𑍇𑌯𑌂 - 𑌵𑌨𑍍𑌦𑍇𑌗𑍁𑌰𑍁𑌂𑌵𑌰𑌦𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌪𑌦𑌾𑌭𑌿𑌧𑌾𑌨𑌂" (యస్మిన్పదం యతివరస్యముఖాత్ప్రణేతుం । నిష్ప్రత్యూహమపివనిదర్శనిగమాంతభాష్యం । తస్యైవతంభగవతఃప్రియభాగినేయం । వందేగురుంవరదవిష్ణుపదాభిధానం) (௫௦௦) "𑌜𑍍𑌞𑌾𑌨𑍋𑌤𑍍𑌤𑌮𑍋𑌦𑍍𑌧𑌤𑌿𑌨𑌿𑌰𑌾𑌕𑌰𑌣𑌪𑍍𑌰𑌤𑍁𑌷𑍍𑌯 𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌾𑌰𑍍𑌯𑌕𑌰𑍁𑌣𑌾𑌪𑌰𑌿𑌣𑌾𑌮𑌪𑌾𑌤𑍍𑌰𑌂 - 𑌵𑌤𑍍𑌸𑌾𑌨𑍍𑌵𑌵𑌾𑌯𑌤𑌿𑌲𑌕𑌂 𑌵𑌸𑌤𑌿𑌂𑌗𑍁𑌣𑌾𑌨𑌾𑌂 - 𑌵𑌨𑍍𑌦𑌾𑌮𑌹𑍇𑌵𑌰𑌦𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌗𑍁𑌰𑍁𑌂 𑌶𑌰𑌣𑍍𑌯𑌂" (జ్ఞానోత్తమోద్ధతినిరాకరణప్రతుష్య । రామానుజార్యకరుణాపరిణామపాత్రం । వత్సాన్వవాయతిలకంవసతింగుణానాం । వందామహేవరదవిష్ణుగురుంపరేణ్యాం.)

சோமாசியாண்டான் தனியன், (௫௦௧) "𑌸𑍍𑌵𑌾𑌮𑌿𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑌣𑌯𑍋𑌗𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌪𑌾𑌦𑌸𑍇𑌵𑍈𑌕𑌧𑌾𑌰𑌕𑌂 - 𑌶𑍍𑌰𑍀𑌰𑌾𑌮𑌂𑌕𑍍𑌰𑌤𑍁𑌨𑌾𑌥𑌾𑌰𑍍𑌯𑌂𑌶𑍍𑌰𑍀𑌭𑌾𑌷𑍍𑌯𑌾𑌮𑍃𑌤𑌸𑌾𑌗𑌰𑌂" (స్వామిలక్ష్మణయోగీంద్రపాదసేవైకధారకం । శ్రీరామంక్రతునాథార్యం శ్రీభాష్యామృతసాగరం,)

நடுவிலாழ்வான் தனியன், (௫௦௨) "𑌯𑍇𑌨 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌂 𑌕𑌲𑌤𑍇 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌗𑌾𑌰𑍍𑌗𑍍𑌯𑌵𑌂𑌶𑌮𑌹𑌾𑌮𑍍𑌬𑍁𑌧𑌿𑌃 - 𑌤𑌸𑍍𑌮𑍈 𑌹𑌿𑌤𑌂 𑌸𑌦𑌾 𑌚𑌿𑌤𑍍𑌤𑍇 𑌮𑌧𑍍𑌯𑌮𑌾𑌰𑍍𑌯𑌕𑌲𑌾𑌨𑌿𑌧𑌿𑌮𑍍" (యేనప్రోక్తం కలతేనిత్యం గార్గ్యవంశమహాంబుధిః । తస్మైహితంసదాచిత్తే మధ్యమార్యకలానిధిం)

அருளாளப்பெருமா ளெம்பெருமானார் தனியன், (௫௦௩) "𑌦𑌯𑌾𑌪𑌾𑌲𑌨𑌦𑍇𑌵𑌾𑌯 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌾𑌰𑌪𑍍𑌰𑌦𑌾𑌯𑌚 - 𑌪𑍍𑌰𑌮𑍇𑌯𑌸𑌾𑌰𑌂𑌦𑌦𑌤𑍇𑌨𑌮𑍋𑌽𑌸𑍍𑌤𑍁𑌪𑍍𑌰𑍇𑌮𑌶𑌾𑌲𑌿𑌨𑍇" (దయాపాలనదేవాయజ్ఞానసారప్రదాయచ। ప్రమేయసారందదతేనమోస్తుప్రేమశాలినే) (௫௦௪) "𑌯𑌤𑌿𑌰𑌾𑌜𑌦𑌯𑌾𑌪𑌾𑌤𑍍𑌰𑌂𑌯𑌤𑌿𑌪𑌙𑍍𑌕𑍍𑌤𑌿𑌵𑌿𑌭𑍂𑌷𑌣𑌂- 𑌦𑌯𑌾𑌪𑌾𑌲𑌮𑍁𑌨𑌿𑌂𑌵𑌨𑍍𑌦𑍇 𑌦𑍇𑌶𑌿𑌕𑌾𑌗𑍍𑌰𑍇𑌸𑌰𑌂𑌸𑌦𑌾" (యతిరాజదయాపాత్రం యతిపఙ్క్తివిభూషణం। దయాపాలమునింవందే దేశికాగ్రేసరంసదా.)

அநந்தாழ்வான் திருநக்ஷத்ரம் சித்திரையில்சித்திரை, அவர் தனியன் (௫௦௫) "𑌅𑌖𑌿𑌲𑌾𑌤𑍍𑌮𑌗𑍁𑌣𑌾𑌵𑌾𑌸𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌤𑌿𑌮𑌿𑌰𑌾𑌪𑌹𑌮𑍍- 𑌆𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌨𑌾𑌂𑌸𑍁𑌶𑌰𑌣𑌂𑌵𑌨𑍍𑌦𑍇𑌽𑌨𑌨𑍍𑌤𑌾𑌰𑍍𑌯𑌦𑍇𑌶𑌿𑌕𑌂" (అఖిలాత్మగుణావాస మజ్ఞానతిమిరాపహం। ఆశ్రితానాంసుశరణం వందేనంతార్యదేశికం) (௫௦௬) "𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌶𑍍𑌰𑍀𑌪𑌾𑌦𑌾𑌮𑍍𑌭𑍋𑌰𑍁𑌹𑌦𑍍𑌵𑌯𑌮𑍍- 𑌸𑌦𑍁𑌤𑍍𑌤𑌮𑌾𑌙𑍍𑌗𑌸𑌨𑍍𑌧𑌾𑌰𑍍𑌯𑌂𑌅𑌨𑌨𑍍𑌤𑌾𑌰𑍍𑌯𑌗𑍁𑌰𑍁𑌂 𑌭𑌜𑍇" (శ్రీమద్రామానుజాచార్యశ్రీపాదాంభోరుహద్వయం । సదుత్తమమనంతార్యం అనంతార్యగురుంభజే) (௫௦௭) "𑌯𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌪𑌾𑌦𑌾𑌮𑍍𑌬𑍁𑌜𑌚𑌞𑍍𑌚𑌰𑍀𑌕𑌂 𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌦𑌯𑌾𑌪𑌾𑌲𑌦𑌯𑍈𑌕𑌪𑌾𑌤𑍍𑌰𑌮𑍍- 𑌶𑍍𑌰𑍀𑌵𑍇𑌙𑍍𑌕𑌟𑍇𑌶𑌾𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌯𑍁𑌗𑌾𑌨𑍍𑌤𑌰𑌙𑍍𑌗𑌂 𑌨𑌮𑌾𑌮𑍍𑌯𑌨𑌨𑍍𑌤𑌾𑌰𑍍𑌯𑌮𑌨𑌨𑍍𑌤𑌕𑍃𑌤𑍍𑌯𑌮𑍍" (యతీంద్రపాదాంబుజచంచరీకం శ్రీమద్దయాపాలదయైకపాత్రం । శ్రీవేంకటేశాంఘ్రియుగాంతరంగం నమామ్యనంతార్యమనంతకృత్యం.)

எச்சான் தனியன், (௫௦௮) "𑌯𑍇𑌨𑌵𑍈𑌷𑍍𑌣𑌵𑌶𑍇𑌷𑌤𑍍𑌵𑌪𑌰𑍍𑌯𑌨𑍍𑌤𑌂 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 - 𑌶𑍇𑌷𑌤𑍍𑌵𑌮𑌾𑌤𑍍𑌮𑌨𑍋𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌯𑌜𑍍𑌞𑍇𑌶𑌂𑌤𑌮𑍁𑌪𑌾𑌸𑍍𑌮𑌹𑍇" (యేనవైష్ణవశేషత్వ పర్యంతంపరమాత్మనః । శేత్వమాత్మనోజ్ఞేయం యజ్ఞేశంతముపాస్మహే.)

வடுகநம்பி தனியன், (௫௦௯) "𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌾𑌰𑍍𑌯𑌚𑌰𑌣𑌪𑍍𑌰𑌵𑌣𑌂 𑌪𑌰𑌦𑍇𑌵𑌵𑌤𑍍 - 𑌵𑌟𑍁𑌪𑍂𑌰𑍍𑌣𑌮𑌹𑌂𑌵𑌨𑍍𑌦𑍇 𑌪𑌰𑌜𑍍𑌞𑌾𑌨𑌪𑌯𑍋𑌨𑌿𑌧𑌿𑌮𑍍" (రామానుజార్యచరణప్రవణంపరదేవవత్। వటుపూర్ణమహంవందేపరజ్ఞానపయోనిధిం)

எழுபத்துநான்கு ஆசார்யர்களுக்கும் சமுதாயத்தனியன், (௫௧௦) "𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌾𑌰𑍍𑌯𑌾𑌚𑍍𑌛𑍍𑌰𑍁𑌤𑌿𑌶𑍈𑌲𑌭𑌾𑌷𑍍𑌯𑌂 𑌅𑌰𑍍𑌥𑌂𑌰𑌹𑌸𑍍𑌯𑌂𑌪𑍍𑌰𑌮𑌿𑌤𑌶𑍍𑌰𑍁𑌤𑍀𑌨𑌾𑌮𑍍 - 𑌸𑌮𑍍𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌤𑍇𑌨𑍈𑌵𑌗𑍁𑌰𑍂𑌕𑍃𑌤𑌾𑌂𑌸𑍍𑌤𑌾𑌨𑍍 𑌭𑌜𑍇𑌚𑌤𑍁𑌸𑍍𑌸𑌪𑍍𑌤𑌤𑌿𑌪𑍀𑌠𑌸𑌂𑌸𑍍𑌥𑌾𑌨𑍍" (రామానుజార్యాచ్ఛ్రుతిశైలభాష్యం అర్థంరహస్యం ప్రమితశ్రుతీనాం। సంప్రాప్యతేనైవగురూకృతాంస్తాన్ భజే చతుస్సప్తతిపీఠసంస్థాన్)

சிறியாண்டான், தம்முடைய அந்த்யமதசையிலே பணித்தவார்த்தை:—திருவேங்கடமுடையான், தன்ஸ்வரூபத்தைமறந்து என்ஸ்வரூபத்தைநினைத்தானாகில், பழையநரகங்களொழியவேறேஎனக்கென்று சிலநரகங்களை ஸ்ருஷ்டிக்கவேணுமிறே. அன்றிக்கே, என்ஸ்வரூபத்தை மறந்து தன்ஸ்வரூபத்தைஉணர்ந்தானாகில், பழையதிருநாடுபோராது, எனக்கென்று வேறேயொருதிருநாடு ஸ்ருஷ்டிக்கவேணுமிறே. அதாவது— ஸ்வக்ருத தோஷஸ்மரணம் அநந்தது꞉கப்ரதாநஹேது; ஈச்வரவாத்ஸல்ய ஸ்மரணம் அநந்தாஸ்சர்யசுகப்ரதாநஹேதுவென்றபடி.

இவர்தனியன், (௫௧௧) "𑌜𑍍𑌞𑌾𑌤𑍁𑌂 𑌕𑍂𑌰𑌕𑍁𑌲𑌾𑌧𑌿𑌪𑌂 𑌕𑍍𑌰𑌿𑌮𑌿𑌗𑌳𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌾𑌪𑌦𑌂 𑌪𑍍𑌰𑍇𑌷𑌿𑌤𑌃 - 𑌶𑍍𑌰𑍀𑌰𑌾𑌮𑌾𑌵𑌰𑌜𑍇𑌨 𑌕𑍋𑌶𑌸𑌹𑌿𑌤𑌂 𑌦𑍃𑌷𑍍𑌟𑍍𑌵𑌾 𑌤𑌦𑍀𑌯𑌾𑌂 𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌂 - 𑌸𑌂𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌸𑍍𑌤𑍍𑌵𑌰𑌯𑌾 𑌪𑍁𑌰𑌾𑌨𑍍𑌤𑌕𑌪𑍁𑌰𑌾𑌤𑍍𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑌵𑌾𑌪𑍀𑌤𑌟𑍇 𑌯𑍋𑌽𑌸𑍌 𑌮𑌾𑌰𑍁𑌤𑌿𑌰𑌿𑌤𑍍𑌯𑌶𑌂𑌸𑌤 𑌵𑌯𑌂 𑌤𑌸𑍍𑌮𑍈 𑌨𑌮𑌃 𑌕𑍁𑌰𑍍𑌮𑌹𑍇"

(జ్ఞాతుంకూరకులాధిపంక్రిమిగళా త్ప్రాప్తాపదంప్రేషితః। శ్రీరామావరజేనకోశసహితందృష్ట్వా తదీయాంస్థితిం॥ సంప్రాప్తస్త్వరయాపురాంతకపురాత్కల్యాణవాపీతటే । యోసౌమారుతి రిత్యశంసతవయం తస్మైనమఃకుర్మహే.)

மருதூர்நம்பிதம்முடைய அந்த்யமதசையில்பணித்தவார்த்தை:— மூன்றுஜந்மம் தம்திருவடிகளிலே அபராதம்பண்ணின சிசுபாலன் திருவடிகளை யடைந்தான். அநந்தஜன்மம் திருவடிகளிலே அபராதம்பண்ணின நான் இழந்திருக்கை வழக்கோவென்ன, சிங்கர் அன்றேதிருவடிகளைத் தந்தருளினர். அதாவது இத்தலையில் அபராதமே அவன் அங்கீகாரத்திற்குப்பச்சையென்று உணருகைசரமஜ்ஞாந பரிபாகமென்றபடி.

---

( பிள்ளையுறங்காவில்லிதாஸர் திருநாடடைந்தப்ரகரணம். )

---

பிள்ளையுறங்காவில்லிதாஸர் தம்முடைய அந்த்யமதசையில் முதலிகளெல்லாரையும், அழைப்பித்து, தீர்த்தங்கொண்டு, க்ஷமைகொண்டு, பொன்னாச்சியாரைப்பார்த்து; நம்முடையவிச்லேஷத்தில் நீபிழைநினையாதேகொள்ளென்று ஆணையிட்டு ஆஜ்ஞாபித்து, உடையவர்திருவடிநிலைகளைத் தம்முடியிலேவைத்துக்கொண்டு திருநாட்டுக்கெழுந்தருளினர்.

அநந்தரம், பொன்னாச்சியாரும், க்லேசியாமல்தரித்திருந்து, திருவாசலைத்திருவலகிட்டு, தெளிநீர்தெளித்து, திருப்பிண்டியிட்டு, திருக்காவணமிட்டுவித்துநிற்க ; ஸ்ரீவைஷ்ணவர்கள், உடையவர் நீராடுந்துறையிலே திருமஞ்சனமெடுத்துக்கொண்டுவந்து, த்வயாநுசந்தாநத்துடன் நீரா

ட்டி, திருநாமம் திருசூர்ணம்முதலாக ஸ்ரீவைஷ்ணவர்கள் அலங்காரங்களெல்லாம்செய்து, பெருமாள் சாத்திக்களைந்துவரவிட்டருளினதிருமாலை திருப்பரிவட்டமும் சாத்தி யலங்கரித்து ; தாமும் ஸர்வாபரணபூஷிதையாய்கஸ்தூரிம்ருகம்போலே யுலாவிநின்று, ஸ்ரீவைஷ்ணவர்களைத் தீர்த்தங்கொண்டு, சுருளமுதுதிருத்தி, திருமாளிகையிலுள்ள த்ரவ்யங்களடங்கலும்ஸமர்ப்பித்து, கரும்புகளுமெடுத்து, நூற்றந்தாதி இயலாக வநுஸந்தித்துவர பின்புதிருச்சூர்ணமிடித்து எல்லாரும்எண்ணெசுண்ணம்கொண்டாடி, பிள்ளையுறங்காவில்லிதாஸருடைய விமலசரமவிக்ரஹத்தை திவ்யவிமாநத்திலே யெழுந்தருளப்பண்ணுவித்துக்கொண்டு, ஏகாங்கிகள் ஸ்ரீவைஷ்ணவர்கள் மற்றுமுள்ள முதலிகளும் மாறிமாறி ஸ்ரீபாதந்தாங்க எழுந்தருளுகிற விமாநமும் தூரமறைந்த வளவிலே ; பொன்னுய்ச்சியாரும், சோகார்த்தையாய், "மாறிமாக்கடல்வளை வணர்க்கிளையவன் வரைபுரைதிருமார்வில் தாரினசையில் போயினநெஞ்சமும் தாழ்ந்ததோர் துணைகாணேன் "ஊரும்துஞ்சியதுலகமும் துயின்றதுவொளியவன் விசும்பூரும், தேரும்போயிற்றுத் திசைகளுமறைந்தன செய்வதொன்றறியேனே" என்றுகையையெடுத்துக்கூப்பிட்டு, அழுதுகொண்டுவிழுந்து, பாகவதாவிஶ்லேஷாஸஹிஷ்ணுவாய் மூர்ச்சித்துக்கிடந்து, அப்போதே அங்கே திருநாட்டுக்கெழுந்தருள; முதலிகளும் அங்கே அவர்க்குத்திருச்சூர்ணமிடித்து, பிள்ளையுறங்காவில்லிதாஸருடன் திருப்பள்ளிபடுத்தார்களென்பர்கள். இவருக்குத்ததீயவிஶ்லேஷத்தில் அப்போதே ஶரீரவிஶ்லேஷம்வரும்படியான ததீயப்ரேமசரமபாகம் முற்றிவளர்ந்தபடியிறேயிது.

இவர்தனியன், (௫௧௨) "ஜாகரூகதநுஷ்பாணிம் பாணௌ கட்கஸமந்விதம் - ராமாநுஜஸ்பர்ஶவேதீமாஶ்ரிதார்த்தப்ரகாஶகம் - பாகிநேயத்வயயுதம் பாஷ்யகாரபரம்வஹம் - ரங்கேஶமங்களக்ருதம் தநுர்தாஸமஹம் பஜே" (జాగరూకధనుష్పాణిం పాణౌ ఖడ్గసమన్వితం। రామానుజస్పర్శవేదీమాశ్రితార్థప్రకాశకం। భాగినేయద్వయయుతం భాష్యకారధరంవహం। రంగేశమంగళకృతం ధనుర్దాసమహంభజే.)

நம்பிதிருவழுதிவளநாடுதாஸர், திருநாட்டுக்கெழுந்தருளுகிற சமயத்திலே, தம்ஸ்ரீபாதத்திலே சேவித்திருந்தவர் ஒருவைஷ்ணவர் அழ, அதற்கு நம்பி கெடுவாய் செத்துப்போகிறநான் போகாநின்றேன், ஸ்ரீபராசரபட்டர்வாசிக்கக் கேட்கவிருக்கிற நீயோ அழுகிறுயென்றருளிச்செய்தாரிறே. அதாவது சதாசார்யவ்யாக்யானவசனத்வநிஸ்வாரஸ்யம் அபவர்க்கபலப்ராப்தியிலும் அருசிபிறப்பிக்குமென்றபடி.

பிள்ளைதிருவழுதி வளநாடதாஸர் தம் அந்த்யமதசையிலேக்லேசிக்க, சுற்றிலுமிருந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் அந்யோந்யம் முகம்பார்த்தார்

கள், இவர்கள் அபிப்ராயத்தைத் தம்திருவுள்ளத்திலேகொண்டருளி, வாரீர்கோள் முதலிகாள்; சம்சாரிகள் இழவுக்குநொந்தோம் காணுங்கோள்; அவர்களுக்கும் நமக்கும் அல்பமாய்த்து வாசியுள்ளது: எங்ஙனே யென்னில்; நாமிடுவதொருதண்டம், பண்ணுவதொருப்ரபத்தி, இழப்பதொருஹேயமான இஸ்ஸம்ஸாரத்தை, பெறுவதொருவிலக்ஷணமானபரமபதத்தை. இத்தையறியாதே அதஃபதிக்கிறார்களே யென்றுக்லேசமாய்த்துக் காணுங்கோளென்ன; முதலிகளும் க்ருதார்த்தரானார்கள். அதாவது பரதுஃகா ஸஹிஷ்ணுத்வமும் பரஸம்ருத்யைகப்ரயோஜநத்வமும் ஸ்ரீவைஷ்ணவனுக்கு உண்டாக வேணுமென்று கருத்து.

ஜீயர்திருவடிகளேசரணம்.

———:o:———

( எ )

## ஸ்ரீ எம்பார்ப்ரபாவம்.

———

எம்பார், உடையவர் திருநாட்டுக்கெழுந்தருளும்போது திருவடிகளைப்பிடித்துக்கொண்டு, நாயிந்தே பெரியதிருமலை நம்பி சுத்திகையிலே ரஜதபுத்திபண்ணுவாரைப் போலே அபரமாத்மவிஷயே ப்ரமாத்மபுத்தி பண்ணி விபரீதஜ்ஞாநநிஷ்டனாய் காளஹஸ்த்தியாகிற கடுங்காட்டிலே யிருந்த என்னைப் 'போதரோயென்றுசொல்லி புந்தியில்புகுந்து தன்பால தாம்பெருகும்படி' திருத்தி, மாயப்பற்றறுத்து, அடியேனுடைய துர்வாசநாச்சேதநத்தைப்பண்ணியருளி, பொருளல்லாத வென்னைப்பொருளாக்கி அடிமை கொண்டருளி, "தாயாய் தந்தையாய் மக்களாய்மற்றுமாய் முற்றுமாய்" என்கிறபடியே சர்வ விதபந்துவும் த்ருஷ்டாத்ருஷ்டங்களிரண்டும் தேவரீர் திருவடிகளென்று காட்டிக்கொடுத்தருளினார். தேவரீரும் அப்படியே அடியேன் நம்பி திருவடிகளை யகன்ற இழவெல்லாம் தீர சர்வவிதோத் காரக பந்துவு மாய்நிற்க; தேவரீர் திருவடிகளே ப்ராப்யமும் ப்ராபகமுமென்றத்யவஸித்திருந்த அடியேன் (௫௧௩) "ந ச ஸீதா த்வயா ஹீநா ந சாஹமபி ராகவ - முஹூர்த்தமபி ஜீவாவோ ஜலாந்மத்ஸ்யாவிவோத்த்ருதௌ" (న చ సీతా త్వయా హీనా న చాహమపి రాఘవ । ముహూర్తమపి జీవావో జలాన్మత్స్యావివోద్ధృతౌ) என்கிறபடியே என்னுயிர்நிலையான தேவரீர் திருவடிகளை அகன்று ஒருக்ஷணமாத்திரம் தரிக்கமாட்டேன் தேஹி விட்டுப்போனால் தேஹம் நிற்குமோ; "நிழலுமடிதாருமானோம்" என்கிறபடியே ஸ்ரீபாதச்சாயாபந்நனான அடியேன் எங்ஙனே தரிப்

ருப்பேன் என்று திருவடிகளிலே போர ஆர்த்தியோடே விழுந்தெழுந்திராமல்கிடக்க; உடையவரும் எம்பாரைக் குளிரநோக்கியருளி, நாம் நம்பி திருக்கையாலே உம்மை உதகபூர்வகமாக பரிக்ரஹித்த பின்பு நமக்கும்உம்மைப்பிரியக்கூடுமோ; நம்முடைய வைகுண்டநாதனும்அப்படியே செய்தருளுகிறான் பதறாதேகொள்ளுமென்று எம்பாரைவாரியெடுத்தணைத்துக்கொண்டு, தம்பொன்னங்கழற்றாமரைப் பூக்களாலே அவரைமுடிசூட்டிக்கவித்தருளி, திருநாட்டுக்கெழுந்தருள; எம்பாரும் தாயைப் பிரிந்த ஸ்தநந்த்ஜயப்ரஜையைப்போலே சிதிலாந்தக்கரணராய், பெரியவார்த்தியோடே உடையவர் ப்ரசாதித்தருளின அர்த்தவிசேஷங்களை பட்டர் முதலான முதலிகளுக்கும் ப்ரசாதித்துக்கொண்டு எழுந்தருளியிராநிற்க; ஒருநாளாக உடையவர்திருவடிகளைத்திருவுள்ளத்தே "நினைந்துநைந்துள் கரைந்துருகி, தாய்நாடுகன்றேபோல் எப்போது காணப்பெறுவேனென்கிறத்வரைவிஞ்சி, ஆசார்ய விச்லேஷம்பொறுக்கமாட்டாமல் "அவனை விட்டகன்றுயிராற்றகில்லா" என்கிறபடியே உடையவரையகன்றுஇருக்கமாட்டாத ஆற்றாமைகரைபுரண்டு மிகவும் விஞ்சி, பெரியபெருமாள் சந்நிதியிற்சென்று. நாயிந்தே அடியேன் உடையவர் திருவடிகளைறப்போகநினையாநின்றேன், தேவரீர் விடைப்ரசாதித்தருள வேணுமென்று விண்ணப்பஞ்செய்ய; பெருமாளும் அப்படியே செய்யுமென்று திருவுள்ளம் பற்றியருளி, எம்பார்க்குத் தீர்த்தப்ரசாதமும் ஸ்ரீசடகோபனையுமிரங்கி ப்ரசாதித்தருள; இவரும் "திருப்பொலிந்த சேவடியென்சென்னியின் மேல்பொறித்தாய்" என்று அங்கீகரித்தருளி, அமலனாதிப்பிரானிற்படியே பாதாதிகேசாந்தமாக அநுபவித்தருளி "என்னமுதனைக்கண்டகண்கள் மற்றொன்றினைக்காணாவே" என்றுகொண்டு, அணியார்பொழில்சூழரங்கநகரப்பனைத் தம்கண்ணுள்ளும் நெஞ்சுள்ளும்நின்று நீங்காதபடி நிறைத்துக் கொண்டுபுறப்பட்டருளிஉடையவர்மடத்தேறவெழுந்தருளி 'யோநித்ய' (யோநித்ய) மென்றுதொடங்கி 'ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே' (రామానుజస్యచరణౌశరణంప్రపద్యే) என்று அநுசந்தித்துக்கொண்டு தெண்டஞ்சமர்ப்பித்து மடமே எழுந்தருளி, தம்திருவாராதநமான அரங்கநகரப்பனைத் திருவடிவிளக்கி, பட்டரையழைத்தருளி, வாரீர் பட்டரே; ஆழ்வான்குமாரர் அகிலசாஸ்த்ரங்களையும் அதிகரித்தோம், நம்பெருமாள் நம்மைபுத்ரஸ்வீகாரம பண்ணியருளினாரென்னும் மேன்மைகளைநினைத்து இறுமாந்திராதே, நம்மாரைஎம்பெருமானார்திருவடிகளே உபாயோபேயமென்று அத்யவஸிக்கிருமென்று அருளிச்செய்து; கணியனூர்சிறியாச்சான் சட்டம்பிள்ளைஜீயர் ஈச்சம்பாடி ஜீயர் முதலானார்க்கும் மற்றுமுள்ளமுதலிகளுக்கும் உடையவர் ப்ரசாதித்தருளின அர்த்தவிசேஷங்களையும் ப்ரசாதித்துக்கொண்டு தர்சனம் நிர்வஹித்துவாழ்ந்தருளவே

னுமென்று தண்டஞ்சமர்ப்பித்து, பட்டர் முதலான முதலிகளைத்தீர்த்தங் கொண்டு, அமுதுசெய்யப்பண்ணி, அரங்கத்துறையுமின்றுணைவனே வழித்துணையாக நினைத்துக்கொண்டு, உடையவர் திருவடிகளை த்யாநித்துக் கொண்டு திருநாட்டுக்கெழுந்தருளினார். பட்டரும் ஆசார்யவிஶ்லேஷம் பொறுக்கமாட்டாதேமிகவும்சோகார்த்தராய்க்லேசிக்க; அங்கிருந்த முதலிகளும் வாரீர்பட்டரே; தேவரீர் இப்படிக்லேசிக்கலாமோவென்று தேற்றமிட, பட்டரும் தம்மிலும் தெளிந்துகொண்டு கோயில் பரிகரங்களுடனே பெருமாள் திருமாலை திருப்பரிவட்டம முதலானவற்றையுங் கொண்டு, அனைத்துக்கொத்திலவர்களும்வர சிறியகோவிந்தப்பெருமாள் திருக்கையாலே ப்ரஹ்மமேதவிதியடங்கச்செய்வித்து, எம்பாருடைய விமலசரம விக்ரஹத்தைப்பீடயாநத்திலே யெழுந்தருள் வித்துக்கொண்டுபோய், யதிஸம்ஸ்கார விதயுக்தப்ரகாரேண ஸம்ஸ்கரித்துக்கநித்துப் பள்ளிபடுத்தி, அவப்ருதங்கொண்டாடி, பெருக்கத் திருவத்யயநமும் நடத்தியருளினார்.

ஆசார்ய கைங்கர்யமே பரமப்ரயோசநமாய்த்தன்னைப் பேணாமையும் ஆசார்யவிஷயத்தில் க்ரயவிக்ரயார்ஹராய் ஸ்வவ்யாபார மற்றிருந்தபடியும் ஆசார்யன்றிறத்தில் சாயாவத்பாரதந்த்ர்யமும் ஆசார்யனை யகன்றுதரியாத அநுஷ்டாநமும் இவர்க்கேயுள்ளதொன்றிறே.

இவர்தனியன் (நிகச) "𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌪𑌦𑌚𑍍𑌛𑌾𑌯𑌾 𑌗𑍋𑌵𑌿𑌨𑍍𑌦𑌾𑌹𑍍𑌵𑌾𑌨𑌪𑌾𑌯𑌿𑌨𑍀 - 𑌤𑌦𑌾𑌯𑌤𑍍𑌤𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌾 𑌸𑌾 𑌜𑍀𑌯𑌾𑌨𑍍𑌮𑌦𑍍𑌵𑌿𑌶𑍍𑌰𑌮𑌸𑍍𑌥𑌲𑍀" (రామానుజపదచ్ఛాయా గోవిందాహ్వనపాయినీ । తదాయత్తస్వరూపా సా జీయాన్మద్విశ్రమస్థలీ) 'வம்பார்மலர்க்கணை களைந்தாலுமேவுண்டு மாதர்விழியும் வாளிடமின்றிலனென்றுகாலு மரிவையர்க்குத் தம்மோடொருநிசிந்து மேகாந்தமில்லையென்று தாமுறைத்த வெம்பாரடிசரணென்பாரடி ச்ரணமெங்களுக்கே.'

(நிகரு) "𑌭𑌟𑍍𑌟𑌾𑌰𑍍𑌯𑌾𑌯 𑌪𑍍𑌰𑌪𑌤𑍍𑌤𑌿𑌂 𑌵𑍍𑌯𑌪𑌦𑌿𑌶𑌤𑌿 𑌪𑌰𑌂 𑌦𑍍𑌰𑌾𑌵𑌿𑌡𑌾𑌮𑍍𑌨𑌾𑌯𑌮𑌾𑌲𑍇𑌰𑌰𑍍𑌥𑌂 - 𑌶𑍍𑌰𑍀𑌭𑌾𑌷𑍍𑌯𑌮𑌨𑍍𑌯𑌾𑌨𑌪𑌿 𑌚 𑌯𑌤𑌿𑌵𑌰𑌾𑌦𑍇𑌶𑌤𑍋 𑌨𑍍𑌯𑌾𑌨𑍍𑌸𑍍𑌪𑍃𑌹𑌾𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 - 𑌯𑌶𑍍𑌚𑍋𑌕𑍍𑌤𑍋 𑌦𑍇𑌶𑌿𑌕𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑍋 𑌯𑌤𑌿𑌪𑌤𑌿𑌚𑌰𑌣𑌚𑍍𑌛𑌾𑌯𑌨𑌾𑌮𑌾𑌰𑍍𑌯𑌵𑌰𑍍𑌯𑌸𑍍𑌤𑌂 - 𑌗𑍋𑌵𑌿𑌨𑍍𑌦𑌾𑌰𑍍𑌯𑌂 𑌶𑍀𑌲𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌸𑌿𑌨𑍍𑌧𑍁𑌂" (భట్టార్యాయప్రపత్తింవ్యపదిశతిపరంద్రావిడామ్నాయమాలేరర్థం । శ్రీభాష్యమన్యానపిచయతివరాదేశతోన్యాన్స్పృహాస్యాత్ । యచ్చోక్తోదేశికేంద్రో యతిపతిచరణచ్ఛాయనామార్యవర్యస్తం

గోవిందార్య మస్మత్కులగురుమమితజ్ఞానవైరాగ్యమీడే) (ருகசு) "ஹ்ருதி நாராயணம் பஶ்யந் நப்யகச்சத்ரஹஸ்ஸதா - யஸ்ஸதாசரதோ வாபி கோவிந்தம் தமுபாஸ்மஹே" (హృదినారాయణంపశ్యన్నాభ్యగచ్ఛద్రహస్సదా । యస్సదాచరతోచాపిగోవిం దంతముపాస్మహే.)

ஸ்ரீஎம்பார் திருவடிகளே சரணம்.

ஜீயர்திருவடிகளே சரணம்.



ஆழ்வார்க்கும் உடையவர்க்கும் தீர்த்ததிவசநிர்ணயம் சொல்லாதொழிவானென்னென்னில்; இத்யாபி அகிலாத்மோத்தாரணார்த்தமாக அர்ச்சாவிக்ரஹங்களை அங்கீகரித்து இங்கே யெழுந்தருளி யிருக்கிறார்களாகையாலே, அன்றிக்கே அவர்கள் இங்கிலும் கால்வாங்கிப்போகில் ஆத்மகோடிகளுக்கு ஈடேறவழியில்லையிறே இத்தைநினைத்திறே நம்பூர்வாசார்யகள் தீர்த்தங்கொண்டாடித் திருபரிபாலநம்பண்ணுதொழிகிறதும (ருகஎ) "ஆர்த்ராயாமுதிதோ மஹாபுரிகதோ ஹஸ்த்யத்ரிமஸ்தாஶ்ரய: - ஸ்ரீரங்கஶ்ரியமாப்ய ஶிஷ்யஸஹிதோ வேதாந்தபாஷ்யம் வதந் - ப்ராப்தோ திக்விஜயம் விதாய ஸஹிதைர்த்விஸ்ஸப்ததிவ்யை: பஞ்சாஶதை: - பாதி ஸ்ரீயதுபூதரே யதிவரஸ்ஸம்பத்குமாரம் பஜந்" (ఆర్ద్రాయాముదితో మహాపురిగతో హస్త్యద్రిమస్త్రాశ్రయః । శ్రీరంగశ్రియమాప్య శిష్యసహితో వేదాంతభాష్యం వదన్ । ప్రాప్తో దిగ్విజయం విధాయ సహితైర్ద్విస్సప్తదివ్యైః పంచాశతైః । భాతి శ్రీయదుభూధరే యతివరస్సంపత్కుమారం భజన్) என்று சித்திரையில்செய்ய திருவாதிரையிலே ஸ்ரீபெரும்பூதூரிலே அகிலாத்மோத் தாரணார்த்தமாக வந்தவதரித்து அகில சாஸ்தரங்களையும் அப்யஸித்து பெருமாள்கோயிலிலே பேரருளாளராலே பெரியநம்பியை சேவித்து பஞ்சசம்ஸ்காரங்களையும்பெற்று 'மாறு பால்மநஞ்சுழிப்ப மங்கையர் தோள்கைவிட்டு' என்கிறபடியே ஸர்வ ஸங்கபரித்யாக பூர்வகமாக வரதர் ஆஶ்ரமப்ராப்திபண்ணியருளி ஸ்ரீரங்கைஸ்வர்யத்தைப்பெற்று ஸ்ரீபாஷ்யம அருளிச்செய்து திக்விஜயம் பண்ணி திருவரங்கர் பரத்வத்தை நிலைநிறுத்தியருளி புழுவின்வ்யாஜேந எழுந்தருளி திருநாராயணர்க்கு அனைத்தழகும் கண்டருளப்பண்ணி செல்வப்பிள்ளையைப் பெற்றெடுத்து வந்துப்ரதிஷ்டிப்பதித்தருளி அன்பத்திருவர்க்காக அர்ச்சாவதாரரூபவிக்ரஹத்தை யங்கீகரித்து அதிலே

தம்ஸர்வஸக்தியையும் ப்ரதிஷ்டிப்பித்துக்கொண்டு அவர்களாலே சேவ்யமானராய் செம்பொற்கழலடி திருவுருச்செல்வப்பிள்ளையை மங்களாசாஸநஞ்செய்துகொண்டு காலதத்வமுள்ளதனையும இங்கே சுப்ரதிஷ்டிதராய் விளங்காநின்று கொண்டுவாழ்ந்தருளிநாராய்த்து.

ஜீயர்திருவடிகளேசரணம்.

---

( அ )

## ஸ்ரீபட்டர்ப்ரபாவம்.

அநந்தரம் பட்டர்ஸ்ரீபாதத்துமுதலிகளுடன்கூடப்பெருங்கூட்டத்திருவோலக்கமாக வெழுந்தருளியிருந்து தர்ஸநம் நிர்வஹித்தருளுகிற காலத்திலே ஒருதீர்த்தவாரிப்ராஹ்மணன்வந்துபட்டரை சேவித்து இவருடைய வேதாந்தார்த்த நிர்ணயசாதுர்யத்தையும் கோஷ்டியில்வைபத்தையும்கண்டு நின்றுபட்டரே ; மேல்நாட்டிலேவேதாந்தியென்றொரு பெரிய வித்வான் இருக்கிறான் அவனுடையவித்யையும்கோஷ்டியும்போலே உமக்குமிருந்ததென்ன; பட்டரும்ப்ராஹ்மணன்சொன்னவார்த்தையைக் கேட்டருளி ஆமோ; அப்படியுமொரு வித்வானுண்டோவென்ன; உண்டென்று சொல்லி அந்தப்பிராஹ்மணன் இங்குநின்றும்புறப்பட்டு மேல்நாட்டுக்குப்போய் வேதாந்திகள் கோஷ்டியிலே நின்றுவேதாந்திகளே; உம்முடைய வித்யைக்கும்கோஷ்டிக்கும் ஸத்ருஸராயிருப்பாரொருவர் இரண்டாற்றுக்கு நடுவே பட்டரென்றெழுந்தருளி யிருக்கிறாரென்ன ; வேதாந்திகளும் ப்ராஹ்மணனைப்பார்த்து; ஆமோ; பட்டர்நமக்கொத்த வித்வானோவென்ன; அவனும், பட்டர்உம்மிலும்அதிகரென்ன; அவனும் அவருக்கெந்த சாஸ்த்ரம்போருமென்ன ; ப்ராஹ்மணனும், சப்த, தர்க்க பூர்வோத்தர மீமாம்ஸை தொடக்கமான சகலசாஸ்த்ரங்களும் பட்டருக்குப்போருமென்ன; வேதாந்திகளும், இந்தப்ராஹ்மணன் சொன்னதைக் கேட்டு, இவ்விபூதியிலே நமக்கொருவரும் எதிரில்லையென்று, ஷட்தர்ஸநத்திற்கும் ஆஸநமிட்டு, அதன்மேலே உயரவிருந்தோம், பட்டர் நம்மிலும் அதிகரென்று ப்ராஹ்மணன் சொன்னானென்று அன்று தொடங்கி வேதாந்தியும் திடுக்கிட்டிருந்தான்.



ஸ்ரீபட்டர்

அவ்வளவில் அந்தப்ராஹ்மணன் அங்குநின்றும்புறப்பட்டுக் கோயிலுக்குவந்து, பட்டர்சந்நிதியிலேநின்று, பட்டரே; உம்முடையவைபவமெல்லாம் வேதாந்திக்குச்சொன்னேனென்ன; பட்டரும் அந்தப்ராஹ்மணனைக்குறித்து, அவரதற்கு என்னசொன்னாரென்ன; அவரும், பட்டருக்கு எந்தசாஸ்தரம் போருமென்றாரென்ன; பட்டரும் ப்ராஹ்மணா, அதற்கு நீ வேதாந்திகளுக்கு யென்னசொன்னாயென்ன; அதற்கு ப்ராஹ்மணனும், பட்டருக்கு ஸப்த தர்க்கங்களும் பூர்வோத்தர மீமாம்ஸைகளும் நன்றாகப்போருமென்று வேதாந்தியுடனே சொன்னேனென்ன; பட்டரும், அந்தப்ராஹ்மணனைக்குறித்து, நீதீர்த்தவாஸியாய், தேசங்களெங்கும் நடையாடி எல்லாருடைய வித்யாமாஹாத்ம்யங்களெல்லாம் அறிந்து நாகரீகனாயிருக்கிற நீ, நமக்குப்போந்ததெல்லாமறிந்து, வேதாந்திக்குச் சொல்லாமல், கேவலம் வேதசாஸ்த்ரங்களே போருமென்று சொல்லிவிட்டாயே, தப்பச்சொன்னாயேயென்ன; ப்ராஹ்மணனும், பட்டரைக்குறித்து, இந்த லோகத்திலே நடையாடுகிற சாஸ்த்ரமொழிய உமக்கு மற்ற எதுபோருமென்று வேதாந்திக்குச் சொல்லுவதென்ன; கெடுவாய், பட்டருக்கு, திருநெடுந்தாண்டகம்போருமென்று வேதாந்திக்குச் சொல்லாதிருந்தாயே யென்று வெறுத்து அருளிச்செய்துவிட: அவனும் பின்னையும் மேல்நாட்டுக்குப்போய், வேதாந்தியுடனே இச்செய்திகளைச்சொல்ல! வேதாந்தியும், திருநெடுந்தாண்டகமென்கிற சப்தத்திற்குத்தானே அர்த்தமாகிறதில்லை, அவரெப்படிப்பட்டவித்வானோவென்றுவிஸ்மயப்பட்டிருக்கச்செய்தே: பட்டரும், வேதாந்தியை, நம்முடைய தர்ஸனத்திலே அந்தர்ப்பூதராம்படிதிருத்து மென்றுஉடையவர் நியமித்தருளினது அவஸ்யம் கர்த்தவ்யமென்று, தம் திருவுள்ளத்திலே கொண்டு, பெருமாள் சந்நிதியிலே சென்று, சேவித்து நின்று; நாயிந்தே, மேல்நாட்டிலேவேதாந்தியென்றொருபெரியவித்வானிருக்கிறான், அவனைத்திருத்தி, நம்தர்ஸநப்ரவர்த்தகனாம்படிபண்ணவேண்டுமென்று அங்கேற விடைகொள்வதாக இராநின்றேன், தேவரீர் அவனை நன்றாகத்திருத்தி ஸ்ரீராமாநுஜ சித்தாந்தத்திற்கு நிர்வாஹகனாம்படி திருவுள்ளம்பற்றியருளவேணுமென்று, பட்டர், பெருமாளுக்கு விண்ணப்பஞ்செய்ய; பெருமாளும், அப்படியே யாகக்கடவன், த்வரித்துப்போய் வாருமென்று, திருவுள்ளமுகந்து, தீர்த்தம், திருமாலை, திருப்பரிவட்டத்துடனே தம்குமார

ரான வாசிதோன்ற அநேகம் திருவாபரணம் திருப்பரிவட்டம், ந்ருத்த கீதவாத்யங்களையும், தமக்குண்டான சகல பரிஜந பரிச்சதங்களையும் கூட்டிப்போமென்று விடைகொடுத்தருள ; பட்டரும், புறப்பட்டு மேல் நாட்டிலே யெழுந்தருளி, காவேரிக்கரையிலே சிறுப்பத்தூர் அண்டை நின்றருள ; அநந்தாழ்வானும், ஆழ்வான்குமாரர் பட்டர் எழுந்தருளினு ரென்று கேட்டு, சடக்கெனப் புறப்பட்டெழுந்தருளி, திருக்காவேரிக் கரையிலே பட்டரைக்கண்டுசேவித்து, அய்யோ, சுகுமாரமான நீர், காடு மலையுங்கடந்து இத்தனைதூரமெழுந்தருளலாமோ வென்ன ; பட்டரும் திருவடிகளிலே விழுந்து அநந்தாழ்வானைச்சேவித்து, அநந்தாழ்வானைப் பார்த்து, உடையவர் அடியேனை மேல் நாட்டிலேபோய், வேதாந்தியைத் திருத்தி, நம்தர்சநப்ரவர்த்தகராம்படி பண்ணென்றுநியமித்தருளினுரோ. நம்பெருமாளும் விடைப்ரசாதித்து அனுப்பியருளினுரென்று விண்ணப் பஞ்செய்ய ; அநந்தாழ்வானும், எங்கள்குடிக்கரசே வாருமென்று பட் டரை எடுத்தணைத்துக்கொண்டுபோய் (௫௧௮) "யாநவாஸ்ரீஜிநமிஷா யேஷாம்கேஷாம்சவித்யதே - தேஷாம்தேஶயமடா: நமஸ்யந்திக தாசந" (యానవాస్త్రీజనిమిషో యేషాంకేషాంచవిద్యతే। తేషాందేశేయమభటాః నమస్యంతికదాచన) என்றுயதுஶைலயிலாசையாவர் சிலர்க்குண்டாயிருக்கும் அவர்கள் வசிக்கும்திசை, யமபடர்மறந்தும் வந்துபுகுரார்களென்றும் (௫௧௯) "ஸஹஸ்ரஶிகரஸ்யாயம் ஸாக்ஷாச்சேஷாத்மகோகிரி: வைகுண்டாதபியத்ராஹம் ரமயாஸஹிதோரமே" (సహస్రశిఖరస్యాయంసాక్షా చ్ఛేషాత్మకోగిరిః। వైకుంఠాదపియత్రాహంరమయాసహితోరమే) (௫௨௦) "வைகுண்டவாஸிநஸ்ஸர்வே ஶேஷஶேஷாஶநாதய: திர்யக்ஸ்தாவரஜந்மாநி ஶ்ரயந்தேயத்ரபூதரே" (వైకుంఠవాసినస్సర్వే శేషశేషాశనాదయః। తిర్యక్స్థావరజన్మాని శ్రయంతేయత్రభూధరే) என்று ஸஹஸ்ரபணாமண்டலமுடைய திருவநந் தாழ்வான் அவதாரமான யதுகிரிசிகரத்திலே சமஸ்தகல்யாண குணங் களும், குன்றத்திட்டவிளக்காய்க்கொண்டு, ப்ரகாசிக்கும்படி, பரமபதத் தையும் திருப்பாற்கடலையும் உபேக்ஷித்து "அரவிந்தப்பாவையுந் தானு மாய்," அல்லிமலர்மகள் போகமயக்குக்களாய் நிற்க, வைகுந்தநாட்டில் வாழும் சேனைமுதலியார், திருவநந்தாழ்வான், நித்யமுக்தரெல்லாரும் திருநாடு புல்லெழுந்துபோம்படி குடிவாங்கிவந்து, இஸ்வௌலப்யாநு வார்த்தமாக, திர்யக்ஸ்த்தாவர ஜங்மங்களைபரிக்ரஹித்து, சுப்ரதிஷ்டி

களாய் இங்கேவர்த்திக்கிறார்களென்னும்படி வைபவத்தையுடையயாதவாத்ரியைக்கிட்டி, சேதநன் பாதபீடத்திலே ஏறும்பாவனைகொண்டு, செம்பொன்யதுகிரியேறி, திருக்கல்யாணஸரஸ்ஸைக்கிட்டி. (ருஉக) "[illegible]" (కాశేకాశేచ నేవంతాం కల్యాణీతీర్థ మద్భుతం । యత్రతీర్థే నిమజ్జన్తః యత యస్సంశితవ్రతాః । ఉన్మజ్జంతి భవాంభోధికల్లోలకలహంతరాత్) (ருஉஉ) "[illegible]" (పుష్కరేనతథా ప్రీతిర్న గంగాయాం న యామునే) (యథా కల్యాణితీర్థే స్వతీర్థే కల్యాణచేతసాం) (ருஉங) "[illegible]" (తీర్థే తత్రామలే స్నాత్వా ముచ్యంతే సర్వకిల్బిషైః) (నాస్తికశ్చ కృతఘ్నశ్చ పరివాదపరోపి చ । పరప్రశంసానిష్ఠాశ్చ స్వప్రశంసాపరాయణః । యజ్ఞవిఘ్నకరశ్చైవ వేదాధ్యయనదూషకః) (ருஉச) "[illegible]" పరదారానురక్తాశ్చ పాకభేదకరోపి చ । పరద్రవ్యాపహారీ చ పాషండాగమతత్పరః । శూద్రాన్నభక్షకశ్చైవ శ్వాదీనాముపలాళకః) (ருஉரு) "[illegible]" (ధర్మవిక్రయశీలాశ్చ త్రార్థభుక్ గ్రామయాజకః । దేవతాద్రవ్యహారీ చ దర్పదంభసమన్వితః । గవాం క్లేశకరశ్చాపి బ్రాహ్మణానాం చ నిందకః । విష్ణుభక్తివిహీనశ్చ వృషలీపతిరేవ చ) என்றிப்படிப்பட்டிருக்கிறவர்களுடைய பாபங்களைப்போக்கவல்ல, திருக்கல்யாணியிலே, நீராடி கேசவாதியான பன்னிருதிருநாமம் சாத்தியருளியெழுந்தருள ; அங்கிருந்தஜம்பத்திருவர் முதலான அனைவரும் சடகோபன் முன்னிலையாய்வந் ததிர்கொள்ள; பட்டரும், சாஷ்டாங்கமாகச் சேவித்து, திவ்யநகரிக்குள்ளே யெழுந்தருளி, சதுரான கோபுரத்தை அஞ்சலித்து, உள்ளேபுகுந்து, ஸ்ரீபலிபீடத்தருகே தாளுந்தடக்கையுங்கூப்பித்தண்டஞ்சமர்ப்பித்து, உடையவர் சந்நிதிக்கெழுந்தருளி, "யோநித்யம்" என்றுதொடங்கி, "ராமாநுஜஸ்யசரணௌஶரணம்ப்ரபத்யே" என்றுசேவித்து ராமாநுஜ திவாகரரையுந் திருவடிதொழுது, வாழ்த்தி, தீர்த்தப்ரசாதங்களும்பெற்று, அவர்புருஷகாரமாக ப்ரதக்ஷிணமாகவெழுந்தருளி, (ருஉசா) "[illegible]" (పశ్చాదపి విమానస్య ప్రాకారాంతర మధ్యతః । సుదర్శనం చ లక్ష్మీశ్చ వర్తేతే సర్వకామదా)

என்றுசொல்லப்பட்டதிருவாழியாழ்வானையும், யதுகிரி நாயகியாரையும் ஸேவித்து, ஆநந்தமயமானதிவ்யவிமாநத்தையுந்தொழுது, உள்ளே எழுந்தருளி, சாஷ்டாங்கமாகச்சேவித்து, நம்மாழ்வார் திருமங்கையாழ்வாரையுஞ்சேவித்து, செல்வப்பிள்ளையையுந் திருவடிதொழுது, அவ்விக்ரஹ ஸௌந்தர்யத்திலே ஆழ்ங்கால்பட்டுநிற்க ; செல்வப்பிள்ளையும் உகந்து, தீர்த்தம்,திருமாலை,சடகோபன், ப்ரசாதித்தருளப்பெற்று,புறப்பட்டு,சேனைமுதலியாரையுந் திருவடிதொழுது,சண்டப்ரசண்டர்களானத்வாரபாலகர்களநுமதிகொண்டு உள்ளேசென்று, திருப்பல்லாண்டை யநுசந்தித்து, திருநாராயணப்பெருமாளைபாதாதிகேசாந்தமாகச்சேவித்து அஞ்சலித்து நிற்க ; திருநாரணரும், மிகவும் உகப்போடே, பட்டருக்குத் திருமாலை, திருப்பரிவட்டம், தீர்த்தம், சடகோபனும் ப்ரஸாதித்து விடைகொடுத்தருள; அநந்தாழ்வானுடனே புறப்பட்டு எழுந்தருளி, வேதாந்திகளிருக்கிறவூர் ஆஸந்நமானவாறே, ஆழ்வான்குமாரர் பட்டர் வந்தார், அணியரங்கன் குமாரர்பட்டர்வந்தார், வேதாந்தாசார்ய பட்டர்வந்தார், வேதியர்கள் தனித்தலைவர்வந்தார், ஸ்ரீபராஶர பட்டர் வந்தார், பரவாதிமத்தஹஸ்தி பஞ்சாநநர்வந்தார், என்று பலதிருச்சின்னம் பணிமாறுகை முதலானபஹுசாதுர்யகோஷத்துடனே, பெருந்திரளாக,மஹாஸம்ப்ரமத்துடனேஸர்வாபரணபூஷிதராய், சத்ர, சாமர, தால வ்ருந்தாதிகள்சேவிக்க, மணிப்பல்லக்கிலே எழுந்தருளாநிற்க ; அவ்வளவிலே, இரண்டு ப்ராஹ்மணர்கள் எதிரேவந்து, பட்டரைப்பார்த்து, பட்டரே, நீர், அநேகம்ஸம்ப்ரமத்துடனே வந்தீர், எங்கேற வெழுந்தருளுகிறீரென்று கேட்க, பட்டரும்; நாம் ஸ்ரீரங்கபட்டர், வேதாந்திகளுடனே தர்க்கிக்கப போகிறோமென்ன; அந்தப்ராஹ்மணர் சொன்னபடி :—நீர் இப்படி சம்ப்ரமத்துடனே யெழுந்தருளினால், வேதாந்திகளை உமக்குக்காணப் போகாது காணும், அவர்க்ருஹத்துக்குள்ளேயிருந்து விடுவர்; அவருடைய சிஷ்ய ப்ரசிஷ்யர்கள்தலைவாசலிலேயிருந்து, நாலாறுமாசம், வந்தவித்வான்களுடனே தர்க்கித்து, அவர்களைஉள்ளே புகுரவொட்டாமே புறம்பேதள்ளி விடுவர்களென்ன; பட்டரும், அந்தப்ராஹ்மணரைப்பார்த்து, ஆனால்நாம் நேரே சென்று அவன்க்ருஹத்திலேபுகுந்து, வேதாந்திகளைக்காணும்விரகென்னென்றுகேட்டருள ; அவர்கள் சொன்னபடி :—வேதாந்திகள் தலைவனைகையாலே, அவரநேக ப்ராஹ்மணர்க்கு ஸத்ர போஜந மிடுவார், அந்தஸத்ரபுக்; ப்ராஹ்மணரோடேகலசி, அவர்கள் வேஷத்தையுந் தரித்துக்கொண்டு, உள்ளே சென்றால் புஜிக்கவருகிற ப்ராஹ்மணரை நிரீக்ஷித்திருப்பர், அங்கே வேதாந்திகளைக்காணலாம்; ஆகையாலே உம்முடைய ஸம்ப்ரமங்களையெல்லாம் இங்கே நிறுத்தி, நீரொருவருமேஸத்ராசிகளுடனே கூட உள்ளே எழுந்தருளுமென்று சொல்லிப்போனார்கள்.

அநந்தரம், பட்டரும், இவர்கள் சொன்னது கார்யமாமென்று திருவுள்ளம்பற்றி, தம்முடைய அனைத்துப் பரிகரத்தையும் ஊருக்கு தூரத்திலே நிறுத்தி, தாம்சாத்தியிருந்த ஸர்வாபரணங்களையும் களைந்து வைத்து, ஒருஅரசிலைக்கல்லையும் குத்தியிடுக்கிக் கொண்டு, காவிவேஷ்ட்டியும்தரித்து, ஒருகமண்டலமும் கையில்தூக்கிக் கொண்டு, அநந்தரம் வாஹும் தாமுமாய் ஸத்ராசிகளுடனேகூட, கார்ப்பண்ய வேஷத்துடனே உள்ளே எழுந்தருள; வேதாந்திகளும் ப்ராஹ்மணர்; புஜிக்கையைப் பார்த்துக்கொண்டு ஒருமண்டபத்திலே ஆசநமிட்டு, அதின்மேலே பெரியமதிப்புடனே யிராநிற்க; ப்ராஹ்மணர் எல்லாரும் ஸத்ரசாலையிலே புகுர, பட்டர் அங்கே யெழுந்தருளாமல், வேதாந்திகளைநோக்கி யெழுந்தருள; வேதாந்திகளும், பிள்ளாய், எங்கே வருகிறீரென்ன; பட்டரும, பிக்ஷைக்கு வருகிறேனென்ன; எல்லாரும் புஜிக்கிறவிடத்திலே ஸத்ரத்திலே போகீர்பிக்ஷைக்கென்ன; பட்டரும், எனக்குச்சோற்றுப்பிக்ஷை யன்றென்ன; வேதாந்திகளும், இவர்சத்ராவஸி யானாலும் கிஞ்சித்வித்வானாகக்கூடுமென்று விசாரித்து "காபிக்ஷா" என்ன; பட்டரும், "தர்க்கபிக்ஷா" என்ன, வேதாந்திகள் இத்தைக்கேட்டு, திடுக்கிட்டு, தீர்த்தவாஸி ப்ராஹ்மணன்வந்து முன்னாள் நமக்குச் சொன்னபட்டர் அல்லது, நம்முடைய முன்னேவந்துநின்று, கூசாமல் தர்க்கபிக்ஷையென்று கேட்க வல்லவர்கள் இந்தலோகத்திலில்லை; ஆகையாலே யிந்தவேஷம் கார்ப்பண்யமாயிருந்ததேயாகிலும், இவர்பட்டராகவேணுமென்று நிச்சயித்து, நம்மைதர்க்கபிக்ஷை கேட்டீர், பட்டரோவென்ன; இவரும், ஆம் என்று கமண்டலம், கல்லை, காவிவேஷ்ட்டி இவற்றையெல்லாம் சுருட்டியெறிந்து எழுந்தருளியிருந்து, மஹாவேகத்திலே உபந்யஸிக்க, அவ்வளவிலே, வேதாந்திகளும், பட்டர்வைபவம் கேட்டிருந்தும், இவர்வித்யாமாஹாத்ம்யங் காணவேணுமென்று இவருடனேதர்க்கிக்க; இப்படியொருவர்க்கொருவர் மத்தவாரணங்கள் பிணங்குமாபோலே தர்க்கிக்க; இங்ஙன் ஒன்பதுநாள் சென்றபின்பு, பத்தாம்நாள், பட்டர்பகுமுகமாக, மாயி ஸித்தாந்தத்தை, ஶததாவாகக் கண்டித்து விஶிஷ்ட்டாத்வைத பரமாகஉபந்யஸிக்க; இத்தைக்கண்டு, வேதாந்திகள் எழுந்திருந்து நின்று, நடுங்கி,வேறொன்றும்சொல்லாதே, மநுஷ்யமாத்ரமோவென்றிருந்தேன், நம்பெருமாளென்ன, நீரென்ன, பேதமில்லாமையாலே உறங்கும் பெருமாள் அவர், உலாவும்பெருமாள் நீரானபின்பு வாய்திறந்துஒருவார்த்தை சொல்லக்கூடாதென்று, அரைகுலையத்தலைகுலையவந்து பட்டர் திருவடிகளிலே அடைவுகெடவிழுந்துசேவித்து, அடியேனையிரங்கியருளவேணுமென்று மிகவும் அநுவர்த்திக்க; பட்டரும், தாமெழுந்தருளின கார்யம் அதிஶீக்ரமாகப் பலித்தவாறே, மிகவுந்திருவுள்ள முகந்தருளி, வேதாந்தி

களை அங்கிகரித்தருளி, அவருக்கு, (நிஉள) "𑌅𑌰𑍍𑌥𑌪𑌞𑍍𑌚𑌕𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌜𑍍𑌞𑌾𑌃 𑌪𑌞𑍍𑌚𑌸𑌂𑌸𑍍𑌕𑌾𑌰𑌸𑌂𑌸𑍍𑌕𑍃𑌤𑌾𑌃 - 𑌆𑌕𑌾𑌰𑌤𑍍𑌰𑌯𑌸𑌂𑌪𑌨𑍍𑌨𑌾 𑌮𑌹𑌾𑌭𑌾𑌗𑌵𑌤𑌾𑌸𑍍𑌸𑍍𑌮𑍃𑌤𑌾𑌃" (అర్థపంచకతత్త్వజ్ఞా; పంచసంస్కారసంస్కృతాః । ఆకారత్రయసంపన్నా మహాభాగవతాస్స్మృతాః) என்றுசொல்லப்பட்ட தாபஃபுண்ட்ராதி பஞ்சஸம்ஸ்காரங்களையும் ப்ரஸாதித்து, அர்த்தபஞ்சக ஜ்ஞாநத்தையுமுண்டாக்கி, ஆகாரத்ரய ஸம்பந்நரான மஹாபாகவதோத்தமராக்கி, விசேஷகடாக்ஷ ஞ்செய்தருளி; வேதாந்திகளே, நீர் ஸர்வஜ்ஞராயிருந்தீர், ஆகையாலே உமக்கு நாம் பரக்கச்சொல்லலாவதொன்றுமில்லை, விஶிஷ்டாத்வைத மே பொருள், நீர் மாயாவாதரீதியை ஸவாஸநமாகத்யஜித்து, ஸ்ரீயஃபதியைப்பற்றி ஸ்ரீராமாநுஜஸித்தாந்தத்தையே நிர்வஹித்துப்போருமென்று அருளிச்செய்து, ஆழ்வார்கள் அருளிச்செயல் நாலாயிரமும் ஓதும்படி நியமித்தருளி, இனி நாம்பெருமாளை சேவிக்கப்போகிறோமென்று உத்யோகித்துப் புறப்பட்டவளவிலே, ஊருக்குப்புறம்பேநிறுத்தின அனைத்துப்பரிகரமும் ஊரிலேவந்து அவர்கள் மஹாஸம்ப்ரமத்துடனே பட்டரைச்சூழ்ந்துசேவித்து, பூர்வம்போலே ஸர்வாபரண பூஷிதராக்கி, மணிப்பல்லக்கிலே யேற்றி, உபயசாமர, தால வ்ருந்தாதிகள் பணிமாற, மற்ற சகல வாத்யத்வநிமுழங்க, திருச்சின்னம் பணிமாறப் புறப்படக்கண்டு, வேதாந்திகள் பட்டருடைய பெருமையையும் ஸம்பத்தையும் நன்றாகக் கண்குளிர நோக்கி, இந்த ஸ்ரீமான் இத்தனை தூரம் காடும் மலையும் கட்டறுங்கடந்து எழுந்தருளி நித்ய ஸம்ஸாரிகளிலும் கடைகெட்டு, மருஷாவாதியாயிருந்த அடியேனுடைய தார்க்கிதியே பற்றாசாக அங்கிகரித்தருளுவதே என்று மிகவும் வித்தராய், கண்ணும் கண்ணீருமாய்க் கொண்டு பட்டர் திருவடிகளிலே விழுந்துகலேசித்து பெரியபெருமாள் தாமானதன்மையான ஸௌந்தர்யஸௌகுமார்யாதிகளை யுடையராய் எழுந்தருளின தேவரீர் அநாதிகாலம் தப்பித்திரிந்து அலம்புரிந்த நெடுந் தடக்கைக்கும் எட்டாதபடி கைகழிந்துபோன இவ்வாத்மா இன்றும் தப்பிப்போமென்று திருவுள்ளம் பற்றியருளி, இப்படி அதிகாரப்பண்பமா யிருப்பதொரு வேஷத்தையும் தரித்துக் கொண்டு ஸத்ராசிகளுடனேகூட வெழுந்தருளி, அதி தூர்மாநியான அடியேனை அங்கீகரித்தருளின அந்தவேஷத்தை நினைத்து, அடியேனுக்குப் பொறுக்கப்போகிறதில்லை யென்றுசொல்லி, வாய்விட்டழுதுகொண்டு, திருவடிகளிலேவிழுந்துகிடக்க; பட்டரும் வேதாந்திகளை முடிபிடித்தெடுத்து, நிறுத்தித்தேற்றி, நீர்இங்கேததியாராதநைகபரராய் சுகமேயிருமென் றருளிச்செய்து, கோயிலைநோக்கி புறப்பட்டெழுந்தருளாநிற்க "மின்னுமாமுகில் மேவுதண்டிருவேங்கடம்" என்கிறபடியே, அம்புதர அம்பயுத ஶைலஶ்ருங்க நிலயனான நரஸிம்ஹ திவ்யவிமானம் தூர

மே தோன்றக்கண்டு, அஞ்சலித்து, பின்னையும் திருநாராயணபுரம்வழி யாக வெழுந்தருளி அநந்தாழ்வான் முன்னிலையாக நயனம், நாரஸிம்ஹம், சிட்டி, ஹரிப்ரஹ்மமஹாஸ்த்தாநம் பீதாரண்யம், ஜ்ஞாநாஸ்வர்த்தம் பஞ்ச பாகவதஸ்த்தலம், ஸ்வேதம் ருத்பரிதாந சிலைகளாகிற ஸத்த க்ஷேத்ரங்களையும், வேதபுஷ்கரிணி, தர்ப்பதீர்த்தம், பலாஸதீர்த்தம், பத்மதீர்த்தம், யாதவமஹாநதி, வைகுண்டகங்காதீர்த்தம், நாராயணதீர்த்தம், மைத்ரேயகிண்டதீர்த்தங்களையும் ஸேவித்து அவகாஹிதது இவைகதின் மத்யகதமான திருக்கல்யாணியிலேநீராடி, ஏகஸவாதி த்வாதசோர்த்வ புண்ட்ரதாராய், முன்புபோலே ஸேவாக்ரமம்தப்பாமல் சேவித்து, தீர்த்தப்ரசாதங்களும் பெற்று, புறப்பட்டு திருமலையிறங்கி யெழுந்தருளி, சிறுப்புத்தூரிலே அநந்தாழ்வானைநிறுத்தி, பயணகதியிலேத்வரித்து, கோயிலுக்கெழுந்தருளி, திருக்காவேரியிலேநீராடி, த்வாதசோர்த்வபுண்ட்ரராய் சகலபரிஜந பரிஸ்சதங்களோடே வேதாந்தாசார்ய பட்டர்வந்தார், வேதாந்திகளைவெல்லும் விரகர்வந்தாரென்று திருசசின்னம்பணிமாற, அணியரங்கன்திருமுற்றத்தடியார் எதிர்கொள்ள எழுந்தருளி ஸேவாக்ரமம் தப்பாமல் ஸேவித்துக்கொண்டு உள்ளேபுகுந்து "மாயோனை மணத்தூணைப்பற்றிநின்று வாயாரவாழ்த்தி" நிற்க, பெருமாளும், பெரியப்ரீதியோடே திருமாலை திருப்பரிவட்டம் தீர்த்தம் சடகோபனும்ப்ரசாதித்து திருமாளிகையிலேபோகவிட்டருளினார். அநந்தரம், பட்டரும் தம்திருமாளிகையிலேயெழுந்தருளி, அங்கே ஆண்டாளை சேவித்திருந்து ஸ்ரீபாதத்து முதலிகளுக்கு தர்ஸநம்நிர்வஹித்துக்கொண் டெழுந்தருளியிருந்தார்.

அநந்தரம், இங்கே தென்கரையிலே, வேதாந்திகள் திருமாலடியார்களைப் பூசித்துக கொண்டிருக்கும் நாளிலே, இரண்டுஸ்ரீவைஷ்ணவர்கள் இளைத்து, வேதாந்திகள் திருமாளிகைக் கெழுந்தருளி க்ஷுத்துநவியாநின்றதென்று அமுதுசெய்யத்தேட; வேதாந்திகள்தேவிகள் இருவரும் உங்கள் வேதாந்திகள் தீர்த்தமாடப் போனார் இங்கொன்றுமில்லை நீங்களங்கேறப் போங்களென்று சொல்லிஉதாசினம் பண்ணிவிட ; அந்தஸ்ரீவைஷ்ணவர்களும், வேதாந்திகள் பக்கல்சென்று இத்தைஅறிவிக்க; அவருமதுகேட்டு, அநுதபித்து, தம்திருமாளிகையிலே எழுந்தருளி, தேவிகளிருவரையுஞ்சீறி, அப்போதேபுறப்பட்டுக் கோயிலுக் கெழுந்தருளத்தேட; அங்குள்ளவர்கள் வேதாந்திகளைப் போகவொண்ணாதென்றுதகைய; இவரும் தமக்குநிரவதிக தநமுண்டா கையாலே அத்தைமூன்றம்ஸமாகப்பிரித்து, இரண்டு தேவிகளுக்கும் இரண்டம்ஸம்கொடுத்து மற்றையம்ஸத்தை ஸ்வாசார்யர்க்காக எடுப்பித்துக் கொண்டு, அத்தேசத்தையும் ஸவாஸநமாகவிட்டு, இல்லறமில்லேல துறவறமில்லென்று அதி ஸத்காரயோக்யை யில்லாதபார்யை த்யஜித்து ஸன்யஸிக்கக் கட

வனென்று ஶாஸ்த்ரம் உண்டாகையாலே ஸர்வஸங்கபரித்யாக பூர்வகமாக அங்கே ஸந்யஸித்தருளி, கோயிலை நோக்கியெழுந்தருளாநிற்கச்செய்தே, திருக்காவேரிக்கரையிலே அநந்தாழ்வானைக்கண்டு ஸேவித்துநிற்க; அநந்தாழ்வானும் வாரீர் வேதாந்திகளே, ஸுகுமாரமான நீர் இங்ஙனேசெய்யலாமோ, வேர்த்தபோதுநீராடி, பசித்தபோது அமுதுசெய்து, பட்டர் திருவடிகளே சரணமென்றிருந்தால் உம்மை பரமபதத்திலும் தள்ளிவிடுவாருண்டோ, இனியென்; திருமந்த்ரத்திலே பிறந்து, த்வயத்திலே வளர்ந்து த்வயைகநிஷ்டராவீரென்று ஆசீர்வதித்துப்போமென்றுவிட்டார். திருமந்த்ரத்திலே பிறக்கையாவது— திருமந்த்ரம் ஆத்மஸ்வரூப ப்ரதிபாதநபரமாகையாலே சேஷத்வ ஜ்ஞாநோத்பத்தியாகிற வாபிஜாத்யமுண்டாய் அதிலேஜநித்து; த்வயத்திலும்—ஸ்ரீமச் சப்தோக்தமான பெரியபிராட்டியார் புருஷகாரத்தாலே வர்த்தமாநார்த்தத்திலே வர்த்தித்து; உத்தரவாக்யோக்தங்களைப்பற்ற கைங்கர்யைக நிஷ்டராவீரென்று சொன்னபடி.

வேதாந்திகளும் பயணகதியிலேபோய் கோயிலிலே யெழுந்தருளி பட்டர் திருவடிகளிலே சேவித்து, தாம் கொண்டுவந்த தநத்தையும் தம்மதென்கிற வபிமாநத்தையும் விட்டு, பட்டருக்கு இஷ்ட விநியோகார்ஹமாம்படி அவர்திருவடிகளிலே ஸமர்ப்பித்து நிர்மலராய்நிற்க; அவ்வளவிலே, பட்டரும்மிகவும்உகந்தருளி நம்முடையஜீயர்வந்தாரென்று வாரியெடுத்துக் கட்டிக்கொண்டருளி ஒருக்ஷணமும் பிரியாமல் தம்முடைய ஸந்நிதியிலே வைத்துக்கொண்டு ஸர்வார்த்தங்களையும் ப்ரசாதித்தருள; ஜீயரும்பட்டரையல்லது மற்றொருதெய்வமறியாதிருந்தார். பட்டரும் நம்முடைய ஜீயரென்றுசொல்லி அணைத்துக்கொண்டவன்றுதொடங்கி வேதாந்திகளுக்கு நஞ்ஜீயரென்று திருநாமமுண்டாய்த்து.

நஞ்ஜீயர், பட்டரைப்பார்த்து சந்த்ரபுஷ்கரணிக்கரையிலே கண்வளர்ந்தருளுகிற இதற்கு திருவுள்ளக்கருத்து என்னென்று விண்ணப்பஞ்செய்ய; பட்டரும், “நாராயணா வோமணிவண்ணா நாகணையா” என்று கூப்பிட்டபின்பிறே அந்த மடுவின்கரையிலே எழுந்தருளினது; இங்கு கண்வளர்ந்தருளுகிறது நான் கூப்பிடுகிறதற்குமுன்னே என்னை எடுக்கைக்காக, நான் அகப்பட்ட பொய்கையிலே யொக்கவேவந்து கண்வளர்ந்தருளுகிறாரித்தனை; நீர் இவ்வர்த்தம்கேட்டது உம்முடையவுசத்தாலேயன்றுகாணும், உம்மைக்கொண்டு எம்பெருமான் என்னினைவை வெளியிட்டருளினார்; அதாவது பகவதவதாரங்களடங்க ஸ்வார்த்தமாகவென்றிறே ஜ்ஞாநிகள் அநுஸந்திப்பரென்றபடி.

பட்டரை ஸ்ரீபாதந்தாங்குவதாக தோளிலே தண்டைவைக்கப்புக பட்டரும், உம்முடைய வேஷத்திற்கு இதுவிருத்தங்காணுமென்று அரு

ணிச்செய்ய; ஜீயரும், அங்குற்றைக்கடிமைக்கு ஏகாந்தமென்று இவ்வேஷத்தை பரிக்ரஹம்பண்ணினேன், அதுதானே இதற்கு விரோதமாகில் பழைய வெள்ளையை யுடுக்கிறேனென்று விண்ணப்பஞ்செய்தார்; அதாவது; ஆசார்யகைங்கர்யத்திற்கு அநுரூபமாகாத வர்ணாஶ்ரமதர்மமும் பரித்யாஜ்யமென்றபடி.

பட்டர் குடும்பஸஹிதமாக கூரகுலோத்தமதிலே எழுந்தருளியிருக்கிறவளவிலே, திருந்தவத்திலே அல்பமுபஹதியுண்டாக, திருநந்தவனம்செய்கிற வேகாங்கிகள் சிலவார்த்தைகள் சொன்னார்களென்று நஞ்ஜீயர் கேட்டருளி, ஏகாங்கிகளையழைத்து, நான் நம்பெருமாள் திருக்குழல் கற்றை சிக்குநாறுகிறதென்றோ, திருநந்தவனம்செய்கிறது, பட்டருடைய குடும்பத்திற்கு இஷ்டவினியோகார்ஹமாகவேணுமென்று திருநந்தவ்யாஜேனகோலினேனித்தனையன்றோவென்று, அவர்களை சீறிவிட்டருளினார்; இத்தால் ஆசார்யபரதந்த்ரன் பகவத்கைங்கர்யம் பண்ணக்கோலுவது ஆசார்யகைங்கர்யார்த்தமாக வித்தனையென்று கருத்து.

அநந்தரம், பட்டர் திருவணையாடவெழுந்தருளுகிறபோது, பகலெல்லாம் வழிநடந்தருளின ஆயாசத்தாலே,விட்டதொருதூற்றடியிலே, நஞ்ஜீயர்மடியிலே திருமுடியை வைத்துக்கண்வளர்ந்தருள; ஓரிராவெல்லாம் துடைமாறுடுதல், அசக்குதல் செய்யாதேயிருந்தருளினார். ஆகையாலே ஆசார்யவிஷயத்தில் சைதந்யம்மூச்சற்றுப்படிக்கையாயடிமைசெய்கை ஶிஷ்யஸ்வரூபஸித்தியென்கிறது.

திருவணையாடி மீண்டெழுந்தருளுகிறபோது, சாயங்காலமானவாறே; பாதரியென்கிற க்ராமத்திலே போய் ஒருவேடன் அகத்தே எழுந்தருளிப்புக்கவாறே; அவனும், தானிருந்த ஆசனத்தையும் வாங்கிப்பொகட்டு, இவர்க்கொருகட்டிலை அமைத்துக்கொடுக்க, அதின்மேலேயெழுந்தருளியிருந்து, இவன் நம்முடைய வைபவமறிந்து செய்தானல்லன், க்யாதிபரனாய்ச் செய்தானல்லன், நம்மால் உபக்ருதனாய்ச்செய்தானல்லன், தன்னுடைய க்ருஹத்திலே புகுந்தோமென்று அபிமானமிறே இவனிவ்வளவு செய்யவேண்டித்து. ஈஶ்வரன் தந்நபிமானத்திலே யொதுங்கினாரை என்னினைத்திருக்கிறானோ என்றனுசந்தித்தருளி; பின்பு, அந்தக்ருஹமுடையவனைக்குறித்து, இங்குவிஶேஷமேதென்று கேட்டருள; அவனும், நாயந்தே, நான் காட்டிலே வேட்டைக்குப்போனேன், அங்கே ஒரு முசல் குட்டியைக்கண்டுபிடித்தேன், அதனுடையதாயானது என் முன்னே வந்து வழியிலே எதிரே கும்பிட்டுக்கொண்டு கிடந்தது; அத்தைக்கண்டு எனக்கு தயைபிறந்து அதின்குட்டியை விட்டுப்போந்தேனென்றான்; அத்தைக்கேட்டு, இவரும் ஒருசேதனனுக்கில்லாததொன்று பா

மசேதனனுக்குள்ளதன்று, (௫௨௮) “மாமேகம் ஶரணம் வ்ரஜ” (మామేకం శరణం వ్రజ) என்றும் முசலுக் குபதேசித்தாரில்லை, (௫௨௯) “அபிப்ராணாநவஸ்ருஜ்ய ரக்ஷிதவ்ய: க்ருதாத்மநா” (అపి ప్రాణాన్ పరిత్యజ్య రక్షితవ్యః కృతాత్మనా) என்றிவ்வேடனுக்கு உபதேசித்தாரில்லையிறே. அவ்வபவைதானே சரணாகதிபலிப்பதே, இதொருப்ரமாணஸித்தியென்று, நஞ்ஜீயர்க்கருளிச்செய்து கோயிலுக்கெழுந்தருளி பூர்வம்போலே வ்யாக்யாநித்துக் கொண்டு எழுந்தருளியிருந்தார்.

அக்காலத்திலே, வீரசுந்தரப்ரஹ்மராயன், பெருமாளுக்குத்திருமதிள் கட்டிவைக்கிற நேரிலே, பிள்ளைப்பிள்ளையாழ்வான் திருமாளிகை யகப்பட, அவர் திருமாளிகையையிடித்து திருமதிள்கட்டவேணுமென்று வீரசுந்தரன் சொல்ல; பட்டரும், உன்திருமதிளோ பெருமாளுக்கு ரக்ஷகம். அவர்மங்களாஶாஸநமிறே ரக்ஷகம்; ஆகையாலே உன்முன் திருமங்கையாழ்வார் தொண்டரடிப்பொடியாழ்வார் திருமாலைகட்டிவைக்கிற ஸ்தலத்தைத் தப்பவொதுங்க திருமதிள்கட்டவில்லையோ, இப்போதும் அப்படியே நீரும் அவர்திருமாளிகையைவிட்டு ஒதுங்க திருமதிள் கட்டிவையுமென்று சொல்ல; வீரசுந்தரனும், ஆசார்யபுத்ரனென்று அஞ்சாதே, அவ்வார்த்தையை அதிக்ரமித்து, அவர்திருமாளிகையை யிடித்து, திருமதிள் கட்டிவைத்து, பட்டரை, தந்மூலமாகக் கோயிலிலே யிருக்கவு மொட்டாதே மிகவும் உபத்ரவிக்க; பட்டர்கோயில்நின்றும் புறப்பட்டு, திருக்கோட்டியூருக்கெழுந்தருளும்போது, வழியிலேயிளைத்தருளி, நஞ்ஜீயரிப்போது வருவதும் காணேனென்ன; நஞ்ஜீயரும் பின்னேவர; பட்டரும், ஜீய்யா ஜீய்யாவென்று வழைத்துக்கொண்டுவர; நஞ்ஜீயரும் கட்டித்திருப்போனகமும் தண்ணீரமுதும்கொண்டோடிவந்து. சடக்கென அமுது செய்யப்பண்ணிவைத்து, இளைப்பாற்றிவைக்க; பட்டரும், நஞ்ஜீயருக்கப்போதுமொரு விஶேஷகடாக்ஷம் செய்தருளினார். ஆகையாலே, அநுவர்த்தநவிஶேஷங்களாலே ஆசார்யாநுக்ரஹத்திற்கு பாத்ரமாகவேணுமிறே.

அநந்தரம், திருக்கோட்டியூரிலே யெழுந்தருளியிருந்து (௫௩௰) “[illegible] - [illegible] - [illegible] - பஶ்யேயம் புநரபி புரம் ஶ்ரீமத்ரங்கதாம்ந:” ([illegible] పశ్యేయం పునరపి పురం శ్రీమద్రంగధామ్నః) என்று சொல்லிக்கொண்டு, கோயிலையும், பெருமாளையும், விட்டுப்பிரிந்திருக்கையாலே மிகவும்க்லேசப்பட்டு “என்

றுகொலோகண்குளிரக்காணுநாளே" என்றுகொண்டு எழுந்தருளியிருக்கிறகாலத்திலே :

ஒரு ஸ்ரீவைஷ்ணவர், பட்டரைசேவித்து அடியேனுக்குத்திருவிருத்தத்திற்கு அர்த்தம் ஒருருப்ரஸாதித் தருளவேணுமென்று மிகவும் அநுவர்த்திக்க. பட்டரும், நஞ்ஜீயரைப்பார்த்து ஜீயா, எனக்குக் கோயிலையும் பெருமாளையும் விட்டுப்பிரிந்த க்லேஶாதிஶயேந செவிகள் ஸீபாயாநின்றது, ஆகையாலே எனக்கு வாய்திறந்து ஒருவார்த்தை சொல்லப்போகிறதில்லை, நீர் திருவிருத்தத்திற்கு அர்த்தம் ஒருரு இந்த ஸ்ரீவைஷ்ணவர்க்குச்சொல்லென்று அவரை ஜீயர் ஸ்ரீபாதத்திலே காட்டிக்கொடுத்து இங்ஙனே நடத்தச்சொல்லுகிறநாளிலே; கடலைக் கலக்கினாற்போலே பட்டர் திருவுள்ளத்தைக் கலக்கி விரோதித்த வீரசுந்தரன் மரித்துப்போக; அவ்வளவிலே, பட்டர்திருத்தாயார் ஆண்டாளைசேவித்திருந்த ஸ்ரீவைஷ்ணவர், பட்டருடைய விரோதிபோனனென்று தங்கள் திருப்பரிவட்டங்களை முடித்து ஆகாஶத்திலே யெறிந்து, நின்றார் நின்றதிக்கே ஸந்தோஷித்துக் கூத்தாடி யாண்டாளுக்கறிவிக்க; அதுகேட்டு ஆண்டாள்செய்தபடி; திருமாளிகைக்குள்ளேபுகுந்து, திருக்காப்பைச்சாத்திச் சிக்கெனத்தாளிட்டு, வயிறுபிடித்து மிகவும் க்லேசித்து, வாய்விட்டு ஸைஸ்வரமாக அழத்தொடங்கினர்; அதுகேட்டு, ஸந்தோஷாதிஶயேந "தடுகுட்டகும்பிடுநட்டமிட்டுக் கூத்தாடுகிற முதலிகள், ஆண்டாளைக்குறித்து, பட்டரை யிங்கிருக்கவும் கூடவொட்டாமல் விரோதித்த பாபிஷ்டன் போனனென்று சந்தோஷியாதே க்லேசிப்பானேன்; பட்டருடையவிரோதிபோகவும், பட்டரும் முதலிகளும் இங்கேயெழுந்தருளவும் நாமெல்லோரும் கூடிவாழவும், உமக்கு அஸஹ்யமாயிருந்ததோவென்ன ; ஆண்டாளும் ஸ்ரீவைஷ்ணவர்களைக்குறித்து அருளிச்செய்தபடி; பிள்ளைகாள் நீங்களொன்று மறிகிறிகோளில்லை, வீரசுந்தரன் நேரே ஆழ்வானுடைய ஶிஷ்யனாயிருந்து, ஆசார்ய புத்ரரான பட்டரை திண்டாட்டங்கண்டு அவர்திறத்திலே, மஹாபாரதத்தை தீரக்கழியப்பண்ணி, அறியாமல்செய்தேனித்தனை, பொறுத்தருளவேணும் என்று பட்டர்திருவடிகளிலே தலைசாய்ப்பதுஞ் செய்யாதே, இப்படிசெய்தோமே என்கிற அநுதாபமுமின்றியே செத்துப்போனன் ஆகையாலே அவன் ஶரீரம்விட்டபோதே யமபடர்கையிலே யகப்பட்டுக்கலங்க அடியுண்டு, மலங்கவிழுக்குமாகையாலே அத்ருஷ்டத்தை யிழந்தான். சிலநாளைக்கிருந்தானாகிலும் த்ருஷ்டஸுகத்தை யநுபவிக்கிறானென்றிருந்தேன், அதுவுங்கூட விழந்தானாகாதே; ஆழ்வான்திருவடிகளில் சம்பந்தமுடையதொரு ஆத்மா இப்படிதட்டுப்பட்டுப்போவதே யென்றித்தைநினைத்து என்வயிறெரிகிறபடி உங்களொருவர்க்கும் தெரிகிறதில்லை யென்று ஆண்டாளருளிச்செய்தாள். குற்றம்

செய்தவர்கள்பக்கலிலும் அகப்பட ஹிதபரராய், தயாயுக்தசித்தராய்ப் போருவது ஆழ்வான் சம்பந்தமுடையவர்க்கே யுள்ளதொன்றிறே.

கோயிலிலும், பிள்ளைப்பிள்ளையாழ்வான் இவ்விசேஷங்கொண்டு திருக்கோட்டியூர்க்கெழுந்தருளியருளிச்செய்ய, பட்டரும்; கேட்டு, சந்துஷ்டராய் "நுங்கால்களென்றலை மேற்கெழுமீரோநுமரோடே" என்கிறபடியே, அவர்கழல்களை அடிக்கடி வணங்கி அவருடனேகூட, தக்ஷணமே ஸ்ரீகோஷ்டீபுறத்திலும் புறப்பட்டுக் கோயிலேற வெழுந்தருளி. பண்டுபோலே தர்ஶநம்நிர்வஹித்துக்கொண்டிருந்தார்.

அம்மணியாழ்வான், இருநூற்றுக்காதவழிநடந்து வந்து, பட்ட ஸ்ரீபாதத்திலே தெண்டன்சமர்ப்பித்து, அடியேனுக்குத்தஞ்சமாயிருப்பதொரு அர்த்தம் ப்ரசாதித்தருளவேணுமென்று ப்ரார்த்திக்க; பட்டரும், "நெடுமாற்கடிமைக்கு அர்த்தம் ப்ரஸாதித்தருளி, எம்பெருமானையறிகையாவது, அவனை அறைவயிறுபட்டிருக்கை, ததீயரையறிகையாவது அவரை முழுக்கவறிகையென்றருளிச்செய்தருள; அவரும்,பலபடி சொல்லியென், மறப்பேன், இவ்வளவேயமையுமென்று அவர் அது தன்னையே தாரகமாகப் பண்ணிக்கொண்டு எழுந்தருளினார்.

(ருகக) "𑌨𑍍𑌯𑌗𑍍𑌰𑍋𑌧𑌬𑍀𑌜𑌵𑌟𑌵𑌤𑍍𑌪𑍍𑌰𑌣𑌵𑌶𑍍𑌶𑌬𑍍𑌦𑌜𑌾𑌲𑌵𑌤𑍍। 𑌸𑌿𑌦𑍍𑌧𑍇𑌤𑌦𑍀𑌯𑌶𑍇𑌷𑌤𑍍𑌵𑍇𑌸𑌰𑍍𑌵𑌾𑌰𑍍𑌥𑌾𑌸𑍍𑌸𑌙𑍍𑌗𑍍𑌰𑌹𑍇𑌣𑌹𑌿" (న్యగ్రోధబీజవటవత్ప్రణవ శ్శబ్దజాలవత్ । సిద్ధేతదీయశేషత్వే సర్వార్థాస్సఙ్గ్రహేణహి) என்கையாலே, ஸச்சிஷ்யன்; ஸதாசார்யனருளிச் செய்ததொரு தாத்பர்ய சரமார்த்தத்தையே தஞ்சமென்று விஶ்வஸிக்கவேணுமென்றபடி.

வீரசிகாமணிப் பல்லவராயன், பட்டரைக்குறித்து, பட்டரே, ராஜகார்யம்செய்கையாலே அடியேனுக்குபகவத்விஷய வைபவங்கேட்க விரகில்லை, எனக்குத் தஞ்சமாயிருப்பதொரு அர்த்தம் ப்ரஸாதித்தருளவேணுமென்று அபேக்ஷிக்க; பட்டரும், கடற்கரை வெளியைநினைத்திருமென்று அருளிச்செய்தார். அது தெரியாமையாலே, அவர் கையைப்பிசைந்துநிற்க; இவரும், கடற்கரையிலே ஒரு அமிர்தக்கடல்போலே பெருமாள் பெரிய வாநரஸேனையோடே விட்டிருக்க, அக்கரையிலே பிணந்தின்றிப் பையல் இராவணனிருக்க, எழுபதுகோடி மஹா கபிஸேனை யுணர்ந்து பெருமாளைக் குறித்துக்கொண்டு நோக்கிக்கொண்டு போர, அவர்கள் ப்ரக்ருதிமான்க ளாகையாலே கண்ணுறங்கி காலோய்ந்து கைசோர்ந்தவளவிலே, தாமும் தம் திருத்தம்பியாருமாக திருவரையில் கட்டினகச்சும்,சுருக்கியசீராவும் நாணியும்,முதுகிலே அம்பறுத்தூணியைக்கட்டி, கையிலே தரித்துப்பிடித்தும் பெருக்கின திருச்சார்ங்கம், தரித்த திருவில்லும் தாமுமாய், சில வண்டஜங்கள் முட்டையிட்டு, தன்

சிறகின்கீழே நோக்கியிட்டு வைத்துமாப்போலே எழுபதுவெள்ளம் ஸ்ரீ ப்லவங்கருலபதி மஹாசேனையையும், நடையாடுமதிள்கள்போலே ரக்ஷித்துக்கொண்டு ஓரிராவெல்லாம் சாரிகையாய்வந்த சக்ரவர்த்தித்திருமகனுடைய கையும் வில்லுமே தஞ்சமென்று சுகமாயிருமென்றருளினார்.

தர்மஜ ரஹஸ்யமாவது, உறங்குகிறபோது நம்மை ரக்ஷிக்குமவன், உணர்ந்தால் நம்மை நோக்குமென்றிருக்கச் சொல்லவேண்டாவிறே என்றபடி,

ஒருநாள் த்ரிபுவன வீரதேவராயன், பட்டருடைய வைபவங்கண்டு, பட்டரோ நீர் நம்பக்கல் ஒருநாள் வந்துபோகிரோன்ன; பட்டரும், பெருமாள் அஞ்சலென்றகை மறுத்தாலும்அவ் வாசலொழிய வேறொருபோக்குண்டோ வென்றருளினார். அதாவது, (ருஙஉ) "[illegible]" ([illegible]) என்று ஸ்வாஸ்ரித ரக்ஷணை கதீக்ஷிதனை எம்பெருமானிருக்க, கதிபயக்ராமேஶ கஸ்சித் புருஷாதமன் வாசலிலே துவளக் கடவோமல்லோமென்றபடி.

ஒருநாள் பட்டர், பெருமாள் திருக்கைத்தலத்திலே எழுந்தருளியிருக்கச்செய்தே திருவடித்தொழப்புக, திருமுன்னடிக்கிற வேத்ரபாணி, பட்டரைப்பாராமல் பருஷோக்திகளைச்சொல்ல; ஸ்ரீபாதத்தில் ஸ்ரீவைஷ்ணவர் அவரோடே எதிருத்தரம் சொல்லப்புக; பட்டரும், வாரீர் பிள்ளாய் கேளும், பெருமாளுக்கு ஏகாந்தத்திலே என்குற்றம் விண்ணப்பஞ்செய்ய, ஒருகாலம் பற்றுதாய் பெரியபெருமாளும் திருச்செவிசாத்தாமல் போந்தவித்தை, பெருமாளுக்கு அந்தரங்கபரிகரமாயிருப்பாரொருவர் நம் தோஷங்களை பெருமாளுக்கு ஏகாந்தத்திலே விண்ணப்பம்செய்ய, பெருமாளும் திருச்செவி சாத்தினதுகண்டால், நம்மைப்பார்க்கில் அத்தை விலக்கிறவித்தால் நீர்பெற்ற பேறென்னென்று அருளினார். இத்தால், பகவதேகாந்த ஸந்நிதியில் பரக்ருத ஸ்வதோஷாக்யாபநம் தத்வாத்ஸல்ய கார்யமாய், ததங்கீகார ஹேதுவாமென்று நினைக்கக்கடவனென்றபடி.

பட்டர் ஸ்ரீபாதத்திலே சம்பந்தமுடையராய் ஸோமாசியாயிருப்பாரொரு ஸ்ரீவைஷ்ணவர், பட்டரை, அடியேனுக்குத் திருவாராதநக்ரமம் ப்ரசாதித்தருளவேணுமென்று விண்ணப்பஞ்செய்ய; பட்டரும், உடையவர் நித்யத்தை ஒருசாமப்போது திருவாராதநம் பண்ணவேண்டும் க்ரமத்தை ப்ரசாதித்தருள; அவரும், அதுகொண்டு நெடுநாள் திருவாராதநம்பண்ணிப் போரச்செய்தே, ஒன்றிரண்டுநாள் பட்டர் திருவாராதநத்தைச் சேவித்திருந்தார்; அங்கு தமக்கு அருளிச்செய்தக்ரமம் ஒன்றும் கண்டிலர்; பட்டர் திருவாராதநம் செய்தருளினபடி; - நீராடி தூய

திருப்பரிவட்டம் சாத்தியருளி, திருமண்காப்புச் சாத்தியருளி, உள்ளே அமுதுசெய்யத் தளிகையை அமர்த்தினவளவிலே, தளிகை முன்னே எழுந்தருளியிருந்து, தெற்காழ்வாரை எழுந்தருள வைத்துக்கொண்டு வாருங்கோளென்ன, அவர்களும் அப்படியே எழுந்தருளவைத்துக்கொண்டுவந்து கைத்தலத்திலே பிடித்தவளவிலே, தமக்குப்படைத்த திருப்போனகத்தையும் சேர்த்து, தண்ணீரமுதையும் அமுதுசெய்வித் தருளி ப்ரஸாதப்பட்டாருளினார். அத்தைக்கண்டு ஸ்ரீவைஷ்ணவரும், பட்டரை தெண்டனிட்டு ஸவிநயராய் ஒரு விண்ணப்பமுண்டு சொல்லபயமாயிருக்கிறதென்றுசொல்ல; பட்டரும்,அஞ்சாதே சொல்லுமென்ன; அந்த ஸ்ரீவைஷ்ணவரும், திருவாராதநப்படியை அடியேனுக்கிப்படி யருளிச்செய்தருளிற்று, தேவரீரிப்படிசெய் தருளுகிற இதற்கடி யென்னென்று விண்ணப்பஞ்செய்ய; பட்டரும், சகலஶாஸ்த்ரங்களையும் ஆராய்ந்து பார்த்தவிடத்து உமக்கு இப்படி யொழியச்சொல்லுகைக்கு ஒருவார்த்தை கண்டிலேன், என்னை நிரூபித்தவிடத்தில் அப்படி யொழியச்செய்கைக் கொருசொல்கண்டிலேன் என்றருளிச்செய்தருளினார். இத்தால் ஹிதைஷியான வாசார்யன், ஶிஷ்யனுக்கு ஞானபரிபாகாநுகுணமாகக் கொண்டிப்பசுவுக்குத் தடிகட்டி விடுவாரைப்போலே, சப்தாதிவிஷயங்களிலே மண்டித்திரிகிற கரணங்களை பகவத்விஷயப்ரவணமாம்படி திருத்துமென்னு மதுவும், ஆசார்யனுடைய யத்நமாய் பகவத்விஷயைக பரமான வநுஷ்டாநவிஶேஷத்திற்குக் கருத்து அவிசேஷஜ்ஞர்க்குத்தோற்றாதென்னு மதுவும் தோன்றுகின்றதிறே.

பட்டரை ஒருவன், தேவதாந்தரங்களை ஸ்ரீவைஷ்ணவர்கள் அநுவர்த்தியா தொழிவானென்னென்னில்; ப்ரமாண விரோதமுண்டாகிலன்றோ ஸந்தேஹமுள்ளது, இங்கே ஸந்தேஹமில்லை யென்றருளிச்செய்தார். அதெங்ஙனேயென்னில்;—ஸத்வப்ரசுரரை, ரஜஸ்தமःப்ரசுரர்அநுவர்த்திக்குமதுபோக்கி, ஸத்வப்ரசுரர், ரஜஸ்தமःப்ரசுரரை அநுவர்த்திக்கக்கடவதோ வென்றருளிச்செய்தார்; ஆகையாலே தேவதாலயதேவதாந்தரங்கள் குணதோஷங்க ளிரண்டாலும் ஒருகாலும் அநுவர்த்தநீயரல்லவென்றபடி.

பட்டர் அறியில் சம்மதியாரென்று, பட்டர் ஸ்ரீபாதத்தை வேறொரு ஸ்ரீவைஷ்ணவர் திருக்கையாலே விளக்குவித்து ஆண்டாள் ஸ்வீகரித்தாள்; இத்தை யொருநாள் ஒரு ஸ்ரீவைஷ்ணவர் கண்டு, நீ தாயாரயிருந்து இப்படி செய்யலாமோவென்ன; ஆண்டாளும், அதுவென்! பிற திருவாராதநத்தில், தீர்த்தமே ஸ்வீகார்யமாய், தானே ஏறியருளப்பண்ணிக்கொண்ட விக்ரஹத்தில் தீர்த்தம் ஸ்வீகார்யமன்றோவென்ன; அவரும் அதற்கடி யென்னென்று கேட்க; ஆண்டாளும் "கண்ணபுர

கைதொழும்பிள்ளையைப் பிள்ளையென்றெண்ணுவரோ," என்றருளிச்செய்தார். இத்தால் ஶிஷ்யபுத்ரர்களேயாகிலும் ஜ்ஞாநாதிகர் ததீயத்வேந அநுவர்த்தநீயரென்றபடி.

பட்டர், தம்ஸ்ரீபாதத்திலே ஸேவிததிருப்பாரொரு ஸ்ரீவைஷ்ணவரைப்பார்த்து, நீர்போய், அநந்தாழ்வான ஸ்ரீபாதத்திலேசென்று ஸ்ரீவைஷ்ணவலக்ஷண மிருக்கும்படி யெங்ஙனேயென்று கேட்டுவாருமென்று அருளிச்செய்ய; அவரும் அநந்தாழ்வான்ஸந்நிதிக்கு எழுந்தருள, அன்று ஸ்ரீவைஷ்ணவர்களுமங்கே அமுதுசெய்தருள; இவரும் இடம்போராமையாலே அமுது செய்தருளி எல்லாரு மெழுந்திருக்குமளவும் பேசாதிருக்க; பின்பு அநந்தாழ்வானும் இவரைக்கண்டுஅமுதுசெய்தருளப்பெற்றதில்லையே, நெடும்போதுண்டே, இளைப்போடே யிருக்கிறதேயென்று போரநொந்து, சடக்கென அமுதுசெய்தருளப்பண்ணி, தாமும் தேவிகளுமாக ஸேவித்திருநதுள்ள திருப் போனகத்தை அமுதுசெய்தருளி எழுந்தருளியிருந்து, ஸ்ரீவைஷணவரைக்குறித்து,எங்குநின்றுமெழுந்தருளிற்றென்றுகேட்டருள; அவரும், பட்டர், அநந்தாழ்வான் ஸ்ரீபாதத்திலே சென்று ஸ்ரீவைஷ்ணவலக்ஷணமிருக்கும்படி எங்ஙனென்று கேட்டு வரச்சொல்லி வரவிட்டருளினாரென்று விண்ணப்பஞ்செய்ய; அநந்தாழ்வானும், ஆகில் உம்மைப்போலே யிருக்குமென்றருளினார். இத்தால், தன் ஜ்ஞாநாநுஷ்டாநாபிமாநாதி நிமித்தமாக ஸ்ரீவைஷ்ணவர்கள் திரளிலே முற்பாட்டுக் காசைப்படாதே, பிற்பாட்டுக்கேயாசைப்பட்டு ததீயஶேஷத்வத்தைப் பேணுகை ஸ்ரீவைஷ்ணவலக்ஷணமென்று உத்தர மருளிச்செய்துவிட்டாராய்த்து.

பின்பு, பட்டர் ஸ்ரீபாதத்திலே ஸேவித்திருப்பார் ஒரு ஸ்ரீவைஷ்ணவர் ஸஹவாஸதோஷத்தாலே கலங்கி விஷயப்ராவண்யந் தலையெடுத்து, பட்டர் ஸந்நிதியிற்சென்று, பட்டரைப்பார்த்து, வாரீர் பட்டரே, உமக்கும் நமக்கும் பணியில்லை யென்றுசொல்ல, பட்டரும், வாராய் பிள்ளாய், அது உன் நினைவாலேயன்றோ துர்ப்புத்திவந்தது, நீவிட்டாலும் நாம்விடுவோமோ வென்றருளிச்செய்தருள, அவனும் அகன்றுபோகத்தேட, இவரும் அவனை பலாத்கரித்துப்பிடித்து, உபாயேநஜ்ஞாநோபதேச முகத்தாலே வருந்தித்திருத்தி ஸ்ரீபாதத்திற்கு அந்தரங்கராக்கிக் கொண்டருள; அவரும், மஹாவிரக்தராய் நிலையிலே நின்றருளினார். ஆகையாலே, ஜ்ஞாநம் தலையெடுத்து அகன்றுபோவாரையுமுட்படவிடாதே யத்நேநதிருத்திச் சேர்த்துக்கொள்ளுகையே ஸதாசார்யலக்ஷணமென்கின்றது.

ஒருநாள், பட்டரும் ஸ்ரீவைஷ்ணவர்களுமாகப் பெருங்கூட்டத் திருவோலக்கமாக வெழுந்தருளியிருந்து,பகவத்கல்யாணகுணாநு ஸந்தா

நடந்தவாறிற்க; ஒருஸ்ரீவைஷ்ணவர், நாம்பண்ணின சுக்ருதபலமிருந்தபடியிப்படியிருக்கப்பெற்றதே என்ன; அவ்வளவில் சிறியாச்சான் எழுந்திருந்து நின்று, இது நெடுங்காலம் பெருமாள் ரக்ஷகரென்று ப்ரதிக்ஷித்துவைத்து, இப்போதாக ஒரு சுக்ருத மேதவருண்டாவதே யென்றருளினர். இத்தால் உஜ்ஜீவயிஷ—வான ஈஸ்வரனிருக்க, ஆநுகூல்யங்களுக்கு ஸ்வக்ருதமடியென்கை ஸ்வரூபநாசமென்றபடி.

பட்டரோடே அமுதனர் வெறுத்தருளி, தாம் ஆழ்வானுடைய வயற்றிலே பிறந்தவர்; நானுழ்வானுடைய ஜ்ஞானச்செருக்கிலே பிறந்தவனன்றோ வென்றுசொல்லிவிட; அத்தைப் பட்டர் கேட்டருளி பாசுரம் அழகிது, ஆகிலும் இத்தைத் தாமேசொன்னரோ வென்றருளிச்செய்தார் ஆகையாலே ஆசார்யாபிமாநஜநிதஸ்வோத்கர்ஷ ரூபஸ்வவாக்யவ்யவஹ்ருதவசநம் ஸ்வரூபாநுசிதமென்றபடி.

பட்டர் ஒருநாள் பெருமாள்புறப்பட்டருளி ஒரு திருமண்டபத்திலே யெழுந்தருளியிருக்கச்செய்தே, திருவாலவட்டம் ஸேவித்திராநிற்க, ஸ்ரீபாதத்துமுதலிகள் ஸந்த்யாவந்தநத்திற்கு காலம் தப்புகிறதுஎன்று விண்ணப்பஞ்செய்ய, பட்டரும், "பகவத்கைங்கர்ய நிரதற்கு ஸந்த்யாவந்தந வைகல்யதோஷம் வாராது" என்றருளிச்செய்தருளினர். இதற்கு கருத்து, (ஙிஙங) "[illegible] - [illegible]" [illegible] என்று திருமுகப்பாசுர மிருக்கையாலே; ஆகையால் பகவத்கைங்கர்யத்தை யிழந்து நித்யகர்மாநுஷ்டாநார்த்தமாகப் போகை ஸ்வரூபவிருத்தமென்றபடி.

ஒருக்கால் பட்டருடனே அநேகம் வித்வான்கள் திரண்டுவந்து தர்க்கிக்க, பட்டர் அவர்களெல்லாரையும் வாய்மூடிவைத்து ஜயித்தருள, பின்னையும் அவர்கள் இவருடைய ஸர்வஜ்ஞதையை பரீக்ஷிப்போமென்று ஒருகுடத்திலே ஒருபாம்பையடக்கிக்கட்டி, இக்குடத்திலேயிருக்கும் வஸ்து வென்னென்றுகெட்க; பட்டரும், திருவெண்கொற்றக் குடையிருக்கிறதென்ன; அவர்களும்சிரித்து, குடத்துக்கட்டை விட்டவளவிலேபோகி புறப்பட, அவர்களும், இது கொற்றக்குடையோவென்ன; பட்டரும் அன்றோ, "சென்றாற்குடையாம்" என்றன்றோ ஆழ்வார்கள் அருளிச்செய்ததென்ன; அவர்களும் இவருடைய ஸர்வஜ்ஞதைக்குவிஸ்மயப்பட்டு க்ருதார்த்தராய்ப்போனர்கள்.

முன்பு உடையவர்காலத்திலே, ஆசார்யர்களெல்லாரும் உடையவர்க்கு மாநஸபுத்ரரான திருக்குருகைப் பிரான்பிள்ளானை அநுவர்த்தி

த்து, ஆழ்வார்க ளருளிச்செயல்களின் அரும்பொருள் தெரியும்படிக்கு தேவரீர் வ்யாக்யாநம் செய்தருளவேணுமென்று உடையவரை வேண்டிக்கொள்ளவேணுமென்று பிள்ளானுக்கு விண்ணப்பஞ்செய்ய; பிள்ளானும், உடையவர் பெருங்கூட்டத் திருவோலக்கமாக வெழுந்தருளியிருக்கச்செய்தே, ஸாஷ்டாங்கப்ரணாமம்பண்ணி, ஸவிநயராய் இரப்புடனே ஒரு விண்ணப்பம் உண்டென்றுசொல்ல; உடையவரும் என்னென்று கேட்டருள; பிள்ளானும், தேவரீர் ஸ்ரீபாஷ்யமருளிச்செய்து, திக்விஜயம்பண்ணி, தர்ஶநத்தை நிலைநிறுத்தியருளிற்று, இனி, திருவாய்மொழிமுதலான ஆழ்வார்ப்ரபந்தங்களுக்கும் வ்யாக்யாநம்செய்து ரக்ஷித்தருளவேணுமென்று விண்ணப்பஞ்செய்ய; உடையவரும், திருவுள்ளத்திலே விசாரித்தருளி, அப்படி யாம் அருளிச்செயல்களுக்கு வ்யாக்யாநம்பண்ணினால், மந்தமதிகளுக்கு இவ்வளவே இதற்கர்த்தமுள்ளதென்று தோற்றுமாகில் அபசாரமாம்; ஆழ்வார்கள் பாசுரங்களுக்கு அவ்வவருடைய புத்திக்கீடாக பஹுவாய்ச் சுரக்குமாகையாலே நாம் அருளிச்செயல்களுக்கு வரம்புகட்டினாப்போலேயாம். நீர் ஒருபடி திருவாய்மொழிக்குவ்யாக்யாநம்பண்ணும் என்று நியமித்தருளினார். திருக்குருகைப்பிரான் பிள்ளானும், எதிராஜர் அநுமதிகொண்டு ஸ்ரீவிஷ்ணுபுராண ப்ரக்ரியையாலே திருவாய்மொழிக்கு முந்துறமுன்னம் இனிதாக ஆறுயிரப்படி யுரைத்தருளினார்.

பட்டரும் நஞ்ஜீயருக்குப் பிள்ளான்படி ஆறுயிரமும் நன்றாக ப்ரஸாதித்தருளினார். நஞ்ஜீயரும் அத்தை நன்றாக அதிகரித்து, பட்டரை அநேகமாக வநுவர்த்தித்து, அவருடைய அநுமதிகொண்டு, திருவாய்மொழிக்கு ஒன்பதினாயிரப்படியாக ஒருவ்யாக்யாநம் பண்ணா நிற்கச்செய்தே; பட்டருக்கு இருபத்தெட்டாம் திருநக்ஷத்திரத்திலே கைசிக த்வாதஶியினன்று, பெருமாள்சந்நிதியிலே நின்று கைசிகபுராணம் வாசித்தருளாநிற்கச்செய்தே; என்றையும்போலன்றியே, ஒருபதத்திலேநின்று பஹுமுகமாக பாவார்த்தங்களை யருளிச்செய்கிறபடிகளைக்கண்டு, பெருமாள் திருவுள்ளம்பற்றியுகந்து; இவருக்குத் தாம் சாத்தியிருந்த திருமாலை திருப்பரிவட்டம் திருவாபரணமுதலானவைற்றையும், தாம் எழுந்தருளியிருக்கும் திவ்ய ஸிம்ஹாஸனத்தையும், பின்னையும் சிலபரிசிலாக விரங்கியருளி, மாரும் தோளும் பூரித்து திருமேனி தெரியாமல் த்வரை விஞ்சிமாறி இவர்க்கு மற்றெது கொடுப்போமென்று ஸந்தோஷாதிசயத்தாலே, பட்டரே,உமக்கு மேல்வீடு தந்தோம் என்றுபெருமாள் திருவுள்ளமாக; இவரும்மஹாப்ரஸாதமென்றங்கீகரித்தருள;திருவோலக்கமடைய கடல் குழம்பினாற்போலே, இப்படி திருவுள்ள மாவானேனென்று கலங்கி வயிறுபிடிக்க,பட்டரும், ஹர்ஷப்ரகர்ஷத்துடனே பெருமாள்

திருவடிகளிலே தண்டன் ஸமர்ப்பித்து, க்ருதாஞ்சலி புடராய்க்கொண்டு நின்று, நாய்ந்தே, தேவரீர் அர்ஜுநனைக்குறித்து (ருகச) "மொக்ஷயிஷ்யாமி" (மோக்ஷயிஷ்யாமி) என்றருளிச்செய் தருளிற்றே, என்று, "கேட்பார் வார்த்தை கேட்டிருக்கையன்றிக்கே, தேவரீர் தாமே இப்படி திருவாய் மலர்ந்தருளப்பெற்ற விப்பேற்றுக்கடி; - உடையவர் தேவரீர் திருவடிகளிலே காட்டிக்கொடுத்த வுரமும், ஆழ்வானோடுண்டான குடல் துடக்கும், எம்பாருளுமிறே என்று விண்ணப்பஞ்செய்ய, திருவோலக்கத்திருந்த ஸ்ரீரங்கமறையோர், பட்டரைப்பார்த்து, பெருமாள் உகப்புத் தலைமண்டையிட்டு விசாரியாமல் ஒருவார்த்தை யருளிச் செய்தருளினொன்று நீர் இங்ஙனுகந்து அங்கீகரிக்கிறதென்; உம்மைக்கொண்டு இவ்விபூதியைத் திருத்தவேணுமென்றன்றோ பெருமாள் திருவுள்ளம்பற்றி யிருக்கிறதென்ன; பட்டரும், ஆனால் இவ்விபூதியும், இவ்விபூதிமான்களும், பாக்யஹீநரானால் அடியேன் செய்வதென்; நாயுடலுக்கு நறுநெய்தொங்குமோ; என்னை இவ்விபூதி பொறுக்குமோ, இன்னம் சிறிது நாள் இங்கே அடிமைகொண்டருளில், பரமபதத்திற்கும் இங்கும்சுருளும்படியுங்கட்டேனே. பெருமாள் தம்மை விஶேஷித்தங்கீகரித் தருளின ராஜகுலமாஹாத்ம்யத்தாலுண்டான செருக்குத்தலைமண்டையிட்டு,ஹ்ருஷ்டோக்தியைப்பண்ணி, நாய்ந்தே, ஆஸநபத்மத்திலே பொருந்தியிட்ட திருவடித்தாமரைகளும், அஞ்சலென்றகையும், கவித்தமுடியும், முறுவல்பூரித்த சிவந்த திருமுகமண்டலமும், திருநுதலில் கஸ்தூரி திருநாமமும் பரமபதத்தில் கண்டிலேனாகில் ஒருமூலை யடியே முறித்துக்கொண்டு குதித்து மீண்டுவருவேனென்று விண்ணப்பஞ்செய்து நம்பெருமாளையும், பெருமாளையும் ஆபாதசூடமநுபவித்து, கோயிலாழ்வாரையும் ஆழ்வாரையும்கண்ணாரஸேவித்துநிற்க; பெருமாள்தம்வரிசைகளெல்லாவற்றுடன் ப்ரஹ்மரதம்பண்ணுவித்து, கோயில் அனைத்துக்கொத்தும், அகில ஸ்ரீவைஷ்ணவர்களும், எல்லா வாசார்யர்களும், மற்றுமுள்ள விப்ரவர்க்கமும் சூழ்ந்து ஸேவித்துவர, திருமாளிகையிலே எழுந்தருளி ஆண்டாளை சேவித்துநிற்க; அவரும், " நலமந்தமில்லதோர் நாடுபுகுவீர் " என்று ஆசீர்வதிக்க; பட்டரும், " அம்மாவடியேன்வேண்டுவதுதே " என்றுஉகந்தருளி, திருப்பதியிலுள்ளவர்க ளடங்கத் திருமாளிகையிலே அமுதுசெய்தருளினபின்பு, பெருங்கூட்டமாக வெழுந்தருளியிருந்து, என்றையும்போலெ திருநெடுந்தாண்டகத்திற்கு அர்த்தமருளிச்செய்யாநிற்கச்செய்தே " அலம்புரிந்த நெடுந்தடக்கை" என்கிறபாட்டுக்கு அர்த்தமருளிச்செய்கிறபோது " அஞ்சிறைப்புள்தனிப்பாகன்" என்கிறவிடத்திலே " பறவையேறுபரம்புருடா நீயென்னைக்கைக்கொண்ட பின் பிறவியென்னும்கடலும்வற்றிப் பெரும்பதமாகின்றதால்" என்று இத்தை

யிரட்டித் தநுசந்தித்தருளி, திருக்கண்களை மலரவிழித்து, திருமேனியைச் சிலிர்ப்பி, புன்முறுவல்செய்து, திருமுடியிலே அஞ்சலிசெய்துகொண்டு, அணையிலேசாய்ந்து நிற்கச்செய்தே, ஸிரஃகபாலம்வெடித்துத்திருநாட்டுக்கெழுந்தருள; முதலிகளும், பட்டர் இளைத்து எழுந்தருளி யிருக்கிறு ரென்று உள்ளே சென்று ஆண்டாளுக்கறிவிக்க; ஆண்டாளும், சடக்கென வெழுந்தருளி, பட்டரை வாரியெடுத்து மார்பிலே அணைத்துக்கொண்டு, திருநாட்டுக் கெழுந்தருளின விஸ்மயத்தைக்கண்டு, திருவுள்ளங்கலங்குதல், திருமுகங்கன்றுதல், கண்ணீர்மல்குதல், செய்யாதே; பூவின் பரிமளமறிந்து ஆக்ராணித்து வண்டிக்ரஹிக்குமாபோலே பட்டருடைய ஸௌகுமார்யமறிந்து நலக்காமல் இவர் திருக்கமலத்தை யலர்த்தி இவரைத் தான் தெய்வவாண்டான் தன்மைதோன்ற, ஸ்ரீவைகுண்டநாதன் கைக்கொண்டருள்வதே என்று, பெருமாளுக்கும் நாய்ச்சிமாருக்கும் பேரிழவும்பெரும் க்லேஶமும் பெருவயிற் றெரிச்சலுமாய்ச்செல்லாநிற்க, பரமபதநிலயனுக்கும், அங்குள்ள நாய்ச்சிமாருக்கும் பெருவாழ்வும், பெருஞ்செல்வமும், பெருங்களிப்புமாய்ச் செல்லுகிறதே என்று, புத்ரஶோகமிலே ஸம்பர்ஶமுமற்று, உடைமையையுடையவன் உடைமையைக் கைக்கொண்டால் நாம் வெறுக்கலாமோ என்று ஆண்டாளிருக்க; கடல் கலங்கினாற்போலே கோயிலிலுள்ளாரெல்லாரும் அடங்க ஶோகார்த்தராய்க்கிடந்து துடிக்க; வேதாந்திகளும் வேரற்றமரம்போலேகோவித்துக்கொண்டுவிழுந்து ஶோகார்த்தராய் பஹுவாய் ப்ரலாபித்து, மழைக்கண்ணீர் மல்காநிற்க; பெருமாளும் நாய்ச்சிமாரும், திருமுகத்தின்பணி, காளாஞ்சி, திருவெண்சாமரம், திருவாலவட்டம், திருவெண்கொற்றக்குடை, வெண்முத்தின்கலசம், மேல்க்கட்டு, முத்துத்தாமம் தொடக்கமான தம்முடைய ஸர்வபரிகரபரிச்சதங்களடங்கக் கொடுத்துவிட்டு, நம்முடைய அவப்ருதோத்ஸவங் கொண்டாடுமாபோலே, பட்டருக்கும் அவப்ருதோத்ஸவங் கொண்டாடுங்கோளென்று திருவுள்ளமாய், திருமுகம்கன்றி, திருமுத்துதிர்த்து, பெருமாளும் நாய்ச்சிமாருங்கூட திருமஞ்சனமாடியருளி, இப்போது நமக்குச்செவ்வாய்வக்ரமாய்த்தென்று திருவுள்ளம்நொந்து, சுருளமுதும் அமுதுசெய்யாமல், நாம் புத்ரனையிழந்தோமேயென்று முசித்தெழுந்தருளியிருக்க; வேதாந்திமுதலான முதலிகளும், சீராமப்பிள்ளையைக்கொண்டு பட்டரை ப்ரஹ்மமேதத்தாலே ஸம்ஸ்கரித்துப் பள்ளிபடுத்தி, அவப்ருதங்கொண்டாடி, மீண்டு வரும்போது, நஞ்சீயர் முட்டாக்கிட்டு மூடிக்கொண்டு புறக்கடைவழியாலே தம்மடமேயெழுந்தருள; ஸ்ரீ பாதத்துமுதலிகள் இதற்கடியென்னென்று விண்ணப்பஞ்செய்ய; நஞ்சீயரும், புதுக்க அறுத்தவிதவை தெருவிலே வெளிப்படவருமோ வென்றருளிச்செய்தருளினர். அதாவது, சதாசார்யன்பிறந்து ஸச்சிஷ்யன்,

பார்யாசமாநமாயிருக்கையே ஸ்வரூபசித்தியென்றுகருத்து. பின்னை ஆண்டாளும்முதலிகளும் திருமாளிகையிலே எழுந்தருளிப் புக்கவளவிலே, வெறுச்சான திருமாளிகையைக்கண்டு, பட்டர் திருத்தம்பியாரான சீராமப்பிள்ளை "நல்லதோர்தாமரைப்பொய்கைநாண்மலர்மேற்பனிசோர அல்லியும் தாதுமுதிர்ந்திட்டழ கழிந்தாலொத்ததாலோ இல்லம்வெறியோடித்தாலோ" என்று பாடிக்கொண்டு விழுந்து பெருமிடறுசெய்து ஆர்த்தராய்க் கூப்பிட்டு சோகிக்க; ஆண்டாளும், அவ்வார்த்தியைக்கண்டு, இவர் ஆழ்வான்றிருவயற்றிலே பிறக்கத்தக்கவரல்லரென்று முசித்து, முதலிகளைப் பார்த்தருளிச்செய்தது;—பிள்ளாய், பட்டர் பெற்றபேற்றுக்குப் பொறாமல் ஜ்ஞாதித்வங் கொண்டாடுகிறீரோ, நீர்இப்படி செய்கையில் நான் ஒருகைப்பிடியிலே யிருக்கிறேனென்ன; சீராமப்பிள்ளையும் சோகத்தைவிட்டு துணுக்கென வெழுந்திருந்து, ஆண்டாள் திருவடிகளிலே தெண்டன்ஸமர்ப்பித்து, அபசாரஞ்செய்தேன் பொறுத்தருளவேணுமென்று க்ஷமைபண்ணிக்கொண்டு, பட்டருக்குத் தீர்த்த திருவத்யயநம்செய்தருளி நிறைவேற்றினபின்பு, பெருமாளைத் திருவடித்தொழச் சென்றவளவிலே; பெருமாள் சீராமப்பிள்ளையை அருளப்பாடிட்டருளி, பட்டரையிழந்தோம் நாம்;உமக்கு நாமிருக்கிறோம்,முசியாதே கொள்ளுமென்று பட்டருடைய வரிசைகளடங்கக் கொடுத்தருளி, ப்ரஹ்மரதம் பண்ணுவித்துத்திருமாளிகையிலே போகவிட; சீராமப்பிள்ளையும் முசிப்பற்றுஹ்ருஷ்டராயிருந்து, தர்ஸநம் நிர்வஹித்துக்கொண் டெழுந்தருளியிருந்தார். இத்தால் மஞ்சள்நீர் குடிப்பித்துப் பெற்றுவளர்த்தவரோ தம் பெருவீடு கொடுக்கும்படியான தன்னேற்றமும், ஆர்த்தாநுஸந்தாநவேளையிலே ஹார்த்தன் சாக்ஷாத்கரித்து வழிநடக்கும்படியான தன்னேற்றமும்,பேரிழவிரண்டுக்கும் பெருமாள் தாமாய் அதில் கலக்கமற்ற தன்னேற்றமும்,ஆழ்வான் குடல்துடக்குடைய பட்டர்க்கேயுள்ளதொன்றிறே. பட்டர்வைபவம் முற்றச்சொல்லி முடியாதிறே. யதாமதியதாஸ்ருதமாகச்சொன்னதித்தனை.

பட்டர் திருநக்ஷத்ரம் வைகாசியில் அநூராதம். அவர்தனியன் (௫௩௫) "ஸ்ரீபராஶரபட்டார்ய: ஸ்ரீரங்கேஶபுரோஹித: - ஸ்ரீவத்ஸாங்கஸுத: ஸ்ரீமாந் ஶ்ரேயஸே மேஸ்து பூயஸே" శ్రీపరాశరభట్టార్యః శ్రీరఙ్గేశపురోహితః। (శ్రీవత్సాంకసుత శ్రీమాన్ శ్రేయసే మేస్తు భూయసే.)

ஸ்ரீபட்டர் திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.





ஸ்ரீ உடையவர்.

## ( ௯ )

## ஸ்ரீ நஞ்சீயர்ப்ரபாவம்.

அநந்தரம் வேதாந்திகளான நஞ்சீயர், பட்டர் நல்லருள்சிர்கொண்டு திருவாய்மொழிக்கு ஒன்பதினாயிரமாக ஸ்ரீபாஷ்ய ப்ரக்ரியையாலே ஒருவ்யாக்யாநம்செய்து, முற்றப்பட்டோலைகொண்டு இத்தையொருஸம்புடத்திலே நன்றாகவெழுதித்தர வல்லாருண்டோவென்று ஜீயர் தம் ஸ்ரீபாதத்துமுதலிகளைக்கேட்க; அவர்களும், தென்கரையில்நின்றும் நம்பூர் வரதராஜனென்பாரொருவர் பலகாலுமிங்கேவருவர், அவர் நன்றாகவெழுதுவரென்று நஞ்சீயருக்கு விண்ணப்பஞ்செய்ய, ஜீயரும் வரதராஜனையழைத்து ஒரு க்ரந்தமெழுதிக்காட்டிக் காணீரென்ன ; வரதராஜரும் எழுதிக்காட்ட; ஜீயருமத்தைத் திருக்கண்சாத்தியருளி எழுத்து முத்துப்போலே நன்றாயிருந்தது, ஆகிலும்இது திருவாய்மொழி வ்யாக்யாநமாகையாலே ஒரு விலக்ஷணனைக்கொண் டெழுதுவிக்கவேண்டுகையாலே திருவிலச்சினை திருநாமமாத்ரமுண்டான இவனைக்கொண்டு எப்படிஎழுதுவிப்பது, விசேஷஜ்ஞனைக்கொண்டே எழுதுவிக்கவேணுமிறேஎன்று ஸந்தேஹிக்க; வரதராஜரும், ஜீயர்திருவுள்ளத்தையறிந்து, அடியேனையும் தேவரீர் திருவுள்ளத்துக் குவரும்படியே திருத்திப் பணிகொள்ளலாகாதோவென்ன; அவ்வளவிலே ஜீயரும் திருவுள்ளமுகந்து அப்போதே வரதராஜனை யங்கீகரித்தருளி, (ருகக) "ஸர்வாஸ்ரமாஃ ஸர்வஸம்ஸ்காரயுக்தாஃ ஸர்வாகஜ்ஞாஃ ஸர்வமோக்ஷாயநிஷ்டாஃ - தேவர்ணாநாம் ஸர்வஸ்ரேஷ்டாணாம் விஷ்ணோர்பக்தாஃ ஸர்வகாலப்ரபந்நாஃ" (సర్వాస్త్రాంగాః సర్వసంస్కారయుక్తాః సర్వాగ్రజ్ఞాః సర్వమోహాయనిష్ఠాః । తేవర్ణానాం సర్వమశ్రేష్ఠాణాం విష్ణోర్భక్తాః సర్వకాలప్రపన్నాః) என்றபப்லோகத்தில்சொன்ன ப்ரபந்நநிஷ்டைகளெல்லாம் பூர்த்தியாம்படி விசேஷ கடாக்ஷம் செய்தருளி, பட்டோலையிலே எழுதினஒன்பதினாயிரமும் முற்றவோருரு வரதராஜனுக்கருளிச்செய்து காட்டியருளி, இப்படி தப்பாமல் எழுதித் தாருமென்று பட்டோலையை வரதராஜர்கையிலேகொடுத்தருள; அவருமத்தை வாங்கிக்கொண்டு அடியேன் ஊரிலேபோய்எழுதிக்கொண்டு வருகிறேனென்று விண்ணப்பஞ்செய்ய, ஜீயரும் அப்படியேசெய்யுமென்றுவிட; அநந்தரம், வரதராஜன் திருக்காவேரிக்குள்ளே எழுந்தருளின வளவிலே சிற்றிடம் நீஞ்சிப்போகவேண்டுகையாலே பட்டோலையைத் திருமுடியிலே கட்டிக்கொண்டு நீஞ்சிவரச்செய்தே, ஒருஅலைவந்தடித்து க்ரந்தம் ஆற்றுக்குள்ளேவிழுந்துபோக, வரதராஜரும் அக்கரையிலேயேறி பட்டோலை போய்

விட்டதே இனிநாம் என்செய்யக்கடவோமென்று விசாரித்து, ஒரு அலேக்த்தையுண்டாக்கிக்கொண்டு நஞ்சீயர்ப்ரசாதித்தருளின வர்த்தமொன்றும் தப்பாமல் ஒன்பதினாயிரமும் நன்றாகவெழுதியருளி. தாம் தமிழுக்குமிகவும் உத்தமவிரகராகையாலே ஒவ்வொருபாட்டுக்களிலே (ருகஎ) "உக்தார்த்தவிஶதீகாரயுக்தார்த்தாந்தரபோதநம் - மதம்விவரணம்தத்ர மஹிதாநாம்மநீஷிணாம்" (ఉక్తార్థవిశదీకారయుక్తార్థాన్తరబోధనం । మతంవివరణంతత్ర మహితానాంమనీషిణామ్) என்கிறபடியே உசிதமானஸ்த்தலங்களுக்கு ப்ரஸங்கம்பீர பதங்களுக்கு அர்த்தவிசேஷங்களும் எழுதிக் கொண்டுபோய் ஜீயர்திருக்கையிலேகொடுக்க, ஜீயரும் ஸ்ரீகோஶத்தை யவிழ்த்துப்பார்க்குமளவில் தாமருளிச்செய்த கட்டளையாயிருக்கச்செய்தேயும், ஶப்தங்களுக்கு மிகவும் அநுகுணமாக அநேகவிஶேஷார்த்தங்கள் பலவிடங்களிலு மெழுதியிருக்கையாலே அத்தைக்கண்டு மிகவும் திருவுள்ளமுகந்தருளி வரதராஜனைப்பார்த்தருளி இது மிகவும்நன்றாயிராநின்றது, இதென்னென்றுகேட்க; அவரும்பயப்பட்டு ஒன்றும் விண்ணப்பஞ்செய்யாதிருக்க, ஜீயரும் நீர்பயப்படவேண்டாம் உண்மைசொல்லுமென்ன. வரதராஜரும், ஜீயா திருக்காவேரி நீச்சாகையாலே பட்டோலையை அடியேன் தலையிலேகட்டிக்கொண்டு நீஞ்சப்புக்கவாறே ஒரு அலைவந்தடிக்கையாலே அது ஆற்றிலேவிழுந்து அமிழ்ந்துபோயிற்று, இது தேவரீர் ஒருருமுற்ற ப்ரசாதித்தருளின கட்டளையிலே எழுதினேனென்று விண்ணப்பஞ்செய்ய; நஞ்ஜீயரும் இவருடையவொரு புத்திவிஶேஷமிருந்தபடி என்றான் இவர்மஹாஸமர்த்தராயிருந்தார், நன்றாகவெழுதினொன்றுமிகவும் திருவுள்ளமுகந்தருளி வரதராஜனைவாரியெடுத்து அழுந்தக் கட்டிக்கொண்டு இவர் நம்முடையபிள்ளை திருக்கலிகன்றிதாஸரொன்று திருநாமஞ்சாற்றி, தம்முடைய ஸந்நிதியிலே அனைக்ஷணமும்பிரியாமல் கரதலாமலகமாகவைத்துக்கொண்டு, பிள்ளைக்கு சகலார்த்தங்களும் ப்ரஸாதித்தருளினார். அவரும்ஜீயரையல்லது தேவுமற்றறியேனென் றெழுந்தருளியிருந்தார். ஆகையால் ஜீயர்நம்முடையபிள்ளையென்றருளிச்செய்தவன்று துடங்கி வரதராஜர்க்கு "நம்பிள்ளை" என்று திருநாமமுண்டாயிற்று.

நஞ்சீயரை, நம்பிள்ளை இதரோபாயங்களுக்குப்ரமாணமும் பஹுளமாயநுஷ்டாதாக்களும் பஹுளமாயிருக்கஇதுக்குப்ரமாணமும்சுருங்கி, அநுஷ்டாதாக்களும்சுருங்கி ருஷிச்சந்தோதேவதைகளும் அநுஸந்தேயங்களன்றியேயிருப்பானென்னென்றுகேட்க; ஜீயரருளிச்செய்தபடி;—இருவர்கூடியோராற்றிலே யிறங்கிப்போகாநின்றால், ஆற்றிலமிழ்ந்தவனை அமிழாதவன், கையைப்பிடித்துக் கரையேற்றுகைக்கொரு ப்ரமாணாபேக்ஷை வேணுமோ; ப்ரமாணாபேக்ஷையுண்டென்று நினைத்தீராகிலும் (ருகஅ)

"முமுக்ஷுர்வை ஶரணமஹம் ப்ரபத்யே தஸ்மாந்ந்யாஸமேஷாம் தபஸாமதிரிக்தமாஹு:" "ந்யாஸ இத்யாஹுர்மநீஷிணோ ப்ரஹ்மாணம் நிஷ்டா பராபரா ந்யாஸ: பஞ்சாங்கஸம்யுத: ஸந்ந்யாஸஸ்த்யாக இத்யுக்த: ஶரணாகதிரித்யபி" (ముముక్షుర్వై శరణమహం ప్రపద్యే తస్మాన్న్యాసమేషాంతపసామతిరిక్తమాహుః) (న్యాస ఇత్యాహుర్మనీషిణో బ్రహ్మాణమ్ నిష్ఠాపరాపరాన్యాసోన్యాసః పంచాంగసంయుతః సన్న్యాసస్త్యాగ ఇత్యుక్తశ్శరణాగతిరిత్యపి) என்று ஏவமாதிப்ரமாணங்கள்பலவற்றையுமருளிச்செய்து ப்ரமாணங்களில் அக்குறையில்லை, நான், இவ்வர்த்தத்தில் ப்ரமாணந்தான்வேண்டுவதில்லையென்றிருப்பன், அதற்கடி ஒருகுள்ளனும் ஒருநெடியனுமாக ஆற்றிலேயிழிந்தால் குறளனமிழாநின்றால் நெடியனவன்கையைப்பிடிக்கும்போது கரையிலேயிருந்துஒருவன்சொல்லவேண்டுவதில்லையிறே, இவருடையதார்மிகராஹுக ப்ரமாணந்தானே அமையுமிறே, அவன்கையை யவன்பிடிக்கைக்கு ஒரு விதிவேணுமோ வென்றருளிச்செய்து, பின்பு (௫௯) "ப்ராஹ்மணோ யஜேத" (బ్రాహ్మణోయజేత) என்று ஜாதிநிபந்தநமாக ஶாஸ்த்ரங்கள்சொன்னாலும் க்வசித்கொண்டேயஜிப்பார்அல்பமாயிறேயிருக்கிறது, ஆகையாலே அதிகாரிகள் சுருங்கியிருக்குங்காணும். (௫௰) "ருஷ்யாதிஞ்ச ஶரந்யாஸ மக்நிந்யாஸஞ்ச வர்ஜயேத்" (ఋష్యాదిశ్చ శరన్న్యాస మగ్నన్యాసశ్చ వర్జయేత్) என்கையாலே ருஷ்யாத்யபேக்ஷையில்லை. இதிலர்த்தத்துக்குக் கூட்டுவேண்டிவிறே இதற்குக்கூட்டு வேண்டுவதென்று எனக்குக்கருத்தென்று திருவுள்ளமாக பிள்ளையும் க்ருதார்த்தராயருளினார்.

நம்பிள்ளை, நஞ்சீயரைக்குறித்து, தான் தனக்கு ஸ்ரீவைஷ்ணவத்வமுண்டென்றறியலாவது எவ்வவஸ்தைபிறந்தாலென்ன; ஜீயரும், அர்ச்சாவதாரத்துக்கு பரத்வமுண்டென்றறிவதும், ஒரு ஸ்ரீவைஷ்ணவன் பக்கல் புத்ரதாராதிகள்பக்கலுள்ள ஸ்நேஹத்தளவாகிலும், ஸ்நேஹம்பிறந்தவளவாகிலும், ஒருஸ்ரீவைஷ்ணவர் கடுத்து வார்த்தையருளிச்செய்தால் தன்னெஞ்சில் சிவட்குத்தட்டாதே போகரூபமாயிருந்ததாகில் ஸ்ரீவைஷ்ணவத்வமுண்டென்றறியலாம்; ஆகையால் அர்ச்சாவதாரபரத்வபுத்தி பாகவதப்ரேமம், தத்கடினோக்திபோக்யதாபுத்தியுண்டானபோது ஸ்ரீவைஷ்ணவத்வம் ஸித்தமென்கிறது.

நம்பிள்ளை, நஞ்சீயர்ஸ்ரீபாதத்திலே ஸ்ரீபாஷ்யம் வாசித்தருளாநிற்கச்செய்தே, திருப்போனகம் சமைந்ததென்றவாறே சொக்கத்தேவரைத் திருவாராதநம்பண்ணுமென் றருளிச்செய்ய; அடியேன் திருவாராதநத்தை யறிந்தேனோவென்று விண்ணப்பஞ் செய்ய; ஜீயரும், நானோ சாலக்ராமமறிந்திருக்கிறேன், த்வயத்தில்உத்தரவாக்யத்தை யநுஸந்தித்து திருவடிவிளக்கி யமுதுசெய்தருளப்பண்ணமாட்டீரோ வென்றருளிச்செ

ய்தார். உகந்தருளினவிடங்கள் பலவிடமாய், திருப்போனகம் படைப்ப தொன்றிலேயாகில் அமுதுசெய்தருளப்பண்ணும்படி எங்ஙனென்று, பிள்ளை,நஞ்ஜீயரைக்கேட்க, ஜீயரும் த்வயத்தில் பூர்வோத்தரகண்டங்கள் இரண்டுக்கும்நடுவே ஸர்வமங்களவிக்ரஹாயவென்கிற விசேஷணஸஹிதமாகவுச்சரித்து அமுதுசெய்யப் பண்ணுவதென் றருளிச்செய்தார். இத்தால்-உபயகண்டமத்யே இத்தைஉச்சரிக்கவருளிச்செய்து கைங்கர்ய வாசகசதுர்த்தியுடன் சதுர்த்திசேர்ந்திருக்கைக்காகவும், உபயநாராயண பதஸித்திவிக்ரஹ ஸமர்ப்பகமாகைக்காகவும் அநந்யப்ரயோஜநத்வத்யோதநார்த்தமாகவுமிறே; ஆகையால் நம் பூர்வாசார்யர்கள் த்வயமொழிந்த மந்த்ராந்தரங்கொண்டு திருவடிவிளக்கார்களென்று கருத்து,

நஞ்சீயரை, நம்பிள்ளை, "அவதாரங்களெதுக்காக" என்றுகேட்க, ஜீயரும் ஓரோரவதாரங்களால்பண்ணின ஆனைத் தொழில்களெல்லாம் பாகவதாபசாரம் பண்ணினவனுடைய பலம்அநுபவிக்கைக்காக வென்றருளினார். பிள்ளையும் பாகவதாபசாரம்தானேதென்று விண்ணப்பஞ்செய்ய, ஜீயரும் ஸ்ரீவைஷ்ணவர்களைக்கண்டக்கால் தங்களோபாதி ப்ரக்ருதிமான்களாகநினைத்திருக்கும் புல்லிமை; எங்ஙனேஎன்னில்,ஸ்ரீவைஷ்ணவர்கள் "திருவுடைமன்னர்" "செழுமாமணிகள்" "நிலத்தேவர்" "பெருமக்கள்" "தெள்ளியார்" "பெருந்தவத்தர்" "உருவுடையார் இளையார் கணல்லார் ஓத்துவல்லார்" "செய்தவேள்வியர்தக்கார்" "மிக்கார் வேதவிமலர்" "சிறுமாமனிசர்" "எம்பிரான் தன் சின்னங்கள்" "பேராளன்பேரோதும்பெரியோர்" "இளையார்" என்று இப்படி பலபடியாக மிகவும் விரும்பி, நம்குலநாதராய் மயர்வற மதிநலமருளப் பெற்ற வாழ்வார்கள் பஹுமதிபண்ணி திருநாமங்கள்சாற்றி வாய்ப்புலத்தியருளிச்செய்கையாலே, தங்களோடொக்க ப்ரக்ருதி மான்களென்று ஸ்ரீவைஷ்ணவர்களை நினைத்திருக்கை நேரே பாகவதாபசாரமென் றருளினார். ஆகையால் ஆழ்வார்களு முட்பட "கொண்டாடும் நெஞ்சுடையாரவரெங்கள் குலதெய்வமே" என்று பஹுமதிபண்ணி விரும்புகையே ஸ்ரீவைஷ்ணவத்வப்ரதாந லக்ஷணமிறே. இப்படியிருக்கும் ஸ்ரீவைஷ்ணவ விஷயத்தில் ஸ்வஸாம்யபுத்தியே அநர்த்தஹேதுவிறே. நஞ்ஜீயர் நம்பிள்ளையைக்குறித்து பகவதநுபவம் பண்ணுமவனுக்கு விஷயாநுபவத்தி லன்வயமில்லை; இவ்வர்த்தத்தை ஆழ்வார்கள் பலவிடங்களிலும் அருளிச்செய்தார்களிறே. எங்ஙனேஎன்னில்,வாசுதேவன்வலையுள கப்படுதல் மாதரார்க்கயல்கணென்னும் வலையுட்படுதல், மதுரக்கொழுஞ்சாறுகொண்ட சுந்தரத்தோளிலே அகப்படுதல். சாந்தேந்துமென் முலையார் தடந்தோளிலேயகப்படுதல், வானவர்க்கு வன்துணையான அரங்கத்துறையு மின்றுணைவனைத் துணையென்றிருத்தல், ஆவியே யமுதே

யெனநினைந்துருகியவரவர் பணைமுலை துணையென்றிருத்தல், அப்பொழுதைக்கப்பொழுதென் னாராவமுதத்தைப் பாநம்பண்ணுதல், பாவையர் வாயமுதத்தைப்பாநம்பண்ணுதல், நான்குவேதப்பயனைப்பேணுதல், மாதரார்வனமுலைப்பயனையே பேணுதல், ஒன்றிவிதுவாதல், ஒன்றிலதுவாதலென்று ஏவமாதிகளாலே பஹு—முகமாக வருளிச்செய்தார்களிறே. ஆகையாலே "அன்னமென்னடையினார் கலவியையருவருத்தஞ்சி" என்றும் "மூந்துறவுரைக்கேன் விரைக்குழல்மடவார்கலவியைவிடு" என்றும் ஸ்ரீபரகாலரான திருமங்கையாழ்வார் ப்ரதமம் விஷயருசியைக் காழியுமிழ்ந்தே பகவத்ஸமாஸ்ரயணம்பண்ணவேணுமென்று நிஷ்கர்ஷித்தருளிச்செய்கையாலே, க்ஷுத்ரவிஷயத்தைஸவாஸநமாகப்பரித்யஜித்தே ப்ராப்தவிஷயத்தைப் பற்றவேணுமென்று அருளிச்செய்தார். பிள்ளையும் க்ருதார்த்தராய் பெரியஜீயரை க்ஷணமும்பிரியா வடிமைசெய்து கொண்டு வாழ்ந்தருளும் காலத்திலே, நஞ்சீயரும், நூறுரு திருவாய்மொழிக்கு அர்த்தம் நிர்வஹித்தருளுகையாலேபிள்ளைஜீயருக்குஸதாபிஷேகம்பண்ணியருளினரென்று ப்ரஸித்தமிறே.

நஞ்ஜீயர்திருவடிகளேசரணம்.

———:o:———

( ய )

## ஸ்ரீ நம்பிள்ளை ப்ரபாவம்.

நஞ்சீயர் பக்கலிலும், நம்பிள்ளைபக்கலிலும், விசேஷார்த்தங்களும்வந்து கூடுபூரிக்கையால் பிள்ளையும் தீபாதுத்பந்ந ப்ரதீபம் போலே தர்ஸநம்நிர்வஹிக்கக்கண்டு, ஜீயரும் க்ருதக்ருத்யராயிருக்கும் நாளிலே, நம்பிள்ளை ஸ்ரீபாதத்திலே பெரியவாச்சான்பிள்ளை, வடக்குத்திருவீதிப்பிள்ளை, பின்பழகியபெருமாள்சீயர், ஈயுண்ணிமாதவப்பெருமாள்முதலான அநேகம் ஸ்ரீவைஷ்ணவர்களாஸ்ரயித்து க்ருதார்த்தராயிருந்தார்கள். இவர்களில் பின்பழகிய பெருமாள்ஜீயர் பிள்ளைதிருவடிகளில் கைங்கர்யமே யாத்ரையாய், ஊணுமுறக்கமுமின்றியே வழுவிலாவடிமைசெய்து வாழ்ந்தருளும்காலத்திலே, ஒருக்கால் திருமேனிபாங்கின்றியே கண்வளர்ந்தருளுகிறபோது, தமக்கந்தரங்கரான ஸ்ரீவைஷ்ணவர்களையழைத்து அடியேன் இப்போது திருவடிச்சாராமல் ஆலஸ்யம்பொறுத்து இன்னம் இங்கே சிறிதுநாளிருக்கும்படி "ஏழையேதலன்" "ஆழியெழச்சங்கும்" பெருமாள்சந்நிதியிலேசென்று விண்ணப்பஞ்செய்து ப்ரபத்திபண்ணிவேண்டிக்கொள்ளுங்கோளென்ன, அவர்களும் அப்படியேசெய்துநிற்க, ஜீயர்க்

குத் திருமேனிபண்டுபோலே பாங்காயிற்று. இத்தைக்கேட்ட ஸ்ரீவைஷ்ணவர்கள் நம்பிள்ளை சந்நிதியிலேசென்று தண்டம்ஸமர்ப்பித்து, ஜ்ஞாநவ்ருத்தருமாய் வயோவ்ருத்தருமாயிருக்கும் பின்பழகியபெருமாள்ஜீயர் இப்படிசெய்தார், இது இவர்ஸ்வரூபத்துக்குச்சேருமோவென்று விண்ணப்பம்செய்ய, பிள்ளையும்அவருடையவபிப்ராயமறிகிலோம், ஸகலஶாஸ்த்ரங்களும்போருவது பிள்ளையெங்களாழ்வானுக்காயிற்று; அவர்பக்கல்சென்று கேளுங்கோளென்ன; ஸ்ரீவைஷ்ணவர்களும் எங்களாழ்வானைக்கேட்க; அவரும்ஸ்ரீரங்கைஶ்வர்யத்திலஸங்கம்போலேகாணுமென்ன; பிள்ளையும் இத்தைக்கேட்டு, அழகிதுதிருநாராயணபுரத்தரையரைச்சென்று கேளுங்கோளென்ன; அவர்களுமவரைக்கிட்டிக் கேட்டவிடத்தில் அவரும் துவக்கினகைங்கர்யந் தலைக்கட்டாமையாலே காணுமென்ன; பிள்ளையித்தையுங்கேட்டு ஆகிறதென்று அம்மங்கியம்மாளைக் கேளுங்கோளென்ன; அவரும், பிள்ளைகோஷ்டியிலிருந்தவர்களுக்கும்பகவத்விஷயங்கேட்டவர்களுக்குமொரு தேஶவிஶேஷம்ருசிக்குமோவென்ன; இத்தையும் பிள்ளை கேட்டு நல்லதென்றுவிட்டு அம்மங்கிப்பெரியமுதலியாரைக் கேளுங்கோளென்ன, அவரும் நம்பெருமாள்சிவந்த திருமுகமண்டலமும் கஸ்தூரிதிருநாமமும்பரமபதத்திலேகண்டிலேனாகில், மூலையடியேமுறித்துக்கொண்டுவருவனென்றன்றோ பட்டரருளிச்செய்தது. அப்படியேயிவரும் நம்பெருமாள் சிவந்ததிருமுகமண்டலத்தையும் திருநுதலில்கஸ்தூரிதிருநாமத்தையும் விட்டுப்போகமாட்டாராக வேணுமென்றார்; பிள்ளை, யிவையெல்லாவற்றையும் திருவுள்ளம்பற்றியருளி, ஜீயர் திருமுகமண்டலத்தைப்பார்த்துச்சிரித்து இவை உம்முடையநினைவுக் கொக்குமோவென்ன; இவை யித்தனையுமன்றென்று விண்ணப்பஞ்செய்தார். ஆகில் உம்முடைய வபிப்ராயத்தைநாமறிந்தோமென்று பிள்ளையருளிச்செய்ய, பிள்ளை தேவரீர் ஸர்வஜ்ஞராகையாலே அறிந்தருளாததில்லை; அடியேனைக்கொண்டு வெளியிடத்திருவுள்ளமாகில் விண்ணப்பஞ்செய்கிறேன். தேவரீர் திருமஞ்சனமுறைகளிலே திருமஞ்சனச்சாலைக் கெழுந்தருளி திருமஞ்சனங்கொண்டருளி தூயவுடையாடை திருவுத்தரீயம் சாத்தியருளி யுலாவியருளும்போது குறுவியர்ப்போடேகூடின திருமுகமண்டலச்செவ்வியும், அடியேன் சுற்றிச்சூழற்றிப் பணிமாறுகிற கைங்கர்யத்தைவிட்டு அடியேனுக்கு பரமபதத்துக்குப்போக விச்சையாயிருந்ததில்லை, பெருமுசோல்லாஸமு மின்னம்சிறுதுகால மிங்கேயிருந்து பெறவேணுமென்றுநினைத்துச் செய்தேனென்று விண்ணப்பஞ்செய்தார். இத்தைக் கேட்டருளி பிள்ளையும் முதலிகளுமிவ்வுடம்போடே இவ்வைஶ்வர்யம் கூடுவதேயென்று மிகவும் திருவுள்ளமுகந்தருளினார்கள்.

ஒருநாள் நம்பிள்ளை பகவத்விஷயமருளிச்செய்து கோஷ்டிகலைந்தவளவிலே பின்பழகியபெருமாள்ஜீயர் பிள்ளைதிருவடிகளிலே தண்டன்சமர்ப்பித்து, இவ்வாத்மாவுக்கு ஸ்வரூபோபாயபுருஷார்த்தங்களிவையென்றருளிச் செய்யவேணுமென்று விண்ணப்பஞ்செய்ய; பிள்ளையும் இச்சைஸ்வரூபம் இரக்கமுபாயம் இனிமை உபேயமென்றருளிச்செய்ய; அப்படியன்று அடியேன் நினைத்திருப்பதென்று விண்ணப்பஞ்செய்ய; பிள்ளையும் ஆகில் உமக்கென்ன சிலபிள்ளைக்கிணறுகளுண்டோ நீரெங்ஙன்நினைத்திருப்பீர், அத்தைச்சொல்லிக்காணீரென்ன; தேவரீர்திருவடிகளேதஞ்சமென்றிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அடிமையாயிருக்கையே அடியேனுக்குஸ்வரூபம், அவர்களுடைய அபிமானமே அடியேனுக்குபாயம், அவர்களுடைய முகமலர்த்தியே யடியேனுக்கு உபேயமென்று நினைத்திருப்பேனென்று விண்ணப்பஞ்செய்ய; ஜீயரையும், பிள்ளை போரப்ரியப்பட்டருளினார்.

ஒருகால் பிள்ளை, பகவத்விஷயம் அருளிச்செய்து கோஷ்டிகுலைந்து போகாநிற்கச்செய்தே, வைஷ்ணவனா யிருப்பா னொருராஜா, வருகிற பெருந்திரளைக்கண்டு பெருமாள் திருவோலக்கம்குலைந்ததோ, நம்பிள்ளை கோஷ்டிகுலைந்ததோவென்று கேட்டானென்பர்கள்.

இப்படி மஹாஸம்ருத்தியான ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயோடே நம்பிள்ளைவாழ்ந்தருளும்காலத்திலே, முதலியாண்டான் திருப்பேரனாய், கந்தாடையாண்டான்குமாரரான, கந்தாடைத்தோழப்பர், நம்பிள்ளையுடைய பெருமதிப்பையும், வைபவத்தையுங்கண்டு, அசூயையால், வாய்பொறுக்கமாட்டாமலிருக்குமவர் ஒருநாள் பெருமாள்ஸந்நிதியில் பெருமாளைசேவித்துக்கொண்டு தோழப்பர் எழுந்தருளியிருக்கிறவளவிலே, பிள்ளையும் முதலிகளுமாகப் பெருமாளைஸேவிக்கவென்று கோயிலுக்குள்ளேயெழுந்தருள; தோழப்பர், பிள்ளையுடைய பெருமையைக்கண்டு பொறுக்கமாட்டாமல்சீறி பகவத்ஸந்நிதியிலே நம்பிள்ளையை பஹுபருஷோக்திகளைச்சொல்லிஅநேகமாகநிந்திக்க, பிள்ளையும், அத்தைக்கேட்டு நடுங்கிக்கொண்டு பெருமாளைசேவித்து புறப்பட்டெழுந்தருள; இச்சேதியை ஜ்ஞாநாதிகையாயிருக்கிறதோழப்பர்தேவிகள்கேட்டுப் பெருக்கவ்யாகுலப்பட்டு, திருமாளிகைக்குள்செய்கிற கைங்கர்யங்களையும்விட்டு வெறுத்து எழுந்தருளியிருக்க; அவ்வளவிலே தோழப்பரும் பெருமாளைஸேவித்து மீண்டு தம்திருமாளிகையிலே எழுந்தருள; தேவிகளும் முன்புபோலே எதிரே புறப்பட்டு ப்ரீதியுடனே தமக்கொரு கைங்கர்யமும் பண்ணாமையாலே தோழப்பர், தேவியாரைப்பார்த்து உன்னைநாம் அங்கீகரித்தவன்றுதொடங்கி இன்றளவாக நம்மைக்கண்டால் ஆசார்யப்ரதிபத்தி பண்ணிக்கொண்டுபோந்தாய்; இன்று உதாஸீநம்பண்ணியிருந்தாய், இதற்கடி யென்னென

ன்றுகேட்டருள! தேவிகளும், தோழப்பரைக்குறித்து வாரீர் ஆழ்வார்தம் முடைய திருவவதாரமென்னலாம்படி ஒரு அவதாரவிஶேஷமாய், பெருமாளுக்கு ப்ராணபூதராயிருந்துள்ள நம்பிள்ளையை, பெருமாள் சந்நிதியிலே கூசாமல் அநேகமாக பருஷோக்திசொல்லி தூஷித்து இப்படிசெய்தோமேஎன்கிற அநுதாபமுமற்று உஜ்ஜீவிக்கவந்திருக்கிற உம்மோடு எனக்கென்னஸம்பந்தமுண்டு, நீர் என்னைவெறுத்தீராகில், என்னுடைய மாதாபிதாக்கள் பெற்றுவளர்த்து உம்முடையகையிலே காட்டித்தந்த ஶரீரத்தை உமக்குவேண்டினபடிசெய்துகொள்ளும், என்னுடைய ஆத்மாவை எங்கள் ஆசார்யர், அடியிலே அங்கீகரித்தருளின அன்றேநான் உஜ்ஜீவித்தேன்; ஆகையாலே (ருசக) "[illegible]" ([illegible]) என்று பாகவதநிந்தனைபண்ணினவர்களை ஒருகாலும் க்ஷமிப்பதில்லையென்று பெருமாள் தாமேயருளிச்செய்த திருமுகப்பாசுரமறிந்தும் அறியாதவர்போலேயிருக்கிற உம்மோடு எனக்கு ஸஹவாஸங்கூடாது; ஆகையாலே நிலம்பிளந்தால் இழையிடவொண்ணாதாப்போலவும், கடலுடைந்தால் கட்டவொண்ணாதாப்போலவும், மலைமுறிந்தால் தாங்கவொண்ணாதாப்போலவும் அநுதாபம் பிறவாதபாகவதாபசாரம் தீர்த்துக்கொள்ளக்கூடாதிறே; ஆனபின்பு நான் என்னிஷ்டத்திலேயிருந்து ஈடேறிப்போகிறேனென்ன; தோழப்பரும், தேவிகள்சொல்லுகிற வார்த்தைகளைக்கேட்டு, சற்றுபோது திகைத்தெழுந்தருளியிருந்து, பெரியவித்வானுகையாலும், திருவம்ஶப்ரபாவத்தாலும் அநுகூலையால்வந்த திருவுள்ளத்தில் கலக்கந்தீர்ந்து தெளிந்து தேவிகளைப் பார்த்துநீசொன்னதெல்லாம் ஒக்கும், நாம்தப்புச்செய்தோம்;இனிமேல் செய்யவடுக்குமதேதென்ன, தேவிகளும்,ஆற்றிலேகெடுத்து,குளத்திலே தேடாதேகொள்ளீர், கெடுத்தவிடத்தே தேடிக்கொள்ளீரென்ன; தோழப்பரும் ;அதுவதென்னென்ன ; தேவிகளும், பரமதயாளுவான நம்பிள்ளைதிருவடிகளிலே சென்று ஸேவித்து அபராதக்ஷாமணம் பண்ணிக்கொண்டு அவர்க்ருபைபண்ணியருள ஈடேறீரென்ன; தோழப்பரும், அவரை,பெருமாளுடைய பெருந்திருவோலக்கத்திலே பரிபவித்து, இப்போது அவர் சந்நிதியிலேபோய்நிற்கவென்றால் எனக்கு லஜ்ஜாபயங்கள் அநுவர்த்தியாநின்றது, நீ கூடவந்துக்ஷமிப்பிக்கவேணுமென்ன; தேவிகளும், தோழப்பர்சொல்லும் வார்த்தையைக்கேட்டு அப்படியேசெய்கிறேனென்றுகடுகவெழுந்திருந்து அவளையுங்கூட்டிக்கொண்டு, நம்பிள்ளை திருமாளிகைக்கெழுந்தருளுவதாகப் புறப்படுகிற வளவிலே, நம்பிள்ளை செய்தபடி;-- கோயிலிலும் எழுந்தருளினபின்புமுதலிகளெல்லாரையும் அநுப்பியருளி பகலெல்லாம் அமுதுசெய்தருளாமல் தம்திருமாளிகைக்குள்ளே யெழுந்தருளியிருந்து ஸாயங்காலமானவாறே ஆவஶ்யகத்தைச் செய்தருளி ஒர்

றைத் திருப்பரிவட்டத்துடனே மூடிமுட்டாக்கிட்டுத் தாமொருவருமே எழுந்தருளி, தோழப்பர்திருமாளிகைவாசலிலே கைப்புடையிலே வந்து கண்வளர்ந்தருள; தோழப்பரும் தேவிகளும், திருவிளக்கையேற்றிகொண்டு, பிள்ளை திருமாளிகைக்கெழுந்தருளுவதாகத் திருமாளிகை வாசலிலே புறப்பட்டவளவிலே திருவிளக்கொளியாலே, ஒருவெள்ளை, கைப்புடையிலே கிடக்கிறதைக்கண்டு, தோழப்பர், இங்கார்கிடக்கிறு ரென்று கேட்க்க; பிள்ளை அடியேன் திருக்கலிகன்றிதாஸனென்ன; அவ்வளவிலே தோழப்பர் இதென்னென்றுநினைத்து,பிள்ளையைப்பார்த்து, நாம் மஹா தேஜஸ்வீ, நம்மை நம்பெருமாள் திருவோலக்கத்திலே பரிபவிக்கலாவதேனென்கிற கோபாதிஶயத்தாலே நமமுடைய வாசலிலேவந்து மௌர்க்யம்செய்வதாகவந்து கிடக்கிறீரோவென்ன; பிள்ளையும், தோழப்பரைக்குறித்து அடியேன் அப்படிசெய்யயவரவில்லையென்ன; ஆகில்இங்குவந்துகிடப்பானேனென்று தோழப்பர்கேட்க்க; பிள்ளையருளிச்செய்தபடி;- பெரியபெருமாள் ஸந்நிதியிலே முதலியாண்டான் திருப்பேரனாரான தேவரீர் திருவுள்ளங்கலங்கும்படி வர்த்தித்த மஹாபாபியான அடியேனுக்கு தேவரீர்திருமாளிகை வாசலல்லது புகுவாசல்மாண்டு வந்துகிடக்கிறேனென்ன; இவரை அநுவர்த்திப்பதாகப் புறப்பட்டுவந்து நிற்கிற தோழப்பர், பிள்ளை கண்வளர்ந்தருளுகிற நைந்யத்தையும், அவருடையநைச்யமான வார்த்தைகளையுங்கேட்டு இதொரு அதிகாரமிருந்தபடி யென்னென்று போரவித்தராய், பிள்ளையைவாரியெடுத்து அரவணைத்துக்கொண்டு, இத்தனைநாளும் சிறிதுபேருக்கு ஆசார்யனென்று இருந்தேன், இப்போது லோகத்தார்க்கெல்லாம்நீரே ஆசார்யராகைக்கு ப்ராப்தரென்றிருந்தேன் என்று, தோழப்பர் உகந்து "லோகாசார்யர்" என்று பிள்ளைக்குத்திருநாமம்சாற்றியருளி, தம்முடைய திருமாளிகையிலே கொண்டுபுக்கு. தாமும்தேவிகளுமாகப் பிள்ளையை அநேகமாக அநுவர்த்தித்து அவர்திருவுள்ளத்தை நன்றாகமிகவும் உகப்பித்து, தமக்குவேண்டும் அர்த்தவிஶேஷங்களெல்லாம் கேட்டுக்கொண்டு, தோழப்பர், பிள்ளை திருவடிகளிலே மிகவும்ப்ரவணராய், க்ருதார்த்தராயருளினார்.

———:o:———

(ஸ்ரீநஞ்சீயர் பரமபதத்திற்கெழுந்தருளும் ப்ரகரணம்.)

இப்படி, பிள்ளை மஹாவைபவமுடையராய் வாழ்ந்தருளுமது கண்டு, நஞ்சீயர்செய்ததிதுவாய்த்து;—

ஸ்ரீமானாய், நூறு திருநக்ஷத்ரமெழுந்தருளியிருந்து, அந்த்யமதசையில் திருமேனியிலேநோவுசாத்தி கண்வளர்ந்தருள ; ஜீயர்ஶிஷ்யரானகுட்டிக்குறிஞ்சியாழ்வார், ஜீயரைப்பார்த்து த்வயத்தை அநுஸந்தித்